# ஞானியர் வரலாறுகள்


அருளியது :

ஸ்ரீ சுவாமி சிவானந்தா

தமிழாக்கம் :

பேராசிரியர் திரு. ப. உருத்திரமணி, M. A.


சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு













தெய்வீக வாழ்க்கைச் சங்கம்

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் :: சேலம் ஜில்லா

விலை ] 1986 [ ரூ.

SIVANANDA CENTENARY PUBLICATION

*All Rights Reserved by*

THE DIVINE LIFE TRUST SOCIETY

Sivananda Nagar, (U. P.) India.

* O *

Translation of

"LIVES OF SAINTS AND SAGES"

in Tamil

* O *

*Printed out of the magnanimous donation of :*

Humble Devotees of
H. H. SRI SWAMI SIVANANDA

Printed at The Literary Press, Salem - 636 001.

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் "ஞானியர் வரலாறுகள்" என்ற நூலை பேராசிரியர் திரு. ப. உருத்திரமணி, M. A. அவர்கள் மிக அற்புதமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

## 3—வது அத்தியாயம்
## வட இந்திய ஞானியர்



## 4—வது அத்தியாயம்
## பெண்பால் ஞானியர்



## 5—வது அத்தியாயம்
## சூபி ஞானியர்



## 6—வது அத்தியாயம்
## பொது

# ஞானியர்கள் வரலாறு

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும் விலாசமும் | | ரூபாய் |
|---|---|---|---|
| 1. | 'ஞானதான வள்ளல்' திரு. S. கோவிந்தசாமி முதலியார் & திருமதி தனலட்சுமி அம்மாள், ஈரோடு-3. | .. | 202 |
| 2. | 'குருபக்தி ரத்ன' திரு. M. S. A. ஜெயராம், தலைவர்: தெய்வீக வாழ்க்கைச் சங்கம் & Prop: ஜெயராம் டெக்ஸ்டைல்ஸ், இராசிபுரம். | .. | 101 |
| 3. | திரு. M. N. ஜெகநாதன், சேலம்-2. | .. | 100 |
| 4. | திரு. A. P. வெங்கடாஜலபதி, B. A., பெங்களூர்-42. | .. | 100 |
| 5. | திரு. G. கோவிந்தராஜன், B. A., B. T., கோவை-21. | .. | 100 |
| 6. | திருமதி A. E. சுபத்திராபாய், டீச்சர், இராசிபுரம். | .. | 100 |
| 7. | திரு. M. தனகோபால், ஷராப் வியாபாரம், இராசிபுரம். | .. | 100 |
| 8. | திரு. D. ஜெயராமுலு நாயுடு, B. A., B. L., நாமக்கல். | .. | 100 |
| 9. | Dr. N. பழனியப்பன், M. S., நாமக்கல். | .. | 100 |
| 10. | Dr. A. நடராஜன், M. B., B. S., நாமக்கல். | ... | 100 |
| 11. | திரு. M. பாலசுப்பரமணியம், B. A., நாமக்கல். | ... | 100 |

12. திரு. T. K. சம்பத், (Indian Bank) தர்மபுரி. .. 100
13. திருமதி பங்காரு சாம்பசிவம், ஆத்தூர். .. 100
14. காமாட்சி ரைஸ் மில், நாமக்கல். .. 100
15. Ashok Kumar Goyal, Namakkal. .. 100
16. திரு. P. தீர்த்தகிரி, ஈரோடு-4. .. 100
17. புலவர் கோ. சம்பத். எலவம்பட்டி. .. 100
18. திரு. M. பெல்லி, ஜெகதலா,
நீலகிரி மாவட்டம். .. 100
19. திரு. B. ஹிரியன், பாமுடி, நீலகிரி. .. 100
20, திரு. R. V. பார்த்தசாரதி,
Chairman, 'SIDCO Industries'
சென்னை-49. .. 100
21. 'குருபக்தி ரத்ன'
திரு. V. A. அண்ணுமலை, மதுரை-1. .. 100
22. திரு. சிவ. சிவராமகிருஷ்ணன், மதுரை-1. .. 100
23. 'போட்டோ சென்டர்' திண்டுக்கல். .. 100
24. திரு. S. சுகுமார், 'பொன்தாய் பேப்ரிக்ஸ்'
சேலம்-6. .. 100
25. திரு. D. சந்திரசேகரன், Bus Service,
நாமக்கல். .. 100
26. ஸ்ரீ ஆண்டாள் & கோ.,
கொமாரபாளையம். .. 100
27. திரு. B. R. ரங்கராவ் & பிரதர்,
சேலம்-2. .. 100
28. சிவானந்தா சாந்திவனம், ஜெகதலா,
நீலகிரி Dt. .. 100

29. திரு. K. AR. M. RM. முத்து, L. C. E. காரைக்குடி. .. 100

30. திரு. C. K. ரங்கசாமி கவுண்டர், கோவை-7. .. 100

31. திரு. R. சுந்தரராஜன், 'N. B. S.' நாமக்கல். .. 100

32. திரு. S. பாஸ்கரன், பெங்களூர்-54. ... 100

33. வேல் கட்பீஸ் சென்டர், சேலம்-1. .. 100

34. A. R. M. மாணிக்க வாசகம், பெங்களூர்-53. .. 100

35. திருமதி V. சரஸ்வதி அம்மாள், பெங்களூர்-46. .. 100

36. திரு. K. S. சக்கரபாணி செட்டியார், பெங்களூர்-11. .. 100

37. "LUCKY AGENCIES" திருச்சி-17. .. 100

38. திரு. K. R. இராமசாமி, V. P. அகரம். .. 100

39. திரு. G. கஜராஜன், I. T. O. சேலம்-7. .. 100

40. திருவாவடுதுறை ஆதீனம் 'மேலாளர்' தஞ்சை. .. 100

41. திரு. V. E. நடராஜன், வேலூர். .. 100

42. திரு. M. ரத்தின சபாபதி, B. A. B. T. வேலூர். .. 100

43. Dr. கதிரி சீதாராமன், R. I. M. P. சேலம்-6. .. 100

44. திரு. A. விட்டல் நாதன், கோவை-9. .. 100

45. திரு. K. சுந்தரம், B. E. கோவை-41. .. 100

46. திரு. V. R. சாமியப்பன், ஈரோடு-9. .. 100

47. திரு. R. P. ஏகாம்பரம்,
கொமாரபாளையம். .. 100

48. திருமதி K. சூர்யகுமாரி, கோவை-2. .. 100

49. Sri. R. S. ANANDAN, New Delhi-8. .. 100

50. புலவர் திரு. ப. கோவிந்தசாமி,
மன்னார்குடி. .. 100

51. திரு. P. R. பட்டுலிங்கம், கோபி. .. 100

52. திரு. P. K. பொன்னுசாமி கவுண்டர், B. A.
கோபி. .. 100

53. திரு. H. சங்கர்லால், அரவங்காடு, நீலகிரி. .. 100

54. திரு. M. சதானந்தா, காட்டேரி, நீலகிரி. .. 100

55. திரு. E. K. போஜன், எடப்பள்ளி, நீலகிரி. .. 100

56. திரு. ராஜு அடிகளார், காட்டேரி, நீலகிரி. .. 100

57. திரு. B. லீலாசங்கர், ஜெகதலா, நீலகிரி. .. 100

58. திரு. D. சங்கர், ஜெகதலா, நீலகிரி. .. 100

59. திருமதி. T. K. பாப்பம்மாள், பத்தமடை. .. 100

60. திருமதி. G. சுகந்தி, பிட்ரகுண்டா. .. 100

61. டாக்டர் சரஸ்வதி இராமநாதன்,
பள்ளத்தூர். .. 100

62. திரு. G. சந்திரன், 'Thilak Offset Press'
சென்னை-21. .. 100

63. திரு. T. K. S. மனோகரன், கம்பம். .. 100

64. திரு. T. K. S. தினகரன், கம்பம். .. 100

65. திரு. B. சிக்கையா, கம்பம். .. 100

66. திரு. T. K. S. பரமானந்தம், கம்பம். .. 100

| | | | |
|---|---|---|---|
| 67. | ஸ்ரீ சுவாமி குருகிருபானந்தா, ரிஷிகேஷ். | .. | 100 |
| 68. | திரு. P. R. சக்கையப்பன், கம்பம். | .. | 100 |
| 69. | திரு. O. M. S. S. S. P. சிவமுருகன் & S. V. R. சிவநாதமணி, விருதுநகர். | .. | 100 |
| 70. | திரு. J. இராமலிங்கம், B. Com., F. C. A. மன்னார்குடி. | .. | 100 |
| 71. | திரு. S. K. S. ராஜாமணி நாடார், தூத்துக்குடி-1. | .. | 100 |
| 72. | திரு. N. C. முத்து, 'B. S. T.' பஸ் சர்வீஸ், வேலூர். | .. | 100 |
| 73. | ஸ்ரீ சுவாமி சிவமயானந்தா, ரிஷிகேஷ். | .. | 100 |
| 74. | Sri Ramanavami Cultural Festival Secunderabad. | .. | 100 |
| 75. | திரு. D. ஜகதீஷ் சந்திரபோஸ், இராசிபுரம். | .. | 100 |
| 76. | திரு. G. நடராஜன், 'வீரம்மாள் பேக்கரி', சென்னை-21. | .. | 100 |
| 77. | திரு. R. V. நாராயணன், B. E., சென்னை-18. | .. | 100 |
| 78. | Dr. S. பாலகிருஷ்ணன், B. E., Phd. சேலம்-7. | .. | 100 |
| 79. | Dr. திரு. K. கைலாசம், M. B. B. S., இராசிபுரம். | .. | 100 |
| 80. | திரு. K. A. A. சங்கரலிங்கம், திருநெல்வேலி-1. | .. | 100 |
| 81. | ஸ்ரீ குருபிரசாத், காட்டேரி, நீலகிரி. | .. | 100 |

82. திருமதி ரேவதி சிவப்பிரகாசம்,
'ஜோதி பாலமந்திர்', சேலம்-14. .. 100

83. தெய்வீக வாழ்க்கைச் சங்கம், பத்தமடை. .. 100

84. திரு. A. பாஸ்கரன், B. E., இராசிபுரம். .. 100

85. பேராசிரியர் ஏ. சுப்பிரமணியம், M. A.
ஆர்க்காடு. .. 100

86. திரு. P. மாணிக்கம், 'சன்மார்க்க சங்கம்'
மேச்சேரி. .. 100

87. திரு. S. K. P. M. பழனியப்பன்,
இராசிபுரம். .. 100

88. திரு. N. அமிர்தலிங்கம், சேலம்-3. .. 100

89. திரு. M. R. கணபதி, ஆசிரியர்
தொ. ஜேடர்பாளையம். .. 100

90. செல்வி P. T. தேவகி, ஆசிரியை, இராசிபுரம். .. 100

91. திரு. R. சங்கர்லால், சேலம்-1. .. 100

92. SRI. A. SUNDARAM,
'AMERICAN EXPRESS', NEW DELHI. .. 100

93. SRI. V. L. NAGARAJ, BANGALORE. .. 100

94. திரு. P. வேலாயுதம், எடப்பாடி. .. 100

95. ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயா,
கண்டாச்சிபுரம். .. 100

96. கலிங்கா டெக்ஸ்டைல்ஸ், ஈரோடு. .. 100

97. ஸ்ரீகண்டன் I. R. S. I. T. O. சேலம் .. 100

98. திருமதி. பத்மாவதி அம்மாள், சேலம்-6. .. 100

99. திரு. C. பரமசிவம்,
'SENTHIL TRADING CORN. சேலம்-1. .. 100

100. திரு. V. ராமச்சந்திர ரெட்டியார்,
சாத்தனூர். .. 90

101. ஸ்ரீமதி S. ஆனந்தி, பெங்களூர். .. 80

102. திரு. K. ஹரிஹர ராமன், ஆடிட்டர்,
ஈரோடு. .. 80

103. திருமதி லக்ஷ்மி அம்மாள், முத்துகாபட்டி. .. 80

104. Dr. திரு. K. ஜெயராமசந்திரன், M. B. B. S.
நாமக்கல். .. 80

105. திரு. N. மாரப்ப கவுண்டர், 'N. R. T.'
நாமக்கல். .. 80

106. "சிவானந்தா டெக்ஸ்டைல்ஸ்"
இராசிபுரம். .. 80

107. திரு. S. V. A. குப்புசாமி செட்டியார்,
கரூர். .. 80

108. திரு. B. T. சண்முகசுந்தரம், எர்ணுகுளம். .. 80

109. திருமதி லலிதா சந்திரசேகரன், B. SC. B. T.,
சேலம்-4. .. 80

110. திரு. K. S. கோதண்டராமன்,
'ராம் குமார் ஸ்டோர்ஸ்', சேலம்-2. .. 80

111. திரு. மா. இராஜரத்தினம், B. A. B. T.
சிவம் யோகாசன சாலே &
இயற்கை வைத்தியம், சேலம்-7. .. 80

112. திரு. G. கணேசன், சென்னை-28. .. 80

113. திரு. N. வெங்கட்ராமன், பெங்களூர்-3. .. 80

114. திரு. P. ஆறுமுகம், கோவை-1. .. 80

115. திரு. Y. K. V. சந்தானம் செட்டியார் &
திருமதி S. கிருஷ்ணவேனி, இராசிபுரம். .. 80

116. திரு. G. A. ராதாகிருஷ்ணன், விழுப்புரம். .. 80

# அருள் ஞானியர் வரலாறுகள்

## முன்னுரை

இந்த நூலைப் பொதுவாகப், பொது மக்கள் முன்னிலையிலும், குறிப்பாக ஆன்மீகப் பாதையில் முன்னேறிச் செல்லும் சாதகர்களின் முன்னிலையிலும் வைப்பதற்கு முன்பு அருள் ஞானியர்களின் பெருமைகளைப்பற்றிச் சில வரிகள் எழுதுவது பொருத்தம் என்று படுகிறது. ஞானிகள் அவர்கள் நாட்டின் எந்தப் பகுதியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் காலம் என்னும் மணற்பரப்பில் தங்கள் காலடிச் சுவடுகளைப் பதித்துச் சென்றுள்ளார்கள்; உண்மையும், நம்பிக்கையும் உள்ளவர்கள் நிலையான பேருண்மையாகிய இறைவனைத் தேடிச் செல்வதற்கு அச் சுவடுகள், பின்பற்றிச் செல்வதற்குரிய வழிகளைக் காட்டுகின்றன. அவர்களுடைய வரலாறுகள் நமக்கு என்றென்றும் ஊக்கத்தை ஊட்டி வருகின்றன. அவர்களுடைய பெருமைகள் நம் நினைவுகளில் எப்போதும் பசுமையாக இருக்கின்றன. அவர்களுடைய போதனைகள் அவர்களுடைய வாழ்க்கை என்னும் அலையுடன் பெருகிப் பாய்கின்றன. அவர்கள் நமக்கு என்றென்றும் ஊக்கந்தந்து வழிகாட்டுவார்களாக!

இந்நூல் ஆறு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஞானியர் எந்த ஒரு நாட்டையோ, நாட்டின் பகுதியையோ சேர்ந்தவர்கள் என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாது; எல்லைகளையும் தாண்டிப் பெருக்கெடுத்தோடும் அவர்களுடைய செல்வாக்கை நில அளவுகள் தடுத்து நிறுத்த முடியாது. அவர்கள் உலகம் முழுமைக்கும் சொந்தம். எனவே மாநில அடிப்படை எதையும் அவர்களுக்குரியதாகக் குறிப்பிட்டுச் சொல்வது, அவர்கள் தனியாகவும், ஒன்று சேர்ந்தும் நாட்டின் ஆன்மீகப் புதுவாழ்வு மலர்வதற்காக அவர்கள் தொடங்கிவைத்த ஆன்மீக நீரோட்டத்தை எளிதில் புரிந்து கொள்ள வழி செய்வதற்காக ஆகும்.

முதல் அத்தியாயம், தங்கள் கொள்கைகளை நிலை நாட்டிய, எல்லோரும் அறிந்த, ஆச்சாரியர்களைப் பற்றிக் கூறுகின்றது. இரண்டாம் அத்தியாயம் பெரும்பாலும் தென்னிந்திய ஞானிகளைப் பற்றிக் கூறுகின்றது; இதே பகுதியில் மராத்திய ஞானிகளும் இடம் பெறுகின்றனர். மூன்றும் அத்தியாயம் வட இந்திய ஞானிகளைப் பற்றிக் கூறுகின்றது; தீர்க்கதரிசிகளில் முதன்மை வாய்ந்தவர் என்ற காரணத்தால் பகவான் புத்தர் இங்கு முதல் இடம் பெறுகின்ருர். நான்காம் அத்தியாயம் பெண் சாதுக்களைப் பற்றிய சில சிறிய வரலாறுகளைப் பேசுகின்றது. சூபி ஞானிகள் நூலின் ஐந்தாம் அத்தியாயத்தில் இடம் பெறுகின்றனர். இறுதியாக உள்ள ஆறும் அத்தியாயம் பொதுவாக, மற்ற ஞானிகளைப் பற்றிக் கூறுகின்றது.

மனிதன், தான் பலவீனமாக இருப்பதாகவும், தனக்கு யாரும் துணை இல்லை என்றும் உணர்கிருன். அவன் இத்தகைய தீய இயல்புகளைச் சரியான உழைப்பிஞல், சரியான வழியில் எதிர்த்துப் போராட வேண்டும். இத்தகையோருக்கு ஞானியர் வரலாறுகள் சிறந்த வழிகாட்டியாக உதவுகின்றன. அவை அவர்களுடைய வாழ்வையும், ஒழுக்கத்தையும், எதிர் காலத்தையும் உருவாக்குகின்றன. அவை அவர்களுடைய மனப்போக்கை மாற்றித் தங்கள் குருவின் போதனைகளில் நம்பிக்கை கொள்ளச் செய்கின்றன. இவ்வுலகில் வாழ்ந்து மறைந்த ஞானியர் இத்தகைய உண்மையான நம்பத்தகுந்த குருமார்கள் ஆவர்.

அவர்களுடைய நல்லாசிகள் நம்மேல் பொழிவனவாகுக! உணர்ச்சி மிகுந்த அவர்களுடைய போதனைகளில் நாம் வாழ்ந்திருப்போமாக! வாழ்வின் குறிக்கோளாகிய சச்சிதானந்தத்தை அடைய அவர்கள் நம்மை வழிநடத்திச் செல்வாராக!

ஆனந்த குடில்
ரிஷிகேஷம்
20—6—1941

சுவாமி சிவானந்தா

## 1–வது அத்தியாயம்

# ஆச்சாரியர்கள்

### 1. சங்கரர்

மதம் பற்றியும் தத்துவம் பற்றியும் இந்தியா முழுமையும் குழப்பம் பரவியிருந்தது. சாருவாகர், லோகாயதர், காபாலிகர், சாக்தர், சாங்கியர், புத்தர், மாத்தியமிகர் என்று பல்வேறு பிரிவினர் ஒருவர் பின் ஒருவராகத் தோன்றினர். எழுபத்திரண்டு என்று எண்ணிக்கை உயருமளவுக்கு மதங்கள் வளர்ந்தன, பல்வேறு பிரிவினருக்குள் பூசல் விளைந்தது. எங்கும் அமைதி நிலவவில்லை. கலகமும் குழப்பமும் ஆட்சி செலுத்தின. மூட நம்பிக்கையும் மூர்க்கத்தனமான வெறியும் நிலவின. ஒரு காலத்தில் முனிவர், ஞானியர், யோகியர்க்குரிய மகிழ்ச்சி மிகுந்ததாக இருந்த நாட்டில் எங்கும் இருள் மண்டிக் கிடந்தது. ஒரு காலத்தில் ஆரியரின் பெருமை மிகுந்ததாக இருந்த நாட்டில் துன்பங்கள் சூழ்ந்து கொண்டன. சங்கராச்சாரியார் அவதரிப்பதற்குச் சற்று முன்புவரை நாடெங்கும் இத்தகைய சூழ்நிலையே நிலவி வந்தது.

சங்கரரால்தான் இன்று இந்தியாவில் வேத தர்மம் நிலவி வருகிறது. வைதிக மதத்திற்கு எதிரான சக்திகள் இந்நாளில் இருப்பதைக் காட்டிலும் சங்கரர் காலத்தில் எண்ணிக்கை மிகுந்தும் ஆற்றல் வாய்ந்தும் விளங்கின. இருப்பினும், தன்னந்தனியாகவே, மிகக்குறுகிய காலத்தில் அவர் அவற்றையெல்லாம் வெற்றி கொண்டு வைதிக தருமத்தையும், அத்வைத வேதாந்தத்தையும் ஆதிகாலத் தூய்மையுடன் நாட்டில் மீண்டும் திகழச் செய்தார். அவர் பயன்படுத்திய படைக்கலம், ஆன்மீகத்துடன் கூடிய தூய அறிவாகும். முன்னைய அவதார புருஷர்களாகிய இராமர், கிருஷ்ணர் போன்றோர் உடலாற்றல்களைப் பயன்படுத்தினர், ஏனெனில் அக்காலத்தில் தருமத்திற்குத் தடைகளாகத் தோன்றியவை, அசுரர்களுடைய உடற் சக்திகளால்

துன்பங்களாவும் இடையூறுகளாகவும் விளைந்தவையாகும். கலியுகத்தில் தருமத்தை அழிப்பதற்குக் கிளம்பிய தடைகள் பெரும்பாலும் வெளிப்படையான புறச்சக்திகளைக் காட்டிலும் அகச் சக்திகளாகவும் உடல் பலத்தைக் காட்டிலும் மனோபலத்தைக் கொண்டனவாகவும் விளங்கின. அதர்மத்தின் விதைகள், அநேகமாக ஒவ்வொருவர் மனத்திலும் அப்போது வேலை செய்தன, எனவே தீய சக்தியுடன் போராடுவதற்கு முற்றிலும் அகத்தூய்மையுடன் கூடிய அறிவென்னும் படைக்கலமே தேவைப்பட்டது. இப் படைக்கலத்தை உருவாக்கித் திறமையுடன் பிரயோகம் செய்வதற்காகவே சங்கரர் பிராமண வருணத்தில் பிறந்து இளமைக் காலத்திலேயே சந்நியாசத்தை மேற்கொண்டார். முன்னைய அவதார புருஷர்களாகிய இராமர், கிருஷ்ணர் போன்றவர்கள் க்ஷத்திரிய வருணத்தில் பிறந்தார்கள்; ஏனெனில் அவர்களின் காலத்தில் தருமத்தை மீட்பதற்காக அவர்கள் ராணுவத் தளவாடங்களைப் பயன்படுத்த வேண்டியிருந்தது.

இந்தியத் தத்துவ ஞான வரலாற்றில் சங்கராச்சாரியாருக்கு அளிக்கப்பட்டுள்ள முக்கியத்துவம் மிகுந்த இடத்தைப்பற்றிச் சிறிதும் ஐயமின்றி அனைவரும் அறிவர். சங்கரர் போதித்த போதனைகள் ஒவ்வொரு உண்மையான சாதகரும் இந்து மதத்தவரும் தத்தம் உயிர் அணுவிலும் இரத்த நாளத்திலும் இன்னும் துடிப்புடன் விளங்குவதை உணர்கின்றார்கள். சங்கரர் தாம் பிறந்து வாழ்ந்த வாழ்வை வாழ்ந்திருக்கவில்லையென்றால், தாம் போதித்த போதனைகளைப் போதித்திருக்கவில்லையென்றால் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே நம் நாட்டின் மீது அடுத்தடுத்துப் படையெடுத்து வந்தவர்களின் மதச் சகிப்பு இன்மை, அழியட்டும் என்று மூட்டி விடப்படும் பெரு நெருப்பு, கொலைகார வாட்படை ஆகியவற்றுக்குத் தப்பி வந்துள்ள நம் பாரத வருஷம், பாரத வருஷமாக இருந்திருக்க முடியாதென்று மிகவும் உறுதியாகச் சொல்வதில் மாறுபட்ட கருத்து இருக்க முடியாது

# 5

# பிறப்பு

ஆல்வாய்க்குக் கிழக்கே ஆறு மைல் தூரத்தில் உள்ள காலடி என்ற சிற்றூரில் மிகவும் ஏழ்மையான ஒரு குடும்பத்தில், கி.பி. 788-ம் ஆண்டில் சங்கரர் பிறந்தார். கொச்சி — ஷொரனூர் ரயில்வே மார்க்கத்தில் காலடி ரயில் நிலையம் உள்ளது. அவர் நம்பூதிரிப் பிராமணர். ராஜசேகரர் என்ற ஜமீன்தார், காலடியில் ஒரு சிவன் கோயிலைக் கட்டிக் கோயிலில் பணிவிடை செய்யும் பிராமணர்களுக்காக ஓர் அக்ரஹாரத்தை உருவாக்கினார். வித்தியாதிராஜர், கோயிலில் பூஜை செய்து வந்தார். அவருக்குச் சிவகுரு என்ற பெயருள்ள ஒரே மகன் இருந்தார். சிவகுரு சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்து தகுந்த வயதில் திருமணம் செய்து கொண்டார். அவருக்குக் குழந்தை பிறக்கவில்லை. அவரும் அவருடைய துணைவியார் ஆரியம்பாவும் தங்களுக்கு ஒரு புதல்வனைத் தந்தருளுமாறு சிவபெருமானை இறைஞ்சினர். வசந்த ருது காலத்தில் ஓர் நாள் நண்பகலில் மங்களகரமான அபிஜித் முகூர்த்தத்தில் ஆருத்ரா நட்சத்திரத்தில் அவர்களுக்கு ஒரு புதல்வன் பிறந்தான். இப் புதல்வனே சங்கரர்.

சங்கரருக்கு ஏழு வயது நிறைவுற்ற போது சிவகுரு இறந்தார், சங்கரருடைய கல்விப் பயிற்சியைக் கவனிக்க யாரும் இல்லை. அவருடைய தாயார் அசாதாரணப் பெண் மணி. சாஸ்திரங்கள் அனைத்தையும் தம் புதல்வர் பயின்று தேர்ச்சி பெறவேண்டும் என்று அந்த அம்மையார் தனிக்கவனம் செலுத்தினார். சங்கரரின் தந்தையார் காலமான பின்பு அவருடைய ஏழாவது ஆண்டில் அவருக்கு உபநயனச் சடங்கு (பூணூல் விழா) நடைபெற்றது. அவர் தமது பால பருவத்தில் வயதுக்கு மீறிய அறிவாற்றலுடன் விளங்கினார். அவர் பதினாறு வயதை மட்டும் அடைந்தபோது எல்லா வகையான தத்துவங்களிலும் கொள்கைகளிலும் தலைவராக விளங்கினார். பதினாறு வயது மட்டும் நிறைவுற்ற நிலையிலேயே அவர்

கீதை, உபநிஷதங்கள், பிரம்ம சூத்திரங்கள் ஆகியவற்றுக்குப் பேருரைகள் எழுதத் தொடங்கினர். இது எவ்வளவு பெரிய அற்புதம்!

சங்கரரின் தாயார் தம் மைந்தருக்கு மணம் முடிக்கத் தக்க பெண்களின் ஜாதகங்களைப் பற்றி, ஜோதிடர்களிடம் ஆலோசித்து வந்தார். ஆனால் சங்கரர் உலகைத் துறந்து துறவியாகிவிட மிகுந்த உறுதி பூண்டிருந்தார். அவருடைய தாயார் தாம் மடிந்த பிறகு தம் இறுதிக் கடன்களை நிறைவேற்ற யாரும் இருக்கமாட்டார்களே என்று நினைந்து பெரிதும் வருந்தினர். தம் தாயாரின் இறுதி நாட்களில் உடன் இருக்கவும் வழக்கமான இறுதிச் சடங்குகளை நிறைவேற்றவும் தாம் எப்போதும் தயாராக இருப்பதாக அவர் தம் தாயாருக்கு முழு வாக்குறுதி வழங்கினர். இதன் பின்னும் அவருடைய தாயார் மனநிறைவு பெறவில்லை.

ஒருநாள் சங்கரர் தம் தாயாருடன் ஆற்றில் குளிக்கச் சென்றார். சங்கரர் நீரில் மூழ்கியதும் தம்முடைய காலை ஒரு முதலை பற்றியிழுப்பதை உணர்ந்தார். உரத்த குரலில் அவர் தம் தாயாரை நோக்கிக் கூக்குரலிட்டு, ‘ஓ! அன்புக்குரிய அம்மாவே! ஒரு முதலை என்னைக் கீழே இழுக்கின்றது. நான் இறந்து விடுவேன். ஒரு துறவியாக மனநிம்மதியுடன் என்னைச் சாக விடுங்கள். துறவி என்ற மனநிறைவுடன் நான் இறந்துபோக அனுமதியுங்கள். இப்போதாவது உங்கள் இசைவு தாருங்கள். ஆபத் சந்நியாசத்தை நான் மேற்கொள்ளச் செய்யுங்கள்’ என்று வேண்டினர்.

தாயார் உடனே துறவு மேற்கொள்ள அவருக்கு அனுமதி தந்தார். சங்கரர் அக்கணமே ஆபத் சந்நியாசம் (இறக்கும் தருவாயில் மேற்கொள்ளும் துறவு) மேற்கொண்டார். அவருக்கு எவ்விதத் தீங்கும் செய்யாமல் முதலை அவரை விட்டு விட்டது. துறவி என்ற பெயருடன் அவர் ஆற்றைவிட்டு வெளியே வந்தார். அவர் தம் தாயாரிடம் மீண்டும் தம் வாக்குறுதியைத் தெரிவித்தார். அவர் தம் தாயாரைத் தம் உறவினர்களின் பாதுகாப்பில்

இருக்குமாறு ஏற்பாடு செய்துவிட்டுத் தமக்குரிய குறைந்த செல்வங்களையும் அவர்களுக்கே கொடுத்துவிட்டார். பின்னர் அவர் துறவு வாழ்வுக்கான முறையான தீக்ஷைதரவல்ல குருவைத் தேடியவாறு புறப்பட்டார்.

இந்திய அன்னை பெற்றெடுத்த தவப்புதல்வர்களில் சங்கரர்தான் முதன்மையான இடம்பெறும் மதத் தலைவரும் மகாத்மாவும் ஆவார். அவர் அத்வைத தத்துவத்தின் விரிவுரையாளராக விளங்கினார். சங்கரர் மாபெரும் தத்துவ ஞானி; கம்பீரமான ஆளுமை படைத்தவர்; தோல்வியடையாத தர்க்கவாதி; நடைமுறையில் தத்துவங்களைப் பின்பற்றுபவர்; மிகப்பெரிய தார்மீக, ஆன்மீகச் சக்தியாக விளங்கியவர். புரிந்துகொள்ளும் அவருடைய ஆற்றலுக்கும், விளங்கவைக்கும் அவருடைய திறமைக்கும் எல்லைகளே இல்லை. நிறைவாக வளர்ச்சிபெற்ற யோகியாகவும், ஞானியாகவும், பக்தராகவும் அவர் திகழ்ந்தார். சுலபமாக நினைக்க முடியாத பெரும் கர்மயோகியாக இருந்தார். அனைவரையும் கவரும் காந்த சக்தியாக ஒளி பெற்றிருந்தார்.

அவருடைய அதி மனித அறிவாற்றலால் தொடப் படாத, திருத்தம் பெறாத, நிறைவு பெறாத அறிவுத் துறை எதுவும் இல்லை, எந்த ஒரு துறையையும் ஊடுருவாமல் அவர் விட்டதில்லை. சங்கரர் பற்றியும் அவருடைய நூல்களைப் பற்றியும் நாம் மிகவும் பெருமையாக மதிக்கின்றோம். அவருடைய மனத்தின் உயர்ச்சி, அமைதி, உறுதி ஆகியனவும், பட்சபாதமின்றிப் பல்வேறு சிக்கல்களையும் அவர் தீர்க்கும் முறையும், அவர் வெளியிடும் கருத்துக்களின் தெளிவும் ஆகிய இவையெல்லாம் அத்தத்துவ ஞானியின் மேல் நாம் கொண்டுள்ள நன் மதிப்பை மேன்மேலும் வளர்க்கின்றன. கதிரவன் காய்கின்ற வரைக்கும் நிலவுலகில் அவருடைய போதனைகள் நீடித்து நிலவும்.

அவருடைய அறிவார்ந்த மேதா விலாசம், சிக்கல்மிகுந்த தத்துவப் புதிர்களை விடுவித்துத் தெளியவைக்கும்

அவருடைய தேர்ச்சிமிகுந்த வழிமுறை, இன்று உலகில் நிலவும் பல்வேறு தத்துவக் கொள்கைகளுக்கும் உரிய அறிஞர்களின் பாராட்டுக்களைப் பெற்றுள்ளன. அவர் ஆழ்ந்த ஆராய்ச்சி அறிஞர்; தேர்ந்த தத்துவஞானி; எதையும் விளக்கிச் சொல்ல வல்லவர்; நிகரற்ற பேச்சாளர்; தெய்வீகக் கவிஞர்: மாபெரும் சமயச் சீர்திருத்தவாதி. எத்தகைய இலக்கிய வரலாற்றிலும் இத்தகைய தேர்ச்சி பெற்ற எழுத்தாளர் தோன்றவில்லை என்பது உண்மையாக லாம். மேனாட்டு அறிஞர்கள் கூட இந்நாளில் அவருக்குத் தங்கள் வணக்கங்களையும், மரியாதைகளையும் தெரிவிக் கின்றனர். பழங்காலச் சமயப் பிரிவுகள் எல்லாவற்றுள்ளும் சங்கராச்சாரியார் பின்பற்றிய முறையே இக்காலத்தவர் மனதுக்கு இசைவானதும், எளிதில் ஏற்கத் தகுந்ததும் ஆகும்.

## குருவைத் தேடி

இமய மலையில் உள்ள பத்ரிகாசிரமத்தில் (பத்ரிநாத்) சங்கரர், கோவிந்தபாத ஆசாரிய சுவாமிகளை ஓர் ஆசிரமத் தில் சந்தித்து அந்தக் குருவின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்தார். கோவிந்தர் அவரை ''நீவிர் யார்?'' என்று வினவினர். சங்கரர், ''நன் மதிப்புக்குரிய குரு தேவரே! நான் நெருப்பன்று, காற்றன்று, மண்ணன்று, நீரன்று எல்லா நாம ரூபங்களிலும் மறைந்துள்ள அழியாத ஆத்மா, நான்'' என்று விடைபகர்ந்தார். முடிவில் அவர், ''நான் கேரளத்தில் உள்ள சிவகுரு என்ற அந்தணரின் புதல்வன். என் பிள்ளைப் பிராயத்தில் என் தந்தை இறந்தார். என் தாயார் என்னை வளர்த்து ஆளாக்கினர். நான் ஓர் ஆசிரி யரிடம் வேதங்களையும் சாஸ்திரங்களையும் பயின்றேன். ஆற்றில் நான் நீராடிக் கொண்டிருந்த போது ஒரு முதலை என் காலைப் பற்றியது; எனவே நான் ஆபத் சந்நியாசம் மேற் கொண்டேன். புனிதமிகு சந்நியாச மார்க்கத்திற்குரிய முறையான தீக்ஷையை அருள் கூர்ந்து எனக்குச் செய்து வையுங்கள்'' என்று வேண்டினர்.

சங்கரர் கூறிய உண்மையான விளக்கத்தைக் கேட்டுக் கோவிந்த சுவாமிகள் மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அவர் சங்கரருக்குத் தீக்ஷை செய்வித்துச் சந்நியாசிக்குரிய காவி ஆடையை அணிவித்துத் தம் குருவாகிய கௌடபாத ஆசாரியரிடத்தில் தாம் கற்றுக் கொண்ட அத்வைத தத்துவத்தைப் போதித்தார். குருவினிடம் சங்கரர் எல்லாத் தத்துவக் கொள்கைகளையும் கற்றுத் தேர்ந்தார். அவரைக் காசிக்குச் செல்லுமாறு கோவிந்தர் பணித்தார். சங்கரர் காசிக்குப் புறப்பட்டுச் சென்று அங்கு தங்கியிருந்து பிரம்ம சூத்திரங்கள், உபநிஷதங்கள், கீதை ஆகியவற்றுக்கான புகழ்மிகுந்த பேருரைகளை எழுதினார்; அவருக்கு எதிராகக் கிளம்பிய வாதங்களையும் எதிர்த்து வெற்றி பெற்றார். பின்னர் அவர் தம் தத்துவக் கொள்கைகளைப் பரப்பத் தொடங்கினார். சங்கரர் தம் குருவாகிய கோவிந்த பாதரிடத்தும், தம் பரமகுருவாகிய — தம் குருவின் குருவாகிய — கௌடபாதரிடத்தும், மிகுந்த நன்மதிப்பு வைத்திருந்தார்.

## சங்கரரின் திக்கு விஜயம்

சங்கரரின் தத்துவக் கொள்கை வெற்றிகள் உலகத்தில் தனிச்சிறப்பு வாய்ந்தவை. இந்தியா முழுமையும் அவர் வெற்றிப் பயணம் செய்தார். மாறுபாடு கொண்ட பல் வேறு சிந்தனைச் சான்றோர்களை அவர் சந்தித்தார். தம் முடைய பேருரைகளில் அவர் விளக்கியுள்ள மத உண்மை யின் உயர்வை அவர் வாதங்களால் அவர்களை ஒப்புக் கொள்ளுமாறு செய்து, நிலைநாட்டினார்.

புகழும் செல்வாக்கும் வாய்ந்த கல்விப் பீடங்கள் உள்ள எல்லா இடங்களுக்கும் அவர் சென்றார். கற்றறிந்த அறிஞர்களை அவர் வாதுக்கு அறைகூவியழைத்துத் தகுந்த முறையில் வாதம் நிகழ்த்தித் தம் எண்ணங்களுக்கும் கொள் கைகளுக்கும் அவர்கள் மாறும்படியாகச் செய்தார். பாஸ்கர பட்டரை அவர் தோல்வியுறச் செய்தார்; வேதாந்த

சூத்திரங்களுக்கு அவர் இயற்றிய உரையைக் கண்டனம் செய்தார்; பின்னர் அவர் தண்டி, மௌரியர் ஆகியோரைச் சந்தித்து அவர்களுக்குத் தம் தத்துவத்தைப் போதித்தார். பின்னர் அவர் வாதம் நிகழ்த்துவதன் வாயிலாக ஹர்ஷர் ('கண்டன கண்ட கடியம்' — ஆசிரியர்), அபிநவ குப்தர், முராரிமிஸ்ரர், உதயணுச்சாரியர், தர்மகுப்தர், குமாரிலர், பிரபாகரர் ஆகியோர்ரை வெற்றி கொண்டார்.

பிறகு அவர் மகிஷ்மதி நோக்கிச் சென்ருர். மகிஷ்மதி அரண்மனையில் மண்டன மிஸ்ரர் தலைமை அறிஞராக இருந்தார். மண்டனர் கர்ம மீமாம்சைக் கொள்கையின்படி அவர் வளர்க்கப்பட்டவராதலின் அவருக்குத் துறவிகளைக் கண்டால் அளவற்ற வெறுப்பு ஏற்பட்டிருந்தது. அவர் ஒரு சிரார்த்தச் சடங்கைச் செய்து கொண்டிருந்த நேரத்தில் எப்படியோ சங்கரர் அங்கு வந்து சேர்ந்தார். உடனே மண்டன மிஸ்ரர் பெருஞ்சினங்கொண்டார். விரும்பத் தகாத ஒரு வாக்குவாதம் அங்கு தொடங்கிற்று, ஆனுல் அப்போது விருந்துண்ண வந்திருந்த அந்தனர்கள் குறுக்கிட்டு அவரை அமைதிப்படுத்தினர். சமய வாக்குவாதம் செய்ய வருமாறு சங்கரர் மண்டனரை அறைகூவி அழைத்தார். மண்டனர் இசைந்தார். மண்டன மிஸ்ரரின் துணைவியாகிய பாரதி அம்மையார் ஆழ்ந்த புலமை வாய்ந்தவர்; அவர் நடுவராக நியமிக்கப்பட்டார். வாதம் தொடங்குவதற்கு முன்பு, சங்கரர் தோல்வியுற்ருல் இல்லறவாசியாக மாற வேண்டித் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்றும், மண்டனர் தோல்வியுற்ருல் துறவியாக மாறித் தம் மனைவியின் கையினுல் காவியாடை பெற்றுக்கொள்ள வேண்டும் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. உண்மையான ஆர்வத்துடன் வாக்குவாதம் தொடங்கி இடையீடு இல்லாமல் தொடர்ந்து நான்கு நாட்களாக நடைபெற்றது. பாரதி அங்கு அமர்ந்திருந்து அவர்களுடைய வாதத்தைக் கேட்கவில்லை; இரண்டு மலர் மாலைகளை அவர்கள் தோள் களில் அணியச்செய்து, 'யாருடைய மாலை வாடத் தொடங்குகிறதோ அவர் தோற்றுவிட்டார் என்று முடிவு

செய்யப்படும்' என்று அந்த அம்மையார் கூறினர். அவர் அந்த இடத்தைவிட்டு நீங்கித் தம் குடும்பக் கடமைகளைக் கவனித்துக்கொண்டிருந்தார். முதலில் மண்டன மிஸிரரின் மாலை வாடத் தொடங்கியது. அவர் தம் தோல்வியை ஒப்புக் கொண்டு துறவியாக மாறவும் சங்கரரைப் பின் பற்றவும் இசைந்தார்.

பாரதி, கல்வித் தேவதையாகிய கலைமகளின் அவதாரம். ஒரு முறை துர்வாசமுனிவர் ஒரு பேரவையில் பிரம்மாவும் அவருடைய துணைவியாரும் காண அவர்களின் முன்பிருந்து வேதங்களை ஓதினர். துர்வாசர் ஒரு சிறிய பிழையைச் செய்தார். சரசுவதி தேவியார் சிரித்து விட்டார். இதனல் சினங்கொண்ட துர்வாசர் அத்தேவியார் மண்ணுலகில் பிறக்க வேண்டுமென்று சாபமிட்டார். எனவே சரசுவதி தேவி பாரதியாகப் பிறக்க நேர்ந்தது.

பாரதியம்மையார் இப்போது குறுக்கிட்டுச் சங்கரரிடம், நான் மண்டனரின் மற்றொரு பாதி. மண்டனரின் ஒரு பாதியைத்தான் தாங்கள் வெற்றிகொண்டீர்கள். நாம் ஒரு வாக்கு வாதம் செய்வோம் என்று தெரிவித்தார். ஒரு பெண்ணிடம் வாக்கு வாதம் செய்யச் சங்கரர் மறுத்தார். மகளிர் பங்கு கொண்ட வாக்குவாத நிகழ்ச்சிகளுக்குப் பல உதாரணங்களைப் பாரதி எடுத்துக் காட்டினர். பின்னர் சங்கரர் இசைந்தார்; இந்த வாக்கு வாதமும் இடையீடின்றிப் பதினேழு நாட்கள் நடைபெற்றன. பாரதி ஒரு கலை நூலிலிருந்து மற்றொரு கலைக்கு மாறி மாறிச் சென்றார். தம்மால் சங்கரரை வெல்ல இயலாதென்று இறுதியில் அவர் கண்டு கொண்டார். காமசாஸ்திரக் கலை நூலின் வழியாகச் சங்கரரை வெற்றிகொள்ள முடிவு செய்தார்.

காமசாஸ்திரக் கலை நூல் பற்றி வாக்குவாதம் செய்யத் தேவையான ஆயத்தங்களைச் செய்துகொள்ள வேண்டிச் சங்கரர் ஒரு மாத காலம் இடை நேரம் வேண்டினர்.

அம்மையார் சம்மதித்தார். சங்கரர் காசிக்குச் சென்று தம் யோக வலிமையால் பூத உடலை விட்டுப் பிரிந்து அதனை ஒரு மரப் பொந்தில் வைத்துப் பாதுகாத்து வருமாறு தம் சீடர்களுக்கு ஆணையிட்டார். இறந்துபோன அமருகராஜவின் உடம்பு இறுதிச் சடங்குக்காக வைக்கப்பட்டிருந்தது; ஆவி உருவில் சங்கரர் அவ்வுடலில் புகுந்தார். ராஜா உயிர்த் தெழுந்து நிற்கவும் மக்கள் அனைவரும் இவ்வற்புத நிகழ்ச்சியைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சியில் திளைத்தனர்.

அமைச்சர்களும் அரசியரும் தற்போதுள்ள அரசர் வேறுபட்ட குணங்களுடன்கூடிய வேறொருவர் என்று விரைவில் கண்டுகொண்டனர். ஒரு பெரிய மகானின் ஆவி தங்கள் அரசரின் உடலில் நுழைந்திருக்கவேண்டும் என்று கருதினர். எனவே தனிமை மிகுந்த காடுகளில் அல்லது குகைகளில் மனித உடம்பு மறைத்து வைக்கப்பட்டுள்ளதா என்று தேடிப் பார்க்கவும், கிடைத்தபின் உடனே எரித்து விடவும் வேவுகாரர்கள் அனுப்பப்பட்டார்கள். 'அப்படிச் செய்தால் தற்போதுள்ள அரசர் நீண்டகாலம் தங்களுடன் தங்கியிருப்பார் என்று நினைத்தார்கள். சங்கரர் அரசியருடன் காதல் அனுபவங்கள் எல்லாவற்றையும் பெற்றுக்கொண்டிருந்தார். மாயை மிகவும் ஆற்றல் வாய்ந்தது. அரசியர் புடைசூழ இருந்தமையால் அவர் தம் சீடர்களுக்குத் தந்திருந்த வாக்குறுதிகள் யாவற்றையும் முற்றிலும் மறந்து விட்டார். சீடர்கள் அவரைத் தேடத் தொடங்கினர். அமருக அரசர் உயிர்த்தெழுந்த அற்புத நிகழ்ச்சியைப் பற்றி அவர்கள் கேள்வியுற்றனர். அவர்கள் உடனே நகருக்குச சென்று அரசரைப் பேட்டி கண்டனர், தத்துவப்பாடல்கள் சிலவற்றை அவர்கள் பாடினர்; அப்பாடல்கள் சங்கரரின் நினைவைக் கிளர்ந்தெழச் செய்தன. சங்கரரின் பூதஉடல் மறைத்து வைக்கப்பட்டிருந்த இடம் நோக்கி அவர்கள் விரைந்து சென்றனர். இதற்குள் அரசியர் அனுப்பிய வேவு காரர்கள் அப்பூத உடலைக் கண்டுபிடித்துத் தீ மூட்டத் தொடங்கி இருந்தனர். சங்கரரின் ஆவி தற்போது தம் சொந்த உடம்பில் புகுந்தது, சங்கரர் தம்மைக் காப்பற்றும்

படி ஹரிபகவானை வேண்டினார். உடனே பெருமழை பெய்து தீயை அணைத்துவிட்டது.

பின்னர் சங்கரர் மண்டன மிஸிரரின் இல்லத்திற்குத் திரும்பினார். அவர் பழைய வாக்குவாதத்தை மீண்டும் தொடங்கிப் பாரதி வினவிய எல்லாவகையான வினாக்களுக்கும் திருப்தியான விடைகளை வழங்கினார். மண்டன மிஸிரர் தம் செல்வங்கள் யாவற்றையும் சங்கரருக்குப் பரிசாக வழங்கினார்; தகுதியும், வறுமையும் வாய்ந்தோர்க்கு அவற்றைப் பகிர்ந்தளிக்கும் பணியைச் சங்கரரின் விருப்பத்தின்படி அவரே செய்தார். பின்னர் அவர் சங்கரரின் சீடரானார். சங்கரர் அவருக்குத் துறவு நெறிக்குரிய தீக்ஷை செய்து வைத்துச் ''சுரேஷ்வர ஆச்சாரியர்'' என்று பெயரிட்டார். அவரே சிருங்கேரி மடத்தின் பொறுப்பை ஏற்றுக்கொண்ட முதல் துறவி. பாரதியும் சங்கரருடன் சிருங்கேரிக்குச் சென்றார்; அங்கு அவருக்கு இன்றும் வழிபாடு நடைபெறுகிறது.

இந்தியாவின் பல பாகங்களிலும் உள்ள வேத விற்பன்னர்கள் அனைவரையும் வரவழைத்து அவர்கள் வினவிய எண்ணற்ற வினாக்களுக்கு விடைகள் வழங்கிய பின்னர், சங்கரர் பேரறிவுப் பீடத்தில் அமர்ந்தார். சங்கரர் தம் காலத்தில் நிலவிய எழுபத்திரண்டுக்குக் குறையாத பல்வேறு கொள்கைகளைக் கொண்டிருந்த மதப் பகைவர்கள் அனைவரையும் வெற்றிக் கொண்டு வைதிக தருமத்தின் மேன்மையை நிலைநாட்டி அனைவருக்கும் உரிய ஜகத்குரு ஆனார்.

பிற மதக் கோட்பாடுகளைச் சங்கரர் கொண்ட வெற்றி முழுநிறைவாக அமைந்தமையால் அவற்றுள் சில இந்த நாட்டில் இன்னும் தலைதூக்க முடியவில்லை. அவற்றுள் பெரும்பான்மையும் முற்றிலும் மறைந்துவிட்டன. சங்கரருக்குப் பின்னர் சில குருமார்கள் தோன்றினர் எனினும், மாறுபட்ட கொள்கையுடையவர்களைச் சங்கரர் போல் வெற்றி கொள்ளவும், கேள்விக்கிடமில்லாத வகையில்

தம் மேன்மையை நிலை நாட்டவும் அவர்களால் முடியவில்லை.

## தாயாரின் இறுதிச் சடங்குகள்

சங்கரர் தம் தாயாருடைய அந்திம காலத் துயர நிலையைப்பற்றிக் கேள்வியுற்றார். அவர் தம்முடைய சீடர்களை விட்டுவிட்டுத் தனியே காலடிக்குப் புறப்பட்டார். அவருடைய தாயார் படுத்த படுக்கையாகக் கிடந்தார். பெரும் பணிவுடன் அவர் தாயாரின் திருவடிகளைத் தொட்டார். சங்கரர் ஹரி தெய்வத்தைப் புகழ்ந்து பாடினார். கடவுள் தூதுவர்கள் வந்தனர். சங்கரரின் தாயார் தம் பூதவுடலை நீத்து அத்தூதுவர்களுடன் வைகுந்தப் பேரின்பவுலகை அடைந்தார்.

சங்கரர் தம் தாயாரின் இறுதிச் சடங்குகளை நிறைவேற்றுவதற்குள் பல்வகையான இன்னல்களைச் சமாளிக்க நேர்ந்தது. வழக்கமாகத் துறவிகள் யாவற்றுக்கும் அப்பாற்பட்டவர்கள். இல்லறத்தார்க்குரிய விழாக்களையோ சடங்குகளையோ அவர்கள் செய்வதில்லை. நம்பூதிரிப் பிராமணர்கள் அனைவரும் சங்கரரின் எதிரிகளாயினர். அவருடைய உறவினர்களும் அவருக்கு உதவி செய்யவில்லை. இறந்த உடம்பைச் சுடுகாட்டுக்குச் சுமந்து செல்லவும் அவர்கள் துணையாக இருக்கவில்லை; சிதையில் தீ மூட்ட நெருப்பைத் தரவும் அவர்கள் மறுத்துவிட்டனர். இறுதியாகச் சங்கரர் தன்னந்தனியாகவே அச்சடங்குகளைச் செய்யத் துணிந்தார். இறந்த உடம்பு முழுவதுமாகச் சுமந்து செல்ல முடியாமல் பகுதி பகுதியாக வெட்டி அவற்றை ஒவ்வொன்றாக வீட்டின் கொல்லைப்புறம் கொண்டு சேர்த்தார். வாழைத்தண்டுகளை அடுக்கிச் சிதை அமைத்துத் தம் யோக வலிமையால் நெருப்பை மூட்டினார். சங்கரர் நம்பூதிரிகளுக்கு ஒரு பாடம் கற்பிக்க விரும்பினார். உள்ளூர்த் தலைவரை அழைத்துப் பின்வருமாறு கட்டளையிடச் செய்தார். நம்பூதிரிப் பிராமணர்களின் இல்லங்கள்தோறும் இறந்தவர் உடம்பை

எரிப்பதற்காக ஒரு இடம் ஒதுக்கப்பட வேண்டும்; பிணத்தைப் பல பகுதிகளாக வெட்டிப் பின்னர் எரிக்க வேண்டும். இவ்வழக்கம் இன்றும் நம்பூதிரிப் பிராமணர்களிடையே தொடர்ந்து நிலவி வருகிறது.

பின்னர் சங்கரர் சிருங்கேரிக்குத் திரும்பினார். கீழைக் கடற்கரை வழியாகச் சீடர் பல்லோர் உடன்வர ஒரு பயணம் செய்யப் புறப்பட்டார். தாம் சென்ற இடமெல்லாம் அத்வைத தத்துவத்தைப் பரப்பினார். பூரியில் கோவர்த்தன மடத்தை நிறுவினார். காஞ்சிபுரத்திற்குச் சென்று சாக்த மதத்தவரை எதிர்த்தார். ஆலயங்களைத் தூய்மைப் படுத்தினார். சோழ பாண்டிய நாட்டு மன்னர்களைத் தம் பக்கம் சேர்ப்பதில் வெற்றி கண்டார். உஜ்ஜைனிக்குச் சென்று அங்கு மனித இரத்தத்தைப் பலிகொடுக்கும் பைரவர்களின் அட்டகாசங்களை அழித்தார். துவாரகையை அடைந்து அங்கும் ஒரு மடத்தை நிறுவினார். பின்னர் கங்கைக்கரை வழியாகப் பயணம் செய்து புகழ் பெற்ற பேரறிஞர்களுடன் சமய வாக்குவாதங்களைச் செய்தார்.

## சங்கரரின் இறுதி

அஸ்ஸாமில் உள்ள காமரூபத்திற்குச் (கௌஹாத்தி) சென்று அங்கு அபிநவ குப்தருடன் தர்க்கம் செய்தார். சாக்த மத விளக்கங்கள் தந்து அம்மதத்தைப் பரப்பிக் கொண்டிருந்த அபிநவகுப்தரை வெற்றி கொண்டார். அபிநவர் மிக நுட்பமாகத் தம் தோல்வியை உணர்ந்தார். தம்முடைய சூன்ய வித்தையால் சங்கரர் மிகக் கொடிய மூல நோயால் பீடிக்கப்படுமாறு செய்தார். பத்மபாதர் சூன்யம் வைத்தலாகிய வித்தையின் தீய விளைவுகளை நீக்கினார். சங்கரர் இயல்பான உடல் நலம் பெற்றார். அவர் இமய மலைக்குச் சென்று ஜோஷியில் மடமும் பத்ரியில் ஆலயமும் கட்டினார். இமயமலையில் உயரம் மிகுந்த இடத்தில் உள்ள கேதார் நாத்துக்குச் சென்றார். தம்முடைய முப்பத்திரண்டாவது வயதில் கி. பி. 820-ல் லிங்கத்துடன் ஐக்கியமானார்.

# 16

## சிருங்கேரி மடம்

சிருங்கேரி என்னும் சிற்றூர் மைசூர் மாநிலத்தின் வட மேற்கில் மேற்குமலைத் தொடர்ச்சிகளின் அழகிய, சிற்றோடைகள் சலசலக்கின்ற அடிவாரத்தில் அடர்ந்த காடுகளால் சூழப்பட்டு விளங்குகிறது. சங்கரர் தம் முதல் மடத்தை இந்த இடத்தில் நிறுவினார். துங்கபத்திரை நதியின் கிளை நதியாகிய துங்கை இங்குள்ள ஆலயத்தின் சுவர்களைத் தொட்டுக் கொண்டு வெகு அருகில் உள்ள பள்ளத்தாக்கின் வழியாகப் பாய்கிறது. இதன் தூய்மையும் தெளிவும் வாய்ந்த தண்ணீர், நீராடுவதற்குப் பெருமை வாய்ந்த கங்கையைப்போல், பருகுவதற்கு மிகவும் புகழ் வாய்ந்ததாகும். (கங்கை குளிப்பதற்கு, துங்கை குடிப்பதற்கு). புனிதம் மிகுந்த இத்தலத்தின் இயற்கை அழகு நேரில் கண்டு மகிழ்ந்து போற்றுதற்குரியது. மடம் இன்னும் வலுப்பெற்று வளர்ந்து வருகின்றது என்று புகழ்வர். எண்ணற்ற சாதகர்களும், பக்தர்களும் இம் மடத்திற்கு வந்து அஞ்சலி செலுத்துவதற்குக் காரணம், எடுத்துக்காட்டாகத் திகழும் பெருமைவாய்ந்த வித்தியாரண்யர் போன்றவர்கள் மடத்தை நிறுவியதைப் போலவே புகழ் பெற்று மடத்தைத் தொடங்க அடித்தளம் அமைத்த காலத்திலிருந்து மடத்தின் தலைவராக விளங்கிய தேயாகும்.

சாயனர் என்ற மறு பெயரையுடைய வித்தியாரண்யர் ரிக் வேதத்திற்கு எழுதிய விளக்கவுரைகளை வடமொழி வல்லுனரான மாக்ஸ் முல்லர் ஆங்கிலத்தில் மொழி பெயர்ப்பதற்கு முப்பது ஆண்டுகள் ஆயின என்னும் கருத்தை இங்கே குறிப்பிடுதல்பொருத்தமற்றதாகக்கருதப்படாது. கற்றறிந்த அப்பேராசிரியர் தம் முன்னுரையில், முப்பதாண்டுக் காலத்தில் ஒரு பத்து நிமிடமாவது மொழி பெயர்ப்புப். பணியில் பயன்படுத்தப்படாமல் ஒரு நாள் கூடக் கழிய வில்லை என்று குறிப்பிடுகின்றார். மூல பாடத்தில் தெளிவாக எழுத்துக்கள் விளங்காத சில இடங்களில் திருத்தம்

செய்வதற்காகச் சிருங்கேரி மடத்தில் பாதுகாத்து வைக்கப் பட்டிருந்த முதல் மூல உரையினை அதிகார பூர்வமாகப் பார்த்து அப்படியே எழுதிக்கொண்டார் என்பது இங்கு நாம் அறியத்தக்க சுவையான ஒரு நிகழ்ச்சியாகும்; அப்போதிருந்த மைசூர் மகாராஜா இப்பணி நிறைவேற அவருக்குத் தம் செல்வாக்கினால் உதவினார்.

ஸ்ரீ சாரதா அன்னையின் புகழ்மிக்க புனிதக் கோயில் பக்தர்களின் மனத்தை, மடத்தைப்போலவே கவர்ந்து வருகின்றது. இந்தியாவில் புனித குருமார்களும் அவர்களுக்குப் பின்வந்த சீடர்களும் அமர்ந்து பணிசெய்த மடங்களும் மடாலயங்களும் கணக்கில் அடங்கா. நாட்டில் பல்வேறு பகுதிகளிலும் உள்ள இந்துக்கள் அங்கு கூடுகின்றனர். ஆனால் ஆதிசங்கரர் தாமே இருந்து அலங்கரித்த சிருங்கேரியைப்போல் பெருமையும் புகழும் வேறு எந்த மடத்துக்கும் ஏற்படவில்லை. பன்னிரண்டு நூற்றாண்டுகளாக உலகில் நிலவி வரும் மிகப்பழமையான மடங்களில் ஒன்று சிருங்கேரி பீடம். சங்கராச்சாரியார் நிறுவிய நான்கு கல்விப் பீடங்களில் இதுவே முதலாவதாகும்; ஏனைய மூன்றாவன பூரி, துவாரகை, ஜோஷிமடம் ஆகும். இவை ஒவ்வொன்றும் இந்துக்களின் நான்கு வேதங்களில் ஒவ்வொன்றைக் குறிப்பதாகும்.

சங்கரர் திறம்பெற்ற தம் நான்கு சீடர்களை (சுரேஸ்வராச்சாரியார், பத்மபாதர், ஹஸ்தாமலகர், த்ரோடகாச்சாரியார்) சிருங்கேரி, ஜகன்னாதம், துவாரகை, ஜோஷி மடங்களுக்கு முறையே பொறுப்பில் அமர்த்தினார். சிருங்கேரி மடத்தின் குருமார்களின் வரிசையில் மிகவும் புகழ்பெற்ற துறவியாக விளங்கியவர், உண்மையில், விஜய நகர சாம்ராஜ்யத்தை நிறுவிய பிதாவும், வேதங்களுக்கு உரைகள் வகுத்த பெருமை வாய்ந்தவரும் ஆகிய வித்யாராண்யரேயாவர். அவர் விஜய நகரத்தின் திவானாக இருந்தார். கி. பி. 1331ல் அவர் துறவியானார். வித்யாராண்யருக்கு முன்பிருந்த பதினொரு துறவிகள்,

சங்கராச்சாரியார், விஸ்வரூபர், நித்திய போதங்கணர், ஞானகணர், ஞானோத்தமர், ஞானகிரி, சிம்மகிரீஸ்வரர், ஈஸ்வரதீர்த்தர், நரசிம்மதீர்த்தர், வித்யாசங்கர தீர்த்தர், பாரதி கிருஷ்ண தீர்த்தர் ஆகியோர் ஆவர்.

தற்போதுள்ள குரு சுவாமிகள் சந்திரசேகர பாரதிக்கு முன்பு இருந்த, பெருமதிப்புக்குரிய ஸ்ரீ சச்சிதானந்த சிவ அபிநவ நரசிம்ம பாரதி மகா சுவாமிகள் புகழ்மிக்க ராஜயோகியாவர். வரலாற்றுப் புகழும் புனிதப் பெருமையும் வாய்ந்த வியாக்கியான சிம்மாசனம் (பேரறிவின் பீடம்) என்றழைக்கப்படுகின்ற சிருங்கேரி மடத்தின் குரு சிம்மாசனத்தில் தற்போதுள்ள குரு அமர்ந்து இருபத்தைந்து ஆண்டுகள் உருண்டோடியுள்ளன. கல்வியின் தெய்வமாகிய சரசுவதிதேவி சங்கரரின் தத்துவ ஞானப் பெருக்கைப் பாராட்டும் வகையில் பெருமைமிக்க அவருக்கு இப்பீடத்தை வழங்கியதாகப் பரம்பரைச் செய்தி கூறுகின்றது. இப்போதுள்ள குருக்களுக்கு முன்பு முப்பத்து மூன்று ஆச்சாரியார்கள் இந்தக் குரு சிம்மாசனத்தில் தொடர்ந்து இடையீடில்லாமல் முறையாக அமர்ந்து வந்துள்ளனர். தற்போதுள்ள குருக்கள் தம் வாரிசாக நியமித்துள்ள ஸ்ரீ அபிநவ வித்தியா தீர்த்தர் பக்குவநிலையடைந்த பின் தம் குருக்களைப் பின்தொடர்வார். அவர் இருபதாண்டுகள் நிறைவுற்று ஏற்கனவே ஆழ்ந்த அறிஞராக விளங்குகின்றார்.

## பத்துப் பெயர்கள் பூண்ட துறவிகள்

பத்துப் பெயர்கள் என்ற பிரிவினராகச் சங்கரர் பத்து வகையான தெளிந்த துறவியர் வகைகளை உருவாக்கினார்; அவர்கள் தங்கள் பெயர்களுக்குப் பின்னால் பின்வரும் பத்து அடைமொழிகளில் ஏதேனும் ஒன்றைச் சேர்த்துக் கொண்டார்கள். சரஸ்வதி, பாரதி, பூரி (சிருங்கேரி மடம்); தீர்த்தர், ஆஸ்ரமர் (துவாரகை மடம்), கிரி, பர்வதர், சாகர் (ஜோஷி மடம்); வாணர், ஆரணியர் (கோவர்த்தன

மடம்) 'பரமஹம்சர்' என்பது இப் படிமுறைகளில் மிக உயர்ந்த நிலையாகும். நீண்டகால வேதாந்தப் படிப்பிலும், தியானத்தாலும், மெய்யுணர்வாலும் ஒருவர் பரமஹம்ச நிலையை அடையமுடியும். அதிவர்ணாசிரமிகள் என்போர் சாதியும் வர்ணாசிரம நிலையும் கடந்தவர்கள். அவர்கள் எல்லா இனத்து மக்களுடனும் உடன் அமர்ந்து உண்ணுகிறார்கள். சங்கரரின் நெறியில் வந்த துறவிகள் இந்தியா முழுவதும் காணப்படுகின்றனர்.

## சில நிகழ்ச்சிகள்

சங்கரர் ஒரு நாள் தம் சீடர்களுடன் கங்கையில் நீராடுவதற்காக ஒரு தெருவில் சென்று கொண்டிருந்தார்; அப்போது ஒரு சண்டாளன் தன் நாய்களுடன் அவரருகே வந்துகொண்டிருந்தான், சங்கரரின் சீடர்கள் கூக்குரலிட்டுச் சண்டாளனைத் தூர விலகிச் செல்லுமாறு மிரட்டினார்கள். சண்டாளன் சங்கரரைப் பார்த்துப் ''பணிதற்குரிய தாங்கள் அத்வைத வேதாந்தத்தைப் பரப்பிவருகிறீர்கள், எனினும் மனிதனுக்கும் மனிதனுக்குமிடையே வேற்றுமை பாராட்டுகிறீர்கள். தங்களின் அத்வைதக் கொள்கைக்கு இது எப்படிப் பொருந்தும்? அத்வைதம் என்பது வெறும் கொள்கைதானா?'' என்று வினவினான். சண்டாளனின் அறிவார்ந்த வினா சங்கரரை ஆழ்ந்து சிந்திக்கச் செய்தது. அவர் தம்முள், 'சிவபெருமானே இச் சண்டாளனாக வடிவெடுத்து வந்து எனக்கொரு பாடங்கற்பித்துள்ளார்!' என்று சிந்தித்தார். அவர் அப்பொழுதே அதே இடத்தில் 'மனீஷா பஞ்சகம்' என்ற பெயருள்ள ஐந்து சுலோகங்களை இயற்றினார். ஒவ்வொரு சுலோகமும் இறுதியில், 'காணும் காட்சியை எல்லாம் அத்வைத அறிவொளியுடன் காணக் கற்றுக்கொண்டவர், சண்டாளராயினும் ஆகுக அல்லது அந்தணர் ஆயினும் ஆகுக, அவரே என் உண்மையான குரு ஆவார்' என்று முடிகின்றது.

காசியில் ஒரு மாணவர் வடமொழி இலக்கணத்தை நெட்டுருச் செய்து கொண்டிருந்தார். 'துக்ரின் கரணே

துக்ரின் கரணே' என்ற தொடரை அவர் அடிக்கடி வாய் விட்டுச் சொல்லிக் கொண்டிருந்தார். சங்கரர் அதைக் கேட்டுச் சிறுவரின் விடாமுயற்சியினுல் கவரப்பட்டார். ஆன்மீக விடுதலே அடைய விரும்புவோருக்கு இத்தகைய படிப்பெல்லாம் சிறிதும் பயன்தராதவை என்ற உண்மையை உணர்த்தும் பாங்கில் அவர் புகழ்மிக்க 'பஜகோவிந்தம்' பாடல்களில் ஒரு சிறிய பாடலே உடனே பாடினுர். அப் பாடலின் பொருள், ''கோவிந்தனே வணங்கு! கோவிந்தனே வணங்கு! கோவிந்தனே வணங்கு! மூடனே! நீ இறக்கின்ற காலத்தில் இவ்வடமொழிச் சூத்திரங்கள் உன்னேக் காப்பாற்ற மாட்டா'' என்பதாம்.

குறும்புத்தனம் மிகுந்தவர் சிலர் ஒருமுறை சங்கரருக்கு இறைச்சியும், சாராயமும், வழங்கினர். சங்கரர் அவற்றைத் தம் வலது கரத்தால் தொட்டார், இறைச்சி, ஆப்பிள் பழங்களாகவும், சாராயம் பாலாகவும் மாறின.

காபாலிகன் ஒருவன் சங்கரரை அணுகி அவரது தலே யைப் பரிசாகத் தருமாறு இறைஞ்சினுன். சங்கரர் அதற் கிசைந்து தாம் தனியாகத் தியானத்தில் ஆழ்ந்திருக்கும் போது வந்து தம் தலேயைத் துண்டித்துக்கொள்ளுமாறு அக் காபாலிகனிடம் கூறினுர். காபாலிகன் அவ்வாறே வந்து ஒரு பெரிய வாளால் சங்கரரின் தலேயைத் தனியே வெட்டி எடுக்க முனேந்தான். சங்கரரிடம் பக்திபூண்ட சீடராகிய பத்மபாதர் உடனே வந்து காபாலிகனின் கையைப் பிடித்துக்கொண்டு அடக்கி அவனேத் தம் குறு வாளால் கொன்றுவிட்டார். பத்மபாதர் நரசிம்ம தெய்வத்தை உபாசனு மூர்த்தியாகக் கொண்டு வழிபட்டு வந்தார். நரசிம்ம தெய்வமே பத்மபாதரின் உடம்பில் புகுந்து காபாலிகனேக் கொன்றுர்.

## சங்கரரின் தத்துவம்

பிரம்ம சூத்திரங்களுக்கும், உபநிஷதங்களுக்கும், கீதைக்கும் சங்கரர் உரை விளக்கங்களே (பாஷ்யங்கள்)

எழுதினார். பிரம்மசூத்திர உரை சரீரிக பாஷ்யம் என்று அழைக்கப்படுகிறது. சனத் சஞ்சதீயம், சஹஸ்ர நாம அத்தியாயம் ஆகியவற்றுக்கும் அவர் விளக்கவுரைகளை எழுதினார். ''தர்க்கம், தத்துவம் ஆகியவற்றைக் கற்க வேண்டுமானால் சங்கரருடைய விளக்கவுரைகளை நாடுங்கள்; பக்தியை வெளிப்படுத்தவும், வலுப்படுத்தவும், செயல்முறை அறிவு பெறவும் அவருடைய விவேக சூடாமணி, ஆத்ம போதம், அபரோக்ஷ அனுபூதி, ஆனந்த லஹரி, ஆத்ம — அநாத்ம விவேகம், திருக், திருஸ்ய விவேகம், உபதேச சாஹஸ்ரீ போன்ற நூல்களை நாடுங்கள்'' என்று சொல்வது வழக்கம். அழகு, ஆழம், சிந்தனை ஆகியவற்றுக்கு நிகரற்ற, கணக்கற்ற மூல இலக்கியங்களை அவர் இயற்றியுள்ளார்.

சங்கரர் கண்ட மிக உயர்ந்த பிரம்மம் நிர்க்குணம் (குணம் அற்றதாக) உள்ளது; நிராகாரம்; (உருவமற்றது) நிர்விசேஷம்; (அடைமொழிகள் அற்றது) அகர்த்தா. (செயலுக்குக் காரணமாக இல்லாதது). அவர் எல்லா விருப்பங்களையும், தேவைகளையும், கடந்தவர். சங்கரர், ''இவ் ஆத்மா தன்னொளியுள்ளது. இருப்புக்குரிய நீருபணங்களால் இவ் ஆத்மா இருக்கவில்லை. இவ் ஆத்மாவை ஒருவன் மறுக்க முடியாது; ஏனெனில் மறுப்பவனுடைய சாராம்சமாக இவ்வாத்மாவே உள்ளது. அறிவின் துறைகள் யாவற்றுக்கும் அடிப்படையாக உள்ளது ஆத்மாவே, ஆத்மா உள்ளும் புறமும், முன்னும் — பின்னும், வலமும் இடமும் மேலும் கீழும் சூழ்ந்துள்ளது''.

சத்தியம், ஞானம், அனந்தம், ஆனந்தம் என்பவை வெவ்வேறு தனித்தனிக் குணங்கள் அல்ல. பிரம்மத்தின் சாரமாக அவை அமைகின்றன. பிரம்மத்தை வார்த்தைகளால் வர்ணிக்க முடியாது; ஏனெனில் வர்ணனைக்கு ஒரு விளக்கம் தேவைப்படும். பிரம்மத்தை அவரைத் தவிர வேறுயாரிடத்திருத்தும் பிரித்துணர இயலாது.

''நாம் காணும் பொருள் உலகு — நாமரூபங்களின் உலகு — ஆதாரம் இன்றி நிலவமுடியாது, ஆத்மா ஒன்றே

தானுக நிலவ வல்லது. உலகம் வியவகாரிகம் அல்லது கட்புலக்காட்சியாக மாத்திரம் உள்ளது'' என்று கூறுகின்றூர்.

சங்கரர் கேவல அத்வைதக் கொள்கையை விளக்கியவர். அவருடைய போதனைகளை எல்லாம் தொகுத்துப் பின் வருமாறு கூறலாம்: பிரம்மம். சத்தியம், ஜகத் மித்தை; ஜீவ-பிரம்ம-ஏவ-ந-அபர — பிரம்மம் ஒன்றே உண்மை; இவ்வுலகம் அநித்தியம்; ஜீவனும், பிரம்மமும் ஒன்றே.

அவர் விவர்த்த வாதத்தை விளக்கிப் பரப்பினர். கயிற்றில் அரவு தோன்றுதல் போல இவ்வுலகும், உடம்பும் பிரம்மத்தில் அல்லது உயர் ஆத்மாவில் பொய்யாகத் தோற்றம் தருகின்றன. கயிற்றைப் பற்றிய தெளிந்த அறிவு ஏற்படும்போது பாம்பின் பொய்த் தோற்றம் மறைந்து விடுகிறது. அதுபோலவே, பிரம்மத்தைப் பற்றிய மெய்யறிவு ஏற்படும்போது உலகம், உடம்பு ஆகியவற்றின் பொய்த் தோற்றங்கள் மறைந்துவிடும்.

## 2. இராமானுசர்

சென்னைக்கு மேற்கில் இருபத்தைந்து மைல் தொலைவில் உள்ள சிற்றூராகிய பெரும்புதூரில் கி. பி. 1017-ல் இராமானுசர் பிறந்தார். அவருடைய தந்தையார் பெயர் கேசவ சோமயாஜி; அவருடைய தாயார் காந்திமதி அம்மையார் மிகவும் பக்தியும் நற்பண்பும் வாய்ந்தவராவர். அவருடைய தமிழ்ப் பெயர் இளையபெருமாள். தம் சிறு பருவத்திலேயே அவர் தம் தந்தையை இழந்தார். பின்னர் அவர் காஞ்சீபுரத்திற்கு வந்து அத்வைத தத்துவ ஆசிரியராகிய யாதவப் பிரகாசரிடம் வேதங்களைப் பயிலத் தொடங்கினர்.

இராமானுசர் மிகவும் விவேகமுள்ள மாணவர். யாதவப் பிரகாசர் வேத நூல்களுக்கு வழங்கிய விளக்க வுரைகள் அவருக்குத் திருப்தியை உண்டாக்கவில்லை. தம் ஆசிரியரின் விளக்கங்களில் காணப்பட்ட பிழைகள்

பலவற்றையும் அவர் சுட்டிக்காட்டினர். சில சமயங்களில் அவர் தம் சொந்த விளக்கங்களை வழங்கினர். அவற்றைச் சக மாணவர்கள் பெரிதும் விரும்பிப் போற்றினர். இதனால் யாதவப் பிரகாசர் இராமானுசரிடத்தில் மிகவும் பொறாமை கொண்டார்.

இராமானுசரின் உயிருக்கே இறுதி தேடும் ஒரு சூழ்ச்சியை யாதவப் பிரகாசர் செய்தார். அவர் இராமானுசரை அவருடைய ஒன்று விட்ட சகோதரரும், சக மாணவரும் ஆகிய கோவிந்தபட்டருடன் காசிக்கு யாத்திரை செல்லச் செய்தார். பயணம் செய்து கொண்டிருந்தபோது யாதவப் பிரகாசரின் அன்புக்குரிய மாணவராகிய கோவிந்தபட்டர் இச்செய்தியை அறிந்தார். அவர் உடனே இராமானுசரிடம் நேர இருக்கும் ஆபத்தை எடுத்துச் சொல்லி அவர் தப்பிச் செல்ல உதவி செய்தார். இறைவன் திருவருளால் இராமானுசர், தாம் வழியில் தற்செயலாகச் சந்தித்த ஒரு வேடனும் அவனுடைய மனைவியும் செய்த உதவியால் தப்பிச் சென்றார்.

பத்தாம்நூற்றாண்டின் இறுதிவாக்கில் விசிஷ்டாத்வைத. தத்துவக் கொள்கை தென்னாட்டில் நன்கு நிலை பெற்று அக் கொள்கையைப் பின்பற்றுவோருடைய பொறுப்பில் மிகவும் முக்கியம் வாய்ந்த காஞ்சீபுரம், ஸ்ரீரங்கம், திருப்பதி மற்றும் முக்கியத் தலங்களில் இருந்த வைணவக் கோயில்கள் வந்து சேர்ந்தன. வைணவ மடத்தின் முக்கியத் தலைவராக ஞானியும், பேரறிஞருமாகிய யமுனாச்சாரியார் விளங்கினர். திருவரங்க மடத்தின் தலைவராகவும் அவர் விளங்கினர்; அவருடைய சீடர்களில் ஒருவராகிய காஞ்சி பூரணர் காஞ்சீபுரக் கோயிலில் பணி செய்து கொண்டிருந்தார். அவர் தாழ்த்தப்பட்ட குலத்தவராக இருப்பினும் அங்கிருந்த மக்கள் அவரைப் பாராட்டி நன்கு மதிக்குமாறு மிகவும் புனிதமாகவும், நற்பண்பாளராகவும் அவர் திகழ்ந் தார். இக்காலத்தில் காஞ்சீபுரத்தில் உள்ள ஒரு கோயிலில் அவருடைய சிலை வைக்கப்பட்டுள்ளது; மக்கள் அவரை ஓர்

அருள் ஞானியாக மதித்து வழிபாடு செய்து வருகின்றார்கள்.

இளம் இராமானுசர் அவரால் கவரப்பட்டு அவரை நன்கு மதித்துப் பணிவுடன் போற்றித் தம் இல்லத்துக்கு விருந்துண்ண வருமாறு ஒரு முறை அழைத்தார். இராமானுசருடைய உட்கிடக்கை, தாமே நேரில் இருந்து காஞ்சிபூரணரை உபசரித்து விருந்து படைத்து அவர் உணவுண்ட பிறகே தாம் உண்ண வேண்டும் என்பதாம். துரதிர்ஷ்டவசமாகக் காஞ்சி பூரணர் இராமானுசர் வீட்டில் இல்லாதபோது வருகைதந்து அவருடைய மனைவியார் பரிமாறிய விருந்தை உட்கொண்டார். இராமானுசர் இல்லத்திற்குத் திரும்பி வந்தபோது வீடு முழுவதும் மெழுகப் பட்டிருந்ததையும், தாழ்த்தப்பட்டவருக்கு உணவு படைத்த மையால் அவருடைய மனைவியார் நீராடிப் புனிதம் ஆக்கிக் கொள்வதையும் கண்டார். தம் கருத்துக்கு முற்றிலும் மாறுபட்ட வைதிகக் கருத்துடையவராக இருந்த தம் மனைவியார்மீது அவர் மிகுந்த எரிச்சலடைந்தார். இது போன்ற சில நிகழ்ச்சிகள் நடந்த பின்னர் இராமானுசர் இல்வாழ்வைத் துறந்து துறவுவாழ்வை மேற் கொண்டு துறவியாகிவிட்டார்.

இச்சமயத்தில் யமுனைச்சாரியார் தாம் மிகவும் வயோதிகம் அடைந்துவிட்ட காரணத்தால் திருவரங்க மடத்தின் தலைமையை ஏற்றுக்கொள்ளுவதற்குத் தகுதியும் திறமையும், நற்பண்பும் உள்ள இளைஞர் ஒருவரைத் தேடிக் கொண்டிருந்தார். அவர் இராமானுசரைப் பற்றித் தம் சீடர்கள் வாயிலாக ஏற்கனவே கேள்விப்பட்டிருந்தமையால் தம் இடத்தில் அவரை அமர்த்த முடிவு செய்தார். திருவரங்கத்திற்கு வருமாறு அவருக்குச் செய்தி அனுப்பினார். இராமானுசர் திருவரங்கத்தை அடைந்தபோது யமுனைச்சாரி யார் காலமாகிவிட்டபடியால் அவருடைய சீடர்கள் இறுதிச் சடங்குகளைச் செய்வதற்காக ஊருக்கு வெளியே உள்ள சுடுகாட்டுக்கு, இறந்த உடம்பைச் சுமந்து சென்று

கொண்டிருந்தார்கள். இராமானுசர் அவர்களைப் பின் தொடர்ந்து சுடுகாட்டுக்குச் சென்றார். அங்கு அவர் சென்ற போது அவரறிந்த தகவல், யமுனாச்சாரியார் தாம் இறப்பதற்கு முன்பு தம்முடைய மூன்று வேண்டுகோள்களைத் தெரிவித்து அவற்றை நிறைவேற்றுமாறு இராமானுசருக்குத் அறிவிக்குமாறு சொல்லியிருந்தார் என்பதாகும். அம் மூன்று வேண்டுகோள்களாவன; சீடர்கட்கெல்லாம் இது காறும் வாய்மொழியாகக் கற்பிக்கப்பட்டு வந்த, வியாசரின் பிரம்மசூத்திரங்கட்கான விசிஷ்டாத்வைத உரையை எழுத வேண்டும் என்பதும், விஷ்ணு புராண ஆசிரியர் பராசாரர், அருள் ஞானி சடகோபர் ஆகியோருடைய திருப்பெயர்கள் என்றும் நிலவி விளங்குமாறு செய்ய வேண்டும் என்பனவும் ஆகும். இராமானுசரின் உள்ளத்தில் இவை ஆழப் பதிந்தன; உடனே சுடுகாட்டிலேயே யமுனாச்சாரியாரின் இறந்த உடம்பின் முன்னிலையில், இறைவன் திருவருள் இருப்பின் இம் மூன்று வேண்டுகோள்களையும் நிறைவேற்று வதாக, அமைதியாக வாக்குறுதி எடுத்துக்கொண்டார். இராமானுசர் 120 ஆண்டுகள் வாழ்ந்தார். தம்முடைய நீண்ட வாழ்நாளில் அவர் அந்த மூன்று வேண்டுகோள் களையும் முற்றிலுமாக நிறைவேற்றித் தம் வாக்குறுதியைக் காப்பாற்றினார்.

யமுனரின் மறைவுக்குப் பின்னர் திருவரங்கத்திலும் மற்ற இடங்களிலும் இருந்த அவருடைய சீடர்கள் திருவரங்க மடத்தின் தலைமையை இராமானுசர் ஏற்க வேண்டும் என்று விரும்பினர். யமுனர் வெளியிட்டிருந்த விருப்பமும் இதுவே யாகும். அதற்கிணங்க இராமானுசர் திருவரங்கத்திலிருந்த விசிஷ்டாத்வைத மடத்தின் தலைமைப் பீடத்தில் பல்வேறு சடங்குகள், விழாக்களுடன் அமர்த்தப் பட்டார்.

பின்னர் இராமானுசர் திருக்கோஷ்டியூர் நம்பிகளிடம் 'ஓம் நமோ நாராயணாய' என்ற எட்டெழுத்துத் திருமந்திர உபதேசமும் தீக்ஷையும் பெறுவதற்காகப் புறப்பட்டார்.

ஏனோ, நம்பிகள் இராமானுசருக்குத் தீக்ஷை செய்துவைக்க விரும்பவில்லை. அவர் இராமானுசரைத் திருவரங்கத்திலிருந்து மதுரைக்குப் பதினெட்டு தடவைகள் நடக்கவைத்த பிறகே அவருக்குத் தீக்ஷை செய்துவைக்க முடிவு செய்தார்; அதுவும் அவரிடம் இரகசியத்தைக் காப்பதாகச் சத்திய வாக்குறுதி பெற்றுக்கொண்ட பிறகே இசைந்தார். பின்னர் நம்பிகள் இராமானுசருக்கு முறையாகத் தீக்ஷை செய்துவைத்து, 'இராமானுச! இம் மந்திரத்தை இரகசியமாக வைத்துக்கொள். இம் மந்திரம் மிகவும் சக்தி வாய்ந்தது. இம் மந்திரத்தை உச்சரிப்போர் முத்திப்பேறு அடைவர். முன்னரே சோதனை செய்து பார்த்து அதில் தேறிய தகுதி வாய்ந்த சீடனுக்கே இம் மந்திரத்தை உபதேசம் செய்வாயாக' என்று கட்டளையிட்டார். ஆனால் இராமானுசர் பரந்த உள்ளம் வாய்ந்தவர். அவர் எல்லை மீறிய கருணை படைத்தவர்; மனித சமுதாயத்தின்பால் அவர் கொண்டிருந்த அன்பு வரம்பற்றது. ஒவ்வொரு மனிதனும் நாராயண பகவானுடைய நிலையான பேரின்பத்தை அடைந்து மகிழவேண்டும் என்று அவர் விரும்பினார். மந்திரம் மிகவும் சக்தி வாய்ந்தது என்பதை அவர் உணர்ந்துதெளிந்தார். சாதி, சமயங்களைப் பாராமல் அவர் எல்லா மக்களையும் அழைத்துக் கோயிலின் முன்னே கூட்டமாகக் கூடுமாறு செய்தார். கோயிலின் முன்புற வாசலில் உள்ள கோபுரத்தின் உச்சிமீது சென்று நின்று தம் உரத்த குரலில் புனித மந்திரத்தை முழக்கமிட்டு அறிவித்தார். அவருடைய குருவாகிய நம்பிகள் இதை அறிந்தபோது வெகுண்டார். இராமானுசர் அவரைப் பார்த்து; 'அன்புமிக்க குருவே! என் தவறான நடத்தைக்குத் தகுந்த தண்டனையை தயவு செய்து விதியுங்கள்' என்று வேண்டினார். நம்பிகள், 'நீ என்றென்றும் நரகில் கிடந்து வருந்துவாய்' என்றார். இராமானுசர், 'கோடிக்கணக்கான மக்கள் இம் மந்திரத்தை என் வாயிலாக அறிந்து முத்திப்பேரின்பத்தை அடைய முடிந்தால், நானே வலிய நரகில் விழுந்து துன்பங்களை மகிழ்ச்சியுடன் சகித்துக் கொள்ளுகிறேன்' என்று கூறினார். இராமானுசருடைய

மிகப் பரந்த கருணை நிரம்பிய உள்ளத்தைக் கண்டுகொண்ட நம்பிகள் அவரைப் பற்றிப் பெருமகிழ்ச்சியடைந்தார். அவர் இராமானுசரைத் தழுவிக்கொண்டு நல்லாசிகள் வழங்கினர். இவ்வாறு தேவையான தகுதிகள் வாய்ந்தவராய் இராமானுசர் யமுனருக்கு அடுத்த தலைவரானர்.

இதற்குள் இராமானுசரின் புகழ் அண்மையிலும் சேய்மையிலும் உள்ள எல்லா இடங்களுக்கும் பரவியது. நேச மனப்பான்மையுடன் மாறுபடும் கருத்துள்ளவராக அவர் விளங்கினர். பின்னர் அவர் பிரம்ம சூத்திரங்கட்குப் பேருரைகளை எழுதினர்; இவ்வுரை '<u>ஸ்ரீபாஷ்யம்</u>' என்று அனைவரும் நன்கு அறிவர். <u>விசிஷ்டாத்வைதக் கொள்கை மிகவும் பழமை வாய்ந்த ஒன்ருகும்.</u> கி. மு. 400-ல் போதாயனர் தம் விருத்தியுரையில் அக்கொள்கையை விரிவாக விளக்கியுள்ளார். இராமானுசர் வகுத்த விளக்கமும் இதுவும் ஒன்றே; பிரம்ம சூத்திரங்களை விளக்குவதற்காக எழுதும் உரைகளில் இராமானுசர், போதாயனரைப் பின்பற்றியுள்ளார். அவருடைய கோட்பாட்டில் சேர்ந்த வைஷ்ணவர்கள் '<u>ஸ்ரீ சம்பிரதாயிகள்</u>' என்ற பெயரால் அழைக்கப்படுகிருர்கள். அவர் எழுதிய ஏனைய மூன்று நூல்கள்:— <u>வேதாந்த சாரம்</u> (வேதாந்தத்தின் சாரம்); <u>வேதாந்த சங்கிரகம்</u> (வேதாந்தத்தின் சுருக்கம்); <u>வேதாந்த தீபம்</u> (வேதாந்த விளக்கம்). பக்திமார்க்கத்தைப் பரப்புவதற்காக அவர் இந்தியா முழுவதும் பயணம் செய்தார். காசி, காஷ்மீரம், பத்ரிநாதம், உள்படப் புனித தலங்கள் எல்லாவற்றுக்கும் யாத்திரை செய்தார். திரும்பி வரும்போது அவர் திருப்பதி மலையைத் தரிசித்தார். அங்கே சைவரும் வைணவரும் ஒரு சாராருடன் மற்ருெரு சாரார் திருப்பதி மலையில் உள்ள விக்கிரகம் சைவமா அல்லது வைணவமா என்பது பற்றிக் கலகம் செய்து பூசலிட்டுக் கொண்டிருந்தனர். அப் பிணக்கைத் தீர்ப்பதன் பொருட்டு அப் பொறுப்பைத் தெய்வத்திடமே விட்டுவிடுமாறு அவ்விரு சாராரிடமும் யோசனை கூறினர்.

அவ்வாறே அவ்விரு சாராரும் சைவ, வைணவச் சின்னங்களை இறைவனுடைய திருப்பாதங்களில் வைத்துவிட்டுக் கோயிற் கதவைப் பூட்டிக்கொண்டு இரவில் வெளியில் தக்க காவலுடன் ஏற்பாடு செய்துவிட்டு உறங்கச் சென்றனர். காலையில் அவர்கள் கதவைத் திறந்து உள்ளே சென்று பார்த்தபோது இறைவன் வைணவச் சின்னங்களை அணிந்து கொண்டிருப்பதையும், சைவச் சின்னங்கள் இறைவன் திருவடிகளில் அவர்கள் வைத்துவிட்டுச் சென்றதுபோலவே அப்படியே இருந்ததையும் கண்டனர். இந்நிகழ்ச்சி, அக்கோயில் வைணவ சமயத்தைச் சார்ந்தது என்பதைத் தீர்மானித்தது; இன்று வரை அவ்வாறே இருந்து வருகின்றது.

பின்னர் அவர் தென்னிந்தியாவில் உள்ள வைஷ்ணவத் தலங்கள் எல்லாவற்றையும் தரிசனம் செய்துகொண்டு முடிவில் திருவரங்கத்திற்கு வந்து சேர்ந்தார். இங்கு அவர் நிலையாகத் தங்கியிருந்து விசிஷ்டாத்வைத தத்துவத்தை பரப்பும் உழைப்பைத் தொடர்ந்து செய்துவந்தார்; பல நூல்களையும் எழுதிவந்தார். நாள்தோறும் பல்லாயிரக் கணக்கான மக்கள் அவருடைய சொற்பொழிவுகளைக் கேட்டு மகிழத் திரண்டனர். அவர் ஆலயங்களைத் துப்புரவாக்கி அங்கு நடைபெற வேண்டிய சடங்குகளை நிலையாக நடைபெறச் செய்தார்; சமுதாயத்தில் புகுந்துவிட்ட பல்வேறு தீய பழக்கங்களையும் அறவே அகற்றித் திருத்தம் செய்தார். அவர்பால் இருந்த பேரவையில் 700 துறவிகளும், தனிச்சிறப்பு வாய்ந்த அலுவல்களை நிர்வாகம் செய்யும் முக்கிய அதிகாரிகள் 74 பேரும், அவரைத் தெய்வமாகக் கொண்டாடிய ஆயிரக்கணக்கான புனிதம் மிகு ஆடவரும். மகளிரும் இருந்தனர். அவர் இலட்சக் கணக்கான மக்களைச் சரணுகதியாகிய பக்தி மார்க்கத்திற்குத் திருப்பினர். வண்ணுர பக்தர்களுக்கும் அவர் தீக்ஷை செய்துவைத்தார். அவர் தற்போது எழுபது வயதை அடைந்திருந்தார், ஆனல் அவர் இன்னும் பல்லாண்டுகள் வாழவேண்டும் என்றும், இன்னும் பல மடங்களை நிறுவ

வேண்டும் என்றும், இன்னும் பல கோயில்களைக் கட்ட வேண்டும் என்றும், இன்னும் பல்லாயிரக்கணக்கான மக்களை அவர் மாற்றவேண்டும் என்றும், . . அவருடைய விதி அமைந்திருந்தது.

இச்சமயத்தில் சோழமன்னன் (முதற் குலோத்துங்கச் சோழன்) தீவிரச் சைவனாக இருந்தான்; இராமானுசரும் தன் சைவக் கொள்கையை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும், சிவபெருமானையே முழுமுதற் பெருங்கடவுளாக அவர் ஒப்புக்கொள்ள வேண்டும் என்றும் அவன் ஆணையிட்டான், இராமானுசருக்குப் பதிலாக அவருடைய சீடர்கள் கூரேசரும் மகாபூர்ணரும் துறவிகட்குரிய காவியாடைகளை அணிந்துகொண்டு குலோத்துங்கனுடைய அரண்மனை மண்டபத்திற்கு வந்தனர். விஷ்ணுவின் உயர்வைக் குறித்து அவர்கள் வாதாடினர். அரசன் அவர்கள் உரைகளைக் கேட்க மறுத்ததுடன் அவர்களுடைய கண்களையும் குருடாக்கிவிட்டான் துரதிர்ஷ்டம் வாய்ந்த அவ்விருவரும் திருவரங்கத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். அதுவே அவர்களுடைய சொந்தஊர். வயோதிகம் மிகுந்த மகாபூர்ணர் வலிதாங்க முடியாமல் வழியிலேயே இறந்து போனார். கூரேசர் மட்டுமே திருவரங்கம் வந்து சேர்ந்தார். இடையில் இராமானுசர் சில தொண்டர்களுடன் இரவும் பகலும் விரைவாகப் பயணம் செய்து மைசூருக்கு மேற்கே நாற்பது மைல் தொலைவில் உள்ள மேற்கு மலைத்தொடர்களின் அடிவாரத்திற்கு வந்து சேர்ந்தார். பல துன்பங்களுக்குப் பிறகு அங்கு அவர் நிலையாகத் தங்கியிருந்து விசிஷ்டாத்வைத தத்துவத்தை மக்களிடையே பரப்புவதும் அவர்களை மாற்றுவதுமாகச் சில ஆண்டுகளைக் கழித்தார். ஹொய்சள வம்சத்துப் பட்டிதேவர் அங்கு மன்னராக இருந்தார். அவ்வரசருடைய மகளை ஒரு பேய்பிடித்திருந்தது, யாரும் அவளைக் குணப்படுத்த முடியவில்லை. இராமானுசர் அப் பேயை ஓட்டுவதில் வெற்றிபெற்றார். இளவரசியும் குணமாகி முன்புபோல உடல் நலத்துடன் விளங்கினாள். அரசர் பெருமகிழ்ச்சியடைந்து உடனே

அவருடைய சீடராகி அவரால் வைஷ்ணவமதத்திற்கு மாற்றம்பெற்றான். இதன் பின்னர் இராமானுசர் மைசூர் மன்னருடைய ஆட்சிக்குட்பட்ட இடங்களில் நிலையாக உறுதியாகத் தங்கியிருந்து மேல்கோட்டில் ஓர் ஆலயத்தைக் கட்டினார். வலிமை மிகுந்த வைணவ சமுதாயத்தை உரு வாக்கினார். இங்கு அவர் ஏறத்தாழ இருபது ஆண்டுகள் தொடர்ந்து உழைத்தார்; அவருடைய தொண்டர்களும் பல்லாயிரக்கணக்கில் பெருகினர். அங்கிருந்த பறையர்கள் அல்லது தாழ்த்தப்பட்டவர்கள் (தற்போது ஹரிஜனங்கள் என்று அழைக்கப்படுகிறார்கள்) இராமானுசருக்கு மிகப் பெரும் சேவைசெய்து வந்தனர், இராமானுசர், தாம் மேல் கோட்டில் கட்டிய கோயிலில் குறிப்பிட்ட நாட்களில் அவர்கள் நுழையவும் வழிபாடுசெய்யவும் இன்னும் சில சலுகைகள் பெறவும் அனுமதி தந்தார். இன்றும் அவ்வாறே அவர்கள் அனுபவித்து வருகின்றனர்.

அவர் இன்னும் சில கோயில்களை மைசூரிலும், அவ் வூரைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் கட்டினார், வலுவான வைஷ்ணவ சமுதாயத்தை நிலைநாட்டினார். தம்முடைய பணிகள் தொடர்ந்து நடைபெறவும், விசிஷ்டாத்துவைத தத்துவத்தைப் பரப்பவும், அரசருடைய ஆளுகைக்குட்பட்ட இடங்களில் விஷ்ணுவழிபாடு நடைபெறவும் அவர் கோயில் களின் பொறுப்புக்களைத் தம் சீடர்கள் மேற்கொள்ளச் செய்தார். இவ்வாறு அவர் ஏறத்தாழ இருபது ஆண்டு களாகத் தம் உழைப்புக்களைத் தொடர்ந்து செய்தார்.

இதற்கிடையில் அவரை முன்பு துன்புறுத்திய, குலோத்துங்கச்சோழன் மடிந்தான். இராமானுசருடைய தொண்டர்கள் உடனே அவருக்கு இச்செய்தியைத் தெரிவித்து அவரைத் திருவரங்கத்துக்குத் திரும்பிவருமாறு வேண்டினர். அவரும் திருவரங்கத்தினுள்ளே தம் தொண்டர்களிடம் செல்ல வேண்டும் என்றும் அக்கோயிலில் வழிபாடு செய்ய வேண்டும் என்றும் மிகவும் விரும்பி ஏக்கத்துடன் இருந்தார்.

ஆனால் அவருடைய புதிய சீடர்களும் மேல் கோட்டிலும், மைசூரின் மற்ற இடங்களிலும் இருந்த அவருடைய தொண்டர்களும் அவரைச் செல்லவிடாது தடுத்தனர். எனவே அவர் தமக்கென்றே ஒரு கோயிலைக்கட்டித் தம் உருவத்தைப் பிரதிஷ்டை செய்து தம் சீடர்களும் தொண்டர்களும் அங்கு வழிபாடாற்றி மகிழச்செய்து திருவரங்கத்துக்குப் புறப்பட்டார். திருவரங்கத்தில் அவருடைய சீடர்களும் நண்பர்களும் அவரை வரவேற்றனர். குலோத்துங்கச் சோழனுக்குப்பின் வந்த அரசன் வைஷ்ணவச் சார்புடையவன், ஆதலால் அவருக்கு எவ்விதமான தீங்கும் நேரவில்லை. அவர் மேலும் முப்பது ஆண்டுகளுக்குத் தம் பணிவிடைகளைத் தொடர்ந்து செய்து சிறப்பாகக் குறிப்பிடத்தக்க 120 ஆண்டுகள் நிறைவெய்திய பிறகு தம் நீண்டகால வாழ்க்கைப் பணிகளை ஒருமுடிவு பெறச் செய்தார்.

இராமானுசர் விசிஷ்டாத்வைத தத்துவம் அல்லது இருமையற்ற கொள்கையை விளக்கியவராவார். இராமானுசர் கண்ட பிரம்மம் ஸ-விசேஷ பிரம்மம்; அதாவது பண்புகளுடன் கூடிய பிரம்மம். அவருடைய போதனைகளின்படி நாராயண பகவானே முழுமுதற் பரம் பொருள்; தனிப்பட்ட ஆத்மா சித்து; பொருள் அசித்து, பகவானுடைய பண்புகள் உண்மை என்றும் நிலையானவை என்றும் ஆனால் பகவானுக்குக் கட்டுப்பட்டவை என்றும் அவர் கருதுகின்றார். பண்புகள் பிரகாரங்கள் அல்லது வகைகள் என்று அழைக்கப்படுகின்றன. நாராயண பகவான் அண்டங்களை ஆளுபவராகவும் அகிலத்தின் தெய்வமாகவும் உள்ளார். ஜீவன் அவருக்கு அடிமையாகவும் வழிபாடு ஆற்றுவோனாகவும் உள்ளது. ஆன்மா அவருக்கு முற்றிலும் சரணாகதியாக ஆகிவிட வேண்டும். பண்புகளின் இருப்புடன் இறைவனுடைய ஒன்றாகும் தன்மை பொருந்தியுள்ளது; ஏனெனில் பண்புகள் அல்லது சக்திகள் தம் இருப்புக்காக இறைவனையே சார்ந்திருக்கின்றன.

---

## 3. மத்வர்

மத்வாச்சாரியார் மிகப் பெரும் சமயச் சீர்திருத்தவாதி யாவார். அவர் பிரம்ம சூத்திரங்கட்கும் பத்து உபநிஷதங் கட்கும் வைதிகப் பேருரைகள் எழுதிய உரையாசிரியராக விளங்குகின்ருர். அவர் தென்னிந்தியாவில் தென் கன்னட மாநிலத்தில் உடுப்பியிலிருந்து சில மைல் தூரத்தில் உள்ள வேலாலி என்னும் சிற்றூரில் கி. பி. 1199-ல் பிறந்தார். அவர் பிறப்பினுல் ஒரு துளு பிராமணர். மத்யகேஹருக்கும், வேதவதிக்கும் அவர் பிறந்தார். வேதவதி மிகவும் நற் பண்புள்ள பெண்மணி. காற்றுக் கடவுளான வாயு பகவானின் அவதாரமாக மத்வர் கருதப்படுகிருர். தந்தை யார் அவருக்கு வாசுதேவர் என்று பெயரிட்டார்.

திடல் விளையாட்டுக்களிலும், உடற் பயிற்சிகளிலும் அவர் தேர்ச்சி பெற்று முதன்மையாக விளங்கினுர். அவர் மிகவும் அதிசயிக்கத்தக்க யாக்கை நலம் பெற்றிருந்தார். அவர் மற்போர், ஓட்டம், உயரத்தாண்டல், நீந்தல் முதலிய வற்றைப் பயின்றிருந்தார். எனவே மக்கள் அவரைப் ‘பீமன்’ என்ற செல்லப் பெயரிட்டழைத்தனர். அவர் வேதங்களையும், வேதாங்கங்களையும் பயிலத் தொடங்கி அவற்றில் சிறந்த தேர்ச்சி பெற்று விளங்கினுர். தம் இருபத்தைந்தாம் வயதில் அவர் துறவியானுர். அச்சுதப் பிரகாச ஆச்சாரியார் அவருக்குத் தீக்ஷை செய்து வைத்தார். மத்வர் இப்போது பூரணப்பிரக்ஞர் என்று பெயர் பெற்ருர். மத்வர் வேதாந்தம் மற்றும் உள்ள மறை நூல்கள் யாவற் றிலும் ஆழம் மிக்க அறிவாற்றல் வாய்ந்த பொலிவுள்ள துறவி என்று அச்சுதபிரகாச ஆச்சாரியார் கண்டறிந்தார். மடத்தில் தமக்குப் பதிலாக அவரைத் தலைவராக நியமித் தார். மத்வர் தற்போது ஆனந்த தீர்த்தர் என்று பெயர் பெற்ருர். பக்தி என்னும் சிறப்புச் செய்தியைப் பரப்புவதற் காக அவர் தென்னிந்தியாவிலும், வட இந்தியாவிலும் உள்ள இடங்களுக்கு மிக நீண்ட பயணம் மேற்கொண்டார். அவரால் கணக்கற்ருேர் மாற்றம் பெற்றனர். அவர் பக்தி

நாராயணத் தலத்திற்குச் சென்று திரும்பியவுடனே பகவத் கீதைக்கும், பிரம்ம சூத்திரங்கட்கும் உரை விளக்கங்களை எழுதினர். மத்வக் கொள்கையின் முதன்மை இடமாகிய உடுப்பியில் அவர் பல கோயில்களைக் கட்டினர். வைதிக மத்வர்களில் பெரும்பான்மையோர் தம் வாழ்நாளில் ஒரு முறையாவது உடுப்பிக்குச் சென்று வர முயல்கின்றனர்.

மத்வர் அதிமனித சக்திகளைப் பெற்றிருந்தார். அவர் பல அற்புதங்களைச் செய்தார். புயலில் சிக்கிய படகு ஒன்றை அவர் காப்பாற்றினர். கிருஷ்ண பகவானின் சிலை வைக்கப்பட்டிருந்த ஒரு படகு கவிழ்ந்துவிட்டது. கடலினின்றும் மத்வர் அந்தச் சிலையை மீட்டார். அவருடைய பயணத்தின்போது மகாராஷ்டிர மாநிலத்தில் உள்ள அரசர் ஈஸ்வர தேவர், ஓர் அணையைக் கட்டும் பணியில் பங்கு கொள்ளுமாறு மத்வரை வேண்டினர். அவர் தமக்காக நாள் முழுவதும் தன் உணர்வின்றி உழைத்துக் கொண்டிருந்ததை அரசர் கவனித்தார். ஒரு முறை அவர் கடலில் நீராடச் சென்றபோது அலைகள் யாவும் செயலற்று நிற்குமாறு செய்தார்.

மத்வாச்சாரியரர் த்வைத மதக் கொள்கையின் மிகப் பெரும் விரிவுரையாளர் ஆவார். இராமானுசரின் ஸ்ரீ. வைஷ்ணவத்திலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்காக மத்வரின் வைஷ்ணவம், சத்-வைஷ்ணவம் என்று அழைக்கப் படுகிறது. அவருடைய தத்துவத்தின்படி விஷ்ணு அல்லது நாராயண பகவானே முழு முதற் பரம்பொருள். மத்வரின் கொள்கையைப் பின்பற்றும் ஒவ்வொருவரும் பஞ்ச பேதங்களில் — ஐந்து உண்மையான நிலையான வேறு பாடுகள் — உறுதியான நம்பிக்கை கொள்ள வேண்டும். அவையாவன:—முழு முதற் பரம்பொருளுக்கும் தனிப்பட்ட ஆன்மாவுக்கும் இடையே உள்ள வேறுபாடு; உயிருள்ள பொருளுக்கும், சடப் பொருளுக்கும் இடையே உள்ள வேறு பாடு; ஓர் ஆன்மாவுக்கும் மற்றோர் ஆன்மாவுக்கும் இடையே உள்ள வேறுபாடு; ஆன்மாவுக்கும், சடப் பொருளுக்கும்

மற்ெருரு சடப் பொருளுக்கும் இடையே உள்ள வேறுபாடு ஆகியவையாகும். கண்ணுக்குப் புலனுகின்ற உலகம் உண்மையும், நிலையானதும் ஆகும். விஷ்ணு வழிபாடு பின்வரும் மூன்று பகுதிகளாகக் கொள்ளப்படும். 1) அங்கனம் — இறைவனுடைய சின்னங்களை உடம்பில் திரித்துக்கொள்ளுதல், 2) நாமகரணம் — குழந்தைகட்கு இறைவனுடைய திருப்பெயர்களை இடுதல், 3) பஜனம் — இறைவனுடைய பெருமைகளைப் பாடுதல், இறைவனை இடைவிடாது எந்நேரமும் நினைப்பதையே மத்வர் மிகவும் அழுத்தமாக வலியுறுத்தினுர். (ஸ்மரணம்) அவர், ''எந்நேரமும் இறைவனை நினைவுகூறும் உறுதியான பழக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அப்போதுதான் இறப்பு ஏற்படுகின்றபோது இறைவனை உங்களால் நினைக்க முடியும்'' என்று கூறுகின்ருர். இறைவன் நிலவுலகில் அவதாரம் எடுக்கும்போது பிராகிருத உடம்பு அல்லது பூத உடம்பை அவர் தரிப்பதில்லை என்றும் மத்வர் சுட்டிக்காட்டியுள்ளார். அவர் தம் தொண்டர்கட்கு மிகவும் கடுமையான பட்டினி விரதத்தை விதித்துள்ளார்.

தியாகம், பக்தி, தியானத்தின் வாயிலாக இறைவனை நேராக உணர்தல் ஆகியவை முக்திப் பேற்றுக்குரிய வழிகளாகும். இறைவனைத் தரிசிக்க விரும்பும் சாதகர் வேதாந்தப் பயிற்சி, புலனடக்கம், வைராக்கியம், முற்றிலும் சரணுகதி புகுதல் ஆகியவற்ருல் தம்மைத் தகுதியுடையவராக ஆக்கிக்கொள்ள வேண்டும். துவைத மதக் கொள்கையின் புகழ் பெற்ற விளக்குனராகிய மத்வாச்சாரியார் போதித்த போதனைகளில் முக்கியமானவற்றுள் இவை சிலவாகும்.

## 4. வல்லபர்

ராஜஸ்தானத்திலும் (ராஜபுதனம்), குஜராத்திலும் வைஷ்ணவ மத சம்பிரதாயத்தை நிலைநாட்டிய வல்லபாச்சாரியார், கி. பி. 1479-ல் சம்பாரணியத்தில் (ரெய்ப்பூர்—

மத்திய மாகாணம்) லக்ஷ்மண பட்டருக்கும் இல்லம்மா வுக்கும் பிறந்தார். அவர் தெலுங்கு பிராமணர்; ஸ்ரீ சைதன்ய மகாப் பிரபுவுக்குச் சம காலத்தவர். அக்கினி தேவதையின் அவதாரமாக அவர் மதிக்கப்படுகின்ருர்.

வல்லபர் தம்முடைய பதினேராவது வயதில் தந்தையை இழந்தார். தம்முடைய பன்னிரண்டாம் வயதில் அவர் காசியில் வேதங்களையும், ஆறு தர்சனங்களையும் பதினெட்டு புராணங்களையும் கற்று முடித்தார். காசி யிலிருந்து அவர் பிருந்தாவனத்துக்குச் சென்ருர். பின்னர் அவர் இந்தியாவில் உள்ள புனித தலங்கள் எல்லாவற்றுக்கும் யாத்திரை செய்தார்.

அவர் விஜய நகரத்தில் இருந்த கிருஷ்ண தேவராஜா வின் அவைக்குச் சென்று அங்கிருந்த புகழ்பெற்ற பண்டிதர் கள் அனைவரையும் வாதில் வெற்றி கண்டார். அரசர் வல்லபரின் ஆழ்ந்த கல்வியையும் அறிவாற்றலையும் கண்டு பெருமகிழ்ச்சியுற்றுப் பொன்னும் பிற செல்வங்களுமாகிய பரிசுகள் வழங்கி 'வைஷ்ணவாச்சாரியார்' என்ற பட்டத் தையும் தந்தார். வல்லபரின் புகழும் செல்வாக்கும் விரைந்து பெருகின. விஜய நகரத்திலிருந்து அவர் உஜ்ஜையினிக்கும் பிற இடங்கட்கும் சென்ருர்.

அவர் காசியில் மகாலக்ஷ்மி என்ற பெண்மணியை மணந்துகொண்டார். அவருக்கு இரு புதல்வர்கள் இருந்தனர்.

வல்லபர் இயற்றிய நூல்களில் முதன்மையானவை: வியாசரின் சூத்திர பாஷ்யம்; ஜைமினி சூத்திர பாஷ்யம்; பாகவத டீகை சுபோதினி; புஷ்டிப் ப்ரவல மரியாதை; சித்தாந்த இரகசியம் என்பனவாகும். இவை யாவும் வடமொழியில் உள்ளன. ப்ரிஜி மொழியில்கூட அவர் பல நூல்களை எழுதியுள்ளார்.

அவருடைய பிறந்த ஊரான சம்பாரணியத்தில் அவருடைய தொண்டர்கள் அவருக்கு ஒரு கோயிலைக்

கட்டியுள்ளனர். இக்கோயில் மக்களிடையே மிகவும் புகழ்பெற்று விளங்குகின்றது; அவர்கள் யாத்திரை செய்வதற்குரிய தலமாகக் கருதி அடிக்கடி சென்று தரிசித்து வருகின்றுர்கள்.

அவர் தம்முடைய அந்திம காலத்தைக் காசியில் கழித்தார். தம் வாழ்வின் முக்கியமான பணி நிறைவேறிற்று என்று அவர் கருதினுர். கங்கையில் அனுமார் துறையில் அவர் ஒருநாள் நீராடச் சென்றுர். அங்கு மக்கள் நிலவுலகத்திலிருந்து ஒரு பேரொளி விண்ணில் உயர்ந்து செல்வதைக் கண்டார்கள். ஒரு பெருங் கூட்டத்தினர் கண்ணுரக் காணுமாறு அவர் விண்ணில் மேலே சென்று மறைந்து விட்டார். இந்நிகழ்ச்சி அவருடைய ஐம்பத்திரண்டாவது வயதில் கி. பி: 1531-ல் நடைபெற்றது.

வல்லபாச்சாரியார் சுத்த அத்வைதக் கொள்கையின் தத்துவத்தை (ஒன்றே எனும் கொள்கை) விளக்கிய வராவார். ஸ்ரீ கிருஷ்ணர் தாம் மிக உயர்ந்த பிரம்மம், அவருடைய திருமேனியே சச்சிதானந்தம். அவர் புருஷோத்தமர் என்று அழைக்கப்படுகிறுர். அவருடைய தொண்டர்கள் பாலகிருஷ்ணரை வணங்குகின்றனர். (வாத்சல்ய பாவம்). அவர் புஷ்டி (கருணை), பக்தி ஆகியவற்றை மிகவும் வலியுறுத்தினுர். சாதகர் தெய்வத் தன்மையை அடைவதற்கு உதவுவது மகா புஷ்டி என்னும் பெருங் கருணை அல்லது அனுக்கிரகம் ஆகும். நெருப்பிலிருந்து பொறிகள் தோன்றுவதுபோல அக்ஷரத்திலிருந்து (சச்சிதானந்தம்) பொருள்கள் தோற்றம் கொள்கின்றன. இவை அவருடைய போதனைகளில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்கவையாகும்.

## 5. நிம்பர்க்கர்

தென்னிந்தியாவில் கோதாவரி நதிக்கரையில் உள்ள வைடூரியபட்டத்துக்கு அருகில் ஒரு சிற்றூரில் நிம்பர்க்க

ஆச்சாரியார், அருண முனிவருக்கும் ஜெயந்தி தேவிக்கும் பிறந்தார். பதினோராம் நூற்றாண்டில் அவர் வாழ்ந்தார். சூரிய தேவனின் அவதாரமாக அவர் மதிக்கப்படுகின்றார். நாரதரிஷியே அவருக்குக் கோபால மந்திர உபதேசத்துடன் தீக்ஷை செய்துவைத்துக் கிருஷ்ண பகவானை வழிபடும் முறையைக் கற்பித்தார்.

ஒரு நாள் அவர் சமண சமயத்தைச் சார்ந்த ஒரு துறவியுடன் மிகவும் கடுமையான வாதம் செய்யத் தொடங்கிவிட்டார். 'அவர் தத்துவப் பூசலில், கதிரவன் மறைந்துவிட்டதைக் கூடக் கவனியாத அளவுக்கு மெய் மறந்து போனார். வாதத்திற்குப் பிறகு தம்முடன் உணவு அருந்துமாறு நிம்பர்க்கர் அத்துறவியை வேண்டினார். அத் துறவி, ''வணக்கத்திற்குரிய ஆச்சாரியரே! கதிரவன் மறைந்த பிறகு நான் உணவு உண்ண முடியாது. நான் ஒரு சமணன்'' என்று கூறினார். நிம்பர்க்கர் அதற்காகப் பெரிதும் வருந்தி மனம் ஆறுதல் பெறுமலிருந்தார். அப்போது ஓர் அற்புதம் நிகழ்ந்தது. அவருடைய ஆசிர மத்தின் அருகில் இருந்த ஒரு வேப்ப மரத்தின் மேலே விண்ணில் கதிரவன் மீண்டும் தோன்றியது. அனைவரும் ஆச்சரியத்தால் திகைத்துப் போயினர். யாவும் கிருஷ்ண பகவானுடைய கருணையே என்று நிம்பர்க்கர் தம் மனத்தில் நினைத்தார். தெய்வீகக் களிப்பின் உச்ச நிலையடைந்து அவர் ஆனந்தக் கூத்தாடினார். மிகுந்த பக்தியோடும் அன்போடும் அவர் சமணத்துறவியை உபசரித்து உண்பித்தார். கதிரவன் மெதுவாக மறைந்தது. நிம்பர்க்க ஆச்சாரியருக்கு இதனால் பெரும் புகழ் விளைந்தது. அவருடைய அசாதாரண ஆற்றல்களை அனைவரும் புரிந்து கொண்டனர். நிம்பர்க்கருக்கு முன்னர் இருந்த சொந்தப் பெயர், நியமானந்தர். கதிரவன் வேப்ப மரத்திற்குமேலே தோன்றியமையால் அவர் 'நிம்பர்க்க ஆச்சாரியார்' என்று அழைக்கப்பட்டார்.

நிம்பர்க்கர் பல நூல்களை எழுதினர்; எனினும் அவற்றுள் மிகவும் புகழ்வாய்ந்த இரண்டு நூல்கள் பிரம்ம சூத்திர உரையும், வேதாந்த பாரிஜாத சௌரப்பவுரையும் ஆகும். நிம்பர்க்க ஆச்சாரியார் த்வைத அத்வைதக் கொள்கையின் தத்துவத்தை விளக்கியவராவார். இக் கொள்கையைப் பின்பற்றுவோர் ஸ்ரீ ராதையையும் கிருஷ்ண ரையும் வணங்குகின்றனர். அவர்களுடைய முதன்மையான வேதம், பாகவதமாகும். உயிரும் உலகமும் வெவ்வேறாக இருப்பவை; ஆனால் இறைவனுடன் ஐக்கியப்பட்டு ஒன்றாக இருப்பவை. இக்கொள்கையைப் பின்பற்றுவோர் இன்றும் கூட மதுராவிலும் பிருந்தாவனத்திலும் காணப்படு கின்றனர்.

சங்கரர் கேவல அத்வைத தத்துவத்தையும், இராமா னுசர் விசிஷ்டாத்வைத தத்துவத்தையும், மத்வாச்சாரியார் த்வைத தத்துவத்தையும், வல்லபாச்சாரியார் சுத்த அத்வைத தத்துவத்தையும், நிம்பர்க்கர் த்வைத அத்வைத தத்துவத்தையும் விளக்கினர். அனைவரும் மிகப்பெரிய மகான்கள். சங்கரர், இராமானுசரைக் காட்டிலும் பெரிய வர் என்றோ, வல்லபர் நிம்பர்க்கரைக் காட்டிலும் பெரியவர் என்றோ நாம் சொல்ல முடியாது. அனைவரும் அவதார புருஷர்கள். பக்தியின் குறிப்பிட்ட படிநிலையில் இருந்தவர்களும், குறிப்பிட்ட காலத்தில் வாழ்ந்தவர்களும் ஆகிய மக்களில் குறிப்பிட்ட வகையைச் சேர்ந்தவர்களுக்குத் தேவையான, அவர்களின் வளர்ச்சிக்காகக் குறிப்பிட்ட கொள்கைகளைக் கற்பிக்கவும், அவற்றைப் பரப்பவும் அவர்கள் இவ்வாறு குறிப்பிட்ட பணிகளை நிறைவேற்றவும் நிலவுலகில் அவதாரம் செய்தார்கள். தத்துவக் கொள்கை கள் யாவுமே தேவையானவை. ஒவ்வொரு தத்துவமும் மக்களில் குறிப்பிட்ட ஒவ்வொரு வகையினருக்கும் பொருத்த மாக உள்ளது.

சங்கரருடைய மிக உயர்ந்த கேவல அத்வைத தத்து வத்தை உடனே கிரகித்துக்கொள்ள அனைவராலும்

முடியாது. சங்கரருடைய அத்வைத வேதாந்தக் கொள்கைகளைக் கிரகித்துக் கொள்வதற்கு மனம் தகுதிவாய்ந்த கருவியாக ஆக்கப்படுவதற்கு முன்பாக அது சரியான முறையில் பக்குவப்படுத்தப்பட வேண்டியதாக உள்ளது.

ஆச்சாரியர்கள் அனைவருக்கும் பணிவான அன்பும் வணக்கங்களும் செலுத்துவோம்! ஆச்சாரியர்களின் பெருமை ஓங்குக! அவர்களின் நல்லாசிகள் என்றென்றும் நமக்கு வாய்ப்பனவாகுக!

## 6. கௌராங்கர்

### பிறப்பும் பெற்றோரும்

புரந்தர மிசிரர் என்ற மறுபெயரையுடைய பண்டித ஜகன்னாத மிசிரர் வைதிகக் கிளை இனத்தைச் சார்ந்த ஆசாரம் மிகுந்த அந்தணர்; அவர் கிழக்கு வங்காளத்தில் கில்ஹெட் என்ற இடத்திலிருந்து குடி பெயர்ந்து நாடியாவில் குடியேறினர். அவருடைய மனைவி சசிதேவி. அறிஞர் நீலம்பர் சக்கரவர்த்தியின் புதல்வியாவார். அவரும் ஆசாரம் மிகுந்த பெண்மணி. கங்கைக் கரையில், கல்கத்தாவுக்கு வடக்கில் எழுபத்தைந்து மைல் தூரத்தில் உள்ள வங்காளத்தின் நாடியா மாவட்டத்தின் ஒரு நகரமாகிய நாடியா அல்லது நவத்வீபத்தில் கி. பி. 1486 பிப்ரவரி 4-ஆம் தேதியில் பௌர்ணமி இரவில் ஜகன்னாத மிசிரருக்கும் சசிக்கும் ஒரு புதல்வன் பிறந்தான். நாடியா நகர், கற்றறிந்த அறிஞர்களின் உறைவிடமாகும்.

புதிதாகப் பிறந்த குழந்தைக்கு விஸ்வாம்பர் என்று பெயர் சூட்டப்பட்டது. அவன் அவர்களுக்குப் பத்தாவது குழந்தை. முதல் எட்டுக் குழந்தைகள்-அனைவரும் பெண்கள்-பிறந்தவுடனே இறந்துபோயினர். ஒன்பதாவது குழந்தை விஸ்வரூபன் என்ற மகன். அவனுக்குப் பதினாறு வயதான போது திருமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தப்பட்டமையால் உலகைத் துறந்து தென்னிந்தியாவில் இருந்த ஒரு

மடத்தில் சேர்ந்துவிட்டான். சசி தன் குழந்தைகள் பலவற்றையும் இழந்ததைக் கருத்தில் கொண்ட மகளிர் இந்தப் பத்தாவது குழந்தைக்கு விஸ்வாம்பர் — நிமையின் கசப்புப் பெயர் (நீம் — வேப்பமரத்தின் பெயரிலிருந்து விடுவிக்கப்பட்டது.) தீய சக்திகளின் தாக்குதல்களுக்கு எதிரான பாதுகாப்பாக வைக்கப்பட்டது. அக்கம் பக்கத்தவர் கௌர் — அல்லது கௌர் — ஹரி அல்லது கௌராங்கர் (அழகிய நிறமும் மேனியும் உள்ளவர்) என்று அழைத்தார்கள், ஏனெனில் அவர் அற்புதமான அழகு படைத்திருந்தார். கௌர் என்றால் அழகு; அங்கம் என்றால் உடம்பு; குழந்தைப் பருவத்தில் அவர் அழுதபோதெல்லாம் ஹரியின் பெயரைத் தவிர வேறெதுவும் அவருக்கு ஆறுதல் தந்து அழுகையை நிறுத்தக்கூடியதாக இருக்கவில்லை; அந்தப் பெயரின்மீது அவருக்கு அந்த அளவுக்கு மிகவும் பிரியம் இருந்தது; எனவே கௌர்—ஹரி என்று பெயர் தந்தனர்.

## பிள்ளைப் பருவமும் கல்வியும்

நியாய சாஸ்திரத்தில் புகழ் பெற்று விளங்கிய வாசுதேவ சர்வபௌமரின் பள்ளியில் கௌராங்கர் தர்க்கம் பயின்றார். தீதீதி என்ற புகழ் பெற்ற தர்க்க நூலின் ஆசிரியர் ரகுநாதரின் கவனத்தைக் கௌராங்கரின் அசாதாரண அறிவுத் திறம் கவர்ந்தது. உலகிலேயே மிகவும் அறிவுத்திறம் வாய்ந்த இளைஞர் அவர் என்று ரகுநாதர் தம் மனத்தில் நினைத்தார்.

தம் ஆசிரியராகிய சர்வபௌமரைக் காட்டிலும் அறிவு மிகுந்தவராக ரகுநாதர் தம்மைக் கருதி வந்தார். அவருடைய மிகப் பெரிய ஒரே விருப்பம் உலகம் முழுவதிலும் கல்வியறிவில் தாமே முதன்மை பெற்றவராக விளங்க வேண்டும் என்பதேயாகும். ஆனால் கௌராங்கர் தம்மைக் காட்டிலும் இளையவராக இருப்பினும், அறிவிலும், கல்வியிலும் அவர் தம்மைக் காட்டிலும் சிறந்து விளங்குவதைக் கண்டபோது அவர் தம்முடைய நம்பிக்கையை இழக்கத் தொடங்கினார். அவருடைய உள்ளம் முழுவதும் அச்சத்

தால் நிரம்பியது. நியாய சாஸ்திரத்திற்குக் கௌராங்கர் ஒரு விரிவுரை எழுதிக் கொண்டிருந்தார். இது ரகுநாதரை மிகவும் பதட்டமடையச் செய்தது. அவர் கௌராங்கரின் விரிவுரையைக் காண விரும்பினார். ஆனால் கௌராங்கர் இதற்கு இசைவாரா என்பது பற்றி அவர் ஐயமுற்றார். எனினும், ரகுநாதர் கௌராங்கரிடம் அவருடைய நியாய விரிவுரையைத் தம்மிடம் காட்டுமாறு வேண்டினார். கௌராங்கர் அதை ரகுநாதருக்கு வாசித்துக் காட்ட உடனே இசைந்தார். அவர்கள் ஆற்றைப் படகில் கடந்து கொண்டிருந்தபோது கௌராங்கர் தம் விரிவுரையை ரகுநாதருக்குப் படித்துக் காட்டினார். கௌராங்கருடைய விரிவுரை மிகவும் மேன்மை வாய்ந்த சொந்த விளக்கமாக இருப்பதை ரகுநாதர் கண்டு கொண்டார். உலகிலேயே நியாய சாஸ்திரத்தில் முதல் இடம் பெறும் பேராசிரியராக விளங்க வேண்டும் என்ற அவருடைய நம்பிக்கை தூள் தூளாகச் சிதறிப் போயிற்று. அவர் மிகவும் வருந்தி அழுதார். கௌராங்கர், ''ரகுநாத சகோதரா! உமக்கு என்ன நேர்ந்தது? ஏன் அழுகிறீர்? நான் உம்மை ஆறுதல் பெறச் செய்கிறேன்'' என்று அவரிடம் கூறினார். ரகுநாதர், உண்மையை வெளியிட்டார்; ''கௌராங்க சகோதரா! நியாய சாஸ்திரத்தில் உலகிலேயே முதல் இடம் பெறும் பேராசிரியராக விளங்க வேண்டும் என்று மிகவும் உறுதியான ஆசை கொண்டிருந்தேன். இப்போதுள்ள நூல்கள் எல்லாவற்றையும் மிஞ்சும் படியாக நியாய சாஸ்திரம் பற்றிய ஒரு நூலை இந்த நம்பிக்கையுடன் எழுதியுள்ளேன். தங்கள் நூல் என்னுடைய நூலைக் காட்டிலும் மேம்பட்டு விளங்குவதால் என் நம்பிக்கை முற்றிலும் இப்போது நாசமாயிற்று. தங்கள் விரிவுரைகள் சுருக்கமும், தெளிவும் வாய்ந்தது. தங்கள் சொந்தக் கருத்துக்களைக் கொண்டுள்ளது. நிச்சயம் இது ஆழ்ந்த அறிவைப் புலப்படுத்தும் வெளியீடு. நான் அழுவதற்குரிய காரணம் இதுவே'' என்று தெரிவித்தார்.

கௌராங்கரும் கண்ணீர்விட்டு அழுதார். அவர் ரகுநாதரிடம், ''இவ்வளவுதானா? என் அன்புச் சகோதரரே!

அப்படியானால் அழ வேண்டாம். பார்க்கப்போனால் நியாய சாஸ்திரம் என்பது ஒரு வரண்ட தத்துவம். இதனால் எனக்கு நன்மை எதுவும் இல்லை'' என்று கூறிவிட்டு விரிவுரை அமைந்த கையெழுத்துச் சுவடிகளை ஆற்றில் விட்டெறிந்தார். அந்தக் கணத்திலிருந்து அவர் நியாயசாஸ்திரக் கல்வியை விட்டுவிட்டார். கௌராங்கரின் பெருந்தன்மை வாய்ந்த உள்ளத்தைப் பாருங்கள்! கௌராங்கரின் நியாயசாஸ்திர விரிவுரையை உலகம் இழந்துவிட்டது. ரகுநாதரின் திதீதி என்ற நூல் நியாயசாஸ்திரத்தின் அதிகாரபூர்வமான முதல் நூலாக விளங்கிற்று.

வடமொழியில் உள்ள கல்வித்துறைகள் எல்லாவற்றையும் கௌராங்கர் கற்றுத் தேர்ச்சிபெற்றார்; அவையாவன: இலக்கணம், தர்க்கம், இலக்கியம், செய்யுள் இயல், தத்துவம், சமயம் முதலியன. அவர் வியக்கத்தக்க திறமைகளை வளர்த்துக்கொண்டார். அவர் ஒரு மேதை. அவர் தாமே ஒரு தோல் (பள்ளிக்கூடம்) தொடங்கினார். அவருக்கு அப்போது பதினாறு வயது ஆகியிருந்தது; ஒரு பள்ளியின் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்த அனைவரைக் காட்டிலும் மிகவும் இளைய பேராசிரியர் அவரேயாவர்.

கௌராங்கர் அன்பும் கருணையும் வாய்ந்தவர். அவர் தூய்மையும், அமைதியும் உள்ளவர். அவர் பரிவும், இனிமையும் பாராட்டினார். மனிதத் தன்மையுடனும் இரக்கத்துடனும் அவர் விளங்கினார். அவர் ஏழைகளின் நண்பர். அவர் அவர்களுடன் வாழ்ந்தார்; அவர்களுக்குப் பணிவிடை செய்தார்; அவர்களை மகிழ்வித்தார். தம் வாழ்வில் அவர் மிகவும் எளிமையுடன் காணப்பட்டார்.

## தந்தையாரின் மறைவு

கௌராங்கர் மாணவராக இருக்கும்போதே அவருடைய தந்தையார் மறைந்தார். வல்லபாச்சாரியாரின் மகளாகிய இலட்சுமியை அவர் மணந்தார். அவர் பண்டிதர்கள்

அனைவரையும் விடச் சிறந்த அறிஞராக மேம்பட்டு விளங்கினார்; பிரிதோர் மாநிலத்தைச் சேர்ந்த புகழ்பெற்ற அறிஞர் ஒருவரை வாதத்தில் வென்று வெற்றியும் பெற்றார். அவர் கிழக்கு வங்காளத்தில் ஒரு பயணத்தைச் செய்து பக்தியும் கருணை உள்ளமும் படைத்த குடும்பத்தாரிடமிருந்து விலையுயர்ந்த பரிசுகள் பலவும் பெற்றார். அவர் திரும்பி வந்தபோது, தாம் இல்லாத சமயத்தில் தம் மனைவி அரவத்தால் தீண்டப்பட்டு மடிந்தார் என்று கேள்வியுற்றார். பின்னர் அவர் விஷ்ணுப்பிரியா என்ற மாதை மணந்தார். தம்முடைய பரந்த அறிவைக் குறித்து அவர் செருக்கடைந்தார்.

## வாழ்வில் ஏற்பட்ட மாற்றம்

கௌராங்கரின் வாழ்வில் வியக்கத்தக்க ஒரு மாறுதல் நிகழ்ந்தது. 1509ல், தம் தோழர்களுடன் அவர் கயைக்குத் தலயாத்திரை செய்தார். அவர் அங்கு மத்வாச்சாரியாரின் சம்பிரதாயத்தைச் சார்ந்த ஈஸ்வரபூரி என்ற துறவியைச் சந்தித்து அவரைத் தம் குருவாக ஏற்றுக்கொண்டார். அவர் கிருஷ்ண பகவானின் பக்தரானார். கல்வியைக் குறித்து அவர் அடைந்திருந்த செருக்கு முற்றிலும் மறைந்தது. அவர், ''கிருஷ்ணா! கிருஷ்ணா! ஹரி என்று சொல்வீர்! ஹரி என்று சொல்வீர்'' என்று முழக்கமிட்டார். அவர் ஆனந்தக் கூத்தாடினார்; சிரித்தார்; அழுதார்; குதித்தார்; தரையில் விழுந்தார்; புழுதியில் புரண்டார், அவர் ஆனந்தக் களிப்பை அடைந்த போதெல்லாம் உணவையும் உண்டதில்லை; பானமும் பருகியதில்லை.

கதாதர் என்ற இறைவன் திருநாமத்தையுடைய கோயிலில் கிருஷ்ண பகவானின் அடிச்சுவட்டைக் காண அவர் புறப்பட்டார். அவர் அடிச்சுவட்டின் முன்னிலையில் சிலைபோல செயலற்று நின்றார். அவர் தியானத்தில் மூழ்கிவிட்டார், தொடர்ந்து ஓடும் ஆறுபோல் அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் பெருகிற்று. கண்ணீரால் அவருடைய ஆடை நனைந்துவிட்டது. அவர் கீழேவிழ இருந்தார்.

ஈஸ்வரபூரி உடனே விரைந்து சென்று அவரைத் தாங்கிக் கொண்டார். கௌராங்கர் மெதுவாகத் தம் சுயநினைவை அடைந்தார். அவர் ஈஸ்வரபூரியிடம் ''பணிந்து வணங்கத் தக்க குருவே! என்மீது கருணை கொள்ளுங்கள். சம்சாரச் சேற்றிலிருந்து என்னை விடுவியுங்கள். நான் தங்களிடம் பணிந்து வேண்டுகின்றேன். கிருஷ்ண பகவானிடம் ராதை கொண்டிருந்த காதலன்பைப் பற்றிய இரகசியங்களை எனக்கு உபதேசியுங்கள். கிருஷ்ண பகவானிடம் தூய பிரியத்தை நான் வளர்த்துக் கொள்ளுமாறு செய்யுங்கள். கிருஷ்ண அன்பு ரசம் என்னும் அமிர்தத்தை நான் பருகச் செய்யுங்கள்'' என்று வேண்டினார்.

ஈஸ்வரபூரி பின்னர் அவருக்குக் கிருஷ்ண பகவானுடைய பத்தெழுத்து மந்திரத்தை உபதேசித்தார். கௌராங்கர் உள்ளத்தில் பூர்வராகம் உதித்தது. அவர் எப்போதும் தியான பாவனையில் மூழ்கியிருந்தார். அவர் உணவுண்ண மறந்தார். அவருடைய கண்களில் இருந்து கண்ணீர் சுரந்தது. அவர் சில சமயங்களில் நினைவிழந்தார். அவர் மீண்டும்மீண்டும் ''கிருஷ்ண பகவானே! என் தந்தையே! எங்கிருக்கிறாய் ? உன்னைப்பிரிந்து என்னால் வாழமுடியாது. என் ஒரே அடைக்கலம், ஆதரவு நீயே! நீயே உண்மையான தந்தை, அண்ணன், நண்பன், உறவினன், குரு. எப்போதும் உன் உருவத்தை நான் கண்டு களிக்குமாறு செய்'' என்று பிதற்றிக் கொண்டிருந்தார். சில சமயங்களில் அவர் வெற்றுப் பார்வையுடன் விழித்துப் பார்ப்பார், சில சமயங் களில் அவர் தியானத்தில் அமர்ந்திருப்பார். தம் தோழர் களிடமிருந்து தம் மௌனக் கண்ணீரை மறைக்க முயன்றார். சில சமயங்களில் அவர் தம் சுற்றுப்புறங்களைப்பற்றிய நினை வையும் இழந்து விடுவார். கௌராங்கர் பிருந்தாவனத் துக்குச் செல்ல விரும்பினார்; ஆனால் அவருடைய தோழர்கள் அவரைப் பலவந்தமாக நாடியாவுக்குத் திரும்ப அழைத்துச் சென்றனர்.

நித்தியானந்தர் பிறப்பினுல் ஓர் அந்தணர். தம் பன்னிரண்டாம் வயதில் அவர் துறவு வாழ்க்கையை மேற்கொண்டார். கிருஷ்ண பகவானைத் தேடிக்கொண்டு அவர் பல இடங்களுக்கும் அலைந்து திரிந்தார். அவர் பிருந்தாவனத்தில் சில காலம் வாழ்ந்தார்; ஆனுல் கிருஷ்ணரை அவரால் காண முடியவில்லை. கௌராங்கர் நித்தியானந்தரைத் தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று அவரைத் தம் தாயாரிடம் அறிமுகப்படுத்தி, 'அம்மா! இதோ தங்களின் மற்ருெரு மகன். இவர் என் அண்ணன். நீங்கள் இழந்த விஸ்வரூபர் தங்களிடம் திரும்பி வந்துள்ளார். இவரைத் தாங்கள் விஸ்வரூபராக ஏற்றுக் கொள்ளுங்கள்' என்று வேண்டிஞர். சசிதேவி. நித்தியானந்தரிடம், ''குழந்தாய், வா! உன் தம்பியை நன்கு கவனித்துக்கொள். அவனைக் காப்பாற்று, அவன் சிந்தனையற்றுக் கவலையற்றுக் காணப்படுகின்ருன். நான் இனி அவனைப்பற்றி அக்கரைகொள்ள வேண்டியதில்லை. என் குழந்தாய், உட்கார். உணவை உண்பாய். மகிழ்ச்சியாக இருப்பாய்'' என்று கூறிஞர்.

நித்தியானந்தர் பல இடங்களில் சங்கீர்த்தனம் நடத்திஞர். நவத்வீபத்தில் ஹரிநாமம் ஒலித்தது. ராதை, கிருஷ்ணர் ஆகியோருடைய புகழ்களைப் பாடுவதில் அவர் இரவுகள் முழுவதும் கழித்தார். சமய ஊர்வலங்கள் அடிக்கடி நடத்தப்பட்டன; அவற்றில் கௌராங்கரும் நித்தியானந்தரும் தலைமை தாங்கப் பக்தர்கள் ஆனந்தக் கூத்தாடிக்கொண்டும் பாடிக்கொண்டும் தெருக்கள் வழியே சென்றனர் அல்லது இல்லங்களின் முற்றங்களில் கூட்டமாகக் கூடினர்.

கௌராங்கர் மிகவும் அன்பும் கருணையும் உள்ளவர். அவர் தூய்மையும் அமைதியும் வாய்ந்தவர். அவர் அன்பின் திருவுருவம். அவர் அன்பிஞல் வாழ்ந்தார்; அன்பிஞல் இயங்கிஞர்; தம் இருப்பை அன்புக்குள் அமைத்துக் கொண்டார். அவருடைய பேச்சு அன்புமயம். அவர் அனைவருக்கும் அன்பை ஒளிபாய்ச்சிஞர். அவர் தொட்டால்

அது அன்பின் காந்தமாக இருக்கும். அவர் அன்பினுல் பாடினுர். அவருடைய மூச்சு அன்பு. அவர் அன்பினுல் நடந்தார். இறைவனிடம் எப்படி அன்பு பாராட்டுவது என்பதை அவர் வாழ்ந்து காட்டினுர். அவர் உபதேசித்துக் கற்பித்தது சிறிதே; தாமே உதாரணமாக இருப்பதால் பெரிதும் கற்பித்தார். அவர் ஒரு சொல் மட்டும் கூறுவார், 'பக்தியால் நல்லாசி பெறுவீர்கள்' என்பார். இதுவே ஒருவரைச் சமாதி அடையச் செய்யவும், அவருடைய உள்ளத்தை அன்பினுல் நிறையச் செய்ய போதுமானதாகவும் இருந்தது. கௌராங்கரின் சக்தி இத்தகையது.

அவர் தெருக்களிலும் சாலைகளிலும் கடந்து செல்லும் போது அவருடைய சக்தி மிகுந்த அன்பின் ஓட்டம் ஆயிரக் கணக்கான மக்களைக் கவர்ந்து தன்கீழ் கொண்டுவந்தது. அவர்கள் அனைவரும் தங்கு தடையின்றி 'ஹரி என்று சொல்வீர்' என்று கூக்குரலிட்டு ஆனந்தக் கூத்தாடினுர்.

கற்றறிந்தோரும் வைதிகரும் கௌராங்கரை வெறுக்க வும் எதிர்க்கவும் தொடங்கினர். ஆனுல் கௌராங்கர் பிடிவாதமாக இருந்தார். அவர் சிலரை மட்டுமே மாறச் செய்திருந்தார். அவர்கள் விடுதலைப்பேறு அடைவதற்காகத் தாம் துறவியாகிவிட முடிவு செய்தார். அவர் தம்முள், 'அகந்தையுள்ள கற்றறிந்த அறிஞர், வைதிக மனப்பான்மை யுள்ள இல்லறத்தார் இவர்கள் அனைவர்க்கும் நான் முத்திப்பேறு சித்திக்கச் செய்வதற்காக நான் துறவியாகிவிட வேண்டும். நான் துறவியாக இருப்பதைக் காணும்போது அவர்கள் ஐயமின்றி எனக்குத் தலைவணங்குவார்கள்; இதனுல் அவர்கள் தூய்மையடைவார்கள்; அவர்களுடைய உள்ளங்களும் பக்தியால் நிரம்பிவிடும். அவர்களுக்கு விடுதலையைப் பெற்றுத்தருவதற்கு வேறுவழி இல்லை' என்று நினைத்துக்கொண்டார்.

எனவே அவர் தம் இருபத்திநான்காம் வயதில் கேசவபாரதி சுவாமிகளால் 'கிருஷ்ண சைதன்யர்' என்ற

பெயரால் தீக்ஷை செய்விக்கப்பட்டார். இப்பெயர் 'சைதன்யர்' என்று சுருக்கமாக வழங்கும். மென்மையான உள்ளங்கொண்ட அவருடைய அன்னை சசிதேவி மனமுடைந்தார். ஆனால் சைதன்யர் சாத்தியமான ஒவ்வொரு வழியாலும் அவருக்கு ஆறுதல்கூறி அவருடைய விருப்பங்களை நிறைவேற்றினார். அவருடைய தாயாரின் இறுதிக்காலம் வரைக்கும் அவரிடத்தில் அவர் ஆழ்ந்த அன்பும் பணிவும் பாராட்டி வந்தார்.

அவர் எல்லை மீறிய வைராக்கியத்துடன் இருந்தார். அவர் எல்லா வகையான புலனின்பங்களையும் நஞ்சுபோல் வெறுத்தார். துறவிக்குரிய விதி முறைகளைக் கடைப் பிடிப்பதில் அவர் மிகவும் கண்டிப்பாக இருந்தார். அவர் ஒரிஸ்ஸாவின் அரசர் பிரதாபருத்திரருக்குப் பேட்டிதர மறுத்துவிட்டார்; ஏனெனில் ஒரு துறவி ஓர் அரசரைக் காண்பது பாவமாகும். அது ஒரு பெண்ணைப் பார்ப்பது போன்ற பாவமாகும். ஒரு துறவி ஓர் அரசரைக் கண்டால் அவர் அரசர்பால் மெதுவாகப் பற்றுள்ளம் கொள்ளுவார். மனம், பிறர்போல் நடக்க வேண்டும் என்ற விருப்பத்தை யுடையது; ஆதலால் துறவியும் சுகபோக வாழ்வே நடத்தமுற்பட்டு முடிவில் வீழ்ச்சியடைவார். ஒரு துறவி அரசரைப்பார்க்கக் கூடாதென்று தடை விதிக்கப் பட்டிருப்பதற்கு அதுவே காரணம். கௌராங்கர் எந்த ஒரு பெண்ணையும் முகத்துக்கு நேராகக் கண்டதில்லை. எந்த ஒரு பெண்ணும் தம்மை அணுகுவதற்கு அவர் அனுமதிக்க மாட்டார். வெறும் உடலுடன் அவர் தரையில் படுத்து உறங்கினார்.

கௌராங்கர் ஒரு மிகப்பெரிய வைஷ்ணவப் பிரச்சாரகர். அவர் வைஷ்ணவக் கருத்துக்களையும் கொள்கைகளையும் எல்லா இடங்களிலும் பரவச் செய்தார். நித்தியானந்தர், சனாதனர், ரூபர், ஸ்வரூப தாமோதரர், அத்வைத ஆச்சாரியர், ஸ்ரீபாசர், ஹரிதாசர், முராரி, கதாதரர் ஆகியோரும் மற்றும் பலரும் சைதன்யருக்கு அவருடைய இயக்கம் வளர்ச்சி பெற உறுதுணையாக இருந்தனர்.

## ஜாகை, மாதை ஆகியோருடைய மாற்றம்

நாடியாவில் உள்ள ஜாகை, மாதை ஆகியோருடைய கூடாரங்களுக்குச் செல்ல வேண்டும் என்றும் செல்லும் வழியெல்லாம் கீர்த்தனம் செய்ய வேண்டும் என்றும் பிறகு அச்சகோதரர்கட்கு ஹரி நாமம் வழங்க வேண்டும் என்றும் சைதன்யர் தம் பக்தர்களிடம் முன் மொழிந்தார். ஜாகையும், மாதையும் மிகவும் புறக்கணிக்கப்பட்ட பாவிகள்; வரலாறு இதுகாறும் அறிந்த குற்றவாளிகள் அனைவரையும் காட்டிலும் மிகவும் இழிவானவர்கள். சைதன்யரும் நித்தியானந்தரும் அவர்களைச் சீர்திருத்தும் கடுமையான பணியில் ஈடுபட்டனர். ஜாகையும், மாதையும் நவத்வீபத்தின் கொத்தவால்கள். அவர்கள் பணக்காரர்களைக் கொள்ளையடித்தார்கள்; பெண்களின் கற்புக்குப் பங்கம் விளைவித்தார்கள்; சிறிய காரணங்களுக்கெல்லாம் கோபம் கொண்டு கொலைகள் செய்தார்கள். இச் சகோதரர்கள் செய்யாத மிருகத்தனமான குற்றம் எதுவும் இந்நிலவுலகில் இல்லை. பிறப்பால் அவர்கள் அந்தணர்களாக இருப்பினும் திருத்தப்பட முடியாத குடிகாரர்களாக இருந்தார்கள்.

சைதன்யரும் அவருடைய பக்தர்களும் தெருக்களில் தோன்றிச் சங்கீர்த்தனம் செய்யத் தொடங்கினர். நித்தியானந்தர் அக்கூட்டத்திற்குத் தலைவராக இருந்தார். ஜாகை, மாதை ஆகியோர் தங்கியிருந்த இடத்திற்கு அவர் தம் கூட்டத்தை அழைத்துச் சென்றார். அவர் அச்சகோதரர்கள் இருவரையும் சீர்திருத்த உறுதி பூண்டார். அவர் அவர்களின் முன்னால் நேர் எதிரே வந்து சேர்ந்தார். அவர், ''அன்புச் சகோதரர்களே! தயவு செய்து கேளுங்கள். கிருஷ்ணருடைய நாமத்தை ஏற்றுக்கொள்ளுங்கள். கிருஷ்ணருக்குச் சேவை செய்யுங்கள். ஏனெனில் அவர்தான் முழு முதற் பரம்பொருள்' என்று அறிவித்தார். இருவரில் பலசாலியாக இருந்த மாதை இவ்வேண்டுகோளால் எரிச்சலடைந்தான். கழுத்து முறிந்து போயிருந்த ஒரு ஜாடியை நித்தியானந்தரின் மீது வீசி அவருடைய நெற்றியில் திறந்த

புண்ணை அவன் உண்டாக்கினான். புண்ணிலிருந்து இரத்தம் பெருக்கெடுத்தது. மாதை அதே ஜாடியின் மற்றொரு துண்டை நித்தியானந்தரின் தலை மீது வீச விரும்பினான். ஜாகை உடனே மாதையின் கைகளைத் தடுத்துப் பிடித்துக் கொண்டு கண்டிக்கும் குரலில் 'மாதை! நிறுத்து! நீ மிகவும் கொடியவன். ஒரு துறவியைக் கொல்வது தகுதியான செயல் ஆகுமா? உனக்கு இதனால் ஒரு நன்மையும் ஏற்படாது' என்று கூறினான்.

கீர்த்தனை செய்யும் கூட்டத்தின் பின்னால் இருந்த கௌராங்கரிடம், ஜாகையும், மாதையும் நித்தியானந்தரைக் கொல்லுகின்றார்கள் என்று தகவல் தரப்பட்டது. நித்தியானந்தர் தாக்கப்பட்ட இடத்திற்குக் கௌராங்கர் உடனே ஓடினார். அவர் நித்தியானந்தரின் நெற்றியில் பெருகும் இரத்தத்தை நிறுத்துவதற்காகத் தம் ஆடையைக் கிழித்து அவருடைய நெற்றியைச் சுற்றியும் கட்டுக் கட்டினார். மாதை மீண்டும் நித்தியானந்தரைத் தாக்காதவாறு தடுத்து அவருக்கு நன்மை செய்ததற்காகக் கௌராங்கர் ஜாகையைத் தழுவி அணைத்துக்கொண்டார். ஜாகை பரவசமுற்றுக் கீழே விழுந்தான். மாதை தன் செயல் குறித்து மிகவும் வருத்தமுற்றான். அவன் பேசும் சக்தி அனைத்தும் இழந்து விட்டான், பின்னர் உணர்வு பெற்றுக் கௌராங்கரின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து, 'பிரபுவே! நான் மிகப் பெரிய பாவி; என் மீது கருணை காட்டுங்கள்' என்று மன்றாடினான். நித்தியானந்தரை அணுகி அவரிடம் மன்னிப்புக் கேட்குமாறு கௌராங்கர் அவனிடம் தெரிவித்தார். மாதை நித்தியானந்தரிடம் தன் பிழைக்கு இரங்கி, மன்னிக்குமாறு வேண்டினான். நித்தியானந்தர் அவனை மன்னித்துத் தழுவி அரவணைத்துக் கொண்டார். மாதையும் தன் தம்பியைப் போலவே பரவசமடைந்து கீழே விழுந்தான்.

இதன் பின்னர் இச்சகோதரர்கள் புனிதம் மிகுந்த சாதுக்கள் ஆயினர்; முன்னாட்களில் அவர்களுடைய

மிருகத்தனத்தைக்கண்டு உலகம் எந்த அளவுக்கு வெறுப்புற்று அஞ்சியதோ அந்த அளவுக்கு இப்போது உலகம் அவர்களை நேசித்தது. அவர்கள் ஆற்றுக்கு நீராடச் செல்லும் ஒவ்வொருவரையும் மண்டியிட்டு வணங்கி அவர்களுக்கு வேண்டிய எல்லாவகையான பணிவிடைகளையும் செய்து தாங்கள் முன்பு செய்த குற்றங்கட்கெல்லாம் பிராயச்சித்தம் தேடிக்கொண்டார்கள். அவர்கள் கையில் மண்வெட்டியை எடுத்துக்கொண்டு, மக்கள் நீராடுவதற்கான ஒரு துறையை உண்டாக்கினார்கள், நவத்வீபத்தில் அது இன்றும் 'மாதையின் துறை' என்ற பெயரால் வழங்குகின்றது.

## வண்ணானிடம் உரையாடல்

ஒரு மரப்பலகையின் மீது துணிகளைத் துவைத்துக் கொண்டிருந்த வண்ணான் ஒருவனிடம் கௌராங்கரும் அவருடைய நண்பர்களும் வந்தனர். 'ஹரிபோல்' என்று சொல்லுமாறு அவர் வண்ணானிடம் கூறினார். இந்த சாதுக்கள் தன்னிடம் பிச்சைபெறுவதற்காக வந்திருக்கின்றார்கள் என்று அந்த வண்ணான் கருதினான். அவன் கௌராங்கரிடம், 'சாதுவே! நான் மிகவும் ஏழை. தங்களுக்குத் தருவதற்கு என்னிடம் எதுவுமில்லை' என்று கூறினான். கௌராங்கர், 'உன்னிடமிருந்து நான் எதையும் பெற விரும்பவில்லை. 'ஹரிபோல்' என்று ஒரு முறை நீ சொன்னாலும் போதும்' என்று கூறினார். வண்ணான் மறுத்துவிட்டான். சாதுவுக்குத் தான் ஏதேனும் தரவேண்டியிருக்கும் என்று அவன் நினைத்தான். அவன், ''நான் மிகவும் ஏழை. தாங்கள் உச்சரிக்குமாறு வேண்டும் பெயரைச் சொல்வதற்காக நான் துணிகளைத் துவைக்கும் செயலை விட்டுவிட முடியாது'' என்று கூறினான். கௌராங்கர், ''நான் துணிகளைத் துவைத்துத் தருகிறேன். தயவு செய்து 'ஹரிபோல்' என்று கூறுவாயாக'' என்று வேண்டினார். வண்ணான், 'ஹரிபோல்' என்று கூறினான். பின்னர் கௌராங்கர் அதையே இரண்டு முறை திருப்பிச் சொல்லுமாறு வேண்டினார். வண்ணான் இருமுறை உச்சரித்தான்.

பின்னர் பக்தி என்னும் நெருப்பு அவனைப் பற்றிக்கொள்ளத் தொடங்கியது. யாரும் கேட்காமலே வண்ணன் மீண்டும் மீண்டும் உச்சரித்தான். அவன் பரவசமடைந்து தன் இரு கைகளையும் உயரத் தூக்கியவாறு ஆனந்தக் கூத்தாடலாயினன்.

வண்ணனுடைய மனைவி அவனுக்கு உணவு கொண்டு வந்தாள். தன் கணவன் கைகளை மேலே உயர்த்திக் கொண்டு, 'ஹரிபோல், ஹரிபோல்' என்று உச்சரித்தவாறு கூத்தாடுவதை அவள் பார்த்தாள். தன்னைச் சுற்றியும் உள்ளவைப் பற்றிய நினைவை அவன் இழந்திருந்ததையும் அவள் கவனித்தாள். அவள் அவனைப் பலமுறை உரத்த குரலில் அழைத்து அவன் தன் நினைவு பெறச் செய்ய முயன்றாள்; ஆனால் அது பயன்தரவில்லை. அவள் பயந்து விட்டாள். அவள் தன் ஊருக்கு ஓடிச் சென்று தன் உறவினர்களிடமும் அக்கம்பக்கத்தாரிடமும், 'என் கணவனை ஒரு பேய் பிடித்துக்கொண்டுவிட்டது. தயவு செய்து எனக்கு உதவி செய்யுங்கள். அவரைப் பிடித்துள்ள பேயை ஓட்டி விடுங்கள்' என்று முறையிட்டாள். அவர்கள் அனைவரும் உடனே வண்ணனைக் காண்பதற்குப் புறப்பட்டார்கள். அவன் இன்னும் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்தான். அவனருகில் செல்லவும் அவர்கள் அஞ்சினர். இறுதியில் தைரியசாலியான ஒரு மனிதன் அவனைக் கட்டிப்பிடித்து அவன் கூத்தாடுவதை நிறுத்த முயன்றான். ஆனால் அவனுக்கும் அது தொற்றிக்கொள்ளவே அவனும் 'ஹரிபோல்', 'ஹரிபோல்' என்று உச்சரித்துக் கொண்டு அந்த வண்ணனுடன் அவனும் கூத்தாடத் தொடங்கினன். வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தவர்களை அவன் அணைத்துக்கொண்டான். அவர்களையும் தொற்றிக் கொள்ளவே அவர்களும் பரவசமடைந்து கூத்தாடினர். ஊர் முழுவதையும் சேர்ந்த மக்கள் யாவரையும் இது பாதித்தது. கௌராங்கர் இக்காட்சியைச் சிறிது நேரம் மகிழ்வுடன் அனுபவித்துவிட்டு அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டார்.

## யாத்திரைகள்

சைதன்யர் தம் நண்பர் நித்தியானந்தருடன் ஒரிஸ்ஸாவை நோக்கிப் புறப்பட்டார். அவர் சென்ற இடங்களில் எல்லாம் வைஷ்ணவக் கொள்கையைப் பரப்பிச் சங்கீர்த்தனம் செய்தார். அவர் சென்ற எல்லா இடங்களிலும் ஆயிரக்கணக்கான மக்களைக் கவர்ந்தார். பூரியில் சில நாட்கள் தங்கிவிட்டுத் தெற்கு நோக்கி அவர் புறப்பட்டார். கௌராங்கர் திருப்பதிமலை, காஞ்சீபுரம், காவிரியின் கரையில் உள்ள புகழ் பெற்ற திருவரங்கம் ஆகிய தலங்களைத் தரிசித்தார். திருவரங்கத்திலிருந்து அவர் மதுரை, சேது பந்தனம், கன்னியாகுமரி ஆகிய இடங்களுக்குச் சென்றார். நாசிக், பண்டரிபுரம், உடுப்பி ஆகிய தலங்களையும் அவர் தரிசித்தார். அவர் பிருந்தாவனத்தைத் தரிசித்தார். அவர் யமுனையிலும், பல்வேறு புண்ணிய தீர்த்தங்களிலும் நீராடினார்; புனித தலங்கள் பலவற்றையும் தரிசித்தார். தம் உள்ளத்தில் திருப்தி ஏற்படும் வரை அவர் வழிபாடு செய்து பரவசமுற்று ஆனந்தக் கூத்தாடினார். தம் பிறந்த ஊரான நவத்வீபத்துக்கும் சென்றார். இறுதியாக அவர் பூரிக்குத் திரும்பி வந்து அங்கேயே நிலையாகத் தங்கலானார். தம் எஞ்சிய வாழ் நாட்களை அவர் பூரியில் மட்டுமே கழித்தார். வங்காளம், பிருந்தாவனம் இன்னும் மற்ற பல்வேறு இடங்களில் இருந்தும் அவருடைய சீடர்களும் அவரைப் பாராட்டுவோரும் பூரிக்கு வந்து தங்கள் பணிவான வணக்கங்களை கௌராங்கருக்குச் செலுத்தினர். அவர் நாள்தோறும் கீர்த்தனங்களைப் பாடிச் சொற்பொழிவு ஆற்றினார்.

## பூரியில் அற்புதம்

பூரியில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. தேர்த் திருவிழாவின் போது ஜகன்னாதருடைய தேர் நகரவில்லை. வந்திருந்த யாத்திரிகர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து தம் வலிமையால் முயன்றனர். அது பயன்தரவில்லை. பூரி அரசரின் ராட்சத

யானைகள் கூடத் தேரை அசைக்க முடியவில்லை. அனைவரும் திகைத்துப்போய்க் குழம்பிய நிலையில் இருந்தனர். கௌராங்கர் அப்போது தான் அங்கு வந்து சேர்ந்தார். அவர் தலையை முட்டுக் கொடுத்துத் தேரைத் தம் தலையால் தள்ளினர்; தேரும் உடனே நகர்ந்தது. யாத்திரிகர்கள், பக்தர்கள் அனைவரும் செய்த 'ஹரிபோல்' முழக்கம் வானைப் பிளந்தது.

## சார்வபௌமரின் மாற்றம்

சார்வபௌம பட்டாச்சாரியார் மிகப் பெரிய வேதாந்த அறிஞர். ஒரு முறை சைதன்யர் பரவசமுற்ற நிலையில் ஜகன்னுதருடைய கோயிலுக்குச் சென்றார். சிலையைத் தழுவிக்கொள்ள அவர் விரைந்து சென்றார்; ஆனால் மூர்ச்சையுற்றுத் தரையில் விழுந்து விட்டார். காவலன் அவரை நையப்புடைக்க இருந்தான். ஒரிஸ்ஸாவின் அரசர் பிரதாப ருத்திரரின் அமைச்சராகிய கற்றறிந்த பேரறிஞர் சார்வபௌம பட்டாச்சாரியார் சைதன்யரைத் தம் இல்லத்திற்குக் கொண்டு சென்று ஒரு தூய்மையான இடத்தில் படுக்கவைத்தார். அவருடைய மாணவர்கள் கௌராங்கரைத் தம் தோள்களில் சுமந்துகொண்டு வந்து சேர்த்தார்கள். பக்தர்கள் கௌராங்கரின் செவிகளில் விழுமாறு ஹரி நாமத்தை உரத்த குரலில் உச்சரித்தனர். கௌராங்கர் தம் நினைவுக்குத் திரும்பினர்.

வேதாந்தத்தைப் பற்றி அறியாதவரும் தம் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தத் தெரியாதவரும் ஆக உள்ள ஓர் இளைஞர் என்று கௌராங்கரைப் பற்றிச் சார்வபௌமர் நினைத்தார். அவருடைய பாடலையும் ஆடலையும் அவர் விரும்பவில்லை. அவர் கௌராங்கருக்கு மறு தீக்ஷை தர விரும்பினர். பல நாட்கள்வரை கௌராங்கர் பணிவுடன் அவருடைய பேச்சைக் கேட்டுவந்தார். சார்வபௌமர் கௌராங்கருக்குப் பின் வரும் பாடலை ஒன்பது வகை விளக்கங்களுடன் அறிவித்தார். சைதன்யர் தம் வடமொழி

யாற்றலே வெளிப்படுத்தும் முறையில் அதற்கு அனுபவத் தோடு விளக்கங்களை முற்றிலும் வேறுபட்ட வகைகளில் வழங்கினார். சார்வபௌமர் ஆச்சரியத்தால் வாயடைத்துப் போனார்.

''ஆத்மரமஸ்ச்ச முனயோ நிக்ரந்தபி உருக்ரமே
குர்வந்தி அஹைதுகிம் பக்திம் இதம்பூத
குணோ ஹரி.''

இதன் பொருள்: ஆத்மராம யோகியர், தாங்கள் நிக்ரந்தர்களாக இருப்பினும் (அதாவது மாயையின் அல்லது சாஸ்திரக் கட்டளைகளின் செல்வாக்குக்கு அப்பாற் பட்டவர்கள்) சிந்தனையில் லயித்தவர்களாகி தன்னலமற்ற அன்போடும் பக்தியோடும் உருக்ரம ஹரியை வழிபடுமாறு அச்சிந்தனையால் கவரப்படுகின்றனர்கள். ஹரியின் குணாதிசயங்கள் இவ்வாறு கவர்ச்சி வாய்ந்தனவாக விளங்குகின்றன.

சார்வபௌமருக்குப் பக்தியுணர்ச்சியும் இல்லை; மெய் யுணர்ச்சியும் இல்லை. அவர் வறட்சியுள்ள, படித்தறிந்த பண்டிதராக மட்டுமே இருந்தார். கௌராங்கர் மிகப் பெரிய அறிஞராக இருப்பினும் மிகவும் பணிவுடன் விளங்கினார். மற்றவர்களின் உணர்வுகளைப் புண்படுத்தக் கூடிய வாக்குவாதங்களில் அவர் எப்போதுமே ஈடுபட்ட தில்லை. தம் வாக்குவாதங்களில் அவர் வெற்றி பெற்றாலும் அவர் களிப்பு மிக்க உணர்வை எப்போதும் அடைந்ததில்லை. கௌராங்கர், சார்வபௌமரின் வாதங்கள் ஒவ்வொன்றை யும் தனித் தனியாக எடுத்துக்கொண்டு ஆய்வு செய்து முடிவு கூறி அவரைத் தம் கொள்கைக்கு மாற்றினார். கௌராங்கர் சார்வபௌமரை அரவணைத்துக் கொண்டார். சார்வபௌமர் தெய்வீகப் பேரின்ப மகிழ்ச்சியால் பரவச மடைந்து மூர்ச்சையுற்றார். பின்னர் அவர் எழுந்து கூத்தாடினார். அவர் கௌராங்கரின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து, 'வணக்கத்திற்குரிய குருவே! தருக்க சாஸ்திர அறிவு என் உள்ளத்தை இரும்பினைப் போலக் கடின

முடையதாக ஆக்கிற்று. எனக்குப் பக்தியுணர்ச்சியே இல்லை தாங்கள் என்னை உருகச் செய்துவிட்டீர்கள். சக்திமிக்க பிரபுவே! தங்களுக்கு வந்தனங்கள் செலுத்துகின்றேன்! என்று கூறினர்.

கௌராங்கர் பிரபு தம் அமைப்பின் கீழ்வந்த வைணவ சமயத் தலைவர்கள், அத்வைத தத்துவத்தின் தலைவர்கள் ஆகிய அனைவரையும் மாற்றம் பெறச் செய்தார். காசியில் இருந்த அத்வைத ஆச்சாரியராகிய பிரகாசானந்தாவும் மாற்றம் பெற்றார். கௌர் அரசின் அமைச்சர்கள் தொண்டர்களாயினர். ஆளுநர் காசியும் அன்பினால் வெற்றி கொள்ளப்பட்டார். ஒரிஸ்ஸாவின் அரசர் அவருடைய, ஆர்வம் மிகுந்த பக்தி மிகுந்த சீடர் ஆனார். அவர் கௌராங்கரைக் கிருஷ்ண பகவானின் அவதாரம் என்று உணர்ந்தார்.

## தொழு நோயாளியைக் குணப்படுத்தல்

வாசுதேவர் பணிவும், பக்தியும், நற்பண்பும் உள்ள ஓர் அந்தணர். மிகவும் வெறுக்கத்தக்க தொழு நோயால் அவர் துன்புற்றார். அவருடைய உடம்பிலிருந்து வெளிப்பட்ட அருவருக்கத்தக்க துர்நாற்றத்தின் காரணத்தால் அவர் தம் நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரை விட்டு விலகி வாழ வேண்டிய கட்டாயத்துக்கு ஆளானார். தமது புண்களில் இருந்து விழும் புழுக்களைப் பொறுக்கி எடுத்து மீண்டும் அவை இருந்த இடங்களில் அவற்றை வைத்துவிடுவது அவருடைய வழக்கம். எல்லா உயிர்களையும் சமமாகப் பார்க்கும் நோக்கும், எல்லை மீறிய கருணையும் அவர்பால் இருந்தன. உயிர் வாழும் எல்லா உயிரினங்களுக்கும் வாழ்வதற்குச் சம உரிமை உண்டு என்றும், புழுக்கள் தமக்குரிய இயற்கையான உணவை இழக்கச் செய்யும் உரிமை தமக்கு இல்லை என்றும் அவர் நம்பினர். அற்புதம் மிகுந்த மென்மையான உள்ளம் வாய்ந்த அவர் எவ்வளவு பெருந்தன்மையுடன் கூடிய ஆத்மாவாக இருந்தார்!

ஜகன்னாத்தில் அவர் கூர்ம தேவரின் கோயிலுக்கு அருகே வாழ்ந்து வந்தார். சைதன்யர் அக்கோயிலுக்கு வருவார் என்று இரவில் கேள்வியுற்றார். அடுத்த நாள் காலையில் அவர், அவரைக் காண்பதற்காகக் கோயிலை நோக்கிப் புறப்பட்டார். அவர் வந்து சேர்வதற்கு அரை மணி முன்புதான் குரு அந்த இடத்தை விட்டுச் சென்று விட்டார் என்று அறிந்தார். இச் செய்தியைக் கேட்டதும், துக்கத்தினாலும், ஏமாற்றத்தினாலும் அவர் மூர்ச்சையடைந்து கீழே விழுந்தார். கீழே விழும்போது, 'கிருஷ்ண பகவானே! என்னைப் புறக்கணித்து விட்டாரோ' என்று ஓலமிட்டார்.

அப்போது அத்தெருவின் வழியாகச் சென்று கொண்டிருந்த சைதன்யர் வாசுதேவரின் ஓலத்தைக் கேட்டுக் கோயிலை நோக்கி ஓடினார். அவர் தொழு நோயாளியைத் தம் இருகரங்களாலும் தூக்கி நிறுத்தி அன்புடன் அரவணைத்துக் கொண்டார். ஆகா! என்னே அற்புதம்! தொழுநோய் உடனே மறைந்து விட்டது; அவருடைய உடம்பு வலிமையும் அழகும் பெற்றுத் திகழ்ந்தது. வாசுதேவர், ''பிரபுவே! தாங்கள் என்னை அணைத்துக் கொண்டீர்கள். என் உடம்பினது நாற்றத்தைச் சகிக்க முடியாமல் மக்கள் அனைவரும் என்னை விட்டு விலகி ஓடினார்கள். தங்களை வணங்கித் தங்களின் பாதகமலங்களைத் தரிசிப்பதற்காக நான் இங்கு வந்தேன். நிச்சயம் நான் எனது நோய் குணமாக வேண்டும் என்ற கருத்துடன் இங்கு வரவில்லை. வெறுக்கத்தக்க இந்த நோய் பணிவோடும் கருணையோடும் இருக்கவும், எந்நேர மும் இறைவனை நினைக்கவும் எனக்குக் கற்றுக்கொடுத்தது. ஆனால் நலம் மிகுந்த உடம்பினால் அகந்தையும் செருக்கும் மீண்டும் தோன்றி நான் பகவானை மறந்து விடுவேன்'' என்று கூறினார்.

சைதன்யர் அவருக்கு ஆறுதல் தந்து, ''வாசுதேவா! என் குழந்தாய்! பகவான் கிருஷ்ணருடைய கருணை உனக்கு உண்டு. மீண்டும் அகந்தையாலும் செருக்காலும் நீ தலைக்

கனம் அடையமாட்டாய். எல்லா உயிரினங்களுக்கும், உன் உடம்பையே தின்று கொண்டிருந்த புழுக்களுக்கும் கூட நீ காட்டிய எல்லை மீறிய கருணையாலும் வரம்பற்ற உன் பணிவாலும் கிருஷ்ணபகவான் உன்னை ஏற்கனவே ஏற்றுக்கொண்டார். கிருஷ்ண பகவானின் பெயரை உச்சரிப்பாயாக! ஏனைய மக்களையும் கிருஷ்ண பகவானின் பெயரை உச்சரிக்கச் செய்து அவர்களையும் காப்பாற்று வாயாக!'' என்று கூறினர்.

## ஸ்ரீ பாசர் இல்லத்தில் கீர்த்தனம்

பண்டித ஸ்ரீ பாசர் கௌராங்கரின் நேர்மையான பக்தர். அவருடைய வீட்டு முற்றத்தில் கீர்த்தனை செய்யும் முதல் அணி உருவாக்கப்பட்டது. கீர்த்தனை அங்குதான் வழக்கமாக நடைபெற்றது. அவருடைய இல்லத்தில் அவருடைய பேரால் சைதன்ய பாகவதம் எழுதப்பட்டது.

ஒருநாள் இரவில் அவருடைய இல்லத்தில் மிகச் சிறந்த முறையில் கீர்த்தனை நிகழ்ந்தது. மிகுந்த களிப்புடன் கௌராங்கரும் பக்தர்களும் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டிருந்தார்கள். அப்போது ஒரு பணிப்பெண் முற்றத்திற்கு வந்து ஸ்ரீ பாசருக்குச் சைகை காட்டித் தன்னைப் பின்தொடர்ந்து வருமாறு தெரிவித்தாள். அவர் கீர்த்தனையை விட்டுவிட்டு வீட்டினுள் சென்றார். அவருடைய ஒரே மகன் காலராவினல் அவதிப்பட்டுக் கொண்டிருந்தான். அவன் தற்போது இறக்குந் தருணத்தில் இருப்பதை அவர் கண்டார். அவருடைய மனைவி அழுது கொண்டிருந்தாள். ஸ்ரீ பாசர் அவளிடம், 'அழவேண்டாம், அழுதால் நம் பிரபுவின் களிப்புக்குக் குந்தகம் ஏற்படும். வீட்டில் ஹரியின் கீர்த்தனை நடைபெற்றுக்கொண்டிருக்கும் போது நம் புதல்வன் மரணம் அடைவது பெறுவதற்கரிய மிகப்பெரும் பேறு ஆகும்,'' என்று கூறினர். சில நிமிடங்களில் சிறுவனுடைய உயிர் உடம்பைவிட்டுப் பிரிந்தது. ஸ்ரீ பாசர் கீர்த்தனை நிகழ்ச்சியில் சேர்ந்துகொண்டு ஆனந்தக் கூத்தாடினர். அவர் சிறிதும் பாதிக்கப்படவில்லை.

செய்தி நீண்டநேரம் இரகசியமாக வைக்கப்பட முடியவில்லை. எப்படியோ அது கீர்த்தனை பாடும் ஒருவரின் செவியை எட்டியது. அவர் கீர்த்தனையை நிறுத்தினர். இன்னொருவரும் செய்தியைக் கேட்டார். அவரும் கீர்த்தனையை நிறுத்திவிட்டு ஸ்ரீ பாசரின் நிலையைக் காண விரும்பினர். கீர்த்தனை பாடுவோர் மெதுவாக ஒவ்வொருவராக நிறுத்தினர்கள். கௌராங்கரும் கீர்த்தனையை நிறுத்திவிட்டு, ''மிகுந்த களிப்பை இன்று ஏன் என்னல் அனுபவிக்க முடியவில்லை? ஏதேனும் அவல நிகழ்ச்சி இன்று நடைபெற்றதா?'' என்று வினவினர். துயரம் மிகுந்த நெஞ்சுடன் அவர் ஸ்ரீ பாசரைப் பார்த்தார்.

ஸ்ரீ பாசர், ''என் இல்லத்தில் பிரபுவின் கீர்த்தனை நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது ஆபத்து ஏதும் எனக்கு நிகழ முடியுமா?'' என்று விடை சொன்னர். மற்ருெரு பக்தர், ''பிரபுவே! அது உண்மைதான். ஒரு பெரிய துக்க நிகழ்ச்சி நடைபெற்றுவிட்டது. பண்டித ஸ்ரீ பாசரின் புதல்வன் இறந்து விட்டான்'' என்று கூறினர். சைதன்யர், 'இவருடைய புதல்வனு இறந்தான்? எப்போது?' என்று வினவினர். பக்தர், 'அவன் இறந்து ஆறு அல்லது ஏழு மணி ஆகியிருக்கும்' என்று தெரிவித்தார். சைதன்யர் கண்ணீர் பெருக்கி விம்மி அழுதார். அவர், 'ஸ்ரீ பாசரே! குழந்தையை என்முன் கொண்டு வாருங்கள்' என்று வேண்டினர். முற்றத்தில் கௌராங்கரின் முன்னே குழந்தையின் உடலைக் கொண்டு வந்தார்கள். இறந்த குழந்தையைக் கௌராங்கர் அழைத்துத் தம்முடன் பேசுமாறு கட்டளையிட்டார். குழந்தை ''நான் இந்த உடலைவிட்டு நல்ல நிலைநோக்கிச் செல்லுகின்றேன் பிரபுவே! என் உயிர் தங்களின் பாத கமலங்களைப் பற்றிக் கொள்ளட்டும்'' என்று கூறியது. குழந்தையின் உயிர் மீண்டும் உடலை விட்டு அகன்றது. பின்னர் கௌராங்கர், ஸ்ரீ பாசரையும் அவருடைய மனைவி மாலினியையும் நோக்கி, ''உங்களின் பிரிந்த குழந்தையின் இடத்தை நானும் நித்தியானந்தரும் நிறைவு செய்கின்றோம்,

வருத்தப்பட வேண்டாம். ஏக்கம் கொள்ள வேண்டாம்'' என்று கூறினர். எத்தகைய பரந்த, இரக்கம் வாய்ந்த உள்ளத்தைக் கௌராங்கர் கொண்டிருந்தார்.

## ஆறு கைகள் உள்ள தெய்வீகத் தன்மை

சைதன்யருடைய தொண்டர்கள் அவரை ஆறு கைகள் உள்ள தெய்வமாக மதிக்கின்றனர். சார்வபௌமர், ராமநந்தராய், நித்தியானந்தர் ஆகியோருக்கு அவர் ஆறு கைகள் கொண்ட தம் உருவத்தைச் காட்டியதாகச் சொல்லப்படுகின்றது. முதல் இரு கைகள் அம்பும் வில்லும் தாங்கியிருந்தன; இரண்டாம் இரு கைகள் புல்லாங்குழலை வாசித்துக் கொண்டிருந்தன; கடைசி இரு கைகள் தண்டமும் கமண்டலமும் ஏந்தியிருந்தன. தாம் இராம ராகவும், கிருஷ்ணராகவும் உள்ள உண்மையை இக் காட்சியால் அவர் நித்தியானந்தரைப் புரிந்துகொள்ளுமாறு செய்தார்.

## கடலில் குதித்தல்

கௌராங்கர் தெய்வீகப் பரவசமுற்ற நிலையில் (இருந்த போது) பூரியில் உள்ள நீலக் கடலில் குதித்தார். நீலக் கடலை யமுனை நதி என்று அவர் கருதினர். பிருந்தாவனக் கோபியர் விளையாடும் கேளிக்கை விளையாட்டில் தாமும் சேர்ந்து கொள்ள அவர் விரும்பினர். தொடர்ந்து உண்ணு நோன்பு இருந்தமையாலும், பல இரவுகளிலும் உறங்காமல் விழிப்புடன் இருந்தமையாலும் அவருடைய உடல் மிகவும் பலவீனமுற்றிருந்த காரணத்தால் தண்ணீரில் மிதந்து கொண்டிருந்து ஒரு மீனவனுடைய வலையில் விழுந்தது. அப்போது இரவு நேரம், வலை மிகவும் கனமாக இருந்ததை உணர்ந்து மீனவன் எல்லையற்ற மகிழ்ச்சியடைந்தான். ஒரு பெரிய இராட்சத மீன் அகப்பட்டதாக அவன் நினைத்தான். மிகவும் கஷ்டப்பட்டு அவன் வலையைக் கரைக்கு இழுத்துச் சென்றான். வலையில் பெரிய மீனுக்குப் பதிலாக ஒரு மனித உடல் கிடப்பதை அவன் கண்டான். அவனுக்கு மிகுந்த

ஏமாற்றம் ஏற்பட்டது. அவ்வுடம்பிலிருந்து தீனமான குரல் கிளம்பியது. மீனவன் அதை அது ஒரு பேய் அல்லது துர்தேவதையாக இருக்கும் என்று கருதி மிகவும் அச்சமுற்ருன். நடுங்கும் குரல்களுடன் அவன் மெதுவாகக் கடற்கரை வழியாக நடந்தான். கதிரவன் மறைந்த நேரத்திலிருந்து தம் ஞான ஆசிரியரைத் தேடிக்கொண்டிருந்த ஸ்வரூபரும், ராமானந்தரும் அந்த மீனவனைச் சந்தித்தனர். கௌராங்க தேவரைத் எங்கேனும் பார்த்தாயா என்று அவனை ஸ்வரூபர் கேட்டார். மீனவன் நடந்த நிகழ்ச்சியைத் தெரிவித்தான். ஸ்வரூபரும், ராமானந்தரும் வலை கிடந்த இடத்திற்கு விரைந்து சென்றனர். அவர்கள் வலையிலிருந்து தம் ஞான ஆசிரியரை விடுவித்துத் தரையில் படுக்க வைத்தனர். ஹரி நாமத்தை அவர்கள் உரத்த குரலில் பாடினர். கௌராங்கர் தம் நினைவுக்கு திரும்பினுர்.

## அவர் கடைசியாகக் கூறியவை

கௌராங்கர், ''ஸ்வரூபரே! ராமானந்தரே! கேளுங்கள். கலியுகத்தில், கிருஷ்ண பகவானுடைய திருவடிகளை அடைவதற்குரிய ஒரே சாதனம் கிருஷ்ண நாமத்தை உச்சரிப்பதுதான். அப்பெயரைச் சங்கீர்த்தனம் செய்வது இந்த இரும்பு யுகத்தில் மிகப் பெரிய மருந்து. சங்கீர்த்தனம் பாவங்களை அழித்து உள்ளத்தைத் தூய்மைப் படுத்திப் பக்தியை உருவாக்குகின்றது. அப்பெயரை அமர்ந் தாலும், நின்ருலும், நடந்தாலும், உறங்கச் சென்ருலும் எல்லா இடங்களிலும், எல்லா நேரங்களிலும் உச்சரியுங்கள். அப்பெயர் பேராற்றல் வாய்ந்தது, எந்த இடத்திலும், எந்த நேரத்திலும் நீங்கள் அப்பெயரை உச்சரிக்கலாம்.

ஸ்வரூபரே! ராமானந்தரே! கேளுங்கள். எத்தகைய மன நிலையில் அப்பெயரை உச்சரிக்க வேண்டும் என்று கூறுகிறேன்.

''ஹரி நாமத்தை எப்போதும் உச்சரிக்கின்றவன், (காலால் மிதிக்கப்படும்) புல்லின் இதழைக் காட்டிலும் பணிவுள்ளவனுக இருக்க வேண்டும்; (மரம் வெட்டப்பட்டால்

அழுது புலம்புவதில்லை. வறண்டு பட்டுப் போனாலும் தண்ணீரை யாசித்துப் பெறுவதில்லை. மாறாகத் தன்னை நாடி வருவோருக்குத் தன் கனி வளங்களை தருகின்றது; வெயிலையும், மழையையும் பொறுத்துக் கொள்ளுகின்றது; ஆனால் வெயிலுக்கும், மழைக்கும் தன் பால் வருவோர்க்கு நிழலையும், பாதுகாப்பையும் தருகின்றது.) ஒரு மரத்தைக் காட்டிலும் அவன் பொறுமையுள்ளவனாகவும், மன்னிக்கும் தன்மை உள்ளவனாகவும் அறஞ் செய்யும் இயல்பு உள்ள வனாகவும் இருக்க வேண்டும்; அவன் எவ்வளவு உயர்ந்த வனாகவும் இருந்தாலும் தனக்கு மற்றவர்கள் வணங்க வேண்டும் என்று எதிர்பாராமல் தான் மற்ற எல்லோரையும் (எல்லா உயிரினங்களின் உள்ளும் இறைவன் இருக்கின்றான் என்ற உணர்வுடன்) வணங்கவேண்டும். இவ்வாறு கிருஷ்ணருடைய பெயரை ஏற்றுக்கொண்டவன் கிருஷ்ண பகவானிடம் செலுத்தும் பேரன்பைப் பெறுகின்றான்'' என்று அறிவுரை வழங்கினார்.

கௌராங்கர் தம் குணத்தில் மிகவும் பணிவுள்ளவராகிப் பின்வரும் கருத்துள்ள பாடலை இசைத்தார்:— ''இறைவா! நான் செல்வத்தையோ, தொண்டர்களையோ, கவித் திறனையோ வேண்டவில்லை. என்னுடைய கைம்மாறு கருதாத பக்தி, நான் எடுக்கும் ஒவ்வொரு பிறவியிலும் தொடரட்டும்''

1533-ஆம் ஆண்டு ஜூன் மாதம் 14-ஆம் தேதி அவர் இறைவனுடன் ஐக்கியமானார்.

சேதோ தர்ப்பணமார் ஜனம் பவ மகாதவாக்கினி
நிர்வாபணம்
ஸ்நேய கைரவ சந்த்ரிகா விதரணம் வித்யாவதூ
ஜீவனம்
ஆனந்தாம்புதி வர்த்தனம் ப்ரதிபதம் பூர்ணாம்ரு
தாஸ்வாதனம்
சர்வாத்மஸ்னபனம் பரம் விஜயதே ஸ்ரீ கிருஷ்ண
சங்கீர்த்தனம்

''கிருஷ்ண பகவானுடைய பல்வேறு பெயர்களை உச்சரிப்பதே எல்லாவற்றுள்ளும் பெருமை வாய்ந்ததாகும். அது சித்தமெனினும் நிலைக் கண்ணாடியைத் தூய்மைப்படுத்துகிறது. தொடர்ந்து வரும் பிறவிகள், மறு பிறவிகள் என்னும் பெரிய காட்டுத் தீயை அணைத்துவிடுகிறது; ஆன்மீக நலமாகிய வெண்ணிற அல்லி மலரை மலர்த்தும் நிலவுக் கதிராகப் பணி செய்கின்றது; ஞானக் கல்வி என்னும் மண மகளின் வாழ்வை நீடூழி வாழச் செய்கின்ற அமிழ்தம்; பேரின்பக்கடலை அலை பொங்கச் செய்கின்றது; உச்சரிப்பவன் ஒவ்வொரு சொல்லையும் உச்சரிக்கும்போது தெய்வீக அன்பின் பேரின்பத்தை அவன் முழு நிறைவுடன் அனுபவிக்கச் செய்கின்றது; மனத்தையும் பொறி புலன்களையும் பேரின்பத்தில் நீராட்டுகின்றது.''

— கௌராங்கர்.

## 7. மகரிஷி வியாசர்

பழங்காலத்தில் நம் முன்னோர்களாகிய ஆரியவர்த்த ரிஷிகள், இந்துமதக் கால அட்டவணையில், குறிப்பிட்ட மிகவும் முக்கியமான நாளாகிய வியாச பௌர்ணமியை அடுத்து வரும் நான்கு மாதங்களும் தவம் செய்வதற்காகக் காட்டிற்குச் சென்றார்கள், நினைவு கூர்தற்குரிய இந்நாளில், இறைவனே செய்த அவதாரமாகிய வியாசர் தம் பிரம்ம சூத்திரங்களை எழுதத் தொடங்கினார். நம் பழங்காலத்து ரிஷிகள் இத்தவத்தைக் காடுகளிலும் குகைகளில் செய்து வந்தனர். ஆனால் காலங்கள் மாறிவிட்டன; நான்காம் ஆசிரமத்தவராகிய துறவிகளுக்கு வேண்டும் வசதிகளைச் செய்துதர முடிந்தவர்களும், விருப்பமுள்ளவர்களுமாகிய இல்லறத்தாரும், அரசர்களும் இக் காலத்தில் இல்லாமற் போகவில்லை; எனினும் இத்தகைய வசதிகள் இக்காலத்தில் பொதுவாகக் காணப்படவில்லை. காடுகளுக்கும் குகைகளுக்கும் பதிலாக அவரவர்க்குரிய குருத்வாராக்களும் மடங்களும் இடங்கள் தருகின்றன. காலத்திற்கும் இடத்திற்கும் தகுந்தவாறு ஒருவர் தம்மை அமைத்துக்கொள்வது

அவருக்குக் கட்டாயமாகிவிட்டது; இடமாற்றமும் சூழ்நிலை மாற்றமும் ஒருவர் தம் மனோபாவத்தில் வேறுபாடுகளைத் தோற்றுவிக்க இடந்தரக் கூடாது. சதுர் மாதங்கள் வியாச பௌர்ணமி நாளிலிருந்து தொடங்குகின்றன; அந்த நன்னாளில், நம் சாஸ்திரங்களின்படி, நாம் வியாசரையும் பிரம்ம வித்தையைப் போதிக்கும் குருமார்களையும் வணங்கி பிரம்ம சூத்திரங்களையும், ''ஞானம்'' ஊட்டும் ஏனைய தொன்மைமிக்க நூல்களையும் பயிலத் தொடங்க வேண்டும் என்று சான்றோர் எதிர்பார்க்கின்றனர்.

நம் புராணங்கள் பல வியாசர்களைப்பற்றிக் கூறுகின்றன: துவாபர யுகத்தின் முடிவில் பிறந்த கிருஷ்ணத்வைபாயனர் ஆகிய தற்போது நாம் பேசும் வியாசருக்கு முன்பு இருபத்தெட்டு வியாசர்கள் இருந்தனர் என்று கூறப் படுகின்றது. குறிப்பிட்ட அற்புதமான சூழ்நிலைகளில் சத்தியவதி என்னும் மச்ச கன்னிகைக்கும் பராசர ரிஷிக்கும் வியாசர் பிறந்தார். பராசரர் மிகப் பெரும் ஞானி; சோதிட சாஸ்திரத்தில் மிக உயர்ந்த தேர்ச்சி பெற்றிருந்தார் அவருடைய <u>'பராசர ஹோரை'</u> என்ற நூல் இன்றும் சோதிட சாஸ்திரத்தைப் பயில்வதற்கான பாடநூலாக வழங்கி வருகின்றது. <u>'பராசரஸ்மிருதி'</u> என்றழைக்கப்படும் ஒரு ஸ்மிருதி நூலையும் அவர் எழுதியுள்ளார்; இக்காலத்துச் சமூகநூல், நீதிநூல் ஆசிரியர்களும் மேற்கோள் காட்டும் அளவுக்கு அந்நூல் மிக உயர்வாகப் போற்றப்படுகின்றது. குறிப்பிட்ட நாழிகையில் (கடிகை) கருக்கொள்ளும் குழந்தை தன் காலத்து மிகவும் பெருமை வாய்ந்த மனிதனாக, இல்லை, விஷ்ணு பகவானின் அம்சமாகவே பிறக்கும் என்று அவர் அறியலானார். குறிப்பிட்ட அந்த நாளில் பராசரர் ஒரு படகில் பயணம் செய்து கொண்டிருந்தார்; படகோட்டியிடம் அந்தப்புண்ணிய முகூர்த்தம் நெருங்கிக் கொண்டிருப்பதை அவர் எடுத்துரைத்தார். அந்தப் படகோட்டிக்குப் பருவ மடைந்த ஒரு பெண் திருமணத்தை எதிர்நோக்கியவளாய் இருந்தாள். ரிஷியின் பெருமையும் புனிதத் தன்மையும் படகோட்டியின் மனத்தில் நன்கு பதிந்தன; பராசரருக்குத்

தன் பெண்ணை மணம் முடித்துத் தந்தான். இவர்களுடைய கூட்டுறவினால் நம் வியாசர் பிறந்தார், சிவபெருமானுடைய நல்லாசிகளின் பயனாக இவர் பிறந்தார் என்றும்; மிக உயர்ந்த ஞானிக்கு ஏற்பட்ட உறவு தாழ்த்தப்பட்ட இனத்தைச் சேர்ந்தவளுடன் அமைந்ததென்றாலும் சிவ பெருமான் தாமே இதற்கு நல்லாசிகள் வழங்கினார் என்றும் கூறப்படுகின்றது.

மிகவும் சிறிய பிள்ளைப் பருவத்திலேயே வியாசர் தம் பெற்றோருக்குத் தாம் காட்டிற்குச் சென்று அகண்டதவம் செய்ய வேண்டியுள்ளதென்ற தம் வாழ்க்கையின் இரகசியத்தை வெளிப்படுத்தினார். அவருடைய அன்னை முதலில் இதற்குச் சம்மதிக்கவில்லை; ஆனால் பின்னர் ஒரு முக்கியமான நிபந்தனையின் பேரில் இசைவு தந்தார்; அந்த அம்மையார் எப்போது விரும்பினாலும் வியாசர் அவர் முன்னே தோன்றவேண்டும் என்பதே அந்த நிபந்தனை. பெற்றோரும் புதல்வனும் எந்த அளவுக்கு நீண்ட எதிர்கால நோக்குள்ளவர்களாக இருந்தனர் என்பதையே இது காட்டு கின்றது. வியாசர் தம்முடைய இருபத்தோராவது குரு வாகிய வாசுதேவ முனிவரிடத்தில் தீக்ஷை பெற்றார் என்று புராணங்கள் கூறுகின்றன. சனகர், சனந்தனர் இன்னும் ஏனைய முனிவர்கள் ஆகியோரிடத்தில் அவர் பல்வேறு சாஸ்திரங்களையும் கற்றார். மனித சமுதாயத்தின் நன்மைக் காக அவர் வேதங்களைத் தொகுத்து வரிசைப்படுத்தினார்; சுருதிகளை விரைவாகவும் எளிதாகவும் புரிந்து கொள்ளுவ தற்காகப் பிரம்ம சூத்திரங்களை எழுதினார்; பெண்களும், சூத்திரர்களும், அறிவில் தாழ்ந்த படி நிலையில் உள்ள ஏனைய மக்களும் உயர்ந்த பேரறிவை மிக எளிய முறையில் பெறு வதற்காக அவர் மகாபாரதத்தையும் எழுதினார். அவர் பதினெண் புராணங்களை எழுதி உபாக்கியானங்கள் அல்லது கதா காலட்சேபச் சொற்பொழிவுகள் செய்து அறிவைப் பரப்பும் திட்டத்தை நிலைநாட்டினார். இவ்வாறு அவர் கர்மம், உபாசனை, ஞானம் என்னும் மூன்று மார்க்கங்களை நிலைபெறச் செய்தார். அவர் தம் தாய்வழி வம்சத்தை

விருத்தி செய்தார் என்பதும், திருதராஷ்டிரர், பாண்டு, விதுரர் ஆகியோர் அவருடைய சந்ததியார் என்பதும் ஆகிய உண்மைகள் அவருக்கு உரியன என்று சொல்லப் படுகிறது. அவர் இறுதியாக எழுதியது பாகவதம்; தேவரிஷி நாரதருடைய தூண்டுதலால் இப்பணியை அவர் மேற்கொண்டார்; இந்த நூலை எழுதாவிடில் அவர் தம் வாழ்க்கையின் குறிக்கோளை அடைய முடியாதென்று நாரதர் ஒருமுறை அவரை அணுகி அறிவுரை கூறியதன் காரணமாக இந்நூலை அவர் எழுதினுர்.

வியாசர் இன்றும் வாழ்ந்துகொண்டிருக்கின்ற சிரஞ்சீவி என்றும், தம் பக்தர்களின் பொருட்டு உலகம் முழுதும் திரிந்துகொண்டிருக்கின்றுர் என்றும், உண்மையும் நம்பிக்கையும் உள்ளவர்களுக்கு அவர் காட்சி தருகின்றுர் என்றும் இந்துக்கள் அனைவரும் கருதுகின்றனர். மண்டன மிசிர முனிவரின் இல்லத்தில் அவர் ஜகத்குரு சங்கராச் சாரியருக்குத் தரிசனம் தந்தார் என்றும் இவ்வாறே வேறு பலருக்கும் . காட்சி தந்தார் என்றும் கூறப்படுகின்றது. சுருங்கக் கூறின், இவ்வாறு அவர் உலக நன்மைக்காக வாழ்ந்து கொண்டிருக்கின்றுர். நம் அனைவர் மீதும், உலகம் முழுவதன் மீதும் அவருடைய நல்லாசிகள் பொழிவனவாக என்று நாம் வாழ்த்துவோம்.

முக்கியமான அறுவகைச் சிந்தனைப் பாகுபாடுகளை நம் முன்னுேர் வளர்த்தனர் என்று நாம் ஒவ்வொருவரும் அறிவோம். வைதிக சமய தத்துவத்தின் ஆறுவகையான கொள்கைகள் (தர்சனங்கள்) என்று அவை சொல்லப்படு கின்றன. அவையாவன; சாங்கியம், யோகம், நியாயம், வைசேஷிகம், பூர்வ மீமாம்சை, உத்தர மீமாம்சை அல்லது வேதாந்தம் என்பவையாம். ஒவ்வொரு கொள்கையிலும் முக்கியமான கருத்துக்களின் சாயல்களும் வேறுபாடுகளும் உள்ளன. ஒவ்வொரு தலைப்பிலும் சொற்களின் பொருள், நினைவில் கொள்வதற்கு அல்லது நீண்ட வாக்குவாதங்கள் செய்வதற்கு உதவியாக உள்ள அடையாளச் சொற்கள்

ஆகியவை அடங்குமாறு வடமொழியில் சூத்திரங்கள் என்று சொல்லப்படும் சிறிய பழமொழிகளின் வடிவில் நூல்கள் எழுதப்பட்டன. பத்ம புராணத்தில் சூத்திரம் என்பது பற்றிய விளக்கம் தரப்பட்டுள்ளது. சூத்திரம் சுருக்கமாகவும் இருபொருளுக்கு இடந்தராதவாறும் இருக்க வேண்டும்; ஆனால் சுருக்கம் எந்த அளவுக்கு அமைந்து விட்டதென்றால் எளிதில் புரிந்துகொள்ள முடியாதவாறு அமைந்துவிட்டது; குறிப்பாகப் பிரம்ம சூத்திரங்களைப்பற்றி இவ்வாறு கூறலாம். ஒரே சூத்திரத்திற்குப் பன்னிரண்டு வகையான விளக்கவுரைகள் தரப்படுவதை நாம் இன்று காண்கின்றோம். வியாசர் அல்லது பாதராயணர் — ஏனெனில் அவர் அப்பெயரையும் தம் பெயருடன் சேர்த்துக் கொண்டிருந்தார். அவர் எழுதிய பிரம்ம சூத்திரங்கள் வேதாந்தம் பற்றி மட்டுமே கூறுவதால் வேதாந்த சூத்திரங்கள் என்றும் சொல்லப்பட்டன. அவை நான்கு அதிகாரங்களாகவும், ஒவ்வொரு அதிகாரமும் நன்நான்கு உட்பிரிவுகளாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. நம் கவனத்தைக் கவரும் ஒரு குறிப்பு — தொடங்கும் சூத்திரமும் முடியும் சூத்திரமும் தரும் ஒரே பொருளாகும்; அவை முறையே, ''பிரம்மத்தின் உண்மையான இயல்பை ஆராய்வோன் திரும்பி வருதல் இல்லை'' — இதன் கருத்து, ''அவ்வழியே செல்வோன் மரணமில்லாப் பெருவாழ்வை அடைகின்றான்'' — என்பதும், ''அவர்கள் மீண்டும் உலகத்திற்குத் திரும்பி வருதல் இல்லை என்பதும் ஆகும். இச்சூத்திரங்களை எழுதியவர் வியாசர் என்பது பரம்பரையாக வழங்கிவரும் நம்பிக்கையாகும். சங்கராச்சாரியார் தம்முடைய உரையில் கீதை, மகா பாரதம் ஆகியவற்றை எழுதியவர் வியாசர் என்றும், பிரம்ம சூத்திரங்களை எழுதியவர் பாதராயணர் என்றும் குறிப்பிட்டுள்ளார். அவருடைய சீடர்கள் வாசஸ்பதி, ஆனந்தகிரி இன்னும் மற்றவர்களும் இருவரும் ஒருவரே என்று கருதுகின்றனர்; ஆனால் இராமானுசரும் மற்றவர்களும் பிரம்ம சூத்திரங்களை எழுதியவரும் வியாசர் என்றே கொள்ளுகின்றனர். பிரம்ம சூத்திரங்களுக்கு எழுந்த மிகப் பழைய உரை சங்கராச்சாரியாரால் எழுதப்பட்டது;

பிற்காலத்தில் இராமானுசரும், வல்லபரும், நிம்பர்க்கரும், மத்வரும் அவரைப் பின்பற்றி உரைகள் எழுதித் தத்தம் சிந்தனைத் தத்துவங்களை நிலைநாட்டினர். அவர்களில் முதன்மை வாய்ந்தவர்கள் மேற்குறிப்பிட்ட ஐவரே யாவர். அவர்கள் பின்வரும் இரு கருத்துக்களைப் பெரும்பாலும் ஏற்றுக் கொள்கின்றனர். அவையாவன:— 1) இவ்வுலகுக்குக் காரணம் பிரம்மமே. 2) பிரம்மத்தைப் பற்றிய அறிவு முடிவான முக்திப்பேற்றைத் தருகிறது. ஆனால் இப் பிரம்மத்தின் இயல்பு பற்றியும், ஜீவாத்மா வுக்கும், பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பு பற்றியும், முக்திப்பேறடைந்த ஜீவாத்மாவின் நிலைபற்றியும் அவர்கள் கொண்டுள்ள கருத்துக்கள் வேறுபடுகின்றன. சங்கரர் கூறியவாறு ஞானம் அன்று, பக்தியே விடுதலை பெறுவதற்கு முக்கியமான சாதனம் ஆகும் என்ற கருத்தைச் சிலர் உடன் படுகின்றனர். ஆன்மீக அறிவைப் பரப்புவதற்காகப் பிறந்த ஒருவருக்கு வியாசருடைய வாழ்க்கை தனிச்சிறப்பு வாய்ந்த எடுத்துக்காட்டு ஆகும். அவர் எழுதிய நூல்கள் இந்நாளிலும் உலகத்தில் உள்ள அனைவரையும் நம்மையும் ஊக்குவித்து வருகின்றன. அவருடைய கருத்துரைகள் தரும் ஊக்கத்துடன் நாம் அனைவரும் வாழ்வோமாக!

---

## 2—வது அத்தியாயம்

# தென்னிந்திய அருள் ஞானியர்

## 8. அப்பைய தீட்சிதர்

அப்பைய தீட்சிதருடைய பெயர் தென்னிந்தியாவில் பதினாறும் நூற்றாண்டு வரலாற்றுச் செய்திகளில் மிகவும் புகழ்பெற்று விளங்கியது. அவர், நூற்று நான்குக்கும் மேற்பட்ட நூல்களின் புகழ்மிக்க ஆசிரியர். வடமொழிக் குரிய மொழித்துறையிலும், இலக்கியத்துறையிலும் உள்ள அறிவின் கிளைகள் எல்லாவற்றுக்கும் அவர் பிரதிநிதியாக விளங்கினார். அவருக்கு ஏற்பட்ட பெரும் புகழ் முக்கியமாக

அவர் இயற்றிய வேதாந்த நூல்களால் விளைந்ததாகும். வேதாந்தத்தின் பல்வேறுபட்ட சிந்தனைக் கொள்கைகள் யாவும் அவருடைய எழுதுகோல் வாயிலாகத் தனிச் சிறப்பையும் நிகரற்ற அதிகாரத்தையும் பெற்றன. அவருடைய வேதாந்த நூல்களில் சதுர்மத சங்கிரக நூல் அவருடைய சம நோக்குடன் கூடிய ஆய்வுக்காகவே புகழ் பெற்றதாகும்; அதில் அவர் நால்வகைத் தத்துவக் கொள் கைகளை விளக்கியுள்ளார்; அவையாவன: துவைதம், விசிஷ்டாத்வைதம், சிவாத்வைதம், அத்வைதம் என்பன வாம். அவற்றை விளக்கும் அவருடைய நூல்கள் நியாய முக்தாவலி, நியாயமாலிகா, நியாயமணிமாலா, நியாய மஞ்சரி என்பனவாம். (இவை நான்கும் சேர்ந்து 'சதுர்மத சங்கிரகம்' என்று பெயர் பெற்றன). வட மொழிக் கல்வி, இலக்கியம் ஆகியவற்றைச் சேர்ந்த, பெரும்பாலும் எல்லாத் துறைகளிலும் — செய்யுள், அணி இலக்கணம் தத்துவம் — முதலியவற்றில், சம காலத்தவர்களுள் அவருடைய பெயர் ஈடும், எடுப்பும் இல்லாமல் விளங்கிற்று; ஏன்? அவருக்குப் பின் பல்லாண்டுகளாகவும் அந்நிலை தொடர்ந்தது. இந் நாளிலும் அவருடைய 'குவலயானந்தம்' அணி இலக்கண நூல்களில் முதன்மை வாய்ந்ததாக விளங்குகின்றது; மாணவர்களின் கைகளிலும் இடம் பெறுகிறது. அவருடைய சம காலத்தவரும் அவருடைய எதிரியும் ஆகிய பண்டித ஜகன்னாதர் வழக்கம்போல் தம் 'ரசகங்காதரம்' என்ற நூலில் இந்நூலைக் குறித்துச் சில கேள்விக்கணைகளைத் தொடுத் திருந்தும் இந்நூலின் செல்வாக்கு பாதிக்கப்படவில்லை. சிவபெருமானைப் பற்றிய அவருடைய புகழ்ப் பாடல்கள் சிவ பக்தர்களிடையே மிகவும் அன்புடன் போற்றப்படுகின்றன; வேதாந்தம் பற்றிப் 'பரிமளம்' என்ற பெயருடன், ஆழ்ந்த அறிவைப் புலப்படுத்தும் உரை விளக்க நூலை இயற்றி யுள்ளார்; அந்நூல் அவருடைய தத்துவப் பேரறிவுக்கு ஒரு நிலையான சான்றாகத் திகழ்கின்றது.

அவர் திண்மை மிக்க அறிஞர்; இன்றும் அவருக்கு வழங்கப்படும் நன்மதிப்பு மிகப் பெரியதாகும். அவர்

வாழ்ந்த காலத்திலும் அவர் அனைவராலும் மதிக்கப்பட்டார். ஒருமுறை அவர் தம் மனைவியின் பிறந்த ஊராகிய ஒரு சிற்றூருக்குச் சென்றார். ஊர் மக்கள் அனைவரும் அவரைத் தங்களில் ஒருவராகக் கொண்டாடிப் பெருமைப்பட்டு அவருக்கு மிகச் சிறந்த வரவேற்பை வழங்கினர். அவர்கள் மிகுந்த கிளர்ச்சியும், மகிழ்ச்சியும் அடைந்தனர். ''பெரும் தீட்சிதர் நம்மிடையே வந்துள்ளார்' என்ற மகிழ்ச்சி ஆரவார ஓசை எங்கும் எழுந்தது. அவர் வந்து சேர்வதற்கு முன், பல நாட்களும் இதைத்தவிர வேறு பேச்சு அவர் களிடையே நிகழவில்லை. அந்த நாள் வந்தது. சிறப்பு விருந்தினராகிய தீட்சிதரை வரவேற்பதற்காக மக்கள் பெரும் பெரும் திரளாகக் கூடினர்; அரியேறு போன்ற அவரை ஒரு முறை கண்ணாரக் காண்பதற்காக நெருக்கி மோதி அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். வயதான ஒரு மூதாட்டி ஓரளவு ஆவலுடன் கையில் கழி ஊன்றியவாறு இக்காட்சியைக் காண வீட்டை விட்டு வெளியே வந்தாள்; தன் வயதுக்காக வழங்கப்படும் சுதந்திர உரிமையுடன் கூட்டத்தை விலக்கி எளிதாக வழியை உண்டாக்கிக் கொண்டு அவரை அணுகி வந்து சில கணங்கள் உற்று நோக்கினாள். அந்த முகத்தை உறுதியாக நினைவு கூர்ந்த வளாய், ''இந்த முகத்தை எங்கோயோ பார்த்திருக் கின்றேனே? பொறு, ஓ! ஆமாம்! நீ ஆச்சாவின் கணவன் அல்லவா?'' என்று கேட்டாள். அப்பேரறிஞர் அவளுடைய ஊகத்தைத் தம் புன்னகையால் உறுதியாக்கினார். அம் மூதாட்டி ஏமாற்றமடைந்தாள்; அவளுடைய முக மலர்ச்சியும், ஆர்வமும் சுருங்கிவிட்டன; அவள் தன் வீடு நோக்கித் திரும்பியவளாய், ''சும்மா ஆச்சாவின் கணவனுக் காக ஏன் இவ்வளவு ஆர்ப்பாட்டம்?'' என்று குறிப்பிட் டாள். அப்பைய்யர் இந்த நிகழ்ச்சியைப் பாதிச் செய்யுளில் வடித்து உலகியலறிவைச் சுருக்கிப் பின்வருமாறு தந்துள்ளார், ''அஸ்மின் கிராமே ஆச்சாபிரசித்தா — இவ்வூரில் ஆச்சாவின் பெயரே முதன்மையும், முக்கியமும் வாய்ந்தது''.

அவர் சிவபெருமானின் அவதாரமாகக் கருதப்படுகின்றார். தென்னிந்தியாவில் உள்ள திருப்பதிக் கோயிலுக்கு அவர் சென்றபோது வைஷ்ணவர்கள் அவரை உள்ளே அனுமதிக்க மறுத்துவிட்டார்கள். அடுத்த நாள் காலையில் அவர்கள் கோயிலில் இருந்த விஷ்ணு சிலை, சிவன் சிலையாக மாறியிருந்ததைக் கண்டனர். அவர்களின் தலைவர் வியப்பும் திகைப்பும் அடைந்து அப்பைய தீட்சிதரிடம் மன்னிப்பை வேண்டிச் சிலையை மீண்டும் விஷ்ணு சிலையாக மாற்றும்படி முறையிட்டு வேண்டினார்.

அவர் பதினாறும் நூற்றாண்டின் இடைக் காலத்தில் வாழ்ந்தார். செய்யுள் துறையில் அவர் பண்டிதராஜ ஜகன்னாதருக்கும் பெரிய எதிரியாக இருந்தார். சங்கர வேதாந்தம் பற்றிய தத்துவக் கொள்கைகளில் அப்பைய்யர் தமக்கெனத் தனிக் கருத்துக்களைக் கொண்டிருக்கவில்லை; ஆனால் ஜெய்ப்பூரிலும் மற்ற இடங்களிலும் வல்லபரின் சீடர்களிடம் தீவிரமான வாக்குவாதங்களைச் செய்தார். சங்கரரின் சீடர்களிடையே நிலவிய தத்துவக் கொள்கை, வேறுபாடுகளை விளக்கும் வகையில் அவற்றின் சாரமாக அவர் இயற்றிய 'சித்தாந்த லேசம்' மிகவும் புகழ் வாய்ந்ததாகும். இந்தியா தோற்றுவித்த பெரும் ஆன்மீகச் சுடர்களில் அவர் ஒருவர் என்பதில் சிறிதும் ஐயமில்லை. அவருடைய வாழ்க்கை வரலாறு பற்றிய விளக்கமான நிகழ்ச்சி விவரங்கள் நமக்குக் கிடைக்கவில்லையென்றாலும், அவருடைய நூல்கள் அவருடைய பெருமையை விளக்கப் போதுமான சான்றுகளாக உள்ளன.

## 9. சதாசிவ பிரம்மம்

தென்னிந்தியாவில் திருச்சி மாவட்டத்தில் கரூருக்கு அருகில் உள்ள ஓர் ஊரில் நூற்றெழுபது ஆண்டுகட்கும் இன்னும் முன்னதாக பதினெட்டாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த சதாசிவேந்திர சரஸ்வதி மிகவும் புகழ் பெற்ற ஒரு துறவியாவார். அவர் பிறவியிலேயே

சித்தர். பொது மக்களால் அவர் சதாசிவப்பிரம்மம் என்று அழைக்கப்பட்டார். பிறப்பினால் அவர் ஒரு தெலுங்குப் பிராமணர். அவர் மதுரையில் சோமநாத யோகிக்கும் அவருடைய மனைவி சாந்தாவுக்கும் பிறந்தார். அவருடைய பெயர் சிவராமகிருஷ்ணன்.

அவர் அறிவாற்றல் மிகுந்த மாணவர். அவர் வட மொழியில் வல்லுநராஞர். அவர் பிரஸ்தானத் திரியங் களிலும் அறுவகைத் தத்துவக் கொள்கைகளிலும் ஆழ்ந்த அறிவு பெற்றார். திருவிசைநல்லூரில் உள்ள இராமபத்ர சாஸ்திரியிடம் அவர் வேதாந்தம் கற்றுக்கொண்டார்.

சதாசிவர் மாணவராக இருக்கையிலேயே அவருக்குத் திருமணம் நடைபெற்றுவிட்டது. சதாசிவருடைய மனைவி பூப்புப் பருவத்தை அடைந்திருக்கிறாள் என்று ஒரு நாள் அவருடைய அன்னையாருக்குச் செய்தி கிடைத்தது. எனவே அன்று அந்த அம்மையார் சில இனிய உணவு வகைகளைத் தனியே சமைத்து வைத்தார். ஆசிரியருடைய இல்லத்தி லிருந்து சதாசிவர் திரும்பி வந்தார். தம்முடைய உணவுக் காக அவர் இரண்டு மணி நேரம் காத்திருக்க வேண்டிய தாயிற்று. அவர் தமக்குள், ''இல்லறத்தான் ஒருவனுடைய வாழ்க்கை நிச்சயம் மிகவும் பரிதாபகரமானது! நான் என்னுடைய மணவாழ்க்கையை இன்னும் தொடங்கவில்லை; எனினும் இன்று நான் இரண்டுமணி நேரம் பட்டினி கிடக்க வேண்டியதாயிற்று. என் மணவாழ்க்கையில் நிகழப்போகும் துயரங்களின் தொடக்கம் இது. மண வாழ்க்கையில் இனி நான் நுகர வேண்டியுள்ள வருங்காலத் துன்பங்களைப் பற்றிய ஒரு பொதுவான கருத்தை இதனால் நான் அறிகின் றேன். போதும், போதும்.'' என்று நினைத்தார். கிரகஸ்த ஆசிரமத்தில் நுழைவதில்லை என்று அவர் முடிவு செய்து கொண்டு ஒரு குருவைத் (ஆன்மீக ஆசிரியரை) தேடுபவராய் வீட்டை விட்டுப் புறப்பட்டார்.

பரம சிவேந்திர சரஸ்வதி, அவருடைய குரு. அவர் வழிகாட்ட அவரிடம் அவர் யோகம் பயின்றார். அவர்

மக்களிடம் கடுமையான வாக்கு வ ா த ங் க ள் செய்தார், அவர்கள் அவருடைய குருவிடம் முறையிட்டனர். பரம சிவேந்திர சரஸ்வதி, ''சதாசிவா! நீ எப்போது உன் வாயை மூடுவாய்?'' என்று வினவினுர். உடனே சதாசிவர் வாழ்க்கை முழுவதும் பின்பற்றும் மௌன விரதத்தை மேற் கொண்டு ஊருராகத் திரியும் ஆண்டியாக அல்லது பரம ஹம்சராகச் சில காலம் அலேந்து திரிந்து கொண்டிருந்தார்.

பின்னர் அவர் கோயமுத்தூர் மாவட்டத்தில் அமரா வதி, காவேரி ஆகிய ஆறுகளின் அழகிய கரைகளில் வாழ்ந்தார். அவர் தம் நேரத்தின் பெரும் பகுதியைத் தியானத்தில் கழித்தார்.

ஒரு முறை அவர் காவிரியின் மணற் கரையில் தியானம் செய்து கொண்டிருந்தபோது ச மா தி யி ல் நுழைந்தார். திடீரென்று ஆற்றில் வெள்ளம் பெருகி வந்து அவரை அப்பால் அடித்துக்கொண்டு போய் மணலினுள் புதைத்து விட்டது. மழைக்காலம் முடிந்த பிறகு ஒரு தொழிலாளி கரையில் ஒரு குழியை வெட்டினுன் அவனுடைய மண் வெட்டியில் இரத்தம் தோய்ந்திருந்தது. அவன் ஆச்சரியத்தால் செயலற்றுப் போனுன். அவன் தன் நண்பர்கள் சிலரின் உதவியுடன் அந்த இடத்தைச் சுற்றியும் ஆ ழ மா க க் குழியைத் தோண்டினுன். மணலின் ஆழத்தில் சதாசிவப் பிரம்மம் புதையுண்டிருந்ததை அவன் கண்டான். அவன் யோகியைப் பலமுறை உலுக்கிவிட்டு அவர்தம் உணர்வைத் திரும்பவும் பெறச்செய்தான். சதாசிவபிரம்மம் தம்மைச் சுற்றியும், அப்போதுதான் ஆ ழ் ந் த உறக்கத்திலிருந்து விழித்தவரைப் போலப் பார்த்துவிட்டு, எதுவும் நடவாதது போல் அமைதியாக நடந்து சென்ருர்.

சதாசிவ் பிரம்மம் தம் உடல்பற்றிய உணர்வில்லாமல் இருந்தார். அவர் எங்கும் நிர்வாண நிலேயில் திரிந்தார். ஒருமுறை அவர் நிர்வாணமாக ஒரு நவாபின் கூடாரத் திற்குள் நுழைந்தார். அங்கே மகளிர் கூட்டம் இருந்தது. நவாபு மிகவும் சினமடைந்து சதாசிவரின் ஒரு கரத்தை

தன் வாளால் துண்டித்தான். நவாபின் இந்தக் கொடிய செயலால் அம் முனிவர் சிறிதும் பாதிப்பு அடையவில்லே. தம்முடைய கை துண்டிக்கப்பட்டதைக்கூட அவர் கவனிக்க வில்லே. அவர் வழக்கம்போல சுற்றியலேவதைத் தொடர்ந் தார். நவாப்பு ஆச்சரியத்தால் செயலற்று நின்ருன். நிர் வாணமாக உள்ள அம்மனிதர் ஒரு பெருமை மிகுந்த முனிவராக இருக்கவேண்டுமென்று அறிந்தான். சதாசிவர் சென்ற இடங்களுக்கெல்லாம் அவன் பின் தொடர்ந்து சென்ருன். பலநாட்கள் கழிந்த பிறகு அவர் தம்மை ஒரு முகம்மதியன் பின்தொடர்ந்து வருவதைக் கவனித்தார். சதாசிவர் அம்முகம்மதியனேப் பார்த்து, ''நீர் ஏன் என்னேப் பின் தொடர்ந்து வருகின்றீர்?'' என்று கேட்டார். நவாபு ''வணக்கத்திற்குரிய முனிவரே! நான் மிகக்கொடிய குற்றத்தைச் செய்துவிட்டேன், அருள் கூர்ந்து என்னே மன்னியுங்கள்'' என்று விடை கூறிஞன். சதாசிவர், ''நன்று, ஐயா! நீர் எனக்கு எந்த ஒரு தீங்கும் செய்ய வில்லே, நீர் என்ன குற்றம் செய்தீர் என்று நான் அறிந்து கொள்ளலாமா?'' என்று விஞவிஞர். நவாபு, ''வணக்கத்திற்குரிய ஞானியே! தாங்கள் நிர்வாணமாக என் கூடாரத்திற்குள் நுழைந்தீர்கள். அங்கே என் மனேவியும் என் பெண்களும் கூடியிருந்தனர். நான் மிகுந்த சினமடைந்து தங்கள் கைகளில் ஒரு கையைத் துண்டித்து விட்டேன். தாங்கள் பெருமை மிகுந்த ஒரு முனிவர் என்பது எனக்குத் தெரியவில்லே'' என்று கூறிஞன். அப்போது தான் சதாசிவர் தம் கைகளில் ஒன்று துண்டிக்கப்பட்டிருப் பதை உணர்ந்தார். கை துண்டிக்கப்பட்டபோது அவர் தம் உடல் உணர்விற்கு அப்பாற்பட்ட நிலேயில் இருந்தார் என்பதை இது தெளிவாகக் காட்டுகின்றது. அவர் உடனே தம் முழுக்கையையும் திரும்பப் பெற்ருர். எத்தகைய பெரிய அற்புதம்! நவாபு வியப்பால் செயலற்றுப்போய்த் தன்னே நல்லாசி கூறி ஆசீர்வதிக்குமாறு அவரை வேண்டிஞன். சதாசிவர் நவாபை ஆசீர்வதித்துவிட்டு வழக்கம்போல் அலேந்து திரிவதைத் தொடர்ந்தார். அருள் ஞானியர் தம்மைச் சித்திரவதை செய்வோர் மீதுகூடச் சிறிதும் வெறுப்

படைவதில்லே. அவர்கள் தங்கள் உயிரை வாங்குவோரைக் கூட ஆசீர்வதிக்கின்ருர்கள்.

சதாசிவருடன் குழந்தைகள் வழக்கமாக விளேயாடுவார்கள். ஒரு நாள் அவர்கள் அவரிடம், ''சுவாமி! எங்களே மதுரைக்கு அழைத்துச் செல்லுங்கள், இன்றிரவு கோயிலில் நடைபெறும் பெரிய பண்டிகையை நாங்கள் காண விரும்புகின்ருேம்'' என்று கூறினர். அவர் அக்குழந்தைகளேத் தம் தலேமீதும, முதுகின்மீதும், தோள்கள்மீதும் ஏறிக்கொள்ளுமாறு சைகை காட்டினுர். உடனே அவர்கள் மதுரையில் கோயிலின் முன்னுல் தாங்கள் இருப்பதைக் கண்டார்கள். அவர்கள் பண்டிகையைப்பார்த்து மகிழ்ந்தார்கள். அடுத்த நாள் விடிவதற்குள் அவர், அவர்களேத் தத்தம் வீடுகளுக்கு அழைத்துவந்து விட்டார்.

ஒரு முறை மக்கள் சிலர் தங்கள் கைகளில் கழிகளேஏந்தி அவரை அடிக்க முற்பட்டார்கள், அவர்கள் தங்கள் கைகளே அசைக்க முடியாமல் போயிற்று. சிதம்பரத்தில் அவர் கொதி நிலேயில் இருந்த வெல்லப்பாகைப் பருகினுர். திருச்செந்தூரில் நாகம் தீண்டி மடிந்த ஒரு சிறுமியை உயிர்த்தெழச் செய்தார்.

மக்கள் சதாசிவரை ஒரே நேரத்தில் பல்வேறு இடங்களில் காண்பது வழக்கமாக இருந்தது.

அவர் வடமொழியில் பல நூல்களே எழுதியுள்ளார். இவற்றுள் பிரம்ம சூத்திர விருத்தி மிகவும் முக்கியமானதாகும். பன்னிரண்டு உபநிஷதங்கட்குத் தீபிகை உரைகளேயும் அவர் எழுதியுள்ளார். அத்துவித ரசமஞ்சரி, ஆத்ம வித்தியா விலாசம். சித்தாந்த கல்பவல்லி, சூத சம்ஹித சாரம், யோகசூத்திர விருத்தி முதலியன அவர் இயற்றிய சிறுநூல்கள், ஆத்ம வித்தியா விலாசம் என்பது அறுபத்திரண்டு பாடல்களேக் கொண்ட ஒரு சிறிய செய்யுள் நூல். தன்னே உணர்ந்துகொண்ட யோகியைப் பற்றிய ஒரு வருணனே இந்த நூலில் காணப்படுகின்றது. இந்நூல்

தன்னைப் பயில்வோரின் உள்ளத்தைக் கவர்வதாகவும், ஆர்வத்தால் மெய்மறக்கச் செய்வதாகவும் உள்ளது. அவருடைய எழுத்துக்கள் படிப்பவரைத் தூண்டிவிட்டுத் தெய்வீகத்தின் சிறப்பும் பெருமையும் வாய்ந்த உயர்நிலைகட்கு அவர்களுடைய உள்ளங்களை உயர்ந்தோங்கச் செய்கின்றன.

அவர் கரூருக்கு அருகில் உள்ள சிற்றூராகிய நெரூரில் வாழும் அந்தணர்களிடம் தாம் குறிப்பிட்ட நாளில் சமாதி அடையப்போவதாகவும் ஓர் அந்தணர் காசியிலிருந்து பாணலிங்கத்தைக் கொண்டு வருவார் என்றும் அதைத் தம் சமாதியருகில் கட்டப்படும் கோயிலுக்குள் பிரதிஷ்டை செய்யவேண்டுமென்றும் தெரிவித்தார். அவர்கள் அவ்வாறே அவருக்காக ஒரு குழியைத் தோண்டிக் குறிப்பிட்ட நாளை எதிர்நோக்கிக் காத்திருந்தார்கள். அவர்கள் பெரும் வியப்படையுமாறு ஓர் அந்தணர் காசியிலிருந்து பாணலிங்கத்துடன் வந்து சேர்ந்தார். சதாசிவப் பிரம்மம் குழிக்குள் இறங்கி நிர்விகல்ப சமாதியடைந்து, ஒளிகட்கெல்லாம் ஒளியாக விளங்கும் பரப்பிரம்மத்துடன் ஐக்கியமாகிவிட்டார். அந்தணர்கள் சமாதிக்கு வேண்டிய பூஜைகள் அல்லது வழிபாடுகளைச் செய்து முடித்துச் சமாதிக் கருகில் பாணலிங்கத்துடன் கூடிய ஒரு கோயிலைக் கட்டினர். இப்போதும் ஆயிரக்கணக்கான மக்கள் ஒவ்வோராண்டும் சமாதிக்குச் சென்று தரிசனம் செய்து, மிகப் பெரும் அளவில் கொண்டாடப்படும் ஆண்டு விழாவில் கலந்து கொள்ளுகின்றனர். அவர் ஒரே சமயத்தில் நெரூர், காசி, ஓங்கார், காஞ்சீபுரம் ஆகிய இடங்களில் சமாதியடைந்தார்.

சதாசிவப்பிரம்மம் மிகப்பெரும் பெருமைவாய்ந்த சித்தராகவும், நிறைநிலைபெற்ற ஞானியாகவும். முழுவளர்ச்சிபெற்ற யோகியாகவும் இருந்தார். இவ்வாறு எல்லாப் பெருமைகளும்; ஒன்றுகச் சேர்ந்தமைதல் மிகவும் அரிய நிலையாகும்; ஆன்மீகக் கிரீடத்தில் மிகவும் அரிதாக இடம் பெறும் இரத்தினமாக அவர் இருந்தார். அவர் ஓர்

அவதூதர். அவர் அதிவர்ணாஸ்ரமியாக இருந்தார்; சாதிசமய வேறுபாடுகளை அவர் சிறிதும் பாராட்டவில்லை. எவருடைய கையிலிருந்தும் உணவை ஏற்றுக்கொள்வது அவருடைய வழக்கம். அவர் சமநோக்குள்ளவர். அவர் எங்கும் ஆத்மனாகிய இறைவனையே கண்டார். தாம் விரும்பும் எல்லா இடங்கட்கும் அவர் சுற்றித்திரிந்தார். அவர் முற்றிலும் அச்சமற்றவர்; ஆசையற்றவர்; உலகியல் செல்வங்களைப்பற்றி அவர் ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. அவர் அரசர்க்கெல்லாம் அரசர்; பேரரசர்கட்கெல்லாம் பேரரசர்; யோகிகட்கெல்லாம் யோகி. அவர் ஆன்மீக முன்னேற்றம் பெற விரும்பும் சாதகர்களுக்கு ஞானம் என்னும் ஒளியைத் தந்து அழைத்துச்செல்லும் வழிகாட்டியாகவும், அற்புதமான கலங்கரை விளக்கமாகவும் திகழ்கின்றார்.

## 10. பட்டினத்துப் பிள்ளையார்

இக்காலத்தில் உள்ள தஞ்சை மாவட்டமும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளும் பழங்காலத்தில் சோழ நாடாக இருந்தன. அச்சோழ நாட்டில் காவிரிப் பூம்பட்டினத்தில் குபேரனே பட்டினத்துப் பிள்ளையாராக அவதாரம் செய்தார் என்று நம்பப்படுகின்றது. அவர் மிகுந்த செல்வந்தராக இருந்தார்; அவருக்கு மற்றொரு பெயர் திருவெண்காடர். அவர் சிவகலை என்னும் பெண்மணியை மணந்து கொண்டார். அவருக்கு மகப்பேறு வாய்க்கவில்லை. இதற்கிடையில், சருமர், சுசீலை என்னும் பிராமணத் தம்பதிகள், சிவபெருமானிடம் மிகுந்த பக்தியுள்ளவர்கள், தங்கள் வறுமையைக் குறித்து மிகவும் கவலைப்பட்டார்கள். சிவபெருமான் அவர்களுடைய கனவில் தோன்றி, அடுத்த நாள் கோயிலுக்குச் செல்லுமாறும் அங்கு தாமே ஒரு குழந்தை வடிவில் இருப்பதை அவர்கள் காண்பார்கள் என்றும் அறிவித்தார். மேலும் அவர்கள் அக்குழந்தையைத் திருவெண்காடரிடம் கொண்டுபோய்க் கொடுத்தால் அவர் அளவற்ற செல்வத்தைத் தருவார் என்றும் இறைவன்

தெரிவித்தார். அவ்வாறே, அடுத்த நாள், சருமரும் அவருடைய மனைவியும் குழந்தையைத் திருவெண்காடரிடம் தந்து அதற்கீடாகப் பெருஞ் செல்வத்தைப் பெற்றனர். குழந்தைக்கு மருதவாணன் என்று பெயர் வைக்கப்பட்டது. பட்டினத்தாரும் அவருடைய மனைவியும் குழந்தையைத் தங்கள் சொந்த மகனுகவே பாவித்து முறையாக வளர்த்து வந்தனர்.

பதினாறு வயது நிறைவுற்றபோது, ஒரு நாள் மருதவாணன் கடல் கடந்து வாணிகம் செய்துவரத் திருவெண்காடரிடம் அனுமதி கேட்டான். தம் மகனை அனுப்புவதற்கு அவருக்கு விருப்பம் இருக்கவில்லை என்ருலும் கனத்த நெஞ்சுடன் அனுமதி தந்தார். சில நாள் கழித்து மருதவாணன் தன் செல்வங்களை எல்லாம் சில வறட்டிகளாகவும், மண்ணுங்கட்டிகளாகவும் பண்டமாற்றம் செய்து கொண்டு வீட்டிற்குத் திரும்பினன். வீட்டை அணுகியவுடனே பணியாள் ஒருவனிடம் ஒரு பெட்டியைத் தந்து அதைத் தன் தந்தையிடம் கொடுத்துவிடும்படிச் சொல்லி மறைந்து விட்டான். வறட்டிகளைக் கொண்டு வந்த தன் மகனுடைய முட்டாள்தனத்தைப் பார்த்து தந்தை மிகுந்த ஏமாற்றத்தையடைந்தார். வறட்டிகளில் ஒரு துண்டை எடுத்து உடைத்துப் பார்த்தபோது அதில் விலை மதிக்க முடியாத வைரம் இருந்ததைப் பார்த்தார்; மண்ணுங்கட்டியும் தங்கக்கட்டியாக மாறிற்று. பெட்டியைத் திறந்து பார்த்தபோது அதில் ஒரு சிறிய ஓலையும் உடைந்த சில ஊசிகளும் தவிர வேருென்றும் இல்லாததைத் திருவெண்காடர் கண்டார். ஓலைச் சுவடியில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது. ''காதற்ற ஊசியும் வாராது காண் நும் கடை வழிக்கே''. உடனே அவர்பால் ஞானம் உதித்தது. அக்குழந்தை சிவபெருமானைத் தவிர வேறு யாரும் இல்லை என்பதை அவர் இதன் பிறகே தெரிந்து கொண்டார். பின்னர் அவர் தம் தலைமைக் கணக்கர் சேந்தனுரை அழைத்துத் தம் செல்வங்கள் எல்லாவற்றையும் வீசி எறிந்து விடுமாறு கட்டளையிட்டார். அவர் துறவு மேற்கொண்டு,

தாம் வாழ்ந்த ஊரிலேயே பிச்சையுணவை இரந்துண்டு வாழ்ந்து வந்தார். இந்நிலை அவருடைய உறவினர்களின் உள்ளங்களைப் பெரிதும் வருத்தியது. அவருடைய தமக்கையார், தம்முடைய தம்பி, பிச்சைக்காரனைப்போல் வாழ்வதைக்காட்டிலும் செத்துப்போவது நல்லதென்று நினைக்கும் அளவுக்கு மனம் வருந்தினர். தம்பிக்கு நஞ்சூட்ட அவர் விழைந்தார். இனிய அப்பத்தில் நஞ்சு கலந்து அவர் தம்பிக்கு உண்ணுமாறு கொடுத்தார். பட்டினத்துப் பிள்ளையார், ''தன்வினை தன்னைச் சுடும்; ஓட்டை அப்பம் வீட்டைச் சுடும்'' என்று கூறித் தம் தமக்கையாரின் வீட்டுக் கூரைமேல் அப்பத்தை எறிந்தார். அந்தோ! வீடு முழுதும் தீப்பற்றி எறிந்து சாம்பலாயிற்று.

சிலகாலங் கழித்து அவருடைய அன்னையார் இறந்தார். வாழைத் தண்டுகளை அடுக்கிச் சிதையாக்கி அவர் அன்னையாரை எரித்தார். அவருடைய ஞான சக்தியின் ஆற்றலால் வாழைத் தண்டுகள் தீப்பற்றி எரிந்தன. அவர் திருவிடை மருதூருக்குச் சென்று, பிறகு திருவாரூருக்குச் சென்றார். இறந்த ஒரு மனிதனை உயிர்ப்பித்தார். அவர் கொங்கு நாட்டில் உள்ள சிவாலயங்கள் யாவற்றையும் தரிசித்தார். பின்னர் துளுவ நாட்டிற்கு வந்து பத்திரகிரி மகாராஜாவுக்கு ஞானோபதேசம் (மெய்யுணர்தலின் இரகசியங்கள் பற்றிய தீக்ஷை) தந்தார். அவர் திருவேற்காட்டிற்கு வந்து தம் தலைமைக் கணக்கரைச் சிறையிலிருந்து விடுவித்தார். புகழ் வாய்ந்த சிவாலயங்கள் உள்ள சிதம்பரம், காளஹஸ்தி ஆகிய தலங்களுக்கு யாத்திரை செய்தார். அங்கு அவர் சிவபெருமான்மீது பக்தியுணர்ச்சி மிக்க துதிப் பாடல்கள் பல பாடினார்.

பட்டினத்துப் பிள்ளையார், பத்திரகிரி மகாராஜாவுக்குச் சொந்தமான நகருக்குச் சென்று அங்கிருந்த ஒரு விநாயகர் ஆலயத்தில் ஞான நிஷ்டையில் (தியானம்) அமர்ந்தார். அன்றிரவு திருடர் சிலர், மகாராஜாவின் அரண்மனையில் கொள்ளையடித்துக் கொண்டு திரும்பி வரும் வழியில்

விநாயகப் பெருமானின் கழுத்தில் விழுமாறு வைரங்கள் பதித்த ஒரு அட்டிகையைக் காணிக்கையாக வீசினர். பட்டினத்துப் பிள்ளையார் விநாயகப் பெருமானுடைய சிலைக்கு மிகவும் அருகில் அமர்ந்திருந்தமையால் அட்டிகை அவருடைய கழுத்தில் வட்டமாக விழுந்தது. காலையில் திருடர்களைத் தேடிக் கொண்டு வந்த காவலர், இத் துறவியின் கழுத்தில் இருந்த அணிகலத்தைக் கண்டார்கள். அவரைத் திருடர் என்று கருதிய அவர்கள் அவரை மகாராஜாவின் முன்னே கொண்டு வந்து நிறுத்தினார்கள். மகாராஜா அவரைக் கழுவில் ஏற்றிவிடுமாறு ஆணை யிட்டார். சுவாமிகள் கழுமரத்தருகே கொண்டுவரப் பட்டார். அவர் எல்லா நிகழ்ச்சிகளின்போதும் புன்னகை பூத்தவராகக் காணப்பட்டார். அவர் சிவபெருமான்மீது ஒரு பாடலைப் பாடினார். அப்பாடல் பின் வருமாறு:

> ''என் செயலாவது யாதொன்றும் இல்லை; இனித் தெய்வமே
> உன் செயலே என்று உணரப் பெற்றேன் இந்த ஊன்எடுத்த பின்
> செய்த தீவினை யாதொன்றும் இல்லை; பிறப்பதற்கு
> முன் செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே!''

என்பதாம். உடனே கழுமரம் தீப்பற்றி எரிந்தது. ஆச்சரியம் மிகுந்த இந்தச் செய்தியைப் பணியாட்கள் மகாராஜாவுக்குத் தெரிவித்தனர். அச்சத்தாலும் வியப் பாலும் தாக்குண்ட மகாராஜா செயலற்றுப் போனார். பின்னர் வெறுங்காலுடனே ஓடிச்சென்று சுவாமிகளின் திருவடிகளில் அவர் வீழ்ந்து பணிந்தார். மகாராஜா ஞானம் பெறத் தகுதியுள்ள சாதகராக இருத்தலைக்கண்ட சுவாமிகள், அவரைத் திருவிடை மருதூருக்குச் செல்லுமாறு கட்டளையிட்டார்.

திருவிடை மருதூர்க் கோயிலின் கிழக்கு வாசலில் தியானத்தில் அமர்வது பட்டினத்துப் பிள்ளையாரின் வழக்கம்

பத்திரகிரி மகாராஜா பிச்சை பெற்றுக் குருவுக்குப் பணி விடைகள் செய்தபின் கோயிலின் மேற்கு வாசலில் அமர்வது வழக்கம். ஒருநாள் பசிமிகுந்த ஒரு சிறிய பெண் நாய் பத்திரகிரியாரிடம் வந்து தன் வாலை ஆட்டியது. அதன் பால் இரக்கங்கொண்ட அவர் தம்பால் எஞ்சியிருந்த பிச்சை யுணவின் பகுதியை அதற்கு வழங்கினர். இவ்வாறு அது சில நாட்கள் வரையில் அவரிடம் தங்கியிருந்தது. இதை அறிந்த சிவபெருமான் ஒரு யாசகர் வடிவில் பட்டினத்துப் பிள்ளையாரிடம் சென்று பசியால் மிகவும் வருந்தியவர்போல் பாசாங்கு செய்து பிச்சை வேண்டுமென்று யாசித்தார். பட்டினத்துப் பிள்ளையார், ''நான் கோவணம் மட்டுமே உள்ள ஒரு துறவி. மேற்கு வாசலில் ஒரு சம்சாரி (குடும்பம் உள்ளவர்) இருக்கின்றார். அவரிடம் போ, உனக்குப்பிச்சை கிடைக்கும்'' என்று தெரிவித்தார். சிவபெருமான் அவரிடம் சென்று பட்டினத்துப் பிள்ளையார் கூறியதை அறிவித்தார். பத்திரகிரியார் மிகவும் மன வருத்தமடைந்து, ''இந்த உண்கலமும் இந்த நாயுமே என்னைக் குடும்பம் உள்ளவனாக ஆக்கிவிட்டன'' என்று கூறி, அளவற்ற வெறுப்புடன் உண்கலத்தை வீசி எறிந்தார். அது நாயின் தலையின்மீது பட்டு அந்த இடத்திலேயே இறந்துவிட்டது. சிவபெருமான் மறைந்துவிட்டார்

அந்த நாய் பின்னர், காசி அரசரின் மகளாகப் பிறந்தது. அவள் திருமண வயதை அடைந்தபோது அவளுடைய திருமணத்திற்கான ஏற்பாட்டைச் செய்யுமாறு அரசர் புரோகிதர்களைக் கேட்டுக் கொண்டார், அவள் ''திருமணம் செய்து கொள்ளும் விதி எனக்கு இல்லை, என்னுடைய குரு திருவிடை மருதூர்ச் சிவாலயத்தின் மேற்கு வாசலில் தியானம் செய்து கொண்டிருக்கின்றார், அவரிடம் என்னை அனுப்புங்கள்'' என்று வேண்டினள். அரசர் அவ்வாறே அவளைப் பத்திரகிரியாரிடம் அழைத்து வந்தார். பத்திரகிரி யார் யோக சமாதியிலிருந்து உலக நினைவுக்குத் திரும்பிய போது, அந்த நாய்தான் தற்போது பெண்ணுருவில் வந்திருக்கின்றதென்று தம் யோகக் கண்ணால் பார்த்தறிந்

தார். தம் குருவாகிய பட்டினத்துப்பிள்ளையாரிடம் அவர் அவளைக் கையால்பற்றி அழைத்து வந்தார். ''என் பிச்சை யுணவின் மிச்சத்தை உண்ட நாய் பெண்ணுகப் பிறக்க முடியுமா?'' என்று பத்திரகிரியார் வினவினுர். பட்டினத்துப் பிள்ளையார், ''யாவும் அவனுடைய திருவுள்ளம்'' என்று விடைகூறி இறைவனை வணங்கினுர். அப்போது வெப்பம் மிகுந்த பேரொளி ஒன்று தோன்றியது. அவ்வொளியில் பத்திரகிரியாரும் பெண்ணும் மறைந்தனர், ஒளியும் மறைந்தது.

கடைசியில் அவர் சென்னையிலிருந்து பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ள திருவெற்றியூருக்கு வந்து சேர்ந்தார். அங்கு அவர் இடையர் குலச் சிறுவர்களுடன், மனித வாழ் வில் உள்ள அகந்தை, வீண்பெருமை ஆகியவற்றை விளக்கும் பாடலைப் பாடி விளையாடினுர்; அப்பாடல் பின்வருமாறு:

''கீச்சுக் கீச்சு அம்பலம்
கீயா கீயா அம்பலம்

மச்சு மச்சு அம்பலம்
மாயா மாயா அம்பலம்

என்பதாம். குழந்தை பிறந்தவுடனே 'கீச்சு, கீச்சு' என்று சத்தமிட்டு அழுகின்றது. குழந்தை மனிதனுக வளர்ந்து பட்டமும் பதவியும் பெற்றவுடனே தற்பெருமையோடும் அகந்தையோடும் அங்கும்இங்கும் ஓடுகின்றுன். இதைக் 'கீயா, கீயா என்பது புலப்படுத்துகின்றது, பிறகு அவன் நரைதோன்றி மூப்படைந்து தள்ளாடியவாறு நடக்கின்றுன். இதை 'மச்சு, மச்சு' என்பது விளக்குகின்றது. பின்னர் அவன் மடிகின்றுன். இதை 'மாயா, மாயா' என்பது குறிக்கின்றது. அவன் நிறைபொருள் அல்லது பரப்பிரம்மம் ஆகிய சிதாகாசம் என்னும் 'அந்த' அம்பலத்தை அறிவ தில்லை.

பின்னர், பட்டினத்துப்பிள்ளையார் அங்கு சிவலிங்க வடிவத்தை அடைந்தார். மக்கள் அடிக்கடி யாத்திரை செய்யும் கோயில் ஒன்று இக்காலத்தில் அங்கு உள்ளது. தென் இந்தியா தோற்றுவித்த மிகவும் பெருமையும் சிறப்பும் வாய்ந்த அருள் ஞானியருள் பட்டினத்துப் பிள்ளையார் ஒருவர் என்று தென்னாட்டில் அவர் போற்றப்படுகின்றார், அவருடைய பாடல்கள் மிகுந்த உள்ளக்கிளர்ச்சியை உண்டாக்குகின்றன. அவை படிப்பவர் மனத்தில் உடனே வைராக்கியத்தை விளையச் செய்கின்றன.

## 11. திருமூல நாயனார்

திருமூல நாயனார் கைலாசத்தில் மிகப் பெரிய யோகியாக இருந்தார். சிவபெருமானுடைய வாகனமாகிய நந்தியின் அருளால் அவர் அட்டமா சித்திகளைப் பெற்றிருந்தார். அவர் அகத்திய முனிவரின் நண்பர். அவர் கைலாசத்திலிருந்து வந்து காசியில் தங்கினார். பின்னர் அவர் சிதம்பரம் திருவாவடுதுறை முதலிய தலங்கட்கும், சென்னைக்கு அருகில் உள்ள பிற தலங்கட்கும் சென்றார். அவர் திருவாவடுதுறையில் உள்ள சிவபெருமானைத் தொழுது கொண்டு சில காலம் அங்கே தங்கியிருந்தார். காவிரியின் கரையில் உள்ள ஒரு பூந்தோட்டத்துக்கு ஒரு முறை அவர் சென்றார். பசுக்கூட்டத்தை மேய்த்துக் காவல் காத்திருந்த இடையன் ஒருவனுடைய இறந்த உடலை அங்கே அவர் கண்டார். இது திருமூலரின் நெஞ்சைத் தொட்டது. அவர் பசுக்களுக்காகப் பெரிதும் இரங்கினார். அவர் தம் உடலைக் குறிப்பிட்ட ஓரிடத்தில் கிடத்திவிட்டு, இடையனின் இறந்த உடலுக்குள் புகுந்தார். நாள் முழுதும் பசுக்கூட்டத்தைக் காவல் செய்து அவற்றை அவ்வவற்றுக்குரிய வீடுகளில் சேர்ப்பித்தார். தன் கணவன் இறந்ததை அறியாத இடையனின் மனைவி, அவனுடைய பூத உடலைத் தாங்கியிருந்த திருமூலரை வரவேற்றாள். திருமூலர் மறுத்து விட்டார். அவர் தம் சொந்த உடலுக்குள் புக விரும்பினார். அவர் தம் உடலைக் தேடியபோது அந்த இடத்தில் அவர்

அதைக் காண முடியவில்லை. இவை யாவும் சிவபெருமானுடைய கருணையே என்று அவர் நினைத்தார். அவர் இடையனின் உடம்போடு ஆடுதுறைக்குச் சென்று கோயிலின் மேற்திசையில் உள்ள ஆலமரத்தினடியில் அமர்ந்து மிகவும் பெருமை வாய்ந்த 'திருமந்திரம்' என்னும் நூலைத் தமிழில் எழுதினார். வேதங்களின் சாரமாக அமைந்த 3000 பாடல்கள் அந்நூலில் உள்ளன.

## 12. இராமலிங்க சுவாமிகள்

தென்னிந்தியாவில் சிதம்பரத்திற்கு அருகில் உள்ள மருதூர் என்ற சிற்றூரில் 1823 அக்டோபர் 5-ம் தேதி (மீன லக்னம், சித்திரை நட்சத்திரம், துலா ராசி) இராமலிங்க சுவாமிகள் பிறந்தார். அவர் ஐம்பத்து நான்கு ஆண்டுகள் வாழ்ந்தார். அவர் இராமையா பிள்ளைக்கும் சின்னம்மைக்கும் மகனாகப் பிறந்தார். இராமையாப்பிள்ளை கிராமத்தில் கணக்குப்பிள்ளையாகவும் ஆசிரியராகவும் இருந்தார். அவர் சிவபெருமானிடத்தில் நேர்மையான பக்தி பூண்டிருந்தார். அவர் பக்தியும் நற்பண்பும் உள்ளவர். சின்னம்மை நற்குணங்கள் பலவும் வாய்ந்த கற்புள்ள பெண்மணி.

பெரிய மகாத்மாவாகிய ஒரு சிவயோகி சின்னம்மையின் இல்லத்திற்கு வந்து. ''அம்மையீர்! எனக்கு மிகவும் பசியாக உள்ளது. உண்ணச் சிறிது உணவு தாருங்கள்'' என்று வேண்டினார். நடராசப்பெருமானே அவ்வடிவில் வந்திருப்பதாகச் சின்னம்மை கருதினார். அந்த முனிவரை நன்கு வரவேற்று நன்மதிப்புடன் உபசரித்துச் சுவைமிகுந்த உணவு படைத்தார். முனிவர் அளவற்ற மகிழ்ச்சியடைந்து, ''அன்னையீர்! இறைவன் திருவருளால் தங்கட்கு என்போலும் தெய்வீகக் குழந்தை வாய்க்கும்'' என்று கூறித் திருநீற்றுப்பிரசாதம் வழங்கி மகிழ்வுடன் விடைபெற்றுச் சென்றார். சின்னம்மை ஆழ்ந்த பக்தியுடன் திருநீற்றுப் பிரசாதத்தை உட்கொண்டார். நாளடைவில் அவர் வயிறு வாய்த்து தெய்வீகக் குழந்தையாகிய இராமலிங்கத்தைப் பெற்றெடுத்தார்.

இராமலிங்கம் ஆறு மாதக் குழந்தையாக இருந்த போதே இராமையாப்பிள்ளை காலமாகிவிட்டார். மூத்த பிள்ளையான சபாபதி இறுதிக்கடன்களை நிறைவேற்றினார். அவர் தம் குடும்பத்தைச் சென்னைக்கு மாற்றினார். அங்கு அவர் ஆசிரியராக இருந்தார். அவர் இராமலிங்கத்தின் வளர்ச்சியில் மிகுந்த அக்கறைகொண்டு தாமே அவருக்குத் தமிழில் கல்வி கற்பித்தார். இராமலிங்கம் தமக்கு ஐந்து வயதுள்ளபோதே தமக்குக் கற்றுத்தராத பாடல்கள் பல வற்றையும் சேர்த்து ஒப்பித்தார். அவர் பிறவி ஞானி. அவருக்கு அற்புதமான ஞாபகசக்தி இருந்தது. அவருக்குச் சைவசித்தாந்த நூல்களிலும் வேதாந்த நூல்களிலும் ஆழ்ந்த புலமை இருந்தது.

அவர் மிகுந்த அன்பும், ஈகையும், எளிமையும், பணிவும், உண்மையும், தூய்மையும், கருணையும், அமைதியும் உள்ளவர். அவர் எப்போதும் இனிமையான, அன்பான சொற்களையே பேசினார். அவர் மிகுந்த தன்னடக்கமும் கூச்சமும் உள்ளவர். அவர் சிறிதளவே உண்பார். அவர் நிறைவான புலனடக்கம் வாய்ந்தவர். அவர் எப்போதும் வீண் பேச்சைப் பேசியதில்லை. அவருடைய உள்ளம் பக்தியால் நிரம்பியிருந்தது, அவர் ஆழ்ந்த ஆர்வத்துடன் முருகக் கடவுளை உபாசித்து வந்தார். தம் ஒன்பதாம் வயதில் அவர் தமிழில் முருகக் கடவுளைப் புகழ்ந்து பல பாடல்கள் புனைந்தார். அவற்றுள் இரண்டு பின்வருமாறு:-

1) ஆறுமுகப் பெருங் கருணைக் கடலே தெய்வ
யானைமகிழ் மணிக்குன்றே அரசே முக்கட்
பேறுமுகப் பெருஞ்சுடர்க்குட் சுடரே செவ்வேல்
பிடித்தருளும் பெருந்தகையே பிரம ஞானம்
வீறுமுகப் பெருங்குணத்தோர் இதயத் தோங்கும்
விளக்கமே ஆனந்த வெள்ளமே முன்
தேறுமுகப் பெரிய அருட் குருவாய் என்னைச்
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே!

2) பன்னிருகண் மலர் மலர்ந்த கடலே ஞானப்
பரஞ்சுடரே ஆறுமுகம் படைத்த கோவே
என்னிருகண் மணியே என்தாயே என்னை
ஈன்றனே என்னரசே என்றன் வாழ்வே
மின்னிருவர் புடைவிளங்க மயில் மீதேறி
விரும்பும் அடியார்காண மேவுந் தேவே
சென்னியில்நின் அடிமலர்வைத்து என்னை முன்னே
சிறுகாலை ஆட்கொண்ட தேவ தேவே!

இராமலிங்கர் தம் பதினறுவயதில் சென்னைக்கு அருகில் உள்ள திருவொற்றியூர் ஆலயத்திற்குச் சென்று தியாகராசப் பெருமானை வழிபடுவது வழக்கம். அங்கு இறைவனுடைய காட்சி அவருக்கு வாய்த்தது, இராமலிங்கருக்கு இறைவனே ஆன்மீக ஞானம் பற்றிய இரகசியங்களை உபதேசம் செய்தார். ஒருநாள் இரவு, இராமலிங்கம் மிகுந்த பசியால் வருந்தியபோது இறைவனே ஆலய அர்ச்சகர் வடிவில் வந்து தம் கையாலேயே அவருக்கு உணவூட்டி உண்பித்தார். இராமலிங்கர் இறைவனோடு கொண்ட உறவுமுறை தந்தைக்கும் மகனுக்கும் உள்ள உறவாகும் — பிதா புத்திர பாவம்.

இராமலிங்கர் திருமணம் செய்துகொள்ள விரும்பவில்லை ஆனல் அண்ணர் சபாபதி மணம் செய்துகொள்ளுமாறு அவரை வற்புறுத்தினர். அவர் திருமணம் செய்து கொண்டார்; ஆனல் தம் மனைவியிடம் பற்றுதல்கொள்ளவில்லை. இவ்வாறு அவர் உண்மையான மணவாழ்க்கையை நடத்தவில்லை. அவருடைய மனம் எப்போதும் தியானத்தில் லயித்திருந்தது.

ஆன்மீகப் போதனைகளைப் பெறுவதற்காகப் பக்தர்கள் பலர் இராமலிங்கரை அணுகினர். அவர் அவர்களுக்குப் போதனைகள் தந்து ஆன்மீகப் பாதையில் அவர்களை வழி நடத்திச் சென்று அவர்களுக்கு வேதாந்த, சிந்தாந்த இரகசியங்களை விளக்கினர்.

ஒருமுறை அவருடைய சீடர்களில் செல்வந்தராக இருந்த ஒருவர் தம் பெண்ணின் திருமண நிகழ்ச்சிக்கு வர வேண்டும் என்று அவரை அழைத்தார். இராமலிங்கர் நகைச்சுவையுடன், ''மனமே! உனக்குச் செருப்பும் இல்லை; பட்டுச் சட்டையும் இல்லை; பொன்னுடையும் இல்லை; பணமும் இல்லை; சொத்தும் இல்லை; வீடும் இல்லை! அப்படி இருக்கையில் செல்வந்தர் வீட்டுத் திருமண நிகழ்ச்சியைக் காண்பதற்கு நீ எப்படிச் செல்லப் போகின்றாய்?'' என்று விடை கூறினார்.,

அவருடைய அன்னையார் மறைந்தார்; அவர் ஈமக் கடன்களை நிறைவேற்றினார். அவருடைய சகோதரர் பரசுராமபிள்ளை நோயுற்றிருந்தமையால், நடராசப் பெருமானைத் தரிசிக்க விரும்பிய அவரை இராமலிங்கர் சிதம்பரத்துக்கு அழைத்துச் சென்றார். பின்னர் அவர் தலயாத்திரை செய்து சீர்காழி, திருவாரூர், திருப்புகலூர், திருச்செங்காட்டங்குடி முதலிய தலங்களைத் தரிசித்தார். அவர் சென்ற எல்லா இடங்களிலும் சிவபெருமானைப் பற்றிய புகழ்ப் பாடல்களை இயற்றித் தம் கண்களில் கண்ணீர் பொழியத் தெய்வீகப் பரவசமுடன் அவற்றைப் பாடினார்.

புதுச்சேரியிலிருந்து பதின்மூன்று மைல் தூரத்தில் உள்ள புண்ணியத் தலமாகிய திருப்பாதிரிப்புலியூரில் அவர் பிரம்ம சமாஜத் தலைவரைச் சந்தித்தார். உபாசனை அல்லது வழிபாட்டைப் பற்றி அவர்களிடையே ஒரு கடுமையான வாக்குவாதம் நடைபெற்றது. பிரம்ம சமாஜத் தலைவர், ''பிரம்மம் வடிவமற்றவர். அவரை மனத்தால் வழிபட வேண்டும். உருவ வழிபாட்டினால் பயன் இல்லை'' என்று கூறினார். இராமலிங்கர், ''வேதங்களில், எங்கும் நிறைந்துள்ள பிரம்மத்தின் விராட இயல்பு விளக்கப் பட்டுள்ளது; எனவே பிரம்மத்திற்கு வடிவம் உண்டு. மனவழிபாட்டைச் செய்ய ஆரம்ப சாதகர்களால் முடியாது. இஷ்ட தெய்வத்தைக் குறித்துச் செய்யும் உருவ வழிபாடு தெய்வீக மெய்யுணர்வுக்கு வழிவகுக்கின்றது. பக்தன்,

உருவத்தில் ஈசுவரனையும் அவனுடைய குணங்களையும் உன்னதமாகப் பாவிக்கின்றான். சிலை, சிலையாகவே இருக்கின்றது; ஆனால் பக்தி இறைவன்பால் செல்லுகின்றது. எல்லாவற்றையும் ஊடுருவியிருக்கின்ற பிரம்மம் சிலையிலும் இருக்கின்றது. சிலைக்கு ஆதாரம் பிரம்மமே. ஆரம்ப நிலையில் உள்ளவர்கள் வடிவ்மற்ற பிரம்மத்தை ஆழ்ந்து சிந்திக்க முடியாது. மனம் சென்று தங்க ஓர் ஆதாரத்தை விரும்புகின்றது. ஆழ்ந்து சிந்திக்கும் மன ஒருமைப் பாட்டுக்காக ஆரம்ப நிலையில் உள்ளவர்கட்கு ஓர் உருவம் இன்றியமையாதது. அவர்களின் பொருட்டு உருவ வழிபாட்டைப் பற்றிப் பேசுகின்ற அதே வேதங்கள் 'அஹங்க்ர உபாசனை' அல்லது ஆத்ம தியானம் அல்லது 'தத்துவமசி' — 'நீ அதுவாக இருக்கின்றாய்', 'அஹம் பிரம்மாஸ்மி'—'நான் பிரம்மம்', 'அயம் ஆத்மா பிரம்மன்'— 'ஆத்மாவே பிரம்மம், போன்ற மகா வாக்கியங்களின் உட்பொருள் பற்றிய சிந்தனையையும் பேசுகின்றன'' என்று விடை கூறினார். இராமலிங்கரிடமிருந்து இந்த விடையைக் கேட்ட பிரம்ம சமாஜத் தலைவர் தமது வாயை மூடிக்கொள்ள வேண்டியதாயிற்று.

பின்னர் அவர் சிதம்பரத்துக்குத் திரும்பி வந்து மருதூருக்குப் பக்கத்தில் உள்ள கருங்குழிநோக்கிப் புறப்பட்டார்; அது அவருடைய பிறந்த ஊர். அங்கு, நோயுற்றிருந்த அவருடைய சகோதரர் பரசுராமபிள்ளை காலமானார். இராமலிங்கர் ஈமக் கடன்களை நிறைவேற்றினார். இங்கு அவர் ஓர் அற்புதத்தைச் செய்தார். தண்ணீரால் ஒரு விளக்கை எரியச் செய்தார்.

அவர் கடலூர், மஞ்சக்குப்பம் ஆகிய இடங்கட்குச் சென்றுவிட்டுப் பிறகு திரும்பிவந்து கருங்குழியில் நிலையாகத் தங்கினார். கற்றறிந்த துறவிகளும், தமிழாசிரியர்களும் உரையாடி மகிழவும், தங்கள் ஐயங்களைத் தெளிவு செய்து கொள்ளவும் இராமலிங்கரை நாடி வந்தனர். அவர் அவர்கட்குத் தகுந்த விளக்கங்களை வழங்கினார்.

ஒருநாள் இராமலிங்கர் மேட்டுக்குப்பத்திலிருந்த தம் குடிசையில் தியானத்தில் ஆழ்ந்திருந்தார். தெய்வீக ஒளியைக் காணும் தெய்வீகக் காட்சி அவருக்கு வாய்த்தது. தம் உள்ளுணர்வு அனுபவங்களை அவர் பின்வருமாறு விளக்குகின்றார்.

''ஜோதி! ஜோதி! ஜோதிக்குள் ஜோதி! சுயஞ்ஜோதி! அறியாமை இருளை அறவே நீக்கும் அருட்பெருஞ்ஜோதி! நிறைவுறத் தன்னொளிபெற்று நிற்கின்றேன் இன்று என் ஐயங்கள் அனைத்தும், மாயத்தோற்றங்கள் அனைத்தும் முற்றிலும் மறைந்தன. தெய்வத்தோடு ஒன்றுபட்டு விட்டேன். நான் நிறைவுடன் விளங்கும் சத்தாகவும், சித்தாகவும், ஆனந்தமாகவும் விளங்குகின்றேன், பேரின் பத்தில் திளைக்கின்றேன். அது இப்படி இருக்கின்றதென்று எப்படி விளக்குவேன். மரணமில்லாப் பெருவாழ்வு பெற்றேன். எங்கும் வியாபித்துள்ள ஆத்மாவையே எங்கும் காணுகின்றேன். எல்லா இருமைகளும், வேறுபாடுகளும், மாறுபாடுகளும், ஏற்றத் தாழ்வுகளும் மறைந்தன. என் மகிழ்ச்சி வரம்பற்றது. அறிவாலும், பொறிகளாலும் எட்டமுடியாத 'அதை' அடைந்துவிட்டேன். எனக்குப் பிறப்பில்லை; இறப்பில்லை; மூப்பில்லை; மாற்றமில்லை. காலம், இடம், காரணநிலை ஆகிய யாவற்றையும் கடந்து அப்பாற் சென்றுவிட்டேன்!

இராமலிங்கர் இறைவனிடம் பின்வருமாறு வேண்டினார். ''நடராசப் பெருமானே! நீயே என் தந்தை, தாய், குரு. நீயே எனக்கு எல்லாம். உன் கமல பாதங்களில் நான் அடைக்கலம் புகுந்து விட்டேன். நிறைவாகவும், முழுமை யாகவும் உன்பால் சரணடைந்துவிட்டேன். என்னைக் காத்தல் நின் கடன். எனக்கு ஆதாரம் நீயே. செல்வங் களையோ, உலகியல் இன்பங்களின் நுகர்ச்சிகளையோ நான் வேண்டிலேன். நிலையாதவற்றில் செல்லும் ஆசைகள் அனைத்தையும் பொசுக்கிவிட்டேன். பெருமைமிக்க உனது காட்சியைக் காணவே என் கண்கள் காமுறுகின்றன.

உன்னுடன் கலந்துவிடக் கருதி என் உள்ளம் உருகுகின்றது. ஏறமுடியாத ஆன்மீக மேல்நிலைக்கு என்னை நீ ஏற்றிவிட்டாய். என்றும் உன்னுள் நான் வாழச் செய். நான் உனக்குச் சேய். நீ எனக்கு வாய்த்த கருணைமிகு தந்தை. என்னை அணைத்துக் கொள். என்றும் உன் கருணைதனக்கு ஆளாகி நான் வாழ நல்லாசி வழங்கு. என்னுடன் விளையாடு, என்னுடன கூத்தாடு. அமரத்துவ அமிழ்தத்தை நான் பருகச் செய். உன் திருவடிகளைச் சிக்கெனப் பிடித்துக் கொண்டேன். விட மாட்டேன் உன்னை. நல்லாசி கூறு''.

இரவும், பகலும் அழுதவராய் அவர் கண்ணீர் அருவியைப் பொழிந்தார். அன்புக் கண்ணீரால் அவருடைய படுக்கை நீராட்டப்பட்டது.

இராமலிங்கர் இறைவன் தமக்கு வழங்கிய அறிவுரைப் பற்றிப் பின்வருமாறு தெரிவிக்கின்றார் :

''இறைவன்பால் ஆழ்ந்த அன்பு கொண்டு என் உள்ளம் நெக்குருகித் தெய்வீகப் பரவசத்தில் உச்சநிலையுற்று இறைவனைக் கண்ணாரக் காண நான் ஏங்கியபோது எனக்குக் காட்சி தந்து, ''குழந்தாய்! நீ என் அன்புக்கு உரியவன். நான் உன் உள்ளத்தில் கோயில் கொண்டுள்ளேன். நான் உனக்கு நிறைவான ஞான ஒளியையும் தனிச் சிறப்புள்ள சித்திகளையும் வழங்கியுள்ளேன். எங்கும் அன்பென்னும் நற்செய்தியைப் பரப்பு. மனித சமுதாயத்திற்குச் சேவை செய். மக்களைத் தெய்வீக வாழ்க்கையை நடத்தச் செய். அவர்களை மகிழ்வுறச் செய்.''

இராமலிங்கர் மக்களிடம், ''அன்பர்களே! வாய்மை என்னும் வழியில் நடை பயிலுங்கள். தூய தெய்வீக வாழ்க்கையை நடத்துங்கள். உலகத்தையும் புலன் இன்பங்களையும் நம்ப வேண்டாம். ஆன்மீகப் பாதையில் மகிழ்ச்சியோடும், துணிச்சலோடும் நடந்து செல்லுங்கள். என்னுடன் வாருங்கள். நிலையான பேரின்பத்தை நுகருங்கள். நடராசப் பெருமானுடன் விளையாடுங்கள்; கூத்தாடுங்கள்.

ஞானத் திருவிளையாடல்களை அறிந்து மகிழுங்கள். தெய்வீக வாழ்க்கை மட்டுமே அமரத்துவத்தை வழங்க முடியும், அதை அடையுங்கள்.'' என்று அறிவுரை வழங்கினார்.

மேலும், ''பரிதாபத்துக்குரிய புலனின்ப வாழ்வை உதறி விட்டு மேலே உயர்ந்து செல்லுங்கள். அது வாழ்க்கையே அல்ல; உண்மையில் மரணமே. இறைவனைப் பற்றிச் சிந்தனை செய்யாமல் புலனின்பங்களில் மட்டுமே எளிதில் தம் வாழ்வைப் பாழாக்குவோர், வெறும் புழுக்கள் ஆவர். கடந்த காலத்திலும், நிகழ் காலத்திலும் மகிழ்ச்சி சிறிதும் நிலவியிருக்கவில்லை என்பதைத் தெளிவாக அறிந்திருந்தும் உலகில் உள்ள தீய பொருள்களில் தாமாகவே சிக்குண்டு, அவற்றைப் பற்றிய எண்ணங்களிலேயே சார்ந்திருப்போர், 'இழிவான கழுதை' என்ற அடைமொழி தந்து அழைக்கப் படுவதற்கு மட்டுமே தகுதி படைத்தோர் ஆவர். புலனின்பங் களில் மூழ்கியிருக்கும் மக்கள் விவேகத்தையும், சரியாகப் புரிந்து கொள்ளும் ஆற்றலையும் இழந்துவிட்டு, மீண்டும் மீண்டும் வெட்கப்படத்தக்க இழிந்த புலனின்பச் செயல் களிலேயே ஈடுபடுகின்றனர். எத்தகைய இழிவான நிலைமை!

எல்லை காண முடியாமல் பரந்து விளங்கும் சச்சிதானந்தப் பேரின்ப வீட்டை நோக்கித் துணிச்சலுடன் செல்லுங்கள். ஒளி உங்களுக்குள்ளேயே இருக்கின்றது. பேரொளியும், பேரமைதியும், பேரின்பமும், பேரறிவும் வடிவாகவுள்ள இறைவனைக் குறித்துத் தியானம் செய்யுங்கள். பயனில்லாத பேச்சு, வீண் வம்பு பரப்புதல், புறங்கூறல், உண்ணல், பருகல், உறங்கல் ஆகியவற்றில் அருமையான வாழ்வை வீண் ஆக்காதீர்கள். உயர்ந்த குறிக்கோளை அடைவதற் காகவே வாழ்க்கை கிடைத்துள்ளது. வாரீர்! வாரீர்! அமரத்துவத்தை அடைவீர்'' என்றும் அறிவுரை வழங்கினார்.

கருங்குழிக்கு அருகில் உள்ள வடலூரில் அவர் கணிசமான ஆக்கப்பணிகள் சில செய்து முடித்தார். ஆன்மீக அறிவைப்

பரப்புவதற்காக அவர் சமரச வேத சன்மார்க்க சங்கத்தைத் தொடங்கினார். சாதி மத வேறுபாடின்றி எல்லா ஏழை மக்களுக்கும், துறவிகளுக்கும் உணவு படைப்பதற்காகச் சத்திய தருமச்சாலை (அறச்சாலை) திறக்கப்பட்டது. மூன்று நாட்கள் ஒவ்வொரு நாளும் பத்தாயிரம் மக்களுக்கு உணவு படைக்கப்பட்டது. அவருடைய அருட்பாக்களை மாணவர் களுக்குக் கற்பிப்பதற்காக ஒரு பள்ளி (சமரச வேத பாடசாலை) திறக்கப்பட்டது. அவர் தம்முடைய சீடர் களுக்கு சுற்றுப்புறத் தூய்மை பற்றியும் உடல்நலம் பற்றியும் பின்பற்ற வேண்டிய விதி முறைகளைக் கற்பித்தார், அவர், அவர்களுக்கு உடம்பை உறுதியாகவும், நலமாகவும், இளமைப் பொலிவுடனும் எப்படி வைத்துக் கொள்வதென்று கற்றுத் தந்தார். சித்தாந்தம், வேதாந்தம், யோகம் பற்றிய கொள்கைகளைப் பரப்புவதற்காக அவர் சத்திய ஞான சபையை (மெய்யுணர்வு மன்றம்) நிறுவினார். பொது மக்கள் வழிபாடு செய்வதற்காக ஓர் அழகான கோயிலும் கட்டப் பட்டது. அக்கோயில் எல்லோருக்கும் திறந்து வைக்கப் பட்டிருந்தது.

ஞானசபை மன்றத்தில் அவர் விளக்கவுரைகளையும், சொற்பொழிவுகளையும் ஒழுங்காக நடத்தி வந்தார், மனித சமுதாயத்தின் ஆன்மீக மேம்பாட்டுக்காக அவர் அல்லும் பகலும் உழைத்து வந்தார். கள்ளுண்ணல், புலால் உண்ணல் ஆகியவற்றுக்கு எதிராக அவர் கடுமையான பிரச்சாரம் செய்து வந்தார். அவர் தம் சீடர்களைத் தெய்வீக ஒளியைப் பெறுவதற்காகச் சரியான ஆன்மீகப் பயிற்சிகளையும் ஆழ்ந்த தியானத்தையும் செய்யச் செய்தார்.

இராமலிங்கருடைய முக்கியமான போதனைகளில் சில பின்வருமாறு:

1. இரக்கமற்ற பார்வை பார்க்க வேண்டாம். சுவை மிகுந்த உணவுகளுக்காக ஏங்க வேண்டாம். அன்பான, இனிமையான சொற்களைப் பேசுக. பொய் பேச வேண்டாம்.

கொலை செய்வதிலிருந்து மக்களைத் தடுக்கவும், மகாத்மாக்களின் சத்சங்கத்தை நாடுக. மிதமாக உண்க. உடல் நலத்தைக் கவனமாகப் பேணுக. பிரம்மச்சரியத்தைக் கடைப் பிடிக்கவும், எப்போதும் கோவணத்தை அணிந்திருக்க வேண்டும்.

2. இறைவன்பால் மனத்தைப் பதியச் செய்யவேண்டும். திரிமுடியில் (புருவநடுவில்) மனத்தை ஒருமுகப்படுத்த வேண்டும். ராகத்வேஷங்களிலிருந்து (விருப்புக்களும் வெறுப்புக்களும்; கவர்ச்சியும் அறுவறுப்பும்) விடுபட வேண்டும். புலனின்ப எண்ணங்களில் ஈடுபட மனத்தை அனுமதிக்கக்கூடாது. பொறிகளைக் கட்டுப்படுத்தவேண்டும். தவருன திசையில் செல்ல அவற்றை அனுமதிக்கக்கூடாது. தற்புகழ்ச்சி வேண்டாம். 'நான்' என்ற எண்ணத்தையும் செருக்கையும் கொன்றுவிடவேண்டும். உன்னைப்பற்றி மிகையாக எண்ணவேண்டாம். பிறர் உன்னை மதிக்கவேண்டும் என்றோ பெருமைப்படுத்தவேண்டும் என்றோ எதிர்பார்க்க வேண்டாம்.

3. சமநோக்குடன் இரு. ஒவ்வொருவரையும் நன்மதிப்புடன் நடத்து. ஆடவர், பெண்டிர் என்றோ, உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்றோ உள்ள எல்லா வேறுபாடுகளைப்பற்றிய எண்ணத்தைத் தவிர்த்து விடு, தோழமை உணர்வையும், உலக சகோதரத்துவத்தையும் வளர்ப்பாயாக.

4. உலகம் முழுவதும் நீயே என்று உணர். எல்லா உயிர்களும் உன்னைத் தவிர வேறில்லை என்று உணர்.

5. உலக அன்பை வளர்த்துக்கொள். தெய்வீகத்தில் வசித்திரு. அனைவரிடத்தும் அன்பாக இரு, இறைவனிடத்தில் அடைக்கலம் புகு, தியானம் செய்; தெளிவு பெறு. தெய்வீக ஒளி உன்பால் இறங்கிவர அனுமதி கொடு.

அருட்பா என்பது இராமலிங்க சுவாமிகளின் பாடல்கள் அடங்கிய மிகப்பெரிய தொகுதியாகும். வேதங்கள், உபநிஷதங்கள் ஆகியவற்றின் சாரத்தை அது தன்னுள் கொண்டுள்ளது. அது உலகத்திற்குரிய விவிலிய நூல் அல்லது கீதை மெய்யுணர்வு அனுபவத்தை வெளிப்படுத்தும் பாடல்கள் அவை. இராமலிங்க சுவாமிகள் தெய்வீகப் பரவசத்தின் உச்சநிலையில் இருந்தபோது தம் உள்ளத்தின் ஆழத்திலிருந்து இப்பாடல்களைப் பொழிந்தார். அவை அமிழ்தத் தன்மை நிறைந்தவை. ஆன்மீக ஒளியை நேரில் கண்டு களித்தவருடைய நேரடியான உள்ளுணர்வு அனுபவங்களை அவை வெளிப்படுத்துகின்றன. அவருடைய கிளர்ச்சிமிக்க செய்யுட்கள் அல்லது பாடல்கள் யாவும் இனிமையும் எளிமையும் வாய்ந்தனவாய், உள்ளத்தை உருக்குவனவாய், ஆன்மாவை மேல் நோக்கிக் கிளர்ந்தெழச் செய்வனவாய் உள்ளன. ஆழ்ந்த சிந்தனையும், தெளிவாகக் கருத்தை வெளியிடுவது அப்பாடல்களின் பண்புகளாக உள்ளன. படிப்பவர் கேட்பவர் உள்ளங்களில் அவை பக்தியுணர்வை விதைக்கின்றன. அவை மனத்தை மிகவும் மகிழ்விப்பனவாக உள்ளன.

வாழ்க்கையின் பௌதிகத் தன்மையை அவர் புறக்கணிக்கவில்லை. உடல் நலத்துடன் நீண்டகாலம் வாழ்வதற்கான விதிமுறைகளையும், உணவு, உறக்கம் முதலியவை பற்றிய கட்டளைகளையும் நோய்களைக் குணப்படுத்தும் மருந்துகள், மூலிகைகள் பற்றிய பட்டியலையும் அவர் தமது நூலில் வழங்கியுள்ளார்.

அவர்பால் மனிதத்தன்மைக்கு அப்பாற்பட்ட சக்திகள் இருந்தன. அவர் பல சித்திகள் பெற்றிருந்தார். அவருடைய சொற்களும் உரைகளும் கேட்பவர் மீது மின்சாரம் பாய்ந்ததுபோன்ற உணர்ச்சியை உண்டாக்கின. அவருடைய தோற்றத்தில் காந்தசக்தி இருந்தது. அவர் மக்கள் மீது அளத்தற்கரிய செல்வாக்கைச் செலுத்தினார். அவர் உலகத்தைத் தெய்வீக உணர்வு பெற, உறக்கத்தினின்றும் எழுப்பவே தோன்றினார். அவர் மக்களுக்கு அமைதி, அன்பு,

அழியாத வாழ்வு, விடுதலை ஆகியவைபற்றிய நற்செய்தி களை வழங்கினார். தம் ஆன்மீக சக்தியால் அவர் ஆயிரக் கணக்கான மக்களின் உள்ளங்களில் மாற்றத்தை விளைவித் தார்.

உலக வாழ்விலிருந்து அவர் ஓய்வுகொள்வதற்கு முந்தியநாள் மாலையில் அவர் தம் சீடர்களையும், தம்மைப் புகழ்ந்து பாராட்டுவோரையும் நோக்கி, ''என் அன்புக் குரிய குழந்தைகளே! நான் உங்களைவிட்டுச் சில காலம் பிரிந்திருக்க விரும்புகின்றேன். அடக்கம் செய்து புதைப்ப தற்கோ அல்லது சிதையில் வைத்து எரிப்பதற்கோ என் உடல் உங்களுக்குக் கிடைக்காது. நான் சதானந்த நிர்விகல்ப சமாதியை (மேலான மெய்யுணர்வுடன்கூடிய, என்றென்றும் உள்ள பேரின்பநிலை) அடைய விரும்புகின்றேன். என் உடல் மறைந்துவிடும்; உங்களுடைய கண்களால் அதைப் பார்க்கமுடியாது, சித்தர்போல் நான் எங்கும் உலாவிக் கொண்டிருப்பேன். இப்போது சன்னல்கள், கதவுகள் எல்லாவற்றையும் மூடிவிடுங்கள்; வாசற்கதவைப் பூட்டி விடுங்கள். உள்ளே என்ன இருக்கின்றது, என்ன நிகழ்கின்றது என்பதைப் பார்க்கவேண்டும் என்ற ஆர்வத்தினால் யாரேனும் திறந்து பார்த்தால், அங்கு வெறும் வெளியைத் தான் பார்க்கமுடியும்,'' என்று அறிவித்தார்,

எல்லாக் கதவுகளும் மூடப்பட்டு வாசற்கதவு பூட்டப் பட்டது. மக்கள் அனைவரும் அந்த வீட்டை இரவும், பகலுமாக உன்னிப்பாய் பார்த்துக் கொண்டேயிருந்தனர். மக்கள் சிலர் ஆவலால் உந்தப்பட்டுக் கதவைத் திறந்தார் கள். உள்ளே அவர்கள் எதையும் காண முடியவில்லை; வெறும் வெளிதான் அங்கே காணப்பட்டது. மர்மமான முறையில் இராமலிங்க சுவாமிகள் மறைந்துவிட்டார். ஒரு யோகி அல்லது சித்தர் எதையும் செய்ய முடியும்.

இவ்வாறு மருதூரைச் சேர்ந்த கவிஞரும், ஞானக் கண்ணால் காண்பவரும், அருள் ஞானியும், வடலூரைச் சேர்ந்த தீர்க்கதரிசியும், சித்தரும், யோகியும் ஆகிய

தில்லை நடராசப் பெருமானுடைய செல்லப்பிள்ளை மறைந்து விட்டார். ஆனால் உண்மையில் அவர் மறையவில்லை. ஏனெனில் அவர் இன்றும் நம் உள்ளங்களில் வாழ்ந்து கொண்டிருக்கின்றார். அவருடைய போதனைகள் நமக்குக் கிளர்ச்சியைத் தருகின்றன. பேரின்ப வீட்டை நோக்கிச் செல்லும் பாதையில் நமக்கு வழியைப் புலப்படுத்தி நம்மை வழிநடத்திச் செல்லும் பேரொளியாக அவருடைய வாழ்க்கை விளங்குகின்றது.

## 18. தாயுமானவர்

ஏறத்தாழ இருநூற்றுமுப்பது ஆண்டுகட்கு முன்னால், தென்னிந்தியாவில் தஞ்சை மாவட்டத்தில் உள்ள வேதாரண்யம் என்ற ஊரில் கேடிலியப்ப பிள்ளை என்னும் பெயருள்ள வைசியர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் கற்றறிந்தவர்; பக்தியுள்ளவர். ஒரு சிவாலயத்தின் மேலாளராக இருந்தார். திருச்சி அரசர் முத்துவிஜய ரகுநாத சொக்கலிங்க நாயக்கர், கேடிலியப்ப பிள்ளையின் திறமைகளையும், கல்விச் சிறப்பையும், அறச்சார்புள்ள நற்குணங்களையும் பற்றிக் கேள்வியுற்று அவரைத் தம் அரசாங்க மேலாளராக நியமித்தார். கேடிலியப்ப பிள்ளைக்குச் சிதம்பரம் பிள்ளை என்ற ஒரு புதல்வர் இருந்தார். கேடிலியப்ப பிள்ளையின் அண்ணன் சிதம்பரம் பிள்ளையைத் தம் தத்துப் பிள்ளையாக ஏற்றுக்கொண்டார். கேடிலியப்ப பிள்ளை நாள்தோறும் திருச்சியில் உள்ள தாயுமானவர் கோயிலுக்குச் சென்று தமக்கொரு மகன் பிறக்கவேண்டும் என்று வரம்வேண்டி வழிபாடுகள் முதலியன செய்து வந்தார். இறைவன் அவருக்கு ஒரு மகனை அருளினார். இப்புதல்வன் தாயுமானேஸ்வரரின் அருளால் பிறந்தமையால் கேடிலியப்ப பிள்ளை இறைவன் பெயரையே தம் மகனுக்குச் சூட்டினார்.

சிறுவனாக இருந்த தாயுமானவர் மிகுந்த அறிவுக் கூர்மை வாய்ந்து விளங்கினார். உபநிஷதங்கள், புராணங்கள், இதிகாசங்கள், இலக்கணங்கள் முதலிய நூல்களை எல்லாம்

மிக விரைவில் கற்றுத் தேர்ந்தார். பெருமைமிக்க ஆராய்ச்சி அறிஞராக அவர் வளர்ந்தார். தம் தந்தையாரின் மறைவுக்குப் பிறகு, திருச்சி அரசரின் வேண்டுகோளுக்கு இணங்கித் தம் தந்தையாரின் பணி இடத்தில் அமர்ந்து' பதினன்காம் வயதில் அரசாங்க மேலாளர் ஆனார். தாயுமானவர் அளவற்ற அழகு வாய்ந்தவர். அவருடைய கைகள் முழங்காலைத் தொடும் அளவுக்கு நீண்டிருந்தன; இந்துக்கள் இதைப் பெருமையின் அடையாளமாகக் கருதுகின்றனர். அவர் மெய்ப்பொருள் நாட்டம் கொண்டிருந்தார். அரசவைக்கு வந்த பண்டிதர்கள் அனை வரையும் அவர் வாதத்தில் வெற்றி கொண்டார். 'மெய்ப் பொருளைக் கண்டு கொள்ளுங்கள்' என்று சொல்லி அவர் அவர்களை அனுப்பினார். தாயுமானவரைப் பற்றி அரசர் பெருமகிழ்ச்சியடைந்தார். தாயுமானவரின் உள்ளத்தில் ஆழ்ந்த கவலையை ஏற்படுத்திய கருத்து, ''என்னுடைய ஐயங்களை எல்லாம் நீக்கி எனக்கு ஞானத்தை ஊட்ட வல்ல குருவை எப்போது அடைவேன்?'' என்பதாம். அப்போது திருமூலநாயனார் மரபில் வந்த மௌனகுரு சுவாமிகள் தாயுமானேஸ்வரரைத் தரிசிக்கத் திருச்சிக்கு வந்தார். சிறுவர் தாயுமானவருடைய உள்ளம் மௌனகுரு சுவாமிகளின்பால் ஈர்க்கப்பட்டது. அவர், அவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்து அவரை நிழல்போல் தொடர்ந்தார். அத்வைத தத்துவத்தின் பல்வேறு சிக்கலான கருத்துக்களைக் குறித்து அவர் மௌனகுருவிடம் நீண்ட வாக்கு வாதங்களையும், உரையாடல்களையும் செய்தார். தாயுமானவர் வைராக்கியத்தில் ஆழ்ந்த வளர்ச்சிபெற்றுத் தம் அலுவலகக் கடமைகளை எல்லாம் மறந்தார். அரசர் அவரைப் பணிகளிலிருந்து விடுவித்தார். அவர் தாமே விரும்பித் தாயுமானவருடைய சீடரானார்.

திருமணத்தில் அவருக்குச் சிறிதளவுகூட விருப்ப மில்லாதிருந்தும் தம்முடைய குருவையும், அண்ணனையும் திருப்தி செய்வதற்காக மட்டுமே அவர் திருமணம் செய்து கொண்டார். அவருக்குக் கனகசபாபதி பிள்ளை என்ற

புதல்வன் இருந்தான். தம் மனைவி இறந்த பிறகு, குருவின் கட்டளைக்கிணங்க அவர் துறவியானார். அவர் ஒரு கோவணம் மட்டும் அணிந்தவராய்த் தமது வீட்டைவிட்டுப் புறப்பட்டார். அவர் யோகம் பயின்று தம் காலம் முழுவதையும் தியானத்திலும் சமாதியிலும் கழித்தார். அவர் உள்ளுணர்வின் தூண்டுதலையும் சாக்ஷாத்காரமும் பெற்றார். மனக்கிளர்ச்சி மிகுந்த பாடல்கள் பலவற்றை அவர் பாடினார். அவருடைய பாடல்கள் எல்லாவற்றையும் அவருடைய சீடர் அருளையர், தொகுத்து ஒரு நூல் வடிவம் ஆக்கினார். ஞானத்தின் இரகசியங்களைப் பற்றி அவர் அருளையருக்கு உபதேசம் செய்தார். அவர் தூய நிர்விகல்ப சமாதியடைந்தார்.

புகழ்மிக்க குன்றாகிய திருச்சி மலைக்கோட்டையில் அவருடைய சமாதி இருக்கின்றது. தென்னிந்தியாவில் உள்ள ஒவ்வொருவராலும் அவருடைய மெய்யுணர்வுப் பாடல்கள் பாடப்படுகின்றன. அப்பாடல்களில் உள்ளத்தைத் தூண்டி உயர்த்துவிடுகின்ற மிக உயர்ந்த எண்ணங்கள் அற்புதமாக அமைந்துள்ளன. அவை நுண்ணிய தத்துவக் கருத்துக்கள் கனிந்து நிரம்பியனவாய்க் கேட்பவருடைய உள்ளங்களை ஆழ ஊடுருவிச் செல்லக்கூடியனவாய் உள்ளன.

அவர் வேதங்களின் உருவமாக இருந்தார். இறைவனை உணர்ந்துகொள்ள முடியும் என்ற உண்மைக்கு அவர், உயிர்வாழும் ஒரு நம்பிக்கையாக இருந்தார். அவர் ஒருபோதும் மேடைகளில் பிரச்சாரம் செய்ததில்லை. அவர், ஞானிக்கு இருக்கவேண்டிய எண் குணங்கள் நிரம்பியவராய்ச் சங்கரர் கண்ட சகுண அபர பிரம்மமாகிய குணங்கள் உள்ள இறைவனிடத்தில் லயித்தவராய்த் தம்முடைய இன்றியமையாத இயல்பினால் இறைவனிடத்தில் ஐக்கியம் அடைந்தவராய் ஒரு நிறை ஞானியாகத் திகழ்ந்தார். ஒரு ஞானியாக இருந்து அவர் எல்லா உடம்புகளிலும் இருந்து பணி செய்தார்; இயற்கையின் மூச்சாகவே அவர் இயங்கினார்; வீசும் காற்றுடன் உலவினார்; விண்ணிலிருந்து

பெய்யும் மழையுடன் இறங்கினுர்; பொலிவுள்ள வெயிலின் ஒளியாகக் காணப்பட்டார். துன்பங்கள் எல்லாவற்றுக்கும் மூல வேராக உள்ள அவித்தையை நீக்கிக் குறைந்தது பத்துபேரையாவது ஒரு ஞானி உயர்த்த முடிந்தால் அதுவே உண்மையான லோக சங்கிரகம். சமுதாய அரசியல் பணிகள் ஒரு ஞானியோ அல்லது உண்மையான துறவியோ செய்தற்குரியன அன்று.

சென்னையிலிருந்து வெளிவரும் ''ஞான போதினி''யில் ஐந்து பாகங்களாகத் தாயுமான சுவாமிகளுடைய வாழ்க்கை வரலாறும் போதனைகளும் வெளியிடப்பட்டன. அவருடைய பாடல்கள் இசைத்தட்டுகளாகவும் வெளியிடப் பட்டுள்ளன.

## 14. சுந்தரேச சுவாமிகள்

தர்மத்தைப் பாதுகாக்கவும், நிலை நிறுத்தவும், துயர நிகழ்ச்சி ஏற்பட்டிருப்பின் அதை நீக்கவும், சம்சாரச் சேற்றி லிருந்து மக்களை விடுவித்து உயர்த்தவும், இறைவனுடைய நாமம், பக்தி, மெய்யுணர்வு, யோகத்தின் கொள்கைகள் ஆகியவற்றின் பெருமைகளைப் பரப்பவும் காலந்தோறும், அளவற்ற சக்திகளும், பொறி புலன்களுக்கு அப்பாற்பட்ட பேரறிவும் வாய்ந்த ஆன்மீகப் பேரொளிகள் இவ்வுலகத்தில் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. அவர்கள் அனைவரும் இறைவனுடைய நேரான ஒளிக்கதிர்கள் அல்லது அம்சங்கள். சுந்தரேச சுவாமிகள் அவர்களில் ஒருவர்.

தென்னிந்தியாவில் திருநெல்வேலி மாவட்டத்தில் கங்கைகொண்டம் என்ற ஊரில் 1831-இல் புகழ்மிக்க அப்பைய தீட்சிதரின் குடும்பத்தில் அவர் பிறந்தார். அவருடைய தந்தையாரின் பெயர் யக்ஞேஸ்வர சிவன்; தாயாரின் பெயர் காமாட்சி. அவர் பத்தமடையில் வேதங் களையும், ஆறுதர்சனங்களையும், பிரஸ்தானத் திரயங்களையும் பயின்றார். அவர் தம் பிள்ளைப் பருவத்திலேயே அதி மேதையாகவும், சிவபெருமானுடைய பெருமைமிக்க பக்த

ராகவும் இருந்தார். அவர் சில காலம் மண வாழ்க்கையை நடத்தினர். முழு வைராக்கியம் அவர்பால் உதித்தபோது தம் இருபத்து மூன்றும் வயதில் வித்வத் சந்நியாசத்தை மேற்கொண்டார். திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள அடைச்சாணி என்ற ஊரில் வாழ்ந்த அவருடைய குரு விஸ்வேஸ்வர சாஸ்திரியால் அவருக்குக் கைவல்யத்தின் இரகசியங்கள் உபதேசம் செய்யப்பட்டன. அவர் தீவிரமான தியானத்தைப் பயிற்சி செய்து நிர்விகல்ப சமாதியை அடைந்தார்.

மதுரை, ஜம்புகேஸ்வரம், திருவையாறு, மாயவரம், சீர்காழி, சிதம்பரம், விருத்தாசலம், காளஹஸ்தி, காசி, ராமேஸ்வரம் முதலிய புண்ணிய தலங்கட்கு அவர் யாத்திரை செய்தார். தாம் சென்ற எல்லா இடங்களிலும் அவர் ஆன்மீக அறிவைப் பரப்பினர்.

அவர் பிரம்ம ச்ரோத்ரியாகவும், பிரம்ம நிஷ்டராகவும் இருந்தார். அவர் பரமஹம்ச சந்நியாசியாகவும், அதிவர்ணாஸ்ரமியாகவும் இருந்தார். அவர் மிகவும் பரந்த மனப்பான்மை படைத்தவர். அவர் கைவல்யம் அல்லது பிரம்மஞானத்தின் இரகசியங்களைச் சூத்திரர்க்கும், பெண்டிர்க்கும்கூட உபதேசித்தார். அவர் வட மொழியில் ஆழ்ந்த புலமை பெற்றிருந்தார். அவர் அளவற்ற உள்ளுணர்வு அனுபவங்கள் உள்ளவர். அவர் பல்வேறு சித்திகளையும் அடைந்திருந்தார். அவர் எல்லா இடங்களுக்கும் பக்தியும், ஞானமும் பரவச் செய்தார். அவர் சென்ற இடங்களில் எல்லாம் சூதசம்ஹிதை பற்றி விரிவுரைகளை நடத்தினர். அவர் இருபத்திரண்டு ஆலயங்களில் கும்பாபிஷேகத்தைச் செய்தார். கதாகாலட்சேபங்கள், விரிவுரைகள், சொற்பொழிவுகள் வாயிலாகவும், சாதகர்களுக்குப் பயிற்சி தருவதன் வாயிலாகவும் அவர் உலக நன்மையின் பொருட்டும், விடுதலையின் பொருட்டும் கடுமையாக உழைத்தார்.

அவர் ஜீவன்முக்தர் அல்லது நிறை ஞானிக்குரிய குணங்கள் யாவும் பெற்றிருந்தார். அவர் உலகில் வாழ்ந்தாலும், உலக நிலைக்கு அப்பாற்பட்டு விளங்கினர்.

பற்றும், அகந்தையும் அற்றவராய், சமநோக்கும் நடுநிலை மனப்பான்மையும் உள்ளவராய், அவர் அச்சமின்றி மகிழ்ச்சியுடன் எங்கும் உலாவி வந்தார். உயர்ந்தவர், தாழ்ந்தவர்; புகழ்ச்சி, இகழ்ச்சி; மரியாதை, அவமரியாதை என்றும் வேறுபாடுகளை அவர் சிறிதும் பாராட்டவில்லை. அவர் உயர்ந்த பேரறிவும், நிறை நிலையும், பேரின்பமும் வாய்ந்து விளங்கினார்.

எத்தகைய பெரிய அற்புதம்! சுந்தரேச சுவாமிகள் தம் முற்பிறவியில் எந்த மெச்சத் தகுந்த செயல்களைச் செய்தார்? தம் சத்சங்கல்பத்தினால் அவர் பல அற்புதங்களைச் செய்தார். அவர் நிலவுலகத்தோர்க்குக் கண்கண்ட தெய்வமாக இருந்தார். அவர் எவ்வளவு அமைதி நிறைந்தவராக இருந்தார்! அவர் எவ்வளவு சக்தி படைத்தவராக இருந்தார்! சுந்தரேச சுவாமிகளுக்கு வணக்கம்! எங்கு சென்றாலும் அவர் மக்களை ஈர்த்தார். அவர் சக்திவாய்ந்த காந்தமாக இருந்தார். அவர் ஆன்மீக வீரர். அவர் மக்களில் தலை சிறந்தவர். சிருங்கேரி மடத்தின் சங்கராச்சாரியார் கூட அவரைப் பணிவுடன் வணங்கித் தம் இருக்கையை அவருக்கு அளித்து அவரை 'மகா சந்நிதானம்' என்று அழைத்தார்.

அவர் ஆன்மீக ஆற்றலின் சக்தி நிலையமாக இருந்தார். அவர் எந்த இடத்தில் இருந்தாலும் அங்கு உள்ளவர்களுக்கு உள்ளக்கிளர்ச்சியும், உள்ள எழுச்சியும் தோன்றும். அவருடைய காந்தசக்தி மிகுந்த கைபட்டதனால் இறந்து போன ஒரு சிறுவன் மீண்டும் உயிர் பெற்று எழுந்தான்; ஒரு சிறுமி சமாதியடைத்தாள். அடர்ந்த புதர்களினிடையே அவர் நிர்விகல்ப சமாதியைப் பயின்று கொண்டிருந்தபோது பல நேரங்களில் சிவபெருமானே அங்கு தோன்றி அவருக்கு உணவை ஊட்டியுள்ளார். பிரம்மஞானத்தை அடையுமாறு அவர் கணக்கற்ற சாதகர்கட்கு வழி காட்டியுள்ளார்.

அவர் வேதாந்தத்தைப்பற்றி மிக உயர்ந்த அற்புதமான நூல்கள் பலவற்றைத் தமிழில் எழுதியுள்ளார்; அவற்றில்

நடைமுறைப் பயிற்சிக்குரிய போதனைகளும், அனுபவங்களும் நிரம்பியுள்ளன. அவற்றுள் மிகவும் முக்கியமான நூல்கள்:— சுவானுபூதி ரசாயனம், அனுபவ ரச மஞ்சரி, நிஜானந்த விலாசம் என்பனவாம். அவர் பிரம்ம கீதையைத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார்.

தென்னிந்தியாவில் திருச்சி மாவட்டத்தில் புதுக் கோட்டைச் சமஸ்தானத்தில் அரிமளம் என்ற ஊரில் 1881-ல் அவர் மகா சமாதியில் நுழைந்தார்.

இங்கு சொல்லப்பட்டவை எல்லாம், தூய்மை, தியாகம், அன்பு, சாதுத்தன்மை ஆகியவை மிகுந்த வாழ்க்கையை நடத்திய ஒரு ஜீவன் முக்தரின், ஒரு மகாத்மாவின் வாழ்க்கை வரலாற்றை வெறும் கோடிட்டுக் காட்டும் முயற்சிதான்; இந்தியாவில் தோன்றி ஒளியை ஏந்தி முன்னே செல்லும் வழிகாட்டியாகவும், கலங்கரை விளக்கமாகவும் இருக்கும் சுந்தரேச சுவாமிகளின் பெருமை ஓங்குக! நம் அனைவர் மீதும் அவருடைய நல்லாசிகள் பொழிவனவாகுக!

பெருமை வாய்ந்த முனிவராகவும், ஆழ்ந்த புலமை வாய்ந்த அறிஞராகவும், தத்துவ ஞானியாகவும், சொல் வன்மை மிகுந்த பேச்சாளராகவும், வழிகாட்ட ஒரு போதும் தவறாத ஆன்மீக குருவாகவும் விளங்கிய சுந்தரேச சுவாமிகள், உள்ளுணர்வை வழங்கப் பொங்கும் வற்றாத ஊற்றாக இருந்து தம் வாழ்நாளில் கணக்கற்ற மக்களுக்கு உற்ற துணையாகத் திகழ்ந்தார். இன்றும் அவருடைய ஆன்மா தன் புதிய அமரத்துவ வீட்டிலிருந்துகொண்டு ஞான ஒளி, குன்றா மகிழ்ச்சி, பேரின்பம், அமைதி ஆகியவற்றை வெளிச்சமாகப் பாய்ச்சிக் கொண்டிருக் கின்றது.

அவருடைய மேன்மையான இலட்சிய வாழ்வு பற்றியும், சக்தி மிகுந்த அவருடைய தோற்றத்தைப் பற்றியும் நாம் கொள்ளும் நினைவு நமக்கு உள்ளுணர்வைப் பொங்கச் செய்யும்

தவறாத ஊற்றாக விளங்குவதாக! இலக்கை நோக்கி மௌன மாகச் செல்லும் நம் பயணப் பாதையைப் புலப்படுத்தும் கலங்கரை விளக்கமாக அவருடைய அறிவின் திட்பமும், உள்ளத்தின் உறுதியும், மதிப்பு மிகுந்த அவருடைய போதனை களும் உறுதுணை செய்வனவாக! உயர்ந்த பேரின்பமும், நீடித்த மகிழ்ச்சியும் நிலவும் தமது புதிய இருப்பிடத்தி லிருந்து, முடிவில்லாத, தேர்ந்த அவருடைய நல்லாசிகளை அவர் நம்மீது பொழிவாராக!

## 15. வில்வமங்கன்

தென்னிந்தியாவில் கிருஷ்ணவிநா நதிக் கரையில் உள்ள ஒரு சிறிய கிராமத்தில் இராமதாஸ் என்ற பக்தி மிகுந்த அந்தணருக்கு மகனாகப் பிறந்தவர், வில்வமங்கன். இராம தாஸ் வில்வமங்கனுக்கு மத போதனைகளை வழங்கி வேதங் களை எல்லாம் கற்கச் செய்தார். வில்வமங்கன் இளைஞனாக இருந்த போது இராமதாஸ் காலமாகிவிட்டார். வில்வமங்கனைத் தடுக்க யாரும் இல்லாத காரணத்தால், அவன் தீய பழக்கங்களை வளர்த்துக் கொண்டான். தூர்த்தர் அவனுக்கு நண்பராயினர். அவன் தன் தந்தையின் சொத்துக்கள் எல்லாவற்றுக்கும் வாரிசானான்.

ஒருநாள் அவன் தன் நண்பர்களுடன் இரவுக் கேளிக்கை நிகழ்ச்சிக்குச் சென்றான். நாட்டியப் பெண் சிந்தாமணியின் அழகில் மயங்கினான். தன் செல்வங்கள் எல்லாவற்றையும் அவளுக்கு வழங்கிய அவன் உண்மையில் அவளுக்கு அடிமை யாகி விட்டான்.

வில்வமங்கன் தன் தந்தைக்குச் சிராத்தச் சடங்கை (இறந்து ஓராண்டு நிறைவுற்றபின் செய்யும் சடங்கு) நடத்திக் கொண்டிருந்தான். அந்த நாளில்கூட அவன் மன மெல்லாம் அவள் மீதுதான் இருந்தது. ஒரு விநாடிகூட அவனால் அவளைவிட்டுப் பிரிந்திருக்க முடியவில்லை. எப்படியோ அவன் அந்தச் சடங்கை ஏனோ தானோ வென்று அரை மனதுடன் அக்கறையோ, பக்தியோ சிறிதும் இன்றி

நடத்தி முடித்தான். அந்தப் புனிதமான நாளில்கூட அவன் அவளைச் சந்திக்க விரும்பினான். அவன் ஓர் ஆற்றைக்கடக்க வேண்டியிருந்தது. ஏற்கெனவே இருள் சூழ்ந்து கிடந்தது. இடி, மின்னலுடன் புயல் காற்றுடன் மழை பெய்துகொண்டி ருந்தது. அவன் எதையும் பொருட்படுத்தவில்லை. என்ன நேர்ந்தாலும் அவன் அவளைச் சந்திப்பதென்ற முடிவுடன் இருந்தான். அவன் படகோட்டியை அணுகியபோது அவன் தெளிவாக மறுத்துவிட்டான். பின்னர் அவன் ஆற்றில் குதித்து முன்னேறலானான், நல்லவேளையாக அவன் ஒரு பெண்ணின் சடலத்தைக் குறுக்கிட்டான். அதை ஒரு மரத்துண்டு என்று கருதி அவன் அந்தச் சடலத்தின் உதவியால் எப்படியோ சமாளித்து ஆற்றின் மறு கரையைப் பாதுகாப்பாக அடைந்து விட்டான். ஆற்றைக் கடக்கும் போது அவனுடைய ஆடைகள் நழுவிச் சென்றமையால் நிர்வாணமாக நின்றான். அவன் வேகமாக ஓடிச் சிந்தாமணியின் வீட்டை அடைந்து கதவைத் தட்டினான். 'காமத்துக்குக் கண்ணில்லை' என்ற பழமொழி முற்றிலும் உண்மை. காம பரவசனாக உள்ள மனிதன் அச்சத்தையோ அவமானத்தையோ கருதுவதில்லை. இதை வடமொழியில் 'காமாதுரணும் ந பயம் ந லஜ்ஜா' என்று கூறுவர். அவனுடைய தந்தையின் சிரார்த்த நாளாக இருந்தமையால் அன்று சிந்தாமணி அவனை எதிர்பார்க்கவில்லை. அவள் கதவின் உட்புறம் தாழிட்டுவிட்டு உறங்கச் சென்று விட்டாள். வில்வமங்கன் பலமுறை உரத்த குரலில் சத்தமிட்டுக் கூவினான். பதில் ஏதும் கிடைக்கவில்லை. சுற்றுச் சுவரின்மேல் ஏறத்துணிந்து ஓரிடத்தில் சுவரின்மேல் இருந்து வெளிப்புறம் தொங்கிக்கொண்டிருந்த ஒரு பொருளைக் கயிறென்று கருதி அதன் உதவியால் சுவரின்மேல் ஏறினான். எப்படியோ அவன் உள்ளே நுழைந்து சிந்தாமணியை எழுப்பினான். அவள் அவனுடைய பரிதாபமான நிலையைப் பார்த்தவுடனே பெரும் திகைப்படைந்தாள். அவனுடைய உடம்பிலிருந்து வெறுக்கத்தக்க துர்நாற்றம் வீசிக்கொண் டிருந்தது. அவள் வெளியே வந்து பார்த்தாள்; அங்கே ஒரு பெரிய நாகப்பாம்பு இருந்ததைக் கண்டாள்.

வில்வமங்கன் நாகப்பாம்பைக் கயிறென்று தவருகக் கருதி விட்டான். கருணையால் அவள் அவனைப் பின்வருமாறு கண்டித்தாள்; ''சே! துன்பத்தையே தேடுகின்ற பாவி! பக்தி மிகுந்த அந்தணரின் புதல்வன் என்று உன்னை நீ சொல்லிக்கொள்கிருய். என்ன அவமானம்! நீ உன் குடும்பத்திற்கு அவமரியாதை தேடிவிட்டாய். உன் தந்தையின் ஆண்டுச் சிரார்த்தச் சடங்கு செய்த இன்றையநாளைப் புனிதமாகப் பாதுகாப்பதற்குப் பதிலாக இப்படி ஒரு பரிதாபமான நிலையில் என்னைச் சந்திப்பதற்காக வந்திருக்கின்ருய். வெறுத்து ஒதுக்கப்படவேண்டிய ஒரு முட்டாள் அல்லவா நீ! சதை, எலும்பு, இரத்தம் முதலியவற்ருல் ஆகியதும், மூத்திர மலங்கள் நிரம்பியும் உள்ள என் அழியத்தக்க உடம்பின் மீது நீ ஏன் இவ்வளவு மோகம் கொண்டிருக்கிருய்? வெறுப்பை மூட்டும் சடலத்தின் உதவியால் நீ ஆற்றைக் கடந்து வந்தாய்; அதன் துர்நாற்றத்தை இப்போது உன்னுல் சகித்துக் கொள்ள முடியவில்லை; ஆனுல் நேற்று வரை இறப்பதற்கு முன்பு, நீ மிகவும் ஆசை காட்டும் அவருப்பான என் உடம்பைக் காட்டிலும் அவளது உடம்பு மிகவும் கவர்ச்சி தரும் அழகுடன் இருந்தது. அழகின் ஊற்ருகவும், அழகுகளுக்கெல்லாம் அழகாகவும் உள்ள இறைவனுடைய காட்சி கிடைக்கவேண்டும் என்பதில் இது போன்ற ஆசையை நீ காட்டியிருந்தால் நீண்ட காலத்துக்கு முன்பே இறைவனுடைய கருணைமிக்க திருக்காட்சி உனக்கு வாய்த்திருக்கும்; அமரத்துவத்தையும் பேரின்பத்தையும் நீ அடைந்திருப்பாய்'' என்று கூறினுள்.

சிந்தாமணியின் இவ்வார்த்தைகள் வில்வமங்கனின் உள்ளத்தைத் தொட்டன. இப்போது அவனுடைய கண்கள் திறக்கப்பட்டு விட்டன. தன் பிள்ளைப் பருவ நாட்களையும் மத நூல்களைப் படித்துப் பெற்ற அறிவையும், தன் தந்தையிடம் தான் கொண்டிருந்த பக்தியையும் நினைவு கூர்ந்தான், அவன் மனமுடைந்து விம்மி விம்மி அழுதான். ஞானம் இப்போது உதித்தது. தெய்வீக அன்புக்கான உண்மையான விழிப்பு இப்போது ஏற்பட்டது. தன் உள்ளத்தினுள்

சிந்தாமணியைத் தன் குருவாகப் போற்றினன். அவன், ''தாயே! தாங்கள் என்னை மூடியிருந்த மாயையை அகற்றி விட்டீர்கள். தங்களுக்கு என்றும் நன்றியுடையேன், தாங்களே என் ஆன்மீக குரு'' என்று கூறி அவளுடைய காலடிகளில் வீழ்ந்து பணிந்தெழுந்து புறப்பட்டான். இறைவனைத் தேடி அவன் அலைந்து திரிந்தான்.

சிலநாள் கழித்து அவன், தெருவில் ஓர் அழகிய இளம் பெண்ணைக் கண்டான். அவன் காம பரவசமடைந்தான். அவன் மனம் அலைபாய்ந்தது. அவனுடைய கண்கள் அவள் பக்கம் திரும்பின. அவன் அவளைப் பின்தொடர்ந்து அவளுடைய வீடுவரை சென்றான். அவள் உள்ளே சென்று மறைந்து விட்டாள். ஏமாந்த மனப்பான்மையுடன் அவன் வெளிப்புறத்துத் திண்ணையில் அமர்ந்தான். வீட்டின் சொந்தக்காரன் வெளியில் வந்து வில்வமங்களைப் பார்த்து அவன் அங்கு வந்ததன் நோக்கத்தை வினவினன். அவன் தன் உள்ளக் கிடக்கை முழுவதையும் வெளிப்படையாகத் தெரிவித்தான். தன் மனம் திருப்தியடையுமாறு அந்தப் பெண்ணின் முகத்தை ஒரே ஒருமுறை காண்பதற்காக அவளை அழைத்து வருமாறு வேண்டினன். நற்பண்புள்ள அந்த வணிகன் உள்ளே சென்று தன் மனைவியாகிய அந்தப் பெண்ணைக் காண்பதனல் வில்வமங்கன் திருப்தியடையக் கூடும் என்றல் அப்படியே அடையட்டும் என்று கருதி அவளை அழைத்துவர உள்ளே சென்றான்.

கருணை மிகுந்த இறைவன் இப்போது அவனுடைய உதவிக்கு வந்தார். அவனுடைய மனத்தில் தவற்றுக்காக வருந்தும் வருத்தமும், ஞானமும் நிரம்புமாறு செய்தார். அருகில் இருந்த வேலமரத்திலிருந்து இரண்டு முட்களை, வில்வமங்கன் பறித்தான். வணிகன் தன் மனைவியை அழைத்து வந்தான். வில்வமங்கன் அவளைப் பார்த்துவிட்டுத் தனக்குள் தன்னையே கண்டித்து, ''அறிவற்ற கண்களே! இப்படி ஒரு அறிவற்ற வழியில் செல்லுமாறு நீங்கள்தான் என்னைச் செலுத்தினீர்கள். இப்போது உங்களைக் கடுமையாகத் தண்டிக்கின்றேன்'' என்று கூறினன்.

இது ''ஏசுபெருமான் வழங்கிய மலையுபதேசம் போன்றது. உன் கண்கள் தீங்கு செய்தால் அவற்றைப் பிடுங்கிவிடு. உன் கைகள் தீங்கு செய்தால் அவற்றை வெட்டிவிடு'' என்று அவர் அறிவுரை கூறியுள்ளார்.

வில்வமங்கன் கூர்மையான இரண்டு முட்களால் தன் கண்களைக் குத்திக் கொண்டான். கண்களில் இரத்தம் ஆறாகப் பெருகியது. பின்னர் அவன் ஆனந்த பரவசமடைந்து இறைவனுடைய நாமத்தை உச்சம் மிகுந்த தன் உரத்த குரலில் உச்சரித்துக்கொண்டு கூத்தாடத் தொடங்கினான். அவனுடைய உள்ளம் இப்போது தூய்மைபெற்று விட்டது. இறைவனுடைய கருணை அவன்மீது இறங்கியது. கிருஷ்ணபகவானுடைய தரிசனம் கிடைக்கவேண்டும் என்ற அவனுடைய ஏக்கம், உணர்ச்சியும் ஆர்வமும் மிகுந்து காணப்பட்டது. அவனுடைய உள்ளத்தில் விரகத்தீ பற்றிக் கொண்டது. நாளுக்கு நாள் அவன் மெலிந்து தோற்றமளித்தான். பொங்கும் ஊற்றைப்போல் அவன் கண்கள் கண்ணீரைப் பொழிந்தன. உண்ணும் உணவும் பருகும் நீரும் இன்றி அவன் காடுகளில் அலைந்து திரிந்தான்.

கிருஷ்ணபகவான், மாடுமேய்க்கும் ஒரு சிறுவனுடைய வடிவம் தாங்கி வில்வமங்கனின் முன்னே தோன்றி ''அன்புள்ள பெரியவரே! இப்போது நீங்கள் பசியோடும் தாகத்தோடும் காணப்படுகிறீர்கள். நான் கொஞ்சம் பலகாரங்களையும் தண்ணீரையும் கொண்டுவந்திருக்கின்றேன். தயவு செய்து ஏற்றுக்கொள்ளுங்கள்'' என்று கூறினார். வில்வமங்கன் எல்லையில்லாத களிப்படைந்தார். அவர் சிறுவனிடம் 'அன்புள்ள குழந்தாய்! உன் பெயர் என்ன? நீ எங்கே வசிக்கின்றாய்? நீ என்ன தொழில் செய்கின்றாய்?' என்று வினவினார். சிறுவன், 'அன்புள்ள பெரியவரே! நான் இங்குதான் வசிக்கின்றேன். எனக்கென்று ஒரு பெயரும் இல்லை. தாங்கள் எந்தப் பெயராலும் என்னை அழைக்கலாம். நான் மாடுமேய்க்கின்றேன். என்னிடம் அன்பு பாராட்டுவோரிடத்து நானும் அன்பு செலுத்துகின்றேன். நான் நாள்தோறும் இங்கு வந்து தங்களுக்கு

உணவு படைக்கின்றேன்' என்று கூறினான். சிறுவனுடைய இந்த இனிமையான சொற்கள் வில்வமங்கனுக்கு அளவற்ற மகிழ்ச்சியைத் தந்தன. கிருஷ்ண பகவான்தான் அந்தச் சிறுவன் என்று அவர் அறியவில்லை. எப்படியோ அந்தச் சிறுவன் அவருடைய உள்ளத்தைத் தனக்குச் சொந்தம் ஆக்கிக்கொண்டான். சிறுவன் அவரிடம் மீண்டும் ஒருமுறை வந்து 'அன்புள்ள பெரியவரே! தாங்கள் என்னுடன் பிருந்தாவனத்துக்கு வருகிறீர்களா?' என்று வினவினான். பிருந்தாவனத்தின் பெயரைக் கேட்டவுடனே அவர் ஆனந்தக் களிப்பை அடைந்தார். அவர், 'அன்புள்ள குழந்தாய்! நான் குருடாக இருப்பதனால் பிருந்தாவனத்துக்கு எப்படி வருவேன்?' என்று விடை தந்தார். சிறுவன், 'அன்புள்ள பெரியவரே! இந்தக் கோலின் ஒரு முனையைப் பிடித்துக்கொள்ளுங்கள். நான் மறுமுனையைப் பற்றிக் கொண்டு தங்களை அழைத்துச் செல்லுகின்றேன்' என்று விடை கூறினான். வில்வமங்கன் ஒத்துக்கொண்டார். கிருஷ்ண பகவான் அவரைக் கோலின் உதவியால் அழைத்துச் சென்றார். கடவுள் எவ்வளவு கருணையுள்ளவர்! சிறுவன், ''பெரியவரே! இதோ பாருங்கள், நாம் பிருந்தா வனத்தை அடைந்து விட்டோம்'' என்று கூறினான். சிறுவன் தம்மிடம் விளையாடுவதாக அவர் கருதினார். அவர் அவனை நம்பவில்லை. அவர் சிறுவனுடைய கையைப் பிடித்துக் கொண்டார். கைபட்டவுடனே காந்தசக்திபோல் உணர்வு பாய்ந்து அவருடைய திவ்விய சக்ஷு (உள்ளே இருக்கும் ஞானக்கண்) திறந்து கொண்டது; அவருடைய உள்ளத்தில் தெய்வீகக் கிளர்ச்சி உண்டாயிற்று. பொலிவும் அழகும் மிகுந்த, அவர் பக்தி செலுத்திய பகவானுடைய திருமுகத்தை அவர் கண்டார். அவர், ''கண்ணா! பலப்பல ஆண்டுகள் நான் போராடிய பிறகு உன்னைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டேன்,'' என்று கூறினார். கிருஷ்ணபகவான் வலிமையுடன் கையை இழுத்துக்கொண்டு வில்வமங்கனின் பிடியிலிருந்து தம்மை விடுவித்துக் கொண்டார்.

வில்வமங்கன், கண்ணு! என்னுடைய கையின் பிடியி லிருந்து சமாளித்து உன்னை விடுவித்துக் கொண்டாய். ஆனுல் இப்போது உனக்குச் சவால் விடுகின்றேன். நான் என்னுடைய சவாலைக் கூறுகின்றேன். என்னுடைய உள்ளம் என்னும் சிறையிலிருந்து உன்னை விடுவித்துக்கொள்ள முயற்சி செய். அங்கே உன்னை நான் நிலை நிறுத்திவிட்டேன்'' என்று கூறினுர். கிருஷ்ண பகவான், 'என் அன்புக்குரிய வில்வ மங்களா! நான் நிச்சயம் தோற்று விட்டேன். என்னைக் கட்டிவைக்கும் ஒரே கயிறு பக்தியன்புதான். நான் இனி எப்படித் தப்ப முடியும். நான் உன்னுடைய அடிமை' என்று கூறினுர்.

கிருஷ்ண பகவான் தம்முடைய கை விரல்களினுல் வில்வ மங்கனின் கண்களைத் தடவினுர். அவர் தாம் இழந்த பார்வையை மீண்டும் பெற்றுர். அவர் கிருஷ்ண பகவா னுடைய அழகிய முகத்தைக் கண்டார். அவர் பகவா னுடைய கமல பாதங்களில் பணிந்து அவற்றைத் தம் கண்ணீரால் நீராட்டினுர்.

கிருஷ்ண பகவான் அவரைத் தூக்கி நிறுத்தி அரவணைத்துக் கொண்டார். நாட்டியப் பெண் சிந்தாமணி, வணிகன், வணிகனுடைய மனைவி ஆகியோரும் கிருஷ்ண பகவானுடைய தரிசனத்தைக் காணும் பாக்கியத்தை அடைந்தார்கள்.

வில்வமங்கன் (சூர்தாசர்) எஞ்சியிருந்த தம் வாழ் நாட்களைப் பகவானுடைய நாமத்தின் பெருமையையும், பக்தியையும் பரப்புவதில் கழித்தார். இன்று இந்தியா முழுவதும் அவருடைய உணர்ச்சிமிக்க பாடல்கள் பாடப் படுகின்றன. இறுதியில் அவர் பரந்தாமம் என்னும் பேரின்பம் நிறைந்த, அழியாத அமைதி இல்லத்தை அடைந்தார்.

# 16. நந்தனுர்

நந்தனுர், தென்னிந்தியாவில், தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர். அவர் பறையர் குலத்தில் உதித்த ஞானி. பணிவு, பொறுமை, நேர்மை ஆகியவற்றின் உருவமாக அவர் இருந்தார். சிதம்பரத்தில் உள்ள நடராசப் பெருமானுடைய பெருமை மிக்க பக்தர், அவர். சிதம்பரம், தென்னிந்தியாவின் காசி என்று புகழப்படுகின்றது. அங்கு பெரிய கோயில் உள்ளது. இக்கோயிலில் வணங்கப்படும் சிவபெருமானுடைய மற்ருெரு பெயர், நடராசர். நீங்கள் சிதம்பரத்தில் சில நாள் தங்கினுல் உங்கள் பாவங்கள் யாவும் அழிந்துவிடும். இது மக்களின் நம்பிக்கை.

நந்தனுர், ஓர் அந்தணரிடம் உழவுத் தொழில் செய்து வந்தார். சிதம்பரத்திற்குச் சென்று நடராசப் பெருமானைத் தரிசித்து வருவதற்காக நந்தனுர் தம் எஜமானரிடம் அனுமதி கேட்டபோது அவர் கண்டித்து, ''ஈனக் குலத்தைச் சேர்ந்த பறையா! நீ அந்தணர் தெய்வத்தை வணங்க விரும்புகின்ருய். போ! உன் குல தெய்வங்களாகிய பேய்களை (பூதங்கள்) வணங்கு' என்று வசை பாடினுர். நந்தனுர், நடராசப் பெருமானுடைய பெருமை மிக்க பக்தர். அவர் எப்போதும் பக்தியுடன் தொழுது கொண்டு இருந்தார். இடைவிடாது நந்தனுர் வேண்டிய காரணத்தால், அந்தண நிலப்பிரபு ''சரி, 250 ஏக்கர் பரப்புள்ள வயலில் உரிய காலத்திற்குள் நெல் விதைத்து முடித்து விட்டால், நீ சிதம்பரத்துக்குப் போகலாம்'' என்று கூறினுர். நந்தனுர் பெருந்துயரமுற்ருர். சிதம்பரத்தில் ஆண்டு தோறும் நடைபெறும் ஆதிரைத் திருவிழாவைக் காண அவர் விரும்பினுர். இரண்டே நாளில் அவர் தம் பணியை முடிக்க வேண்டியிருந்தது. அவர் தம்மையே நொந்து கொண்டு நடராசப் பெருமானுடைய கருணையையும் வழிகாட்டுதலையும் வேண்டி இரவு முழுதும் தொழுது கொண்டிருந்தார். நடராசப் பெருமான் தம் பக்தருக்கு உதவி செய்வதற்காக ஓர் அற்புதத்தை நிகழ்த்தினுர். அடுத்தநாட் காலையில்

பார்க்கும்போது 250 ஏக்கர் வயற்பரப்பு முழுவதும் பசுமை யான நெற் பயிர் விளைந்து கதிர்கள் முற்றிச் சாய்ந்து காணப்பட்டன. அந்தணர் பெரும் ஆச்சரியமடைந்தார். நந்தனார் பெரும் பக்தராக இருக்க வேண்டும் என்று அவர் கருதினார். சிதம்பரத்திற்குச் செல்ல அவர் உடனே அனுமதி தந்தார்.

இவ்வாறு நந்தனார் சிதம்பரத்திற்குச் செல்ல முடிந்தது. இங்கு அவர் இன்னொரு தடையைச் சந்திக்க வேண்டி யிருந்தது. அவர் தாழ்த்தப்பட்ட குலத்தைச் சேர்ந்தவர் என்ற காரணத்தினால் கோயில் அர்ச்சகர்களாகிய அந்தண தீட்சிதர்கள் அவரைக் கோயிலுக்குள் நுழைய அனுமதிக்க வில்லை. நடராசப் பெருமான் அவர்களுடைய கனவில் தோன்றி, ''அர்ச்சகர்களே! நந்தனாருடைய தீட்டை நீக்கித் தூய்மைப்படுத்துவதற்குத் தேவையான எல்லாச் சடங்கு களையும் நிறைவேற்றுங்கள். அவர் என்னுடைய பெரும் பக்தர். அவர் கோயிலுக்குள் வந்து என்னை வணங்க அனுமதியுங்கள்'' என்று அறிவித்தார்.

அவ்வாறே அந்தணர்கள் சடங்குகளைச் செய்து அவரைக் கோயிலின் உள் கருவறைக்குச் செல்ல அனுமதித்தனர். நந்தனார் கருவறைக்குள் சென்று நடராசப் பெருமானைத் தொழுது தெய்வீகப் பரவசத்தின் உச்ச நிலையை அடைந் தார். கண்ணைப் பறிக்கத்தக்க மின்னல்போன்ற பேரொளி தோன்றிற்று. நந்தனார் மறைந்துவிட்டார். அவர் எங்கும் காணப்படவில்லை. அவர் நடராசப் பெருமானுடன் ஐக்கியமாகிவிட்டார்.

உயர்குல அந்தணருக்கும், தாழ்குலப் பறையருக்கும் இடையே இறைவன் எவ்வித வேறுபாடும் பாராட்டுவதில்லை. அவன் வேண்டுவது நேர்மையான பக்தியையே. கோயில் அந்தண அர்ச்சகர்களைக் காட்டிலும் இறைவனுக்கு மிகவும் வேண்டியவராக இருந்தவர் நந்தனார் ஆவர். பக்தியுலகில் சாதி, குலம், நிற வேறுபாடுகள் இல்லை. பக்தியுள்ளவனே இறைவனுக்கு வேண்டியவன்.

# 17. ஞான தேவர்

## (1)

மராட்டிய மாநிலத்தில் வாழ்வோர் ஒவ்வொருவருடைய உதடுகளும் அருள்ஞானி ஞானதேவருடைய பெயரைப் பேசுகின்றன. அவர் பிறவிச் சித்தர். மிகப் பெரும் சாதனைகளையடைந்த ஒரு யோகி, அவர். ஐம்பெரும் பூதங்களும் அவருக்குப் கட்டுப்பட்டிருந்தன. அவருடைய நூலாகிய 'ஞானேஸ்வரி', மராத்திய இலக்கியத்தின் மணி முடியை அலங்கரிக்கும் இரத்தினமாக விளங்குகின்றது. நடையில் எளிமை, அழகிய எடுத்துக்காட்டுகள், பொருத்த மான உவமைகள் ஆகியவை நிறைந்த அந்த நூல் படிப்பவர் மனத்தைக் கவர்வதாகவும், மகிழ்விப்பதாகவும், எல்லை யற்ற பயன் பெறுவிப்பதாகவும் திகழ்கின்றது. இந்துஸ்தான மக்களுக்குத் துளசிதாசரின் இராமாயணத் தைப்போல் மராட்டியர்களுக்கு ஞானேஸ்வரி சிறப்புடைய தாக உள்ளது. அவர் சில காலமே வாழ்ந்தார்; ஆனால் பல அற்புதங்களைச் செய்தார். அவர் ஒரு மேதையாகவும், ஆன்மீக அனுபவங்கள் மிகுந்த யோகியாகவும், மிகவும் உயர்ந்த நிலையை அடைந்த ஞானியாகவும் விளங்கினார். அவர் மிகப் பெரும் சமுதாய, மதச் சீர்திருத்தவாதி. மராட்டிய மாநிலத்தில் பெருமை மிக்க பக்தி இயக்கத்துக்கு அவர் அடித்தளம் அமைத்துத் தந்தார். இதயத்தில் வைத்துப் போற்றப்பட வேண்டிய இனிய கவிஞர் அவர்.

உயர்ந்த ஞானிகள், தீர்க்கதரிசிகள், உலக குருமார்கள் ஆகியோருடைய வாழ்க்கை வரலாறு, தோற்றம் முதலிய செய்திகள் மிகவும் வியப்பைத் தருவனவாகவும், புரியாத புதிர்களாகவும், உள்ளன. ஞானதேவர் ஒரு துறவியின் மகன். ஏசுநாதர் பிறப்பில் மாசற்றவர்; அவருடைய தந்தை ஒரு கிராமத்தின் தச்சர். அவர் அரண்மனையில் பிறக்கவில்லை. வைக்கோற்போர்கள் அடுக்கி வைக்கப் பட்டிருந்த ஒரு மாட்டுத் தொழுவத்தில் அவர் பிறந்தார், கபீர் ஒரு நெசவாளியின் மகன், அவர் ஒரு குளத்தில் கண்டு

கொண்டுவரப்பட்டார். சங்கரர் காலடி என்ற ஊரில் தந்தை மறைவுக்குப் பின் பிறந்த ஓர் ஏழைக் குழந்தை.

ஞானதேவர், ஞானேஸ்வரர் (அறிவு ஞானத்தின் தெய்வம்) என்று சில சமயம் அழைக்கப்படுகிறார். அவர் மராட்டிய மாநிலத்தின் பழம் பெருமை வாய்ந்த ஞானியருள் ஒருவர். அவரும், நூறாண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த முகுந்தராயும் மராட்டியத்தில் பக்தி இயக்கத்தைத் தொடங்கி வைத்தவர்கள் ஆவர்.

பதின்மூன்றாம் நூற்றாண்டில் சுபேகாவனம் என்ற ஊரில் கோவிந்த பந்த் என்ற கணக்குப் பிள்ளை வாழ்ந்தார். அவருக்கு விட்டல் பந்த் என்ற ஒரே புதல்வன் இருந்தான். விட்டல் பந்த, ஞானதேவரின் தந்தை. விட்டல் பந்த், பிள்ளைப் பருவத்திலிருந்தே பக்தியும் வைராக்கியமும் உள்ளவர். புனித தலங்களுக்கு யாத்திரை செய்வதில் அவருக்கு மிகுந்த பிரியம் இருந்தது. அவர் வடமொழியில் ஆழ்ந்த புலமை வாய்ந்தவர். மெய்யுணர்வு பெற அவருடைய உள்ளம் ஏங்கியது. துறவு மார்க்கத்தில் செல்ல அவர் பெரும் வேட்கை கொண்டார்.

ஆலந்தி ஊரைச் சேர்ந்த ஸ்ரீதர் என்பாருடைய பெண் ருக்மாபாயை விட்டல் பந்த் மணந்து கொண்டார். ஆலந்தி, பூனாவிலிருந்து பன்னிரண்டு மைல் தூரத்தில் உள்ளது. பூனாவில் ஞான தேவரின் சமாதி உள்ளது.

விட்டல் பந்த் உலக வாழ்வில் வெறுப்படைந்தார். அவர் யாத்திரை சென்று ஆலந்திக்குத் திரும்பி வந்தார். அவர் துறவு மேற்கொள்ள விழைந்தார். அவருடைய மனைவியும் மாமனாரும் அதற்கு இணங்கவில்லை.

விட்டல் பந்த் காசிக்குச் சென்று ஸ்ரீபாதயதிகளிடமிருந்து (இராமானந்த சுவாமிகள்) சந்நியாசம் பெற்றுக் கொண்டார். ருக்மாபாய், தன் கணவர் வாழ்வின் நான்காவது ஆசிரமத்தைத் தழுவிக் கொண்டார் என்று அறியலானாள். இது அவளுக்குப் பெரும் அதிர்ச்சியைத் தந்தது. கணவனோடு தன்னை மீண்டும் சேர்த்து வைக்குமாறு அவள் இறைவனிடம் இறைஞ்சினாள்.

ஸ்ரீபாதயதிகள் (இராமானந்த சுவாமிகள்) — விட்டல் பந்தின் குரு — இராமேஸ்வரம் நோக்கிச் செல்லும் வழியில் ஆலந்தி ஊருக்கு வர நேர்ந்தது. ருக்மாபாய் அவரை அணுகி அவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தாள். யதிகள், "நான்கு குழந்தைகட்குத் தாய் ஆகுக!" என்று அவளை ஆசீர்வதித்தார். ருக்மாபாய் விம்மி விம்மி அழுதாள். யதிகள், "நல்லாசிகட்குரிய தாயே! உன் துயரத்திற்குக் காரணம் என்ன?" என்று வினவினர். பின்னர் அவள் அவருக்கு யாவற்றையும் விளக்கினள்.

சமீபத்தில் தம்மிடம் சந்நியாசம் பெற்ற இளைஞனே இவளுடைய கணவனாக இருக்க வேண்டும் என்று யதிகள் கருதினர். இராமேஸ்வரத்திற்குப் போகும் எண்ணத்தை அக்கணமே அவர் கைவிட்டார், அவர் காசிக்குத் திரும்பி வந்து தம் சீடரைக் கண்டித்து, 'கிரகஸ்த ஆசிரமத்திற்குத் திரும்பிச் செல்; உன் மனைவியை மகிழ்வி. அவள் உனக்குச் சேவை செய்ய விரும்புகின்றாள். உனக்கு என் நல்லாசிகள்; என்று அறிவுரை கூறினர்.

தம் குருவின் ஆணையை நிறைவேற்ற விட்டல் பந்த் ஆலந்திக்குத் திரும்பி வந்து தம் மனைவி ருக்மாபாயுடன் வாழ்ந்தார். ஆலந்தியின் வைதிகப் பிராமணர்கள் அவரையும் அவருடைய மனைவியையும் தங்கள் சாதிக்குப் புறம்பாகத் தள்ளிவைத்தனர், அவர்கள், "சந்நியாசம் பெற்ற ஒருவர் திரும்பவும் இல்வாழ்க்கை நிலைக்கு வருவது வேத விரோதம்" என்று கூறினர். ஆனால் விட்டல் பந்த், தம் குருவின் கட்டளையைத் தாம் நிறைவேற்றுவதனால் தாம் செய்வது சரியே என்று கருதினர்.

நாளடைவில் விட்டல் பந்துக்கும் ருக்மாபாய்க்கும் நான்கு குழந்தைகள் பிறந்தன (1) நிவ்ருத்தி — கி. பி. 1273ல் (2) ஞானதேவர் — கி. பி. 1275ல் (3) சோபனா — கி. பி. 1277ல் (4) முக்தாபாய் — கி. பி. 1279ல். (மூன்று புதல்வர்களும் ஒரு புதல்வியும்). நிவ்ருத்தி

சிவபெருமானுடைய அவதாரமாகவும், ஞானதேவர் திருமாலின் அவதாரமாகவும், சோபஞ பிரம்மாவின் அவதாரமாகவும், முக்தாபாய் சரஸ்வதியின் அவதாரமாகவும் கருதப்படுகின்றனர்.

(2)

ஆலந்தியில் அந்தணர்கள் விட்டல் பந்தை ஒதுக்கி வைத்து அவரைத் தீண்டத் தகாதவராக நடத்தினர். அவர்கள் பல தொல்லைகளைத் தந்து அவமானப்படுத்தினர். ஊரில் உள்ள ஏனைய குழந்தைகள் அவருடைய குழந்தைகளுடன் கலந்து விளையாடமாட்டார்கள்.

குழந்தைகள் பிள்ளைப் பருவத்தை அடைந்தனர். பெற்றோர்கள் அவர்களுக்குப் புனிதமான பூணூற் சடங்கை நடத்த விரும்பினர். அந்தணர்கள் சடங்கை நடத்த மறுத்தனர். அவர்கள், ''ஒரு துறவி இல்லற வாழ்வை நடத்தக் கூடாது. துறவியின் குழந்தைகளுக்குப் பூணூற் சடங்கை நடத்த வேதங்கள் அனுமதிக்கவில்லை. துறவி பெற்ற புதல்வர்கள் பூணூல் அணியும் உரிமையைப் பெற முடியாது. வேதங்களின் புனிதமான விதிகளை நீயும் உன் மனைவியும் மீறி விட்டீர்கள். உங்கள் இருவருக்கும் ஒரே ஒரு பிராயச்சித்தம் இருக்கிறது. நீங்கள் இருவரும் பிரயாகையில் ஓடும் திரிவேணியில் விழுந்து உயிர் துறக்க வேண்டும்'' என்று கூறினார்கள்.

அவர்கள் ஆலந்தியை விட்டுப் புறப்பட்டுப் பிரயாகையில் கங்கையும் யமுனையும் கூடும் இடத்தில் விழுந்து தங்கள் உயிரைத் துறந்தார்கள். அந்தணர்கள் அவர்களின் புதல்வர்கள் மீது இரக்கங்கொண்டு பூணூற் சடங்கை நடத்தி வைப்பார்கள் என்று அவர்கள் நினைத்தார்கள். நிவ்ருத்தி பத்து வயதையும், ஞானதேவர் எட்டு வயதையும் இளையவன் ஐந்து வயதையும் அடைந்திருந்தனர்.

ஒரு முறை விட்டல் பந்த் தம் குழந்தைகளுடன், கோதாவரி உற்பத்தியாகும் இடத்தில், நாசிக் நகருக்கு அருகில் உள்ள திரியம்பகேசுவரர் ஆலயத்திற்குச் சென்றிருந்தார். அவர்கள் பிரம்மகிரி மலையைச் சுற்றி வலம் வரும் போது ஒரு புலி வந்துவிட்டது. விட்டல் பந்த் தம் குழந்தைகளுடன் விரைந்து ஓடி விட்டார்; ஆனால் நிவ்ருத்தி நாதனைத் தவற விட்டு விட்டார். நிவ்ருத்தி ஞானிநாதரின் குகைக்குள் நுழைந்தான். ஞானிநாதர் நிவ்ருத்திக்கு யோகத்தின் இரகசியங்களை உபதேசித்து ஆன்மீகச் செல்வங்கள் எல்லாவற்றையும் வழங்கினார். சில நாள் கழித்தபின் நிவ்ருத்தி தன் தந்தையோடும், தம்பியாரோடும் வந்து சேர்ந்து கொண்டான்.

நிவ்ருத்தி ஞானிநாதருடைய சீடன் ஆனார். அவர், கோரக்நாதருடைய சீடர் ஆவார். அவர், சிவபெருமானிடம் நேராக ஆன்மீக உபதேசங்களைப் பெற்ற மத்ஸ்யேந்திர நாதருடைய சீடர். நிவ்ருத்தியும் ஞானதேவரும் தங்கள் தந்தையிடம் வேதங்களைப் பயின்றிருந்தனர். இப்போது அவர்கள் வேதங்களைப் பயின்று பெரும் முன்னேற்றத்தை அடைந்தனர்.

ஞானதேவர் பெற்றோரின் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டுப் பூணூல் அணிவதில் மிகவும் கருத்துள்ளவராக இருந்தார்; அதற்காக அல்லவா அவருடைய பெற்றோர்கள் தங்கள் உயிரையும் தியாகம் செய்தார்கள்? அவர் மீண்டும் ஆலந்தி அந்தணர்களை அணுகினார். சிறுவர்களின் கதியற்ற நிலையைப் பார்த்து அந்த அந்தணர்கள் இப்போது இரக்கங் கொண்டார்கள். அவர்கள் ''பைத்தான் நகரில் உள்ள கற்றறிந்த அந்தணர்களிடமிருந்து அதிகாரபூர்வமான கடிதம் பெற்று அதைக் கொண்டு வாருங்கள், பிறகு நாங்கள் உங்களுக்குப் பூணூற் சடங்கை நடத்தி வைக்கிறோம்'' என்று தெரிவித்தார்கள். அவர்கள் பைத்தான் நகருக்குச் சென்று அங்கிருந்த கற்றறிந்த அந்தணர்களைச் சந்தித்தனர். சிறுவர்கள் வேத மந்திரங்களை ஓதினர்.

அந்தணர்கள் அவர்களைப் பார்த்து, வேதங்களை ஓதும் உரிமை உங்களுக்கு இல்லை. எனவே வேதம் ஓதுவதை நிறுத்துங்கள். நீங்கள், இல்லறத்திற்குத் திரும்பி வந்த ஒரு துறவியின் புதல்வர்கள் என்று கூறினர். ஞானதேவர், ''யாரும் வேதத்தை ஓதலாம். இதோ இந்த எருமைகூட ஓதலாம்'' என்று அங்கிருந்த ஓர் எருமையைச் சுட்டிக் காட்டினார். அவர் அதன் முதுகின் மீது தம் கையை வைத்தார். அது உடனே சரியான உச்சரிப்போடும், இசை நயத்தோடும், தகுந்த ஒலி அழுத்தத்தோடும், ஞானதேவர் விட்ட இடத்திலிருந்து வேதங்களை ஒரு மணி நேரம் ஓதியது. அந்தணர்கள் வியப்பாலும் பயத்தாலும் தாக்குண்டு செயலற்று நின்றனர். அவர்கள், ''இவர்கள் சாதாரணச் சிறுவர்கள் அல்லர். உண்மையில் சிவபெருமான், விஷ்ணு, பிரம்மா ஆகியோருடைய அவதாரங்களே இவர்கள்'' என்று கூறினர். அவர்கள் பிறவிச் சித்தர்கள். அப்படியிருந்தும் அவ்வந்தணர்கள் அவர்களுக்குப் பூணூற் சடங்கை நடத்தி வைக்க மறுத்து விட்டனர். அவர்கள் சிறுவர்களுடைய பெருமையை ஒத்துக்கொண்டனர். பைத்தான் நகரத்து எருமை, பூனா மாவட்டத்தில் உள்ள ஏல் நகரில் இறந்து விட்டது. அதற்கொரு சமாதி கட்டப்பட்டது. அச்சமாதி இன்றும்கூட இருக்கிறது.

### (3)

அவர்கள் பைத்தான் நகரில் தங்கி மக்களுக்குக் கீதையைப் போதித்தனர். ஞானதேவர் பல அற்புதங்களைச் செய்தார். ஓர் அந்தணர் தம் தந்தைக்கு ஆண்டு நினைவுச் சிராத்தச் சடங்கை நடத்த வேண்டியிருந்தது. பிற அந்தணர்கள் வந்து சேரவில்லை. ஞானதேவர் விண்ணுலகத்திலிருந்து பித்ருக்களையே நிலவுலகுக்கு வந்து சேருமாறு செய்தார். சச்சிதானந்தபாலா என்ற இறந்த மனிதரை உயிர்த்தெழச் செய்தார்.

அவர் தமது பதின்மூன்றும் வயதில் 'கீத ஞனேஸ்வரி' என்ற அற்புதமான விளக்கவுரையை எழுதினார். அஹ்மத் நகர் மாவட்டத்தில் ப்ரவாரா நதிக்கரையில் உள்ள நிவாசா

என்ற ஊரில் 1212-ல் அவ்வுரைநூல் நிறைவு பெற்றது. உண்மையில் அதை எழுதியவர் சச்சிதானந்த பாவா. கீதை பற்றிய அவ்வுரை நூல் மிகவும் சிறந்த கீதைப் பேருரைகளில் ஒன்றாக மதிக்கப்படுகின்றது. காசியில் வடமொழி வல்லு நர்கள் அடங்கிய பேரவையில் அவர் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டார்.

நிவ்ருத்தி, ஞானதேவர், சோபனு, முக்தாபாய் ஆகியோர் தலயாத்திரை செய்யப் புறப்பட்டுப் பண்டரிபுரம், பிரபாசம், துவாரகை, அயோத்தி, மதுரை, ஹரித்துவாரம், காசி, காஞ்சி, உஜ்ஜையினி, திருப்பதி, இராமேஸ்வரம், மதுரை (தமிழ் நாடு), கோகர்ணம் முதலிய புண்ணிய தலங்களைத் தரிசித்தனர். நாமதேவர் அவர் களோடு உடன் சென்றார்.

ஞானதேவர், ஞானேஸ்வரி கீதையை நிறைவு செய்த பிறகு ஆறுண்டுகள் வரையில் உயிர் வாழ்ந்தார்.

ஞானதேவர், சங்கதேவரைச் சந்தித்தார். சங்கதேவர் தமது யோக மகிமையால் மரணத்தை வெற்றி கொண்டு 1400 ஆண்டுகள் வாழ்ந்த புகழ்பெற்ற ஞானியாவார். வடேஷ்கர் என்ற ஊரில் அவர் வழக்கமாக வாழ்ந்து வந்தார். தம் யோக சாதனைகளைப் பற்றி அவர் மிகுந்த கர்வம் கொண்டிருந்தார். எல்லா உயிரினங்களையும் கட்டுப் படுத்துவதில் (பூதசித்தி) அவர் நிறைவு பெற்றிருந்தார். பாம்பை ஒரு சாட்டையாகக் கொண்டு அவர் புலியின்மீது சவாரி செய்வது வழக்கம். ஞானதேவரைப் பார்க்க வேண்டும் என்ற ஓர் ஆர்வம் சங்கதேவருக்கு ஏற்பட்டது. தம் சீடர்களடங்கிய பெருங்கூட்டத்துடன், பாம்பைச் சாட்டையாகக் கையில் ஏந்திப் புலியின்மீது சவாரி செய்தவ ராக அவர் புறப்பட்டார். எல்லா ஆடம்பரங்களோடும் சங்கதேவர் வருவதை ஞானதேவரும் அவருடைய சகோதரர் களும் கண்டனர். ஞானதேவர் தாம் அமர்ந்திருந்த ஒரு குட்டிச் சுவரை, சங்கதேவரை வரவேற்பதற்காக முன் நோக்கி நகர்ந்து செல்லுமாறு பணித்தார்.

ஞானதேவர் செய்த இந்த மிகப் பெரும் அற்புதத்தைச் சங்கதேவர் கண்ணுற்றார். அவருக்கு அவமானம் ஏற்பட்டு விட்டது. அவர் அமைதியாகப் புலியை விட்டிறங்கி ஞான தேவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்து அவரைத் தம் குருவாக ஏற்றுக்கொண்டார்.

பதினைன்கு வயது நிரம்பிய பெண்ணாகிய முக்தாபாய், 1400 ஆண்டுகள் நிறைந்த முதியவராகிய சங்கதேவரைப் பார்த்து, ''சங்கதேவரே! கேளுங்கள். நீங்கள் முக்தி யடைய விரும்பினால் முதலாவது படி, நேர்மையான பக்தி யாகும். பக்தியினால் வைராக்கியம் உண்டாகும். வைராக் கியத்தின் விளைவு, ஞானம். எனவே உங்கள் இலக்கு ஞானமாக இருக்க வேண்டும்; நீங்கள் முதல் அடி வைக்கும் இடம் பக்தியாக இருக்க வேண்டும்'' என்று கூறினாள்.

ஞானதேவர் ஐம் பூதங்களையும் தம் முழுமையான கட்டுப்பாட்டில் வைத்திருந்தார். பா த் தி ர ம் எதுவும் இல்லாத ஒரு சமயம் அவருடைய தங்கை, அவருடைய முதுகின்மீது ரொட்டியைச் சுட்டாள். அவர் கிருஷ்ண பகவானின் அவதாரமாகக் கருதப்படுகின்றார்.

ஞானதேவரின் உண்மையான குரு நிவ்ருத்தியே. ஞானம் பற்றிய தம் எல்லா அனுபவங்களும் வடிவம் பெறு மாறு சொந்தமாக ஒரு நூலை எழுதுமாறு ஞானதேவரிடம், நிவ்ருத்தி கூறினார். ஞானதேவர் 'அம்ருத அனுபவம்' என்ற நூலை எழுதினார்; அதில் அவர் பெற்ற உயர்ந்த அனுபவங்கள் அடங்கியுள்ளன; அந்நூல் 800 பாடங்களால் அமைந்துள்ளது; ஒவ்வொரு பாடலும் இரண்டு வரிகளால் ஆகியது.

(4)

ஞான தேவர் தம் சகோதரர்களிடத்திலும், நண்பர் களிடத்திலும் தாம் சஞ்சீவனி சமாதி (உயிருள்ளபோதே அடையும் சமாதி) அடைய விரும்புவதாகத் தெரிவித்தார்.

அவர் தம் இருபத்திரண்டாவது வயதில், 1296 அக்டோபர் கடைசியில், கார்த்திகை மாதம் கிருஷ்ணபக்ஷம் 13-ம் நாள் ஆலந்தியில் சஞ்சீவனி சமாதியடைந்தார். தம் பிராணன் முழுவதையும் பிரம்மந்திரத்தில் வாங்கி அவர் தம் பூத உடம்பை விட்டுப் பிரிந்தார். அவருடைய சமாதியருகில் அமர்ந்து யாரேனும் அவருடைய கீதையுரையைப் படித்தால், அவருடைய ஐயங்கள் யாவும் தாமாகவே தெளிவு பெறுகின்றன.

அதன் பின்னர் எட்டு மாத காலம் நிறைவதற்குள்ளாகவே அவருடைய தம்பியரும் தங்கையும் உலகை விட்டுச் சென்றனர். சோபனர், பூனாவுக்கு அருகில் உள்ள புரந்தர மலையடிவாரத்தில் சாஸ்வத் என்ற இடத்தில் ஓடும் கர்ஹ நதியின் கரையில் சமாதியடைந்தார். புனதம்பா என்ற ஊரில் சங்கதேவர் சமாதியடைந்தார். முக்தாபாய் தம் பதினெட்டாம் வயதில் ஒரு பெரும் புயற்காற்று வீசிய போது, ஐம் பூதங்களில் கரைந்து விட்டார். நிவ்ருத்தி, கோதாவரி உற்பத்தியாகும் இடத்தில் உள்ள திரியம்பகத்தில் சமாதியடைந்தார்.

இவ்வாறு நான்கு மகாத்மாக்கள் மறைந்தனர். இருபத்தைந்து ஆண்டுகளுக்குள், அவர்கள் தங்கள் காலத்து அந்தணர்களின் மத வெறியை உடைத்தெறிந்தனர்; அறியாமை இருளிலிருந்து அவர்களை வெளிச்சத்துக்குக் கொண்டு வந்தனர்; பக்தி, ஞான மார்க்கங்களை உறுதியாக நிலைநாட்டினர்; மக்கள் அனைவரும் சமம் என்பதையும், செயலே ஒருவருடைய உயர்வையும் பெருமையும் அளக்கின்ற அளவுகோல் என்பதையும், தற்செயலாக நிகழும் பிறப்போ அல்லது வெறும் வேத, வேதாந்தக் கல்வியோ அளவுகோல் அல்ல என்பதையும் அனைவரும் தெளிவாக உணரச் செய்தனர். அவர்களுடைய தொண்டர்களில் தையற்காரர் நாமதேவர், நாமதேவருடைய பணிப் பெண் ஜானி, பொற்கொல்லர் நரஹரி, நாவிதர் சேனர், குயவர் கோரா, தோட்டக்காரர் சவந்தர், மஹர்

சோகா மேளர், மஹரீன்வாகு ஆகியோர் இருந்தனர்; அவர்கனைவரும் கிருஷ்ண பகவானுடைய பெரும் பக்தர் களாக மதிக்கப்பட்டார்கள்.

ஞான தேவர், மராட்டிய மாநிலத்தில் இன்றும் பெருமையுடன் நிலவும் 'வர்கரி சம்பிரதாயம்' என்ற நிறுவனத்தைத் தோற்றுவித்தார். 'பண்டரிபுர வரி' என்று அதனை அழைக்கின்றனர். இவ்'வரி'யை ஏற்றுக்கொள்பவர் கள் பண்டரிபுரத்துக்கு ஆனி ஏகாதசியன்றும் (ஜூன்—ஜூலை), கார்த்திகை ஏகாதசியன்றும் (அக்டோபர்—நவம்பர்) தலயாத்திரை செல்கின்றனர். இவ்விரு நாட் களிலும் செல்ல முடியாதவர்கள், இரண்டில் ஏதேனும் ஒரு நாள் சென்று தரிசிக்க வேண்டும். உடல் நலக் குறைவு ஏற் பட்டாலன்றி வாழ்நாள் முழுவதும் இவ்வாறு தொடர்ந்து பண்டரிபுரத்துக்குச் செல்வதும், பரம்பரை பரம்பரையாகச் செல்வதும் மிகவும் புண்ணியம் என்று கருதப்படுகிறது.

ஞான தேவரின் வாழ்விலிருந்து நீங்கள் உள்ளக் கிளர்ச்சி பெறுவீர்களாக! ''அம்ருத அனுபவ''த்தையும் ''ஞானேஸ்வரி''யையும் கருத்தூன்றிப் பயின்று ஞான உலகில் மேல்நிலைக்கு உயர்ந்து செல்வீர்களாக! அபூர்வமான சித்தயோகி ஞான தேவரின் நல்லாசிகள் உங்கள் அனைவர் மீதும் எப்போதும் பொழிவதாக! அவருடைய ஆண்டு நினைவு நாளன்று ஆலந்தியில் உள்ள சமாதிக்கு நீங்கள் அனைவரும் சென்று தரிசனம் செய்து, இன்றும் மறைந் திருந்து தம் பக்தர்கட்கு அமரத்துவ அமிர்தத்தை ஊட்டு கின்ற ஞான தேவரின் நல்லாசிகளைப் பெறுவீர்களாக!

## 18. சமர்த்த இராமதாசர்

உலகின் மிகப் பெரிய ஞானியருள் ஒருவர் இராமதாசர். அவர் கி. பி. 1608-ல் மராட்டியத்தில் சூர்யாஜிபந்த், ரேணுகாபாய் ஆகியோருக்கு மகனாகப் பிறந்தார். ஞானி துக்காராமின் சமகாலத்தவர். அவர் அனுமார்,

இராமபிரான் ஆகியோரின் பெரும் பக்தர். தம் பிள்ளைப் பருவத்திலேயே அவருக்கு இராமபிரானுடைய தரிசனம் வாய்த்தது. இராமபிரான் தாமாகவே அவருக்கு உபதேசம் செய்தார்.

அவருடைய பன்னிரண்டாம் வயதில் அவருடைய திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் அனைத்தும் செய்யப் பட்டன. அவர் மணமகளின் முன்னால் அமர்ந்தார். மண மகனுக்கும் மணமகளுக்கும் நடுவே ஒரு திரை இடப்பட் டிருந்தது. புரோகிதர்கள் 'சவாதன்' மந்திரங்களை உச்சரித்த போது அவர் அருகில் உள்ள அறையில் புகுந்து கதவைத் தாளிட்டுவிட்டுக் கண்ணிமைப்பதற்குள் மறைந்து விட்டார்.

அவர் கோதாவரி நதிக்கரையில் உள்ள நாசிக் நகருக்கு அருகில் தபலி என்ற இடத்தில் பதின்மூன்று லட்சம் தடவை கள், ''ராம ஜெய ராம ஜெய ஜெய ராம'' என்ற, பதிமூன்றெழுத்துக்களைக் கொண்ட ராம மந்திரத்தைப் 'புரஸ்கரணம்' செய்தார். 'புரஸ்கரணம்' நிறைவுற்ற பிறகு, அவர் மீண்டும் ராமபிரானுடைய தரிசனத்தைப் பெற்றார்.

இராமதாசர், ஓர் இறந்த உடம்பின் மீது ராம மந்திரத்தை உச்சரித்தவாறு புண்ணிய தீர்த்தத்தைத் தெளித் தார்; இறந்தவர் உயிர்த்தெழுந்தார். கணவரை இழந்த ஓர் விதவையை 'வாழ்க' என்று வாழ்த்தி அவர் நல்லாசி வழங்கிய காரணத்தால் அவர் இதைச் செய்ய வேண்டிய தாயிற்று..

மராட்டிய சாம்ராச்சியத்தைத் தோற்றுவித்த சிவாஜி இராமதாசரைத் தம் குருவாக ஏற்றுக் கொண்டார். அவர் தம் குருவின் பாதுகைகளை அரச பீடத்தில் வைத்துக் குருவைத் தம் வழிகாட்டியாகக் கொண்டு அவருடைய ஆணை களின்படித் தாம் அரசாங்கத்தின் பிரதிநிதியாக இருந்து

ஆட்சி செய்து வந்தார்; தம் கொடியின் சின்னமாகக் காவி நிறத்தைத் தழுவிக் கொண்டார். சிவாஜி காவி நிறக் கொடியைத் தழுவிக் கொண்டமைக்கும், ஞானி இராமதாசரின் பெயரால் நாட்டை ஆட்சி செய்தமைக்கும் காரணமாக அமைந்த அழகிய சுவைமிக்க நிகழ்ச்சி, இன்றும் மராட்டிய மாநிலத்தில் மக்கள் வழக்கில் வழங்கி வருகின்றது.

ஒருநாள் சிவாஜி தம் அரண்மனை மாடியிலிருந்து, தம் குருதேவர் இராமதாசர் தெருக்களில் திருவோடு ஏந்திச் செல்வதைக் கண்டார். தாம் ஏற்கனவே தம்முடைய செல்வங்கள் எல்லாவற்றையும் குருதேவரின் விருப்பத்தின்படிச் செலவு செய்யலாம் என்று வைத்திருக்கும்போது அவர் ஏன் யாசகம் செய்யவேண்டும் என்பதைப் புரிந்துகொள்ள முடியாமல் சிவாஜி மிகவும் ஆச்சரியமடைந்தார். எனினும் ஞானிகளின் செயல்களைப் புரிந்துகொள்வது மிகவும் கடினம். அவர் பாலாஜி என்ற தம் நண்பரை அழைத்து ஒரு சிறிய சீட்டு எழுதித் தந்து, குருஜி, அரண்மனைக்கு வரும்போது அவரிடத்தில் தருமாறு கூறினார். நண்பகல் வேளையில் இராமதாசர் அரண்மனைக்குத் திருவோடேந்தி வந்தபோது பாலாஜி அவருடைய திருவடிகளில் பணிந்து வணங்கி அச் சீட்டை அவருடைய காலடிகளில் வைத்தார். சீட்டில் இருந்த சுருக்கமான வாசகத்தின் கருத்து இதுதான்; சிவாஜி தம் சாம்ராச்சியம் முழுவதையும் குருதேவருக்குப் பரிசாக வழங்கிப் பணிவுடன் அவருடைய நல்லாசிகளை வேண்டி நின்றார். குருதேவர் புன்னகை பூத்தவாறு பாலாஜியிடம் 'சரி' என்று கூறினார். அடுத்தநாள் காலையில் அவர் சிவாஜியைச் சந்தித்துச் சாம்ராச்சியத்தை வழங்கிவிட்டபடியால் அடுத்து அவர் என்ன செய்யக் கருதி இருக்கின்றார் என்பதைத் தெரிவிக்குமாறு வேண்டினார்.

சிவாஜி, இராமதாசரின் திருவடிகளில் பணிந்தெழுந்து, தம் வாழ்நாளைக் குருதேவரின் சேவையில் கழித்தால் தமக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும் என்றும் தமக்குக் குருவருள்

வாய்த்ததாகக் கருதிக்கொள்ள முடியும் என்றும் தெரிவித்தார். இராமதாசர், ''அப்படியானால் இத் திருவோட்டை எடுத்துக்கொள்; நாம் யாசகத்துக்காகச் சென்று வருவோம்'' என்று தெரிவித்தார். ஆகவே இராமதாசரும் சிவாஜியும் சாதரா நகரில் பிச்சை எடுத்துத் திரிந்தனர். இருவரையும் கண்ட மக்கள் அனைவரும் அவர்களின் முன்னால் பணிந்து வணங்கி அரிசி வழங்கினர். இருவரும் ஆற்றுக்குத் திரும்பினர். இராமதாசர் தம் எளிய உணவைச் சமைத்து உட்கொண்ட பிறகு, சிவாஜி, தம் குருதேவர் உண்டு முடித்தபின் எஞ்சிய உணவை உட்கொண்டார். பிறகு சிவாஜி புன்னகையுடன் குருதேவர் தம்மைப் பிச்சைக்கார நிலைக்குத் தாழ்த்திய பின்னும் தம்மை இன்னும் என்ன செய்யப் போவதாக இருக்கிறார் என்று வினவினார். அரசர்முன் ஒரு பெரிய இலட்சியத்தை வைப்பதற்குத் தகுந்த வேளை வந்துவிட்டதென்று இராமதாசர் அறிந்தார்.

இராமதாசர், சிவாஜியிடம் நாட்டைத் தம் பெயரால் ஆட்சி செய்யுமாறும், கொடியின் சின்னமாகக் காவி நிறத்தைப் பின்பற்றுமாறும், கொடியின் காவிநிறப் பெருமையை வாழ்நாள் முழுதும் பாதுகாக்குமாறும், நாடு தனக்கே சொந்தம் என்று கருதாமல் கடவுளின் முன்னிலையில் தான் ஒரு பிரதிநிதியாக இருந்து நேர்மையாகவும், நன்றாகவும் நாட்டை ஆளுமாறும் அறிவித்தார். சிவாஜியின் காவிநிறக்கொடி இவ்வாறு அமைந்தது.

இராமதாசர் மராத்தி மொழியில் தசபோதம், கருணாஷ்டகம், ஆத்மராமர் போன்ற பல நூல்களை எழுதியுள்ளார். இவற்றுள் 'தசபோதம்' மக்களிடையே மிகவும் புகழ்பெற்று விளங்குகின்றது.

அவர் யாத்திரை சென்று புனித தலங்களைத் தரிசிப்பதில் பல ஆண்டுகளைக் கழித்தார். மராட்டிய மாநிலத்தில் அனுமார் கோயில்கள் பலவற்றை அவர் கட்டினார். யாத்திரையிலிருந்து திரும்பிய அவரிடம், அவருடைய

தாயார் அவரைக் காண வேண்டும் என்று மிகவும் ஏக்கங் கொண்டுள்ளதாகவும், அளவு மீறிய பிரிவுத் துன்பத்தால் தாயார் தம் கண் பார்வையை இழந்துவிட்டார் என்றும் அவரிடம் யாரோ தெரிவித்தார். இராமதாசர் தம் தாயாரைக் காண்பதற்காக விரைந்து சென்றார். தம் அன்னையாரின் திருவடிகளில் அவர் வீழ்ந்து பணிந்து வணங்கினார். பல ஆண்டுகள் கழிந்த பிறகு தம் புதல்வரைக் காண நேரிட்டமை குறித்து அந்த அம்மையார் அளவு கடந்த மகிழ்ச்சியடைந்தார். இராமதாசர் தம் தாயாருடைய கண்களைத் தொட்டார். அம்மையார் தம் புதல்வரின் யோக மகிமையால், இழந்த தம் பார்வையை மீண்டும் பெற்றார்.

அவர் தம் சீடர்களுக்குக் கடைசியாக வழங்கிய போதனைகள்:— உங்கள் உடல் தேவைகளைப்பற்றி மிகுதியும் சிந்திக்காதீர்கள். பக்தர்களுடன் சத்சங்கம் செய்யுங்கள். உங்களுடைய இதயத்தில் இராமபிரானுடைய திருவுருவத்தை பதித்துக் கொள்ளுங்கள். எப்போதும் இராமநாமத்தை உச்சரியுங்கள். காமம், பேராசை, சினம், வெறுப்பு, அகந்தை ஆகியவற்றை அழித்துவிடுங்கள். எல்லா உயிர் இனங்களிலும் இராமபிரானைப் பாருங்கள். அனைவரையும் நேசியுங்கள். எங்கும் இறைவன் தங்கியிருப்பதை உணருங்கள். இறைவனுக்காகவே வாழுங்கள். எல்லா உயிர்களிலும் உள்ள இறைவனுக்குச் சேவை செய்யுங்கள். இறைவனிடம் கைம்மாறு கருதாமல் முற்றிலும் சரண் அடையுங்கள். இறையுணர்வில்தான் நீங்கள் எப்போதும் வாழ்ந்துகொண்டிருக்கவேண்டும், நீங்கள் அமரத்துவத்தையும் நிலையான பேரின்பத்தையும் அடைவீர்கள்'' என்பனவாகும்.

இராமதாசர் தம் இறுதி மூச்சு வரை இராம மந்திரத்தை உச்சரித்துக் கொண்டிருந்தார். அவர் உலகை விட்டுப் பிரிந்த போது பொலிவு மிகுந்த பேரொளியொன்று அவருடைய உடம்பிலிருந்து வெளிப்பட்டது; இராமதாசர், இராமபிரானுடன் ஐக்கியமாகிவிட்டார்.

## 19. ஏக நாதர்

ஏக நாதர், அனைவரும் அறிந்த மராத்திய ஞானி. மராத்திய மாநிலத்தில் பைத்தான் என்ற ஊரில் கி. பி. 1533ல் சூரிய நாராயணருக்கும், ருக்மணி அம்மையாருக்கும் மகனாக அவர் பிறந்தார். அவர் பத்து வயதுச் சிறுவனாக இருந்த போதே அவருடைய உள்ளத்தில் பக்தி நெருப்பு மூட்டப்பட்டது. இவை யாவும் அவருடைய பழைய சம்ஸ்காரங்களின் விளைவேயாகும். கீதை, "முற்பிறப்பில் அடைந்த அறிவினை அவன் மீண்டும் பெறுகின்றான். இப் பிறப்பில் நிறைவு பெற அவன், மேலும் முயல்கின்றான்", (அதி: 4; ஸ்லோ. 43) என்று கூறுகின்றது.

ஒரு நாள் ஏக நாதர் ஓர் அசரீரியைக் கேட்டார். அது, "தேவகிரியில் உள்ள ஜனார்த்தன பந்த் என்பவரைப் பார். அவர் உன்னைச் சரியான ஆன்மீகப் பாதையில் செலுத்துவார்; வழியும் காட்டுவார்" என்று கூறியது.

ஏக நாதர் உடனே தேவகிரிக்கு விரைந்து சென்று ஜனார்த்தன பந்த்தைச் சந்தித்து அவருடைய திருவடிகளில் வீழ்ந்து பணிந்தார். ஜனார்த்தனர் ஏக நாதரைத் தம் சீடராக ஏற்றுக் கொண்டார். அவர் தேவகிரி மாகாணத்தின் திவானாக இருந்தார். ஏகநாதர் தம் குருவுடன் எட்டு ஆண்டுகள் வாழ்ந்து, அவருக்கு முழுமனதோடு பணி விடைகள் செய்தார்.

ஒரு நாள் ஜனார்த்தனர் ஏக நாதரிடம் கணக்குப் பேரேட்டில் ஒரு காசுக்கான தவற்றைக் கண்டு பிடிக்குமாறு கேட்டுக்கொண்டார். ஏக நாதர், பிழையைக் கண்டுபிடிப்பதற்காக ஓர் இரவு முழுவதும் விழித்திருந்தார். அவர் மிகுந்த சிரமத்துடன் உழைத்துப் பணி செய்தார். கடைசியில் விடிவதற்குச் சற்று முன்புதான் அந்தப் பிழையைக் கண்டுபிடித்தார். ஏக நாதர் அளவற்ற மகிழ்ச்சியை அடைந்தார். தாம் பிழையைக் கண்டுபிடித்ததைப்பற்றித் தம் குருவினிடம் தெரிவித்தார். ஜனார்த்தனர், "கணக்கில்

இருந்த ஒரு சிறு பிழையைக் கண்டு பிடிக்க நீ இவ்வளவு மன ஒருமைப்பாட்டைப் பயன்படுத்த வேண்டியிருந்தது என்றால், இறைவனைக் கண்டுகொள்ள இன்னும் எவ்வளவு மன ஒருமைப்பாடு வேண்டியிருக்கும்? கணக்கில் ஒரு சிறு பிழையைக் கண்டு பிடித்ததற்கே இவ்வளவு மகிழ்ச்சியடைகின்றாய். வாழ்க்கை என்னும் கணக்கில் உள்ள பிழைகளைக் கண்டுபிடித்தால் இன்னும் எவ்வளவு மகிழ்ச்சியை நீ அடைவாய்?'' என்று கேட்டார். ஏக நாதர் ஒரு நல்ல பாடத்தைக் கற்றுக்கொண்டவராய்த் தம் நேரத்தில் மிகுந்த பகுதியைத் தம்மைத் தற்சோதனை செய்து கொள்வதிலும், ஆழ்ந்த தியானம் செய்வதிலும் கழித்தார்.

ரயில்வே வாயிலாக அமைந்த செய்தித் தொடர்பு இல்லாத அந்த நாட்களில் ஏகநாதர் கங்கோத்திரிக்குக் கால் நடையாகவே யாத்திரை செய்தார். அவர் கங்கை நதி உற்பத்தியாகுமிடத்தில் உள்ள தண்ணீரைப் பாத்திரங்களில் நிரம்பி மூங்கிலால் அமைந்த காவடியில் வைத்துத் தம் தோள்களால் சுமந்து வந்தார். பிறகு அவர் காசிக்குச் சென்று ஒரு பாத்திரத்தில் இருந்த கங்கோத்திரி தீர்த்த நீரால் காசி விசுவநாதருக்கு அபிஷேகப் பூஜை செய்தார். பிறகு, இராமலிங்கேஸ்வரருக்கு அபிஷேகம் செய்வதற்காக அவர் அங்கிருந்து இராமேசுவரத்தை நோக்கிப் புறப்பட்டார். இராமேஸ்வரத்தை அடைவதற்குச் சில மைல் தூரம் இருக்கையில் அவர் பல வீனம் மிகுந்த, நோயுற்றிருந்த, தாகத்தால் இறந்து கொண்டிருந்த ஒரு கழுதையைக் கண்டார். உடம்பைச் சுடும் அளவுக்கு வெயில் கடுமையாக இருந்தமையால், இறைவன் தம்மைச் சோதிக்க விரும்புவதாக ஏகநாதர் கருதினார். ஏகநாதர் பரபக்தி மிகுந்த ஞானி. ஒவ்வொரு பொருளிலும், ஒவ்வோர் அசைவிலும், ஒவ்வொரு செய்கையிலும் அவர் இறைவன் இருப்பதைக் கண்டார்; உணர்ந்தார். கழுதையின் உள் இருக்கின்ற இராமலிங்கேஸ்வரருக்குப் பணிவிடை செய்ய ஒரு சிறந்த வாய்ப்பாக இதை அவர் கருதினார். அவ்வுயிரினத்தை அவர் கழுதை என்று

ஒருபோதும் கருதவில்லை. நாமரூபத்தை அவர் மறந்து விட்டார். அவர், சாரமாகிய சச்சிதானந்தத்தை; அஸ்தி, பாதி, பிரியங்களைக் கழுதையில் கண்டார். கிருஷ்ண பகவான் உத்தவருக்கு, ''என்னை ஒவ்வொரு பொருளிலும் காண்பாயாக. கழுதைகளின் காலடிகளில் பணிந்து வணங்கு'' என்பது முதலியனவாகக் கூறிய உபதேசங்களை நினைவு கூர்ந்தார். ஏகநாதர், இராமலிங்கேஸ்வரருக்குச் சேவை செய்யும் வாய்ப்பை இழந்துவிட்டோம் என்று சிறிதளவுகூட வருந்தவில்லை. அவர், ''இது மிகச் சிறந்த வாய்ப்பு. இது ஒரு லட்சம் அந்தணர்களுக்கு விருந்து படைத்ததற்குச் சமம்'' என்று கூறினார். இறைவன் ஒவ் வோரிடத்திலும், ஒவ்வோர் உயிரினுள்ளும் இருக்கின்றான். கழுதைக்கு மிகவும் தேவையாக இருந்த நேரத்தில், வார்கிஸ் பட்ட தண்ணீர் ஏற்கனவே இராமலிங்கேஸ்வரரை அடைந்து விட்டது. பாத்திரத்தின் மூடியை உடைத்து, அவர் தண்ணீர் முழுவதையும் குடிப்பதற்காகக் கழுதைக்கே வழங்கினார். அங்கேயே, அப்போதே அவர் இராமலிங்கேஸ் வரரின் தரிசனத்தைப் பெற்றார்.

ஏகநாதர் தம் குருவின் கட்டளைகளை ஏற்று இல்லற வாழ்வைத் தொடங்கினார். கற்பு மிகுந்த இலட்சியப் பெண் மணி கிரிஜா பாயை அவர் மணந்தார்.

ஏகநாதர் சினம் என்பதைச் சிறிதும் அறியாதவர். எப்படியாவது அவருக்கு எரிச்சலூட்ட வேண்டும் என்று அவருடைய ஊரைச் சேர்ந்த மக்களில், குறும்புத்தனம் மிகுந்த சிலர் விரும்பினார்கள். அவர்கள் ஒரு முகம்மதிய னுக்கு இலஞ்சம் கொடுத்து, ஏதேனும் ஒரு வழியில் ஏக நாதருக்கு எரிச்சலூட்டுமாறு கேட்டுக் கொண்டனர். அதற்கு அந்த முகம்மதியன் இணங்கினான். அவன் ஆற்றங் கரைக்குச் சென்று ஏகநாதர் வழக்கமாகக் குளிக்கும் இடத்தை அடைந்து அவருடைய வருகைக்காகக் காத்திருந் தான். ஏகநாதர் குளித்துவிட்டுத் திரும்புகையில் அவருடைய முகத்தில் அந்த முகம்மதியன் எச்சிலைத்

துப்பினுன். ஏகநாதர் எதுவும் பேசாமல் வெறுமனே சிரித்து விட்டு மீண்டும் குளிக்கச் சென்ருர். அவர் கரையேறி வந்ததும் அவன் மீண்டும் அவருடைய முகத்தில் துப்பினுன். ஏகநாதர் சிரித்துவிட்டு மீண்டும் குளிக்கச் சென்ருர். இவ்வாறு 108 தடவைகள் நடந்தன. ஏகநாதர் சிறிதளவும் பாதிப்பை அடையவில்லை. அவர் பொறுமையே ஒரு வடிவம் எடுத்ததைப்போல் காணப்பட்டார். ஏகநாதர் பரிபூரண அமைதியுடன் இருக்கக் கண்ட முகம்மதியன் தனக்குள், 'இவர் மனிதரல்லர்; கடவுள்' என்று தனக்குள் நினைத்தான். அவன் மிகவும் அச்சமடைந்தான். தான் இறக்கும்படியாக அவர் சாபம் இடக்கூடும் என்று நினைத்தான். அவன் நடு நடுங்கி அவருடைய திருவடிகளில் விழுந்து வணங்கித் தன்னை மன்னிக்கும்படி மன்ருடினுன். பிறகு அவன் ஏகநாதருக்குக் கதை முழுவதையும் சொல்லி, அவருக்கு எரிச்சலூட்டு வதற்காக ஊரார் சிலர் தனக்கு இலஞ்சம் கொடுத்ததைத் தெரிவித்தான்.

மற்ருெரு சமயம் அவ்வூரார் ஏழைப் பிராமணன் ஒருவனுக்கு இலஞ்சம் கொடுத்து அவருக்கு எரிச்சலூட்டுமாறு அவனைத் தூண்டினர். அவன் தனக்குள், ''ஏகநாதருக்குச் சினமூட்டுவதற்கு எது சிறந்த வழி? அவருடைய மனைவியைக் கட்டிப்பிடிக்கலாம். அது அவருக்கு நிச்சயம் சினத்தைத் தரும். என் முயற்சியில் வெற்றியும் கிடைக்கும். இதுவே சிறந்த வழி'' என்று கருதிக் கொண்டான். எனவே அவன் இதை நடைமுறையில் செய்ய முடிவு செய்தான். ஒரு நாள் ஏகநாதருக்கு அவருடைய மனைவி உணவைப் படைத்துக் கொண்டிருந்தபோது துஷ்டனுகிய அப்பிராமணன் வீட்டுக்குள் புகுந்து அவருடைய மனைவியைக் கட்டிப் பிடித்துக் கொண்டான். ஏகநாதர் அசைவற்ற ஒரு கற்பாறை போல் இருந்தார். அவர் மனதாரச் சிரித்தார். உடல், மனைவி, பிறபொருள்கள் ஆகியவற்றுக்கிடையே வேறுபாடு சிறிதும் பாராட்டாத ஒரு மனிதருக்கு இச்செயலால் ஆவதென்ன? அறியாமை என்னும் கடலைக் கடந்து கரையேறி விட்டவருக்கு இச்செயல் எப்படிப் பாதிப்பை

உண்டாக்கும்? சாத்வீக குணம் நிரம்பியுள்ள ஒருவரை இச்செயல் என்ன செய்துவிட முடியும்? இந்நிலையில் அவர் தம் மனைவியிடம், ''கிரிஜாதேவி! குழந்தை உன்னைக் கட்டிக் கொண்டது. அதற்கு மிகவும் பசி, தாராளமாகப் பால் புகட்டு'' என்று கூறினார். ஏகநாதர் சிறிதும் அசையவில்லை என்பதை அறிந்த அந்த ஏழைப் பிராமணன், அவன்மீது மேலும் இரக்கங் கொண்டு அவர் கூறிய சொற்களைக் கேட்டதும் அவனுடைய நெஞ்சம் நெகிழ்ந்து உருகிவிட்டது. அவன் கண்ணீர்விட்டு விம்மி விம்மி அழுதான். மன்னிக்கத் தகாத கொடிய குற்றத்தைச் செய்தமை பற்றிச் சொல்லி அவன் மனம் வருந்தினன். ஏகநாதரின் காலடிகளில் விழுந்து வணங்கிய அவன், ''மகாராஜா! என்னை மன்னியுங் கள். பண்பில்லாத செயலைச் செய்து விட்டேன். நான் ஏழை. அன்றாட வாழ்வுக்குப் போதிய செல்வம் என்னிடம் இல்லை. இவ்வூரார் எனக்கு இலஞ்சத்தைக் கொடுத்துத் தங்களுக்குச் சினமூட்டச் செய்தனர். நான் ஏழையாத லால் பணத்தாசை கொண்டு இணங்கியது எனக்கு இயற்கை ஆயிற்று. நான் மகா பாவத்தைச் செய்து விட்டேன், என்னை மன்னியுங்கள்'' என்று கூறினன். ஏகநாதர் பொறுத்துக்கொண்டு ஏழ்மையும் அறியாமையும் உள்ள அந்த பிராமணனை மன்னித்து விட்டார். பாகவதத்தைப் படிக்குமாறும் கிருஷ்ண பகவானுடைய மந்திரத்தை உச்சரிக்குமாறும் அவர் அவனுக்கு அறிவுரை கூறினர். அவர் ஒரு துளசி மாலையையும் அவனுக்குக் கொடுத்தார்.

இம்முறை தம் திட்டத்தில் நிச்சயம் வெற்றி கிடைக்கும் என்று அவ்வூரார் உறுதியாகக் கருதியிருந்தனர். ஏழை அந்தணன் தன் கழுத்தில் துளசி மாலையை அணிந்துகொண்டு திரும்பி வருவதை அவர்கள் பார்த்தனர். அவர்கள் முற்றிலும் ஏமாற்றமடைந்தனர். அந்தணன் அவர்களிடம் ''நான் என்னுல் முடிந்ததைச் செய்தேன். நான் அவருடைய மனைவியைக் கட்டிப்பிடித்துக்கொண்டேன். இதனுல் அவர் ஒரு சிறிதும் பாதிப்பை அடையவில்லை. இதை எல்லாம் பார்த்து அவர் சிரித்துக் கொண்டிருந்தார். அவர் ஒரு

தெய்வம். நான் அவருடைய சீடனுகி விட்டேன். அவர் எனக்கு மந்திரத்தை உபதேசித்தார். இக்கணத்திலிருந்து நான் என்னுடைய குறும்புச் செயல்கள் எல்லாவற்றையும் துறந்துவிட்டேன். கிருஷ்ண பகவானுடைய தரிசனத்தைப் பெறுவதற்காக நான் இனி முயற்சி செய்வேன். இனிமேல் நான் உங்களுடன் எப்போதும் சேர மாட்டேன்'' என்று கூறினன்.

ஏகநாதர் தாழ்த்தப்பட்டவர்களிடத்தில் பேரன்பு பாராட்டினர். அவர்பால் சமநோக்கு இருந்தது. உயிரினங்கள் எல்லாவற்றினிடத்திலும் அவர் கிருஷ்ண பகவானை மட்டும் கண்டார். ஒரு சமயம் மஹர் இனத்தைச் சேர்ந்த சிலர் அவருடைய வீட்டின் வழியாகச் சென்று கொண்டிருந்தவர்கள், அவருடைய வீட்டிலிருந்து வந்த சுவை மிக்க உணவுப் பண்டங்களின் வாசனையால் கவரப் பட்டு அவருடைய வீட்டு வாசலில் நின்ருர்கள்; அன்று அவருடைய தந்தையின் சிரார்த்த தினத்துக்காக (ஆண்டு நிறைவு நினைவு நாள்) உணவுப் பண்டங்கள் சிறப்பாகச் சமைக்கப்பட்டன. ஏகநாதர் உடனே அவர்களை வரவேற்று அவர்கள் வயிருர உண்டு மகிழுமாறு விருந்து படைத் தார். அவர் மீண்டும் உணவு வகைகளைச் சமைக்கச் செய்து அந்தணர்களை அழைத்தார். அவர்களோ தங்களுக்குக் குற்றம் இழைக்கப்பட்டதாகக் கருதினர்கள். அவர்கள், ஏகநாதரே! மஹர்களுக்கு நீங்கள் முதலில் விருந்து படைத் தீர்கள். நாங்கள் உங்கள் வீட்டில் உண்ண மாட்டோம் என்று கூறிவிட்டனர். ஏகநாதர் பிறகு, தம் முன்னேர்களை விண்ணுலகத்திலிருந்து தம் பக்தியின் சக்தியால் வர வழைத்துத் தாமே அவர்களுக்கு உணவு படைத்தார்.

ஏகநாதர் மிகப் பெரும் பக்தர். கிருஷ்ண பகவானே ஓர் ஏழை அந்தணச் சிறுவன் வடிவில் கண்டையா என்ற பெயருடன் பன்னிரண்டு ஆண்டுகள் ஏகநாதரின் இல்லத்தில் தண்ணீர் சுமந்து வருவோனுகப் பணி செய்தார். இன்னும், பூஜைக்காகத் தண்ணீர் கொண்டு வருதல், வழிபாட்டுக்

காகச் சந்தனத்தைக் குழைத்துத் தருதல், உணவுக்குப்பின் எச்சில் இலைகளை அப்புறப்படுத்தித் தண்ணீர் தெளித்துத் துப்புரவு ஆக்குதல் முதலான குற்றேவல்களையும் செய்தார். குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு கண்டையா, யாருக்கும் தெரியாமல் அற்புதம் நிகழ்ந்ததுபோல் மறைந்துவிட்டார்.

ஏகநாதர் எழுதிய பகவதி, வட இந்தியாவில் துளசி தாசரின் இராமாயணம் பெற்றுள்ள நன்மதிப்பை மாராட்டிய மாநிலத்தில் பெற்றுள்ளது. அது ''ஏகநாத பாகவதம்'' என்று மக்களால் வழங்கப்படுகின்றது; மராட்டிய மாநிலத்தில் ஒவ்வொருவருடைய வீட்டிலும் அந்த நூல் காணப்படுகின்றது.

கி. பி. 1599—ல் தம் அறுபத்தாறுவது வயதில் அவர் இயற்கை எய்தினார். உறுதி மிக்க பக்தராகவும், பெருமை மிக்க பாகவதராகவும், இலட்சிய இல்லறத்தாராகவும்; பெரும் ஞானியாகவும் அவர் இன்றும் எல்லா மக்களுக்கும் ஒரு வழிகாட்டியாகப் பொலிவுடன் விளங்குகின்றார்.

## 20. துகாராம்

பூனா மாவட்டத்தில் தேஹூ என்ற ஊரில் கி. பி. 1608ல் துகாராம் பிறந்தார். அது, ஞானேஷ்வரருடைய சமாதியால் பெருமை பெற்ற ஊராகிய ஆலந்தியிலிருந்து 7 மைல் துலைவில் உள்ளது; பம்பாய்க்கும் பூனாவுக்கும் இடையில் உள்ள ஜி. ஐ. பி. ரயில்பாதையில் ஷேலார்வாடி ரயில் நிலையத்திலிருந்து 3 மைல் அளவில் உள்ளது. தேஹூ வில் நீண்டகாலம் தங்கி நிலைபெற்றுவிட்ட 'மொராய்' என்ற பெயருள்ள வணிகர்களின், ஒரு செல்வச் செழிப்பு மிகுந்த தாழ்த்தப்பட்ட குடும்பத்தில் துகர்ராம் தோன்றினார். அக் குடும்பத்தார் பண்டரிபுரத்தில் உள்ள விட்டோபரைத் தங்கள் குல தெய்வமாக ஏற்றுக் கொண்டனர்; விட்டோபருக்காகவென்று தனியே ஒரு கோயிலையும் தாங்களே கட்டிக் கொண்டனர். பல தலைமுறைகளாக

அக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் பண்டரிபுர 'வரி' யையும் ஏற்றுக் கொண்டிருந்தனர்; அதாவது ஆண்டு தோறும் இரு முறை பண்டரிபுரத்துக்கு ஆனி மாதம் 11-ம் நாள் (ஜூலை -ஆகஸ்டு); அவ்வாறே கார்த்திகை மாதம் (அக்டோபர்-நவம்பர்) ஆக இருமுறை செல்வதாகும். துகாராமின் குழந்தைப்பருவம், குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி எதுவும் இன்றியே கழிந்தது.

சகோதரர் மூவருள் இவர் இரண்டாவது சகோதரர்; ஏனைய இருவர் சாவ்ஜி, கனேபா ஆவர். சாவ்ஜி உலகியல் ஆசை சிறிதும் இல்லாதவர்; தந்தையாரோ சமய ஈடுபாடு மிகுந்தவர்; ஆகவே குடும்பத்தின் சுமை பதின்மூன்றே வயது நிரம்பிய துகாராமின் மீது விழுந்தது. அதே சமயம் துகாராமுக்கும் ருக்மாபாய்க்கும் திருமணம் நடைபெற்றது. ஆனால் அவள் உடல் நலம் குன்றியிருந்தமையால் புனவைச் சேர்ந்த ஜீஜாபாயைத் துகாராம் மீண்டும் மணந்தார். துகாராம் குடும்ப அலுவல்களை நிர்வாகம் செய்யத் தொடங்கினார்; தம் இருபதாம் வயது அதாவது 1629 வரையில் ஒவ்வொருவரும் திருப்தி அடையுமாறு செப்பமாக நிர்வாகம் செய்து வந்தார். தம் பதினேழாம் வயதில் 1625-ல் அவர் தம் பெற்றோர்களை இழந்தார்; அதே சமயம் அவருடைய அண்ணியார் மறைந்தமையால், அவருடைய அண்ணன் ஆன்மீக விடுதலையை நாடி ஊரைவிட்டுப் புறப்பட்டுக் காசிக்குச் சென்று விட்டார். பெற்றோரின் மறைவு துகாராமுக்குப் பெரும் அதிர்ச்சியாக இருந்தது; அடுத்த நான்கு ஆண்டுகள் 1626 லிருந்து 1630 வரையில் பெரும் புயல்கள் வீசினாற் போன்ற கலக்கங்கள் உண்டாயின.

பெற்றோரும் அண்ணியாரும் மறைந்து, அண்ணன் சாவ்ஜியும் வீட்டைவிட்டுச் சென்ற பிறகு துகாராமுக்கு உலகியல் வாழ்வில் இருந்த ஆர்வங்கள் அனைத்தும் மறைந்து விட்டன. அவருடைய மனநிலையைத் தங்களுக்குச் சாதமாக ஆக்கிக்கொண்டு, கடன் பெற்றவர்கள் உரிய தொகையைத் திருப்பித் தராமலிருக்கத் தலைப்பட்டனர்; கடன்

கொடுத்தவர்களோ தங்கள் தொகையைத் திரும்பப்பெறு வதற்காக அவரை நெருக்கத் தொடங்கினர். அவர் வாணிகத்தின் பல்வேறு துறைகளிலும் தம் திறமையைப் பயன்படுத்தி முயற்சி செய்தார்; ஆனால் எப்போதும் அவர் வெறுங்கையுடன் அல்லது நஷ்டத்துடன் திரும்பினார். ஒரு முறை அவர் வீட்டுக்கு வரும் வழியில் ஏற்கனவே அவரிடம் இருந்த தொகை முழுவதற்கும் தங்கமுலாம் பூசிய செப்பு நகைகளைக் கொடுத்து ஏமாற்றிய நம்பிக்கை மோசடி செய்தவர்கள், அவரிடமிருந்த எல்லாவற்றையும் கொள்ளை யடித்தார்கள். இன்னொரு சமயம், அவர் வீட்டுக்குத் திரும்பி வந்து கொண்டிருந்த போது, பசியால் தவித்துக் கொண்டிருந்த ஓர் ஏழை அந்தணனைச் சந்தித்தார்; தம் மனைவி கடன் வாங்கிக் கொடுத்த அசலையும், அதைக் கொண்டு தாம் பெற்ற இலாபத்தையும் — ஆக எல்லா வற்றையும் அந்த அந்தணனுக்குக் கொடுத்து அவனை மகிழ் வித்தார். இத்தகைய கசப்பான அனுபவங்களுக்குப் பிறகு அவர் வீட்டிலிருந்து சேய்மையில் உள்ள இடத்திற்குச் செல்லும் போது, அவரிடம் விலையுயர்ந்த பொருள்கள் எவையும் ஒப்படைக்கப்படவில்லை. தம் ஊரில் ஒரு சிறிய கடையை வைப்பதற்கு ஜீஜாபாய் மீண்டும் உதவி செய்தாள். ஆனால் துகாராமின் மனநிலை பற்றி அவள் கவலைப்பட வில்லை. அவர் கடையில் அமர்ந்து பஜனை செய்வது வழக்க மாக இருந்தது; தம் வாடிக்கையாளரிடத்தில் அவர் மிகவும் அன்பும் நேர்மையும் பாராட்டினார். மனைவியர் இருவர், புதல்வர் ஒருவர், தம்பி ஒருவர் ஆகியோரைக் காப்பற்ற வேண்டிய அவர், தம் தாராள மனப்பான்மை காரணமாகப் பொருள் சிறிதும் அற்ற வறியவரானார். ஏறத்தாழ இதே சமயம், 1629, 1630-ஆம் ஆண்டுகளில் நாட்டில் மிகக் கொடிய பஞ்சம் ஏற்பட்டுத் தொடர்ந்து இரண்டு ஆண்டுகள் வரை நீடித்தது. அவருடைய முதல் மனைவி பசியால் துடித்து உணவுக்காக அழுதவாறு இறந்தார். அவ்வருடைய புதல்வரும் இறந்தார். இருந்த சில கால்நடைகள் கூட இறந்துவிட்டன. அவரிடம் கடன் பெற்றோர் எழுதித்தந்த ஒப்பந்தப் பத்திரங்கள், பஞ்சம் காரணமாகப் பொருளை மீண்டும்

பெற முடியாதவாறு உயிரிழந்த கடிதங்களாகிவிட்டன. துகாராம் வாழ்க்கையின் உண்மையான இயக்கம் இந்தக் கால கட்டத்தில் 1630-ல் தொடங்கியது.

இத்தகைய துன்பத் தொடர்களின் விளைவாக அவருக்கு வாழ்க்கையில் மிகுந்த வெறுப்பு ஏற்பட்டு, அவர் வீட்டையும் ஊரையும் துறந்து பக்கத்தில் இருந்த 'பாம்நாத்' என்ற காட்டுக்குள் சென்று மறைந்து விட்டார். பதினைந்து நாட்கள் அவர் அங்கு உணவின்றித் தண்ணீர் இன்றி உறக்கமும் இன்றி எல்லாம் வல்ல இறைவனைக் குறித்துத் தியானம் செய்து கொண்டு தங்கியிருந்தார். பதினைந்து நாட்கள் முடிந்த பிறகு பரமாத்மாவை உணர்ந்தார்; விட்டோபர் தம் உண்மை வடிவில் அவருக்குக் காட்சி தந்தார்.

இதற்கிடையில் அவருடைய இரண்டாம் மனைவி அவரை எல்லா இடங்களிலும் தேடிப் பார்த்து மலைப் பக்கத்தில் கண்டு அவரை வீட்டுக்கு அழைத்து வந்தாள்; ஆனால் அவர், இரண்டு வாரங்களுக்கு முன்பு அவளை விட்டுப் பிரிந்த முந்திய துகாராமாக இராமல் வேறுபட்டவராக இருந்தார். அவருக்குத் தம் குடும்பம், மனைவி, உறவினர் பற்றிய பற்றுதல் இருக்கவில்லை. அவர் வந்தவுடனே, கடன் வாங்கியோர் தந்த உறுதிப் பத்திரங்கள், கணக்குப் பேரேடுகள் எல்லாவற்றையும் ஒன்றுதிரட்டி, உறவினர்கள் தடுத்த போதிலும், இந்திராயணி ஆற்றில் எறிந்து விட்டார். பின்னர் அவர் பழுதடைந்திருந்த கோயிலைத் தாமே தம் கைகளால் பழுது பார்த்துச் செப்பனிட்டுக் கட்டிமுடித்தபின் தம் வாழ்வு முழுதும் இரவும் பகலும் பஜனை செய்வதிலும் கீர்த்தனம் நிகழ்த்துவதிலும் கழிக்கத் தொடங்கினார். அப்போதிருந்த தம் மனநிலையை அவர் பின் வருமாறு விளக்குகின்றார்:- ஆண்டவனே! எப்போதும் உன்னை மறவாதிருக்க வரம் தாரும்! என் உடம்பு ஐம்பூதங்களால் ஆகியது; என் வாழ்நாளின் பொருட்டு அவற்றைக் கடன் வாங்கியுள்ளேன்; முடிவில் நான் அவற்றை வட்டி

யுடன் திருப்பித் தரவேண்டும். ஓ! பாண்டுரங்கா! என் நலனை விரும்புகின்றவர் உன்னைத்தவிர வேறு யாரும் இல்லை என்பதே என் முடிவு' !

அவர் மனதாரச் செய்த பக்தி, பஜனை, கீர்த்தனம் ஆகியவற்றின் விளைவாக அவருக்குக் குரு உபதேசம் என்னும் பரிசு கிடைத்தது. குரு அவருடைய கனவில் தோன்றினார். தம் வாழ்வில் நடந்த மிகப்பெரும் நிகழ்ச்சியாகிய இதை அவர் பின்வருமாறு விளக்குகின்றார் :— ''சத்குரு என் கனவில் தோன்றினார்; அவர் என்னிடம் உண்மையில் மிகுந்த அன்பு பாராட்டினார்; அதற்கான தகுதி என்னிடம் சிறிதும் இல்லை. குளிப்பதற்காக ஆற்றைநோக்கி நான் சென்று கொண்டிருந்தபோது அவர் என்னைச் சந்தித்தார். தம் கரத்தை என் தலைமீது வைத்து அவர் என்னை ஆசீர்வதித்தார். அவர் தம்முடைய பெயர் பாபாஜி என்று கூறினார். தமக்கு முன்பு இருந்த இருவர் இராகவ சைதன்யர், கேசவ சைதன்யர் என்றும் தெரிவித்தார். இராமகிருஷ்ண ஹரியை ஜெபம் செய்யச் சொல்லி அவர் எனக்கு அறிவுரை தந்தார். தை மாதம் சுக்கில பக்ஷம் 10-ஆம் நாள் நான் அவரை என் குருவாக ஏற்றுக்கொண்டேன்'' இது 1632 ஜனவரியில் நிகழ்ந்தது. அப்போது அவருக்கு வயது 24. இதனால் துகாராம் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை.

அவர் தம்முடைய வாழ்வை மேலும் மேலும் பக்திப் பயிற்சிகள் செய்வதிலும், ஞானதேவர், நாமதேவர், ஏகநாதர் ஆகியோருடைய நூல்களையும், பாடல்களையும். கீதை, பாகவதம் முதலிய சமய நூல்களையும் பயில்வதிலும் கழிக்கத் தொடங்கினார், இதன் விளைவாக அவர் தம்மையும் அறியாமல் தாமும் பாடல்கள் புனையத் தொடங்கினார். ஒருநாள் கனவில் நாமதேவர் பாண்டுரங்கனுடன் தோன்றி அவரை எழுப்பிப் பக்திப் பாடல்கள் பாடுமாறு அறிவுரை கூறினார். பாடமுடியாதென்று அவர் என்ன சமாதானங்களைக் கூறினாலும் அவர்கள் விடுவதாக இல்லை.

பாண்டுரங்கன் அவருக்கு வேண்டிய மன ஊக்கத்தைத்தர நாமதேவர் தாம் புனையக் கருதியிருந்த நூறு கோடிப் பாடல்களில் 94 கோடியே 40 இலட்சம் பாடல்களைத் தாம் முடித்துவிட்டதாகவும் பாக்கியுள்ள 5 கோடியே 60 இலட்சம் பாடல்கள் நிறைவு செய்யப்படுவதற்காகத் துகாராமுக்கு விட்டுவைத்திருப்பதாகவும் தெரிவித்தார். பாடல்களைப் புனையும் தெய்வீகக் கலை அவருக்கு இயற்கையாகக் கைவந்தது; அவற்றில் பக்தியின் தன்மை இருந்தமையால் மக்கள் மேலும் மேலும் துகாராமினிடத்தில் கவர்ந்து இழுக்கப்பட்டார்கள்; அவர் தம் சொந்த உலகியல் நலத்தையோ அல்லது தமக்கெனச் செல்வம் சேர்ப்பதையோ சிறிதும் நாடவில்லையாதலால் அவரை விரும்பும் மக்களின் எண்ணிக்கை மேன்மேலும் பெருகலாயிற்று.

அவர் பஜனை அல்லது கீர்த்தனை செய்யத் தொடங்கும் போது மக்கள் அந்த இடத்திற்குப் பெருந்திரளாகக் கூடத் தொடங்கினர்; மிகச் சிலர் நீங்கலாக, எல்லா வகுப்புக்களையும் சேர்ந்த மக்கள் அவரை ஒரு ஞானியாகக் கருதி அவருக்குப் பணிவன்புடன் மரியாதை செய்யத் தொடங்கினர். உண்மையில் ஒரு சிலர் இந்த நிலையை வெறுத்தனர்: அவருடைய மதிப்பைக் குறைக்கத் தங்களால் இயன்றவரையிலும் முயன்று, அம் முயற்சியில் தோல்வியடைந்தனர்; எனவே அந்நாளில் கற்றறிந்த அந்தணர் என்று மதிக்கப்பெற்ற இராமேஸ்வர சாஸ்திரியிடம் துகாராமைப் பற்றி ஒரு புகாரை அவர்கள் அனுப்பினர்.

துகாராம் தாம் கள்ளம் கபடம் அற்றவர் என்பதைச் சாஸ்திரிக்கு மெய்ப்பித்துக் காட்ட முயன்றார். ஆனால் அவர் மிகவும் பிடிவாதமாக இருந்து எந்த ஒரு வாதத்தையும் கேட்க மறுத்து விட்டார். அவர் துகாராமினிடம் முடிவாகக் கூறிய கருத்து :- துகாராமின் பாடல்களில் சுருதிகளின் கருத்துக்களை விளக்கும் முயற்சி வெளிப்படையாகத் தெரிகின்றது; தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த அவருக்கு

இந்த உரிமை கிடையாது; இத்தகைய பாடல்களைப் புனைவதை இனிமேல் அவர் நிறுத்திக்கொள்ள வேண்டும்; ஏற்கனவே அவர் இயற்றியுள்ள பாடல்களை அவர் இந்திராயணி ஆற்றில் எறிந்து மூழ்கச் செய்யவேண்டும். துகாராம் அந்தணர்கள் அனைவரிடமும் பெரும் மரியாதை பாராட்டுபவர்; ஆதலால் அவர் உடனே தம் வீட்டிலிருந்து பாடல்கள் எல்லாவற்றையும் கொண்டுவரச் செய்து அவற்றை ஒன்றுகச் சேர்த்து ஒரே கட்டாகக் கட்டி அதைச் சுற்றியிருக்குமாறு ஒரு பெரிய கல்லைக் கயிற்றுல் பிணைத்து ஆற்றில் எறிந்துவிட்டார். அவரைக் குறை கூறியவர்கள்— துகாராமினிடம் பொறுமை கொண்டவர்கள் — இப்போது அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்கள். துகாராம் அவர்களுடைய இகழ்ச்சியுரைகளைப் பொருட்படுத்தவில்லை. அவர் கவலைப்பட்டதெல்லாம் ஒரே ஒரு எண்ணம் பற்றித் தான்; அவர் தம் பாடல்களில் இறைவனுடைய புகழைத் தான் பாடியிருந்தார்; அப்படிப் பாடுவது வேதங்களுக்கும், சுருதிகளுக்கும் தனி உரிமை அல்ல; மேலும் பாடல்கள் வாயிலாகப் பக்தியைப் பரப்புமாறு இறைவனுகிய பாண்டு ரங்கனே அவருக்கு அன்புக்கட்டளை இட்டிருந்தான்.

பின்னர், துகாராம் இந்திராயணி நதிக்கரையில் அமர்ந்து, தமக்குச் சரியான பாதையைக் காட்டுமாறு பாண்டுரங்கனை உறுதியான மன நிலையுடன் தொழுதார். பதிமூன்று நாட்கள் அவர் இவ்வாறு தண்ணீரும், உணவும், உறக்கமும் இன்றி அசைவற்று அமர்ந்திருந்தார். கடைசி நாளன்று துகாராமின் தொண்டர்கள் ஒருவரின் கனவில் பாண்டுரங்கன் தோன்றி, ''ஆற்றுக்குச் செல். துகாராமின் பாடல்கள் அடங்கிய கட்டு அப்படியே சிறிதும் பழுதின்றி, நீரின்மேல் மிதக்கும். அதை நீ காண்பாய்,'' என்று அறிவித்தார். அத் தொண்டர் உடனே ஆற்றுக்குச் சென்று, பாடல்கள் அடங்கிய கட்டைக் கரைக்குக் கொண்டு வந்து சேர்த்தார். இறைவனுடைய கருணையைக் கண்டு துகாராம் நெஞ்சம் நெகிழ்ந்தார், இறைவனுடைய சொல்லைத் தாம் ஐயுற்றதற்காகவும், பாடல்களைப் பதின்மூன்று நாட்கள்,

தண்ணீரில் பாதுகாத்து வைக்கின்ற தொல்லையைத் தாம் இறைவனுக்குத் தந்தமைக்காகவும் அவர் தம்மையே நொந்து, கண்டிக்கின்ற முறையில் ஐந்துப் பாடல்களைப் பாடினுர். எனினும் துகாராமுக்கு, இது போதாது; ஏனெனில் அவர் அந்தணர் ஒருவரின் வாக்கைப் புனித வேத வாக்காகவே மதிக்கின்றவர்; மேலும், அவர் இனிமேல் பாடல்களைப் புனையக்கூடாது என்று இராமேஸ்வர சாஸ்திரி கட்டளை இட்டிருந்தார்.

இந் நிகழ்ச்சி முடிந்த அண்மையில், இராமேஸ்வர் ஒரு நாள் வாகோலி என்ற ஊரின் வழியாகச் சென்றவர் அருகில் உள்ள ஓர் ஊரை அடைந்தார்; அங்கு அனகத்ஷா என்ற முகம்மதியப் பக்கிரி வாழ்ந்து வந்தார்; அவருடைய வீட்டின் வெளி வராந்தாவில் குளிர்ந்த தண்ணீரை எங்கும் தூவியவாறு ஒரு பெரிய ஊற்று இருந்தது. ஊற்றைப் பார்த்த இராமேஸ்வரருக்கு அதில் நீராடி மகிழ ஆசை உண்டாயிற்று. அயலான் ஒருவன் தம் வீட்டு முற்றத்திற்கு வந்து அத்துமீறி நடப்பதைப் பார்த்த அனகத்ஷா எரிச்சலடைந்து, அந்த ஆள் உடம்பு முழுவதும் பற்றி எரிவது போல் உணர வேண்டும் என்று தம் மனத்திற்குள் சாபமிட்டார். உடனே இராமேஸ்வரர் சாபத்தின் விளைவுகளை அனுபவிக்கத் தொடங்கினுர். தம் உடம்பைக் குளிரச் செய்வதற்கு அவர் மேற்கொண்ட முயற்சிகள் யாவும் தோல்வியடைந்தன. துயரங்களைத் தாங்கச் சக்தியற்று மிகவும் வருத்தத்துடன் அவர் ஆலந்திக்குச் சென்று ஞானேஸ்வரரின் சமாதிக்கு முன்பு அமர்ந்து, தம் உடம்பு பற்றி எரியும் உணர்விலிருந்து தம்மை விடுவிக்குமாறு அவரைத் தொழுதார். இரவில் அவர் கனவில் ஞானேஸ்வரர் தோன்றி, ''விட்டோபரின் மிகப் பெரும் பக்தரான துகாராமினிடத்தில் நீ வெறுப்பைப் பாராட்டுகின்ருயா, போ; துகாராமினிடம் சரணம் அடை; உன்னுடைய உடல் துன்பமெல்லாம் மறைந்துவிடும்'' என்று அறிவித்தார். துகாராமினிடம் நேரில் செல்ல இராமேஸ்வரர் அஞ்சினுர். தேஹுவில் நடைபெற்ற எல்லா நிகழ்ச்சி

களையும் அவர் இதற்குள் அறிந்திருந்தார்; துகாராமின் பெருமையை இப்போது புரிந்து கொண்டிருந்தார்; ஆதலால், துகாராம் தம்மைச் சபித்துவிடுவாரோ என்று எண்ணி அஞ்சினர். எனவே அவர் துகாராமுக்குத் தம் முடைய தவற்றுக்கு வருத்தத்தைத் தெரிவித்துத் தம்மை மன்னிக்குமாறு வேண்டி ஒரு கடிதம் எழுதினர். துகாராம் ஒவ்வொருவரிடமும் பேரன்பு தவிர எதுவும் பாராட்டாதவர்; தம்மைத் துன்புறுத்தியவர்களிடத்திலும் அவர் அவ்வாறே இருந்தார்; கடிதம் கிடைத்ததும் அவர் இராமேஸ்வரருக்குத் தம் பதிலை ஒரு பாடல் வடிவில் அனுப்பினர். அப்பாடலின் கருத்து:—

''உன் மனம் தூயதாக இருந்தால், உன் பகைவர்கூட உன் நண்பராவர்; புலிகள், பாம்புகள் போன்ற கொடிய உயிரினங்களால்கூட அவனுக்கு ஆபத்து நேராது. நஞ்சுகூட அவனுக்கு நன்மை தரும் தேவாம்ருதம் ஆகிவிடும்; துயரம் எல்லாம் மகிழ்ச்சியாக மாறிவிடும். (உடம்பு பற்றி எறியும் உணர்வால் ஏற்படும் துன்பமும் மறைந்துவிடும்). உன்னை நீ நேசிப்பது போல எல்லா உயிரினங்களையும் நீ நேசிக்கத் தொடங்குவாய்; அனைவரையும் சமமாகக் கருதும் சம நோக்கு உன்பால் இருக்க வேண்டும். நாராயண பகவான், தன் மீது கருணையைப் பொழிந்ததாகத் துகா கூறுகின்றன். இதனல்தான் நான் எல்லா உயிர்களிலும் இவ்வாறு உணர்கின்றேன்.

இராமேஸ்வரர் அக்கடிதத்தைப் படிக்கத் தொடங்கி, அடைப்புக்குறிக்குள் அடங்கிய செய்தியைப் படித்ததும் எல்லாத் துன்பங்களிலிருந்து விடுபட்டார்; அவர் துகாராமுக்குப் பெரும் அநீதியை இழைத்துவிட்டார் என்பது இதனல் உறுதியாயிற்று. அப்போதிருந்து இராமேஸ்வரர் துகாராமைப் பெரிதும் கொண்டாடுபவராகி அவருக்கு ஆர்வம் மிகுந்த தொண்டரும் ஆனர்.

இந்த நிகழ்ச்சியால் துகாராமின் பெயரும் புகழும் எல்லா இடங்களுக்கும் பரவியது; ஆனல் அவர் ஏழை

யாகவே இருந்தார். அவர் எப்போதும் பஜனையும் கீர்த்தன மும் செய்து கொண்டிருந்தார். பொருள் எதையும் சம்பாதிக்கவில்லை. அவரும், அவருடைய மனைவி, குழந்தை களும் அடங்கிய குடும்பத்தை நிர்வாகம் செய்யும் பொறுப்பு அவருடைய மனைவி ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று. துகாராம் பொதுவாகப் பஜனையில் மனம் லயித்துப் போய்த் தம்முடைய உணவை உட்கொள்ளவும் மறந்து விடுவார். அவருடைய மனைவி உணவை எடுத்துக்கொண்டு அவரைத் தேடிச் சென்று அவர் எங்கு காணப்பட்டாலும் பெரும் பாலும் பாமகிரி மலையில் — அங்கு அவருக்கு உணவைப் படைத்து உண்ணச் செய்வார். குடும்பத்தை நடத்துவதில் அந்த அம்மையார் பல தொல்லைகளை அனுபவிக்க வேண்டி யிருந்தது; சில நேரங்களில் எரிச்சல் அடைந்தாலும் அவர் நல்ல பண்புள்ளவர்; துகாராம் தாம் இறப்பதற்கு முன்பு தம் மனைவியின் பக்தி, மனத் தூய்மை ஆகிய பண்புகளைப் பாராட்டியுள்ளார்.

துகாராமின்பால் பரிவு கொண்டவர்களில் ஒருவர் அவருக்கு நாள்தோறும் குறிப்பிட்ட அளவு தானியம் தருவதாக உறுதி தந்தார்; அதற்கீடாகத் துகாராம் அவருடைய வயல்களில் பறவைகள் வராதவாறு பாதுகாக்க வேண்டும். இறைவன் புகழ்களைப் பாடி மகிழ்வதற்குத் தமக்குத் தனி இடம் வாய்ப்பதனல் துகாராம் அதற்கு இசைந்தார். துகாராம் வயலுக்குச் சென்றதும் பறவைகள் யாவும் பறந்தோடி விடும்; பறவைகள் தமக்கு உரிய உணவை இழக்க நேர்வது துகாராமுக்குப் பெரும் வருத்தத்தைத் தந்தது. சில நாட்கள் சென்றதும் அவை தம் கூச்சத்தைத் தவிர்த்து அச்சமும் அற்று வழக்கம்போல் தானியங்களை உண்ணத் தொடங்கின. நிலச் சொந்தக் காரர் இதை அறிந்ததும் தலையாரியின் முன்னல் அவர் துகாராமைக் கண்டித்து வழக்காடினர். இறைவன் படைத்த உயிரினங்களிடத்து அன்பு பாராட்டவேண்டும் என்றும் அவற்றின் உணவை அவை உண்ணுமாறு தாராள மாக அனுமதிப்பது நம் கடமை என்றும் துகாராம் எவ்வ ளவோ எடுத்துச் சொல்லியும், நில உடமையாளர் தாம்

இழந்த தொகை எவ்வளவு என்று சொல்லுகின்றாரோ அத் தொகையை அவருக்குத் துகாராம் தருவதாக உறுதிப் பத்திரம் எழுதித் தருமாறு கட்டாயப் படுத்தப்பட்டார். விளைச்சல் முற்றி அறுவடை நடந்த பிறகு கணக்கு பார்த்ததில் அந்த உழவருக்கு நஷ்டம் ஏற்படுவதற்குப் பதில், எதிர்பார்த்த அளவுக்குமேல் இருமடங்கு இலாபம் கிடைத்திருந்தது. அவர் பெருமகிழ்ச்சியடைந்து அதிகமாகக் கிடைத்த அளவு முழுவதையும் துகாராமுக்கு அனுப்பினார்; துகாராம் தம் கருணை இயல்பின்படி அவை எல்லாவற்றை யும் ஏழை மக்களுக்கு வழங்கிவிட்டார்.

மராட்டிய மாநிலத்தின் பேரரசர் சிவாஜி துகாராமைப் பெருமையுடன் கொண்டாடினார். அவர் எண்ணற்ற, விலை உயர்ந்த பரிசுகளை அனுப்பியதுடன், தம் அரசவைக்கு வருமாறும் அவர் துகாராமை அழைத்தார். உலகாளும் அரசர்களிடம் தாம் செய்ய வேண்டிய செயல் எதுவும் இல்லை என்று சொல்லித் துகாராம் இரண்டையும் மறுத்து விட்டார். பிறகு சிவாஜி தாமே துகாராமினிடம் வந்து அவருடன் பல நாள் தங்கியிருந்து தம் பரிசுகள் சிலவற்றை யேனும் ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினார்; துகாராம் உடனே அவற்றை மறுத்து விட்டார். ஒரு நாள் சிவாஜி துகாராம் இறைவன் புகழ்கள் பற்றிய பாடல்களைப் பாடிப் பஜனை செய்வதைக் கேட்டு மனம் மிகவும் ஈடுபட்டுத் தம் அரசாட்சியைத் துறந்து விட்டுத் தாமும் பஜனை செய்து துகாராமைப் பின்பற்ற வேண்டும் என்று விரும்பினார். ஆனால் துகாராம் தடுத்து விட்டார். சிவாஜி மக்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளையும், இந்து மதத்திற்கும் தருமத்திற்கும் தரவேண்டிய பாதுகாப்பைப் பற்றியும் நினை வூட்டி, முடிவாக, "<u>இறைவனைப்பற்றிய மெய்யுணர்வு ஏற்பட வேண்டுமானால், உணவையும் தண்ணீரையும் துறந்து காட்டுக்குப் போகவேண்டும் என்பது தேவை இல்லை. உலகியல் இன்பங்கள் தாமாக வந்து உன்னை அடைந்தால் எல்லா வழிகளாலும் அவற்றை அனுபவி; ஆனால் நம் அனைவர் உள்ளங்களிலும் குடிகொண்டுள்ள இறைவன் பெயரால் அவ்வாறு அனுபவி. எதையும் விரும்ப</u>

வேண்டாம்; எதையும் துறக்க வேண்டாம். இதுவே என்னுடைய எளிய ஒரே அறிவுரை'' என்று அறிவித்தார். சிவாஜி, இதற்கு முன்பு அடைந்திராத மன நிறைவோடும், மகிழ்ச்சியோடும் தம் அரசவைக்குத் திரும்பினார்.

ஒரு நாள், ஓர் அந்தணர், ஞானி முகுந்தராஜ் எழுதிய ''விவேக சிந்து'' (ஞானக் கடல்) என்ற நூலைத் துகாராமுடன் சேர்ந்து படிக்க விரும்பினார். அதனால் துகாராமின் விளக்கம், அறிவுரை முதலிய பயன்கள் வாய்த்து மெய்யுணர்வையும், இறைவனுடன் ஐக்கியமாகின்ற பேற்றையும் அவர் பெறலாம். துகாராம் அதற்கு இசைந்தார். அந்தணர் படித்துக்கொண்டே இருந்தார். துகாராம் தம் கண்களை மூடியவாறு மன ஒருமையுடன் தம் ஜெபத்தைச் செய்துகொண்டே இருந்தார். ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரம் கழிந்தபின், அந்தணர், துகாராம் அலட்சியமாக இருப்பதைக் கண்டு எரிச்சலுற்று மிகவும் கண்டித்தார். துகார்ராம் சிறிதும் சினமடையாமல், பாடல் வடிவில் பின்வருமாறு கூறினார். இந்த ஒரு காரணத்திற்காகத்தான் நான் வீட்டையும், இந்தப் பொருள்களையும் விட்டுவிட்டுக் காட்டுக்குச் செல்லுகின்றேன். நான் இறைவனுடன் ஐக்கியமாகிவிடுவதைத் தவிர்க்க விரும்புகின்றேன். இறை வடிவத்தின்பால் நான் கொண்டுள்ள அன்பை இழக்க விரும்புவதில்லை. நான் மெய்யுணர்வு பெற்று விட்டால், பஜனை, கீர்த்தனம் முதலியவற்றைச் செய்வதில் எனக்குள்ள விருப்பம் மறைந்து விடும். அத்வைதக் கொள்கை பற்றிய குரலை நான் கேட்க விரும்பவில்லை, மற்றொரு சமயம் அவர் பாடிய பாடல்;— இறைவனுக்கும் எனக்கும் உள்ள உறவை உறுதியாக நிலைப் படுத்த நான் விரும்புகின்றேன்; அவன் எஜமானன்; நான் அடிமை. அவன் உயர்ந்த பீடத்தில் அமர்ந்துள்ளான்; நான் அவனது காலடியில் இருக்கின்றேன்.'' ''ஆண்டவனே, எனக்கு இந்த ஒரு பரிசைத் தருவாயாக! நான் உன்னை ஒரு போதும் மறவாதிருக்க வேண்டும்; நான் எப்போதும் உன்னுடைய புகழ்களை அன்புடன் பாடவேண்டும்!''.

துகாராம், இறைவனுடைய புகழ்களைப் பாடுவாதாகிய பஜனை வடிவிலும், அவனுடைய நாமத்தை உச்சரித்தலாகிய வடிவிலும் செய்யும் சகுண பக்தியையே எப்போதும் ஊக்குவித்து வந்தார். இறையன்பு, இறை பணி ஆகியவற்றின் உயர்ந்த வடிவம் பக்தி என்றும், முக்தியை விடவும் பக்தி பெரிதென்றும் அவர் கூறினார். பலப்பல நாட்களையும் இரவுகளையும் அவர் பஜனை செய்வதில் கழித்தார். அருகில் உள்ள ஊர்களிலிருந்து அங்கு வருமாறும், அவ்வூராருடன் பஜனை செய்யுமாறும் அவர் அழைக்கப்படுவது வழக்கம். ஒருமுறை அவர் தேஹூவுக்கு அருகில் உள்ள லோஹகௌன் என்ற ஊரில் கீர்த்தனம் செய்துகொண்டிருந்தார். அப்போது அவருடன் பெருந்திரளான மக்களின் கூட்டம், பஜனை செய்து கொண்டிருந்தது. அவர்களிடையே ஜோஷி என்ற அந்தணன், இறக்கும் தருவாயிலிருந்த குழந்தையைத் தாயுடன் விட்டுவிட்டு, அங்கு பஜனை செய்வதற்காக வந்திருந்தான். குழந்தை இறந்துவிட்டது; தாயின் நிலை மிகவும் பரிதாபமாக இருந்தது, அவள் துகாராம் பஜனை செய்து கொண்டிருந்த இடத்துக்கு வந்து, தன் கணவன் இறக்கும் குழந்தைப் பற்றி அலட்சியமாக இருந்ததற்கு அவர் தான் காரணம் என்றும், இவ்வாறு, தன் குழந்தை இறந்ததற்கும் அவரே காரணம் ஆவார் என்றும் குறை கூறினாள். துகாராம் உடனே, குழந்தைக்கு உயிரைத் தருமாறு தொழுது, 'ஆசுகவியாக' ஒரு பாடலை மிகுந்த ஆர்வத்தோடும் நெஞ்சம் நெகிழக் கூடிய வகையிலும் பாடினார்; கூடியிருந்த மக்களும் அவருடன் சேர்ந்து நெஞ்சம் நிறைந்த பக்தியுடன் பாடினர். பண்டரிநாத பகவான் அவர்களுடைய வேண்டுகோளை நிறைவேற்றவே, குழந்தை உயிர் பெற்றுத் தானும் பஜனையில் சேர்ந்து கொண்டது.

அவருடைய வாழ்வில் அற்புத நிகழ்ச்சிகள் பல நடைபெற்றன என்று சொல்லப்படுகின்றது; அவருடைய புகழ் நாடு முழுவதும் பரவிற்று; ஆனால் அவர் எதனாலும் பாதிப்பு அடையாதவராக இருந்தார். இவ்வுலகை விட்டுத் தாம் பிரிய வேண்டிய சரியான நேரத்தை அவர் அறிந்திருந்தார்.

வாழ்வு பற்றி அவர் மிகவும் சோர்வடைந்தார். உடல் தேவைகளைக் கவனிப்பதில் நேரமெல்லாம் செலவாகின்றதென்று அவர் கருதினார். அந்த நேரமெல்லாம் விட்டோபரின் புகழைப் பாடுவதிலும், பஜனை, கீர்த்தனம் செய்வதிலும் கழிந்தால் நன்மை மிகுதியாக வாய்க்கும். இறைவனிடம், அவன் தனது கமல பாதங்களில் அவர் இருக்குமாறு விரைவில் அழைத்துக்கொள்ள வேண்டும் என்றும், அப்போது அவர் தொடர்ந்து எந்நேரமும் எப்போதும் அவனைத் தொழுது கொண்டே இருக்க முடியும் என்றும் அவர் வேண்டினார். அவர் தம் இறுதியை அடையும் நேரம் நெருங்குகையில், அவர் தாம் சில நாட்களுக்குள் உலகை விட்டுச் செல்லப் போவதாகத் தம் நண்பர்களிடம் தெரிவித்தார். தாம் பிரிவதற்கு முந்திய நாள் இரவில் அவர் நிகழ்த்திய கீர்த்தனம், பல வகைகளிலும் நினைவில் கொள்ள வேண்டியதாக உள்ளது. அதன் பொருள், ஹரிகதை. அவர், ''ஹரி கதை என்பது மூன்று புனித ஆறுகளின்—அதாவது, இறைவன், பக்தன், இறைவனுடைய நாமம் ஆகியவற்றின் கூட்டம் ஆகும். அதைக் கேட்பதனால் ஒருவருடைய பாவங்கள் யாவும் பொசுக்கப்பட்டுத் தூய்மை பெறுகின்றார். அங்கு சுற்றியும் நிலத்தில் கிடக்கும் கற்கள் கூடப் புனிதமடைந்து வணங்கப்படுவதற்குத் தகுதியுடையனவாய் ஆகின்றன. உங்களிடையே விண்ணுலகத்தை அடைய வேண்டும் என்ற விருப்பம் உள்ளவர்கள் புனிதப் பிரசாதத்தை உட்கொள்ள வேண்டும். இதுவே முக்தியை அடைவதற்கு மிகவும் சுலபமான வழி'' என்று கூறினார். அடுத்த நாள் காலையில் அவர் தம் மனைவியிடம், ''நாராயணன் என்ற பெயருள்ள புதல்வனை நீ விரைவில் பெறுவாய்; அவன் உன்னை மகிழ்விப்பான். நீ என் வாழ்வில் மகிழ்ச்சி நிலவச் செய்தாய். உன் அன்புக்கடனைத் திருப்பிச் செலுத்த ஒருபோதும் என்னால் முடியாது'' என்று கூறினார். அவருடைய பிரிவு நெருங்கிவிட்டதென்று கேள்வியுற்ற ஊர் மக்கள் அனைவரும் அவரைச் சுற்றித்திரண்டு நின்றபோது அவர் அவர்களைப் பார்த்து, ''குடும்ப வாழ்க்கை பற்றிய பொறுப்புக்கள் உங்கள் அனைவருக்கும் உண்டு; எனினும்

பாண்டுரங்கனை ஒரு போதும் மறவாதீர்கள், அவனைத் தொழவும் அவனுடைய புகழ்களைப் பாடவும் ஒரு போதும் மறவாதீர்கள். பண்டரிபுரம் உங்களுக்கு மிகவும் பக்கத்தில் உள்ளது. அது நிலவுலகில் உள்ள வைகுந்தம், அங்கே சென்று அவனைத் தொழுவீராக. நான் அனுபவத்தில் கண்ட உண்மை, நீங்கள் இறக்கும் தருவாயில் உங்களைக் காப்பாற்ற வல்லது இறைவனுடைய நாமம் மட்டுமே. நீண்டகாலமாக நீங்கள் என்னைக் காப்பாற்றி எனக்கு ஆதரவாக இருந்து வந்தீர்கள். உங்கள் அன்புக் கடனை நான் திருப்பிச் செலுத்த இயலாது. நான் உங்கள் அனைவருக்கும் மிகவும் கடமைப் பட்டவன்; அனைவருக்கும் மிகுந்த நன்றி செலுத்து கின்றேன். நான் உங்கள் அனைவருடைய திருவடிகளிலும் வீழ்ந்து பணிந்து கண்ணீர் விட்டு வேண்டிக்கொள்வ தெல்லாம், ஒருபோதும் இறைவனுடைய நாமத்தை மறவா தீர்கள். நாராயண பகவானைக் குறித்து எப்போதும் பஜனையும், கீர்த்தனமும் செய்யுங்கள். உலகியல் செல்வ நலங்கள் பற்றி ஒருபோதும் கவலைப்பட வேண்டாம். இறைவன் அதையெல்லாம் கவனித்துக் கொள்வான். இவையெல்லாம் நிலையாதவை. இறைவன் நாமம் ஒன்றே நிலைத்திருக்கும். இராமகிருஷ்ண ஹரியை ஜெபம் செய்யுங் கள்; அவன் எப்போதும் உங்களைக் காப்பாற்றுவான். இதுவே என்னுடைய கடைசி வேண்டுகோளும் அறிவுரையும் ஆகும்'' என்று தெரிவித்தார். இவ்வாறு, மராட்டியத்தின் மிகப் பெரும் ஞானியருள் ஒருவர் இறைவனுடைய நாமத்தை உதட்டில் உச்சரித்தவாறும், இறைவனுடைய புகழ்களைப் பாடியவாறும் மறைந்தார்.

துகாராம் 1649—ல் தம்முடைய 41—ஆம் வயதில் இந்த உலகை விட்டுப் பிரிந்தார். விஷ்ணு பகவான் தம்முடைய தேரையும் பணியாட்களையும் அனுப்பித் துகாராமைத் தம் பேரின்ப வீட்டுக்கு அழைத்துக்கொண்டார் என்பது மக்களின் நம்பிக்கையாகும்.

# 21. தாமாஜி

தாமாஜி, பண்டரிபுரத்தில் உள்ள பாண்டுரங்க பகவானிடத்தில் (கிருஷ்ண பகவான்) மிகுந்த பக்தி பூண்டவர். அவர் பதின்மூன்றும் நூற்றுண்டில் வாழ்ந்தார். கோல்கொண்டாவில் பீடர் நாட்டு மங்கள வேதியம் என்ற பகுதியின் திவாணுக அவர் இருந்தார்.

ஒருமுறை கொடிய பஞ்சம் மக்களை வாட்டியது. தாமாஜி, நவாப்பின் அனுமதியில்லாமல், அரசாங்கக் களஞ்சியங்களைத் திறந்து தானியங்களை எடுத்து ஏழை மக்களுக்கு வாரி வழங்கினுர். பட்டினிச் சாவிலிருந்து அவர் கோடிக்கணக்கான மக்களைக் காப்பாற்றினுர்.

அவர்பால் பொருமைகொண்ட கணக்கர், நவாப்பினிடம், தாமாஜி அவருடைய அனுமதியைப் பெருமலே தானியங்களை எல்லாம் ஏழை மக்களுக்கு வாரி வழங்கியதைப் பற்றிப் புகார் செய்தார். நவாப் மிகவும் சினமடைந்து தாமாஜியைக் கைது செய்து தம் முன்னே கொண்டுவந்து நிறுத்தும்படித் தம் படைத் தலைவனுக்கு ஆணையிட்டார்.

நவாப்பின் தலைநகருக்கு அவரை அழைத்துச் செல்லும் வழியில் நவாப்பினுடைய ஆட்களிடம் தம்மைப் பண்டரி புரத்தின் வழியாக அழைத்துச் சென்றுல் தாம் கடைசிமுறை யாக விட்டலரின் தரிசனத்தைச் செய்து கொள்ள முடியும் என்று தாமாஜி தெரிவித்த வேண்டுகோளுக்கு அவர்கள் இசைந்தனர்.

தம் பக்தரைக் காப்பாற்ற இறைவன் பணியாள் வடிவம் எடுத்துக்கொண்டார். ஒரு கறுப்புப் போர்வையும் நீண்ட கழியும் தாங்கி அவர் நவாப்பின் தர்பாரில் தோன்றினுர். உள்ளே வந்த அவரிடம் நவாப்பு, ''நீ யார்?'' என்று வினவ, அவர் ''நான் இடைச் சிறுவன், என் பெயர் விட்டு,

நான் திவான் தாமாஜியின் பணியாள். என் எசமானர், தங்கள் அரசாங்கக் களஞ்சியத்திலிருந்த தானியங்களை எல்லாம் கொடிய பஞ்சத்தின் போது பட்டினியால் துன்புற்ற ஏழை மக்களுக்கு வாரி வழங்கிவிட்டார். ஆனால் அவர் அதற்கான விலையை என்னிடம் கொடுத்தனுப்பியுள்ளார். அருள் கூர்ந்து தாங்கள் தொகையைப் பெற்றுக் கொண்டு அதற்கான இரசீது என்னிடம் தருமாறு வேண்டுகின்றேன்.'' என்று கூறினார். நவாப்பு, தொகையைக் கஜானாவுக்குக் கொண்டு வா. இரசீதைக் கையெழுத்திட்டுத் தருகிறேன்' என்று தெரிவித்தார்.

விட்டுவின் இனிய தோற்றத்தினால் நவாப்பு பெரிதும் கவரப்பட்டார். விட்டு கஜானாவுக்குச் சென்றான். நிதிக் காப்பாளர் விட்டு கொடுத்த பையிலிருந்த பணத்தைப் பெட்டியில் நிரப்பினார். மீண்டும் பை நிறையப் பணம் காணப்பட்டது. தாமாஜி செலுத்த வேண்டிய தொகை முழுவதும் கஜானாவில் செலுத்தப்படும் வரை இவ்வாறு பலமுறை நடைபெற்றது. நிதிக்காப்பாளர் ஆச்சரியத்தால் தாக்குண்டார். விட்டு இரசீது பெற்றுக்கொண்டு நவாப்பினிடம் திரும்பி வந்தான். நவாப்பு இரசீதில் கையெழுத்திட்டு, விட்டுவினிடம் அதை ஒப்படைத்தார். இரசீதில் பின்வருமாறு எழுதப்பட்டிருந்தது: ''மங்கள வேதியக் களஞ்சியத்தில் இருந்த தானியங்களுக்கான விலை முழுவதும் பெற்றுக் கொள்ளப்பட்டது''.

தாமாஜியின் பணியாளிடமிருந்த பொலிவையும் கவர்ச்சியையும் கண்ட நவாப்பு, அவன் ஒரு தேவனாக இருக்க வேண்டும் என்று கருதினார். அவர் பெரும் தவிப்புக்கு ஆளானார். விட்டுவை மீண்டும் பார்க்க அவர் விரும்பினார். அவர், ''விட்டு! விட்டு! நீ எங்கே இருக்கிறாய், விட்டு!'' என்று புலம்பினார். விட்டுவைக் கண்டுபிடிக்குமாறு தம் அதிகாரிகளை ஏவினார், விட்டு எங்கும் காணப்படவில்லை.

இறைவன் இன்னும் சில திருவிளையாடல்களைச் செய்தார். அவன் இரசீதை எடுத்துத் தாமாஜியின் கிதைப்

புத்தகத்தில் வைத்தான். தாமாஜி சந்திரபாகை ஆற்றில் நீராடியபின் சுலோகங்களைப் படிக்க விரும்பினார். நவாப்பின் இரசீதைக் கண்டு அவர் பெரும் வியப்படைந்தார். விட்டலரின் திருவருளால் இவையாவும் நடைபெற்றதை அவர் அறிந்தார்.

இதற்கிடையில் விட்டுவைத் தேட நவாப்பே புறப் பட்டார். அவர் தாமாஜியை வழியில் சந்தித்தார். அவர் தாமாஜியிடம், ''பணிந்து வணங்கத்தக்க ஞானியே! என்னைப் பொறுத்துக்கொள்ளுங்கள், என்னை மன்னியுங்கள். நான் மிகக் கொடிய பாவத்தைச் செய்துவிட்டேன். தங்கள் பணியாளாகிய விட்டுவை எனக்கு இப்போது காண்பியுங்கள்'' என்று வேண்டினார். தாமாஜி பெரும் வியப்படைந்தார். அவர் நவாப்பினிடம், ''என் மரியாதைக் குரிய எசமானரே! விட்டு என்ற பெயருள்ள பணியாள் யாரும் என்னிடம் இல்லை. இந்த விட்டு யாரென்று எனக்குத் தெரியாது. அவனுடைய அடையாளங்கள் சிலவற்றைத் தாங்கள் தெரிவித்தால், நான் அவனைக் கண்டு பிடிக்கின்றேன்'' என்று தெரிவித்தார். நவாப்பு, 'அவன் தங்கள் பணியாள், விட்டு தானியங்களின் விலையாகிய தொகையை என்னிடம் கொண்டு வந்தான். அவன் கருப்புப் போர்வையை அணிந்துகொண்டு, கையில் ஒரு கழியை ஏந்தியிருந்தான். அவன் கருநிற மேனியும், ஒளியுள்ள கண்களும், மலர்ச்சியுள்ள முகமும் உள்ளவன்'' என்று அறிவித்தார்.

தாமாஜி தம் கீதைப் புத்தகத்தில் வைக்கப்பட்டிருந்த இரசீதை நினைத்தார்; உடனே ஆனந்தக் கூத்தாடத் தொடங்கினார். அவர் கண்ணீரை ஆறுகப் பொழிந்து, ''விட்டல பகவானே! பாண்டுரங்கா! எனக்காக நீ பணியாளாக நடித்தாய். நவாப்பு, அருள் பெற்றவர். அவர் உன் இனிய தரிசனத்தைப் பெற்றார். அகிலாண்டங் களுக்கும் நீ உயர்ந்த தெய்வம். நீ ஏன் பணியாளின் வேடம் புனைந்தாய்? எனக்காக ஏன் இவ்வளவு தொல்லைகளை

மேற்கொண்டாய்? நவாப்பு என் உயிரைத்தானே எடுத்துக்கொள்ள முடியும். எது நடந்தாலும் அதைச் சந்திக்க நான் தயாராக இருந்தேன்! என்று கூறிய தாமாஜி மேலும், பாண்டுரங்கா! பாண்டுரங்கா!'' என்று கூவி அழத் தொடங்கினர். இறைவன் மீண்டும் தோன்றி அருளை வழங்கினன். தன் பக்தர்கள் நவாப்பு, தாமாஜி இருவர்க்கும் அருள் புரிந்தான். இறைவன் எவ்வளவு கருணை உள்ளவர். பகவான் கிருஷ்ணரின், ராதையின் தெய்வம் ராதா வல்லபரின் பெருமை ஓங்குக! தாமாஜி உடனே திவான் பதவியை விட்டு விலகி எஞ்சிய தம் வாழ்நாளைப் பண்டரி புரத்தில் விட்டல் பகவானுக்குப் பக்தி செய்வதில் கழித்து இறுதியில் இறைவனுடன் ஐக்கியமானர்.

## 22. நாமதேவர்

மராட்டிய மாநிலத்தில் புகழ்மிக்க ஞானி ஞான தேவரின் காலத்தில் வாழ்ந்த நாமதேவர் அவரைக் காட்டிலும் ஐந்து வயது மூத்தவர். அவர் கி. பி. 1269-ல் பிறந்தார். அவர் தையற்காரக் குடும்பத்தில் தோன்றினர். அக் குடும்பத்தார் பண்டரிபுர விட்டலரின் நேர்மையான பக்தர்கள். அவர்கள் பண்டரிபுர 'வரி'யைப் பின்பற்றி ஆண்டு தோறும் ஆனி, கார்த்திகை மாதங்களில் வரும் முதல் 11-ம் நாளன்று யாத்திரை செய்து வந்தார்கள். அக் குடும்பத் தினரின் பூர்வீக மூதாதையர் சாதரா மாவட்டத்தில் 'கரட்' என்ற இடத்தின் அருகில் கிருஷ்ண நதியின் கரையில் உள்ள நர்கிபமணி என்ற ஊரைச் சேர்ந்தவர்கள். நாமதேவர் பிறப்பதற்கு ஓராண்டு அல்லது ஈராண்டுகட்கு முன்பு, பண்டரிபுர விட்டலரின் பெரும் பக்தராகிய அவருடைய தந்தை, உலகியல் செல்வங்களைப் பெருக்கிக் கொள்ள விரும்பிப் பண்டரிபுரத்திற்குக் குடிபெயர்ந்தார்.

நாமதேவர் தம் சிறு வயதிலிருந்தே பிரகலாதரைப்போல் இருந்தார். பேசத் தொடங்கிய தம் இரண்டாம் வயதில், அவர் பேசிய பிழையில்லாத முதற் சொல் 'விட்டலர்'

என்பதாகும்; பிறருடைய எந்த உதவியும், போதனையும் இல்லாமலே அவர் அப்போதிருந்தே இடையறுது அப்புனித நாமத்தை உச்சரிக்கத் தொடங்கினார். அவருடைய அன்னையார் ஒவ்வொரு நாளும் விட்டலரின் ஆலயத்திற்கு வழிபாடு செய்வதற்காக அவரை அழைத்துச் சென்ற போதெல்லாம் அவர் பெரு மகிழ்ச்சியடைந்தார்; அடுத்தபடி நிலை அவருடைய ஏழாம் வயதில் அமைந்தது; அப்போது அவர் இணையான தாளக் கட்டைகளை உருவாக்கிப் பஜனை செய்வதிலும், பாடுவதிலும், ஆடுவதிலும் தம் காலத்தைக் கழித்தார்; உணவு, பள்ளிப்படிப்பு, ஓய்வு, உறக்கம் முதலிய எல்லாவற்றையும் புறக்கணித்தார். அவர் விட்டலரிடம் கொண்டிருந்த பக்தி மிகவும் நேர்மையும், கள்ளங்கபடம் அற்றும் இருந்தமையால் அவர் சில வேளைகளில் இறைவனைத் தம் தம்பியாகவும், உடன் விளையாடும் தோழராகவும் கருதினார்.

ஒரு நாள், அவருடைய அன்னையாருக்கு வேலை மிகுதியாக இருந்தமையால் விட்டோபருக்குப் படைக்கும் நைவேத்தியங்கள் அடங்கிய தட்டைக் கோயிலுக்கு எடுத்துச் செல்லுமாறு அவர் நாமதேவரிடம் கூறினார். நாமதேவர் கோயிலுக்குச் சென்று நைவேத்திய உணவுகள் அடங்கிய தட்டை விட்டோபரின் முன்வைத்து அவற்றை ஏற்றுக்கொள்ளுமாறு இறைவனை வேண்டினார். விட்டோபர் ஏற்றுக்கொண்டதற்கான அறிகுறி எதுவும் காணாமையால் நாமதேவர் விம்மி விம்மி அழுதார்; உடனே விட்டோபர் மனித வடிவம் தாங்கி வந்து நன்றி தெரிவித்து அவற்றை உண்டு மகிழ்ந்தார். வெறுந் தட்டை ஏந்தி வந்த, மகிழ்ச்சியுடன் காணப்பட்ட நாமதேவரைக் கண்டு அன்னையார் பெரு வியப்படைந்தார்; தட்டில் இருந்த உணவுகளை எல்லாம் உண்மையில் விட்டோபர் உட்கொண்டு மகிழ்ந்தார் என்று நாமதேவர் விளக்கினார். நாமதேவர் தந்த விளக்கம் உண்மைதானா என்றறிய அன்னையார், அடுத்த நாள் அவருக்குத் தெரியாமல் பின் தொடர்ந்து சென்றார். அதே நிகழ்ச்சி மீண்டும் நடைபெற்றது; இறைவன் உண்மை

யாகவே நைவேத்தியங்களை உண்டு மகிழ்ந்த காட்சியைக் கண்ட அன்னையார் மன நிறைவும், மகிழ்ச்சியும் அடைந்தார். நாம தேவர் பற்றி அவர் அடைந்த மகிழ்ச்சிக்கும் பெரு மிதத்திற்கும் எல்லையே இல்லை. இத்தகைய பெரும் பக்தரை மகனைப் பெற்ற தாய் என்ற பாக்கியத்தைத் தமக்குத் தந்தமைக்காக இறைவனுக்கு மிகுந்த நன்றி செலுத்தினர்.

பிற வகைகளில் நாமதேவர், பெற்றோர்க்குத் தலைவலி யாக இருந்தார்; பிற்காலத்தில் அவர் தம் மனைவிக்கும், உறவினர்களுக்கும் அவ்வாறே இருந்தார். தொடக்கத் திலிருந்தே அவருக்கு உலகியல் நடவடிக்கைகளில் விருப்பம் இருக்கவில்லை; பள்ளிப் படிப்பைப் புறக்கணித்தார்; தம் தந்தையாரின் தையல் தொழிலிலோ, அல்லது வேறு எந்த தொழிலிலோ அவர் ஆர்வமும் காட்டவில்லை. விட்டோ பருக்குப் பக்தி செய்வதில் இரவையும், பகலையும் கழிப்பது ஒன்றே அவருக்கு விருப்பமாக இருந்தது. அவருடைய பெற்றோர்கள் முதியவராகிக் கொண்டிருந்தனர்; குடும்பச் சொத்தோ தேய்ந்து கொண்டிருந்தது; எனவே அவர்கள், நாமதேவர், குறிப்பிட்ட காலத்தைப் பக்தியில் செலவு செய்துவிட்டு, எஞ்சியுள்ள நேரத்தில் அவர் ஏதேனும் சம்பாதித்துக் குடும்பத்தை வசதியாக நடத்த உதவி செய்ய வேண்டும் என்று விரும்பினர். எனவே ஒரு நாள் நாம தேவரைக் கடைத் தெருவுக்குச் சென்று சில துணி வகைகளை விற்று வர அனுப்பினர். ஆனால் வியாபார தந்திரங்கள் பற்றி அவர் ஏதும் அறியாதவர்; விலைகள், தொகை, துணிகளின் மதிப்பு முதலியவை அவர் அறிந்திராத செய்தி கள். தந்தை வற்புறுத்திய காரணத்தால் அவர் கடைத் தெருவுக்குச் சென்றார். துணிகளை விற்பதற்காக வந்திருக் கிறோம் என்பதை முற்றிலும் மறந்து அவர் ஒரு கல்லின் மீதமர்ந்து பஜனை செய்து கொண்டிருந்தார். சில மணி நேரங்கழிந்த பிறகு, கதிரவன் மறைந்தான்; மாலைக்கால பக்தி நிகழ்ச்சிக்காக அவர் கோயிலுக்குச் செல்ல வேண்டிய நேரம் அது. அதன் பிறகுதான் அவருக்குத் தாம் துணிகளை விற்பனை செய்வதற்காக வந்த காரியம் நினைவுக்கு வந்தது;

வீட்டுக்குச் சென்றதும் தந்தை சரியான தண்டனை கொடுப்பார் என்று கருதினார். ஆனால் பொறுமை இழந்து, கோயிலுக்குச் செல்லத் துணிந்தார். ஆதலால் துணிகள் எல்லாவற்றையும் தாம் அமர்ந்திருந்த கல்லுக்கே விற்றார்; அதாவது, துணிகளை எல்லாம் கல்லின்மீதே அடுக்கி வைத்தார்; மற்றொரு கல்லை ஜாமீனாக நியமித்து, முதற்கல் தமக்கு அடுத்த நாள் பணம் செலுத்த வேண்டும் என்று ஒப்பந்தம் செய்துவிட்டுக் கோயிலுக்கு விரைந்து சென்றார்.

தம்மகனுடைய அரிய சாதனைகளைக் கேட்ட தந்தை வெகுண்டார். பணத்துக்காக ஜாமீனாக நின்ற தொண்டியாவை அழைத்து வரச்சொன்னார். ('தொண்டியா' என்ற சொல் கல்லையும் குறிக்கும்; மராட்டிய மாநிலத்தில் உள்ள மக்களில் குறிப்பிட்ட வகுப்பாரிடையே வழங்கும் இயற் பெயரையும் குறிக்கும்.) அடுத்த நாள் நாமதேவர் கடைத் தெருவுக்குத் திரும்பிச் சென்றார்; இரவில் துணிகள் மறைந்து விட்டன என்று கண்டார்; பணம் செலுத்த மறுத்த இரண்டாவது கல்லை (தொண்டியாவை) வீட்டுக்குக் கொண்டு வந்து ஓர் அறையில் வைத்துப் பூட்டி விட்டார். பிறகு அவர் கோயிலுக்குச் சென்று விட்டோபரிடம் எல்லா நிகழ்ச்சிகளையும் எடுத்துச் சொல்லித் தம் தொல்லைகளையும் விளக்கினார். நாமதேவருடைய தந்தை 'தொண்டியாவை'க் காட்டுமாறு கேட்டபோது, தொண்டியாவை பூட்டிய அறைக்குள் வைக்கப்பட்டுள்ளதாகக் கூறி, நாமதேவர் கோயிலை நோக்கி ஓடினார். தந்தை, பணத்தைக் கேட்பதற்காக அறையைத் திறந்தபோது, உள்ளே பெரிய தங்கக் கட்டி இருப்பதைப் பார்த்து வியப்படைந்தார். தந்தை அளவற்ற மகிழ்ச்சியடைந்தார்; ஆனால் நாமதேவர் அதைப் பற்றி முற்றிலும் அலட்சியமாக இருந்தார். தண்டனையிலிருந்து தம்மைத் தப்புவித்தமைக்காக மட்டும் அவர் இறைவனைப் புகழ்ந்தார். இவ்வாறு இந்நிகழ்ச்சி நடைபெற்றது.

நாமதேவர் குடும்ப அலுவல்களிலும், தம் பெற்றோர், மனைவி, குழந்தைகள் பற்றி ஆர்வம் கொள்வதை மிகவும்

தொல்லையாக உணர்ந்தார்; உலகியல் வாழ்வுக்கு அவரைத் திருப்புவதற்காக குடும்பத்தாரும் பிற நண்பர்களும், அவரிடம் கூறிய அறிவுரைத் தூண்டுதல்கள் யாவும் பயன் தராது போயின. அவருக்கிருந்த ஒரே ஒரு ஆர்வம் விட்டோப பகவான் தான். விட்டோபரின் முன்னால் அமர்ந்து அவருடன் பேசுவதிலும், ஆன்மீகக் கருத்துக்களைப் பற்றி அவருடன் உரையாடுவதிலும், பஜனை செய்வதிலும் அவர் மணிக்கணக்கில் நேரத்தைச் செலவிடுவது வழக்கமாகி விட்டது. நாமதேவருக்கு விட்டோபர்தான் ஒவ்வொரு காரியத்தின் தொடக்கமும் முடிவுமாக இருந்தார்.

நாமதேவர் இருபது வயதை அடைந்த போது, பெரும் ஞானியாகிய ஞானதேவரைப் பண்டரிபுரத்தில் சந்தித்தார். விட்டோபரின் பெரும் பக்தராக இருந்த நாமதேவர்பால், ஞானதேவருக்கு இயற்கையாகவே மிகுந்த விருப்பம் ஏற்பட்டது. நாமதேவரின் கூட்டுறவால் தமக்கு மிகுந்த நன்மை ஏற்படும் என்பதனால் அவர் தாம் யாத்திரை செல்லும் புனித தலங்கட்கு எல்லாம் தம்மோடு உடன் வருமாறு நாமதேவரை வேண்டினார். பண்டரிபுரத்து விட்டோப பகவானைப் பிரிந்திருக்க நேரும் என்று நாமதேவர் அவருடன் செல்ல விரும்பவில்லை, எனினும் விவேகம் மிக்க அறிவுரைகள் நாமதேவரை யாத்திரை செல்லுமாறு தூண்டி விட்டன. நாமதேவரின் வாழ்க்கையில் இது மிகவும் முக்கிய மான காலமாகும். நடைமுறையில் இக் காலத்திலிருந்து இவ்விருபெரும் ஞானியரும் மரணம் தங்களைப் பிரிக்கும் வரையிலும், ஒருவரையொருவர் பிரியாமல் ஒன்றாக இருந்தனர். புனித யாத்திரை இந்தியாவின் எல்லாப் பகுதிகளுக்கும், பெரும்பாலும் எல்லாப் புனித தலங்கட்கும் விரிந்தது. வழியில், இருவரும் பல அற்புதங்களை நிகழ்த்தினர் என்று கூறப்படுகிறது. எப்படியிருந்த போதிலும், நாமதேவர் ஞானேஸ்வரரின் நட்பினாலும், அவருடைய அண்ணனும் குருவும் ஆகிய நிவ்ருத்தியின் நட்பினாலும் மிகுந்த நன்மை பெற்று, இவ்வுலகத்தைத் தெய்வத்தின் தோற்றமாகக் காணும் பரந்த பார்வையை அடைந்தார்.

நாம் ஏற்கனவே பார்த்தவாறு, நாமதேவரின் உலகம், பண்டரிபுர விட்டோப தெய்வத்துடன் தொடக்கமும் முடிவும் பெற்றது; வேறு தெய்வத்தை, இறைவனின சின்னமாக அவர் ஏற்கமாட்டார்; யாத்திரை ஐந்து ஆண்டுகள் வரை நீடித்தது. இக்காலத்தில் ஞானதேவர், ஒரு குருவைத் தழுவிக் கொள்ளுமாறு நாமதேவருக்கு அறிவுரை கூறினார்; அதனால் அவர் எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருக்கின்ற தெய்வத்தின் தோற்றத்தை முழுமையாக உணரமுடியும்; அவ்வாறு உணர முடிந்தால்தான் அவருடைய வாழ்வின் நோக்கம் நிறைவு பெறும். மீண்டும் நாமதேவர் தயங்கினார்; ஏனெனில் இத்தகு செயல் தம்மை விட்டோபரிடம் தாம் கொண்டுள்ள பக்தி, விசுவாசம் ஆகியவற்றிலிருந்து பிரித்து விடக்கூடும் என்று அவர் நினைத்தார். விட்டோபரிடம் அன்பு தமக்கு இருக்கும் வரையில் அவர் விட்டோபரிடம் நிலையான பக்தி செலுத்துவதைத் தவிரத் தமக்கு வேறு எந்த விருப்பமும் இல்லை என்று அவர் தெளிவாகக் கூறிவிட்டார். உண்மையில் விட்டோபரே, அவருடைய குரு. எனவே ஞானதேவரும், குழுவில் இருந்த ஏனைய ஞானியரும், நாமதேவருடைய நோக்கு மிகவும் குறுகிய உணர்வையுடையதென்று தெளிவாக அறிந்தனர்; ஏனெனில் அவர், பண்டரிபுர விட்டோப வடிவில் மட்டும் இறைவன் மையங்கொண்டிருப்பதாக நினைத்தார்; எனவே, அவர்கள் தாங்கள் பெற்றுள்ளது போன்ற பரந்த நோக்கை அவரும் பெறவேண்டும் என்று விரும்பினார்.

இக்குழுவில் கோரா என்ற மற்றொரு ஞானி இருந்தார். அவர் தொழிலால் குயவர். ஒரு நாள் ஏனையோர் அவரைப் பார்த்து அக்குழுவில் இருந்த பக்குவப்படாத, பிரம்மத்தை உணர்ந்து கொள்ளாத பாத்திரங்கள் (மட்கலங்கள்) யாவர் என்று நிச்சயித்துக் கூறுமாறு கேட்டுக்கொண்டனர். மட்பாத்திரங்களைப் பரிசோதிக்க வழக்கமாகப் பயன்படுத்தும் சிறிய சமதளமுள்ள மரப்பலகையைக் கோரா கையில் எடுத்துக்கொண்டு ஒவ்வொருவருடைய தலையையும் மெதுவாகத் தட்டிப்பார்க்கத் தொடங்கினார். அவர் நாம

தேவரை அணுகித் தட்டியபோது, நாமதேவர் தாம் தாக்கப்பட்டதாகக் கருதி, உரத்த குரலில் அலறினர். உடனே குழுவில் இருந்த அனைவரும், தம் நிலையில் உறுதி வாய்க்காத நாமதேவர் தான் பக்குவப் படாதவர் என்று சொல்லிச் சிரிக்கத் தொடங்கினர்.

பெரிதும் துன்புற்றவராய் நாமதேவர், விட்டோபரிடம் அடைக்கலம் அடைந்து தமக்கு நேர்ந்த அவமானத்தைப் பற்றி முறையிட்டார். விட்டோப பகவான், விசோப கேச்சார் என்பவரைக் குருவாக ஏற்றுக்கொள்ளும்படி அறிவுரை கூறினர். விசோப கேச்சார், ஞானதேவருடைய சீடர்களில் ஒருவர்; அச்சமயத்தில் அவர் அவந்தியா என்ற ஊரில் வாழ்ந்து வந்தார். நாமதேவர் உடனே அவ்வூருக்குப் புறப்பட்டுச் சென்று நண்பகல் நேரத்தில் அவ்வூரை அடைந்தார். அவர் சிறிது நேரம் ஓய்வு கொள்ளலாம் என்று கருதி அங்கிருந்த ஒரு கோயிலில் நிழலில் தங்கினர். அவர் அங்குள்ள கோயில் தெய்வத்தின்மீது தன் காலடிகளை நீட்டியவாறு ஒருவன் உறங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தார். நாமதேவர் அதிர்ச்சியடைந்து உடனே அவனை எழுப்பி அவனுடைய பாவச் செயலுக்காக அவனைக் கண்டித்தார். அம்மனிதன்தான் விசோபா, வேறு யாரும் அல்ல. விசோப, ''நாமதேவரே! ஏன் என்னை எழுப்பினீர்கள்? இறைவன் இல்லாத ஏதேனும் ஒரு சிறிய இடமாவது இவ்வுலகில் உண்டா? அப்படி ஓர் இடம் உண்டென்று நீங்கள் கருதினால், தயவு செய்து அந்த இடத்தை நோக்கி என் கால்களைத் திருப்புங்கள்'' என்று வேண்டினர். நாமதேவர் தம்முடைய கைகளால் அம்மனிதருடைய கால்களை வேறு ஓர்புறம் நகர்த்தி வைத்தார்; ஆனால் அங்கும் அத்தெய்வத்தின் சிலை இருந்தது. மீண்டும் இன்னொரு திசையில் நகர்த்தினர்; அங்கும் அத்தெய்வச் சிலை இருந்தது. அவருடைய கால்கள் தெய்வத்தின்மீது படாத இடமாகத் தேடினல் அப்படி ஒரு திசையோ, இடமோ, நாமதேவரால் காணமுடியவில்லை. இறைவன் எங்கும் இருக்கின்றார். இறைவன் அகிலாண்டம் முழுவதும் பரவியுள்ளார் என்ற

இந்தப் பெரிய உண்மையை உணர்ந்துகொண்ட நாமதேவர் விசோபரிடம் நன்றிப் பெருக்கோடும், பணிவோடும் சரண் புகுந்தார். பின்னர் விசோபர் நாமதேவருக்கு மிக விரிவாக உபதேசம் செய்தார். அதன் ஒரு பகுதி பின்வருமாறு :—

''நீ இவ்வுலகில் நிறைவான மகிழ்ச்சியை அடைய விரும்பினுல் பஜனை, இறைவனுடைய புனித நாமம் ஆகியவற்றை எல்லா இடங்களிலும் பரப்பு. இறைவனே உலகம். விருப்பங்களையும், எதிர்பார்ப்புகளையும் தவிர்த்துவிடு. அவை தாமே தம்மைக் கவனித்துக்கொள்ளட்டும் என்று விட்டுவிடு. விட்டலரின் பெயர் மட்டும் நீ திருப்தி அடையப்போதும். முக்தியை அடைவதற்காக உண்ணு விரதங்களையோ, வேறு கடுமையான தவங்களையோ நீ மேற்கொள்ள வேண்டாம். வைகுந்தம் தானே உன்னைத் தேடிவரும். இவ்வுலக வாழ்வைக் குறித்தோ, உன் நண்பர்களைக் குறித்தோ அல்லது உன் உறவினர்களைக் குறித்தோ எவ்விதமான கவலையும் கொள்ளவேண்டாம். அவர்கள் கானல் நீர்போன்ற பொய்யான தோற்றங்கள். ஒருவர் இவ்வுலகில் தங்கியுள்ள தம் சிறிய ஆயுட்காலத்தைக் குயவன் விட்டுச்சென்ற பின்பும் சிறிது நேரம் சுழன்று கொண்டிருக்கின்ற அவனது சக்கரத்தைப்போலக் கழிக்க வேண்டும். விட்டலரின் பெயரை எப்போதும் மனத்திலும் உதட்டிலும்கொண்டு, இறைவன் எல்லா இடங்களிலும், எல்லா உயிர்களிலும் தங்கியிருப்பதை மெய்யாக உணர்ந்து இவ்வாழ்வை நன்கு பயன்படுத்திக்கொள். இது என் வாழ்க்கை அனுபவம்''.

''மக்கள் தம் வாழ்க்கையாகிய கடலைப் பத்திரமாகக் கடக்க உதவும் ஒருவகை ஓடமாகப் பண்டரிபுரம் சந்திரபாகை ஆற்றின் கரையில் நிறுவப்பட்டது. பண்டரிநாதன் அங்கு ஓடக்காரனுக நின்றுகொண்டு உன்னை மறுகரைக்குச் சேர்ப்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கின்முன்; அவன் இதற்காகக் கூலி எதுவும் கேட்பதில்லை என்பது முக்கியமாகக் கவனிக்க வேண்டிய கருத்து ஆகும்.

இவ்வாறு அவன் தன்னைச் சரணடைந்த கோடிக்கணக்கான மக்களைக் காப்பாற்றி இருக்கின்றான். நீயும் இதைச் செய்தால் உலகில் உனக்கு மரணமே இல்லை''.

நாமதேவர் விசோபாவைத் தம் குருவாக ஏற்றுக் கொண்ட பின் சில நாள் கழித்து, அவர் ஓர் இடத்தில் அமர்ந்து பஜனை செய்து கொண்டிருந்தார். இடையில் ஒரு நாய் அங்கு வந்து, அவர் தம் நண்பகல் உணவுக்காகச் செய்து வைத்திருந்த ரொட்டியைக் கௌவிக் கொண்டு ஓடிப்போய் விட்டது. நாமதேவர் அதன் பின்னால் ஓடினார். கையில் கழி இருக்கவில்லை; ஆனால் ஒரு கிண்ணம் நெய் இருந்தது—நாயைப் பார்த்துப் பின்வருமாறு கூறினார். ''உலகின் தெய்வமே! காய்ந்த ரொட்டியை ஏன் உண்ண விரும்புகின்றாய்? அதனோடு கொஞ்சம் நெய் சேர்த்துக்கொள். அப்போது அது மிகவும் ருசியாக இருக்கும்'' என்றார். நாமதேவரின் ஆத்ம பரிபாகம் நிறைவு பெற்று ததும்பி வழிந்தது.

நீண்ட யாத்திரையிலிருந்து ஞான தேவருடன் நாம தேவர் திரும்பி வந்த பிறகு, ஞானதேவர் ஆலந்தியில் சமாதி அடையும் தம் விருப்பத்தைத் தெரிவித்தார். நாமதேவர், அக்குழுவினருடன் ஆலந்திக்குச் சென்றார்; ஏனெனில் அவரால் ஞானதேவரை விட்டுப் பிரிந்திருக்க முடியவில்லை. இறுதிக்கணம் வரை அவர் ஞானதேவருடன் இருந்தார். நிவ்ருத்தி, ஞானதேவர், சோபனர் அவர்களின் தங்கை முக்தாபாய் ஆகிய அனைவரும் உலகைவிட்டுப் பிரிந்து செல்லும் வரையிலும் நாமதேவர் அக் குழுவினருடன் இருந்தார். நாமதேவர் இந் நால்வருடைய பிரிவு முடிவுகளைப் பற்றி அழகான பாடல்களில் விரிவாக விளக்கியுள்ளார். இப்பிரிவுகள் யாவும் ஓராண்டுக்குள்—மிகக் குறுகிய காலத்துக்குள் அடுத்தடுத்து நிகழ்ந்தமையால் பெரும் அதிர்ச்சிக்குள்ளாகிய நாமதேவர் தாமும் உலகில் வாழ்ந்திருக்கச் சிறிதும் விரும்பவில்லை. கி. பி. 1295-ல் தம் இருபத்தாறுவது வயதில் பண்டரிபுரத்தில் அவர் சமாதியடைந்தார்.

நாமதேவர் எந்த ஒரு பெரிய நூலையும் எழுதவில்லை; ஆனால், தெய்வத்தின்பால் அன்பும், பக்தி அமிர்தமும் நிறைந்த எண்ணற்ற சிறிய பாடல்களை அவர் விட்டுச் சென்றுள்ளார். அவற்றுள் பெரும்பாலானவை கிடைக்க வில்லை; ஆனால் இன்று 4000 பாடல்கள் வரை வழங்கி வருகின்றன; இன்றும் அவை படிப்பவர் உள்ளத்தில் மிகுந்த பக்தியுணர்வைச் சுரக்கச் செய்வனவாக உள்ளன.

ஜனா பாயைப்பற்றிக் குறிப்பிடவில்லையென்றால் நாம தேவரின் எந்த ஒரு வாழ்க்கைக் குறிப்பும் நிறைவு பெறாது. நாமதேவரின் குடும்பத்தில் அவள் ஒரு பணிப்பெண். அவள் அங்கு பணிப் பெண்ணாக இருந்தாள் என்பதைத் தவிர அவளுடைய வாழ்க்கையைப் பற்றி வேறு எதுவும் தெரிய வில்லை. நாமதேவரின் பணிப் பெண்ணாக இருப்பதைத் தவிரவும் தனக்கு இருப்பு உண்டு என்பதைச் சில வேளைகளில் அவள் மறந்துவிடுவாள். பக்தியைப் பற்றி அவள் விட்டுச் சென்றுள்ள பல பாடல்களில் அவள் தன்னைப் பற்றி ''நாமின் பணிப்பெண்'' அல்லது 'நாமதேவரின் ஜனி' என்று குறிப் பிடுகின்றாள். நாமதேவருடைய மிகவும் நெருங்கிய தொண்டர் கூட்டத்தில் அவள் ஒருத்தியாக இருந்தாள்; விட்டோப பகவானுடைய புகழ்களைப் பாடுவதும், நாம தேவருக்குப் பணிவிடை செய்வதும் தவிர அவளுக்கு வேறு விருப்பம் எதுவும் இருக்கவில்லை. எடுத்துக்காட்டாக அவள் பாடியுள்ள ஒரு பாடலின் கருத்து பின்வருமாறு:—

''இவ்வுலகில், உன் விருப்பத்தின்படி, எவ்வளவு பிறவி களை வேண்டுமானாலும் நான் பிறக்கத் தயாராக இருக் கின்றேன்; ஆனால் என் ஆசைகளை மட்டும் நிறைவேற்று. நான் ஒவ்வொரு பிறவியிலும் பண்டரிபுரத்தைத் தரிசிக்க வேண்டும்; நாமதேவருக்குப் பணிவிடை செய்ய வேண்டும். நான் ஒரு பறவையாகவோ, பன்றியாகவோ, நாயாகவோ அல்லது பூனையாகவோ பிறப்பதைப் பற்றிப் பொருட்படுத்த வில்லை; என்னுடைய நிபந்தனை என்ன வென்றால் இத்த கைய ஒவ்வொரு பிறவியிலும் நான் பண்டரிபுரத்தைத்

தரிசிக்க வேண்டும்; நாமதேவருக்குப் பணிவிடை செய்ய வேண்டும். நாமதேவரின் பணிப்பெண்ணின் விருப்பம் இதுவே''. மற்ருேரிடத்தில் அவள் கூறியுள்ளவை:—

''ஹரிபகவானே! இந்த ஒரு பரிசு மட்டும் எனக்குக் கொடு. நான் எப்போதும் உன் புனித நாமத்தைப் பாட வேண்டும். என் பணிவான வணக்கத்தையும், என் பணி விடையையும் நீ ஏற்றுக்கொள்ள வேண்டும்; இந்த என் ஒரு ஆசையை மட்டும் நிறைவேற்று. இதுவே என் எல்லா விருப்பங்களும் ஆகும். என்பால் கருணை கொண்டு என் ஆசைகளை நிறைவேற்று. என் கண்களையும் மனத்தையும் உன்மீதும்; உன் நாமத்தை என் உதடுகளிலும் நிலையாக இருக்கச் செய்ய விரும்புகின்றேன். இதற்காகப் பணிப் பெண் ஜனி உன் திருவடிகளில் வீழ்கின்ருள்''.

ஜனுபாயின் தத்துவமும், அவள் எவ்வாறு தன் இலட்சி யத்தை அடைந்தாள் என்பதும் இதனல் தொகுத்துக் கூறப்பட்டன. விட்டோபரிடம் அவள் கொண்டிருந்த பக்தி நேர்மையும், ஆழமும் வாய்ந்திருந்த காரணத்தால், அவள் தன் முதுமைப் பருவத்தில் செய்ய இயலாதிருந்த கடினமான வீட்டு வேலைகளை எல்லாம் இறைவன் மிகவும் இலகுவுள்ளன வாக ஆக்கிவிடுவான். இறைவன்பால் தான் கொண்டிருந்த பக்தியாலும், செய்து வந்த பணிவிடையாலும் அவள் தான் என்ற அகந்தையை அழிப்பதில் முற்றிலும் வெற்றி பெற்ருள்; இறைவனுடன் முழுமையாக ஐக்கியமும் ஆனுள்.

ஜனுபாய் — ஒரு மகாத்மா!
நாமதேவர் — ஒரு மகா குரு!

## 23. அகல் கோட் சுவாமிகள்

அகல் கோட் சுவாமிகள் ஒரு ஞானி. மராட்டிய மாநிலத்தில் அகல் கோட் என்ற இடத்தில் அவர் வாழ்ந் தார். தம் வாழ்வின் பிற்பகுதியில் அவர், புறம்பே

செல்லும் உணர்வை உள்முகமாகத் திருப்பிச் சங்கரரின் நிர்க்குணப் பிரம்மமாகிய தூய நிர்விசேடத்தில் வாழ்ப வராய், பிரம்ம வசிஷ்டர் என்ற வகையைச் சேர்ந்த ஞானியானூர். புற உலக உணர்வை அவர் அடைத்து விட்டார். 'கோமா' என்னும் மயக்க உணர்விலுள்ள ஒருவருக்கு, மற்றவர் ஊட்டுவது போல அவருக்கும் யாரேனும்பால் புகட்ட வேண்டியதாக இருந்தது. மெய் மறந்த நிலையில் அவர் மலங்கழித்துவிடுவது வழக்கம். மக்கள் அவரைக் கழுவி நீராட்டுவது வழக்கமாகிவிட்டது. தென் னிந்தியாவில் வாழ்ந்த புகழ் பெற்ற கும்பகோணம் மௌன சுவாமிகளின் நிலையும் இவ்வாறு தான் இருந்தது. தன் உணர்வற்ற நிலையில் இச் சுவாமிகள் இருபத்தைந்து ஆண்டு கள் வாழ்ந்தார். எப்போதும் அவரைச் சாய்வு நாற்காலி யில் அமரச் செய்து உணவை ஊட்டிவந்தனர்.

ஓர் ஏழை அந்தணன் தன் மகளின் திருமண விழாவை நடத்துவதற்கான செல்வத்தைப் பெறுவதன் பொருட்டுத் தவம் செய்தான். அவன் கணேச பகவானை ஆராதித்தான். கணேச பகவான் அவனுடைய கனவில் தோன்றி, அகல் கோட் சுவாமிகளைச் சந்திக்குமாறு அவனிடம் கூறினர். சுவாமிகள் அந்த வைதிக அந்தணனிடம் சில எலும்புகளைக் கொண்டு வருமாறு கேட்டுக் கொண்டார். ஏழை அந்தணன் மிகுந்த கலக்கத்தை அடைந்தான். ஆனல், பணம் வேண்டி யிருந்த நெருக்கடி அவனுக்கிருந்த காரணத்தால் அவன் சுவாமிகளுக்குக் கீழ்ப்படிந்து சில எலும்புகளைக் கொண்டு வந்து சேர்த்தான். அவற்றை அவனுடைய வீட்டுக்கு எடுத்துச் செல்லுமாறு சுவாமிகள் தெரிவித்தார். அந்தணன் பெரிதும் ஏமாற்றமடைந்தான். அவன் வீட்டை அடைந்த வுடன் அந்த எலும்புகளை வீட்டுக்குள் கொண்டு செல்லாமல் அவற்றை வீட்டு முற்றத்தில் ஒரு மூலையில் கொண்டுபோய் வைத்தான். மூன்று நாட்கள் கழிந்த பிறகு அவன் அந்த எலும்புகளை வெளியே எறிந்துவிட விரும்பினன். மூட்டை யைக் கையில் எடுத்தபோது அது மிகவும் கனமாக இருந்தது. அவன் திறந்து பார்த்தபோது அவையாவும் தங்கமாக

இருந்ததைக் கண்டு பெரும் வியப்படைந்தான். அந்தணன் தனக்குள், ''நான் ஒரு பெரிய தவற்றைச் செய்துவிட்டேன். ஞானியன் சொற்களில் நான் பெரும் நம்பிக்கை வைத்திருக்க வேண்டும். உலகியல் மக்களிடம் அவர்கள் எப்போதும் விளையாடுகின்றார்கள். நான் இன்னும் சில எலும்புகளைச் சேர்த்திருக்க வேண்டும்'' என்று கூறிக்கொண்டான். சம்சாரத்தில், உன்னைச் சிக்கவைக்கும் பேராசையின் சக்தி இத்தகையதாகும். அமைதியைக் குலைக்கும் பேராசையை அழித்து விடு. ஞானியரிடம் நம்பிக்கை கொள்வாயாக.

## 24. தியாகராஜ சுவாமிகள்

தியாகராஜ சுவாமிகள் தென்னிந்தியாவைச் சேர்ந்த தெலுங்கு அந்தணர். அவர் இராமப்பிரம்மம் என்பாருடைய புதல்வர். பஞ்சாபகேசனும் இராமநாதனும் அவரோடு உடன் பிறந்தவர்கள். தியாகராஜருக்கு சீதாலட்சுமி என்ற ஒரே பெண் இருந்தாள்; அவளுடைய மகனுக்குத் தியாக ராஜர் என்று, பாட்டனுருடைய பெயர் சூட்டப்பட்டது.

தியாகராஜ சுவாமிகள் தென்னிந்தியாவில் இருந்த இசை வல்ல ஞானியாவர். தென்னிந்திய சங்கீதக் கலைக்கு அவரே தந்தை. அவர் இராமபகவானின் பக்தர். அவருடைய பக்தி பாடல்களில் பெரும்பான்மை யானவை இராமபிரானின் புகழைப் பற்றியவை, அவை உயர்ந்த எண்ணங்களின் கிளர்ச்சியைத்தந்த உள்ளத்தை மேன்மேலும் உயர்த்துவனவாக உள்ளன.

தியாகராஜ சுவாமிகள் இராமபகவனைப் புகழ்ந்து 24,000 கீர்த்தனைப் பாடல்களை இயற்றினுர், என்று கூறப்படுகின்றது. அவருடைய பெரும்பான்மையான பாடல்கள் தெலுங்கிலும், சில வடமொழியிலும் உள்ளன. இக்காலத்து இசைவாணர்கள் ஐநூறு பாடல்கள் வரையில் தான் பாடி வருகின்றனர். பக்திப் பாடல்களை மத உணர்வோடும் பக்தியுணர்வோடும் பாடினுல் அவை உடனே உள்ளத்தைத் தாராளமாக ஆன்மீக உயர்வுகளுக்கு உயர்த்தி மனத்தை

இறையுணர்வில் உருகச் செய்து இறைவனோடு தொடர்பு கொள்ளவும் பாவசமாதியை அடையவும் உதவி செய்கின்றன.

திருவையாற்றில், தியாகராஜர் நாள்தோறும் பிக்ஷைக்குப் புறப்படுவதற்கு முன்பு அம்பாள் சன்னதியில் பாடல்கள் பாடி வழிபாடு செய்வது வழக்கம். அவரைத் தென்னிந்தியாவில் அனைவரும் நன்கு அறிந்திருந்தனர்; மகாராஜாக்கள் பலரும் அவரைத் தத்தம் ஆஸ்தான வித்துவானாக நியமித்துக்கொள்ள விரும்பினார்கள்; எனினும் அவர் உஞ்சவிருத்தித் தொழிலைத் தழுவி பிக்ஷையினால் வருவதைக் கொண்டே அவர் தம் வாழ்வை நடத்தி வந்தார்.

தியாகராஜ சுவாமிகள் ஓர் ஆதி மனிதர். எவ்வளவோ தடவைகள் அவர் நேரடியாக இராமபிரானின் தரிசனத்தைப் பெற்றிருந்தார். அவர் வழிபாடு செய்துவந்த சிலைகள் ஆற்றில் வீசி எறியப்பட்டன. ஓராண்டுக்குப் பிறகு, அவர் தம் கனவில் இராமபிரானுடைய குறிப்புரைகளைப் பெற்று ஆற்றில் சிலைகள் மணலின் கீழ் புதையுண்டிருந்த சரியான இடத்தைக் கண்டறிந்தார்.

அக்காலத்துப் புதுக்கோட்டை அரசர் ஒருமுறை இசைவாணர்களின் தகுதிகளை ஒரு விநோதமான முறையில் பரிசோதித்தார். ஏற்றாத விளக்கு ஒன்றை அவர் அவர்களின் நடுவே வைத்தார். தீக்குச்சியின் உதவியோ வேறு எதன் உதவியோ இல்லாமல் ஒரு பாடலை மட்டும்பாடி அவ்விளக்கை ஏற்றும்படியாக அவர் இசை வல்லுநருக்குச் சவால் விடுத்தார். தியாகராஜ சுவாமிகள் சிறிது நேரம் நாரத பகவானைத் தியானம் செய்து, ''ஜோதிஸ்வரூபிணி'' என்ற இராகத்தைப் பாடவே, விளக்கு, தானாகவே பற்றி எரிந்தது. அனைவரும் ஆச்சரியத்தால் தாக்குண்டனர்.

திருப்பதிக்கு யாத்திரை செய்து மீண்ட ஒருவன் தற்செயலாக ஒரு கோயில் கிணற்றில் வீழ்ந்து இறக்கவே,

தியாகராஜ சுவாமிகள் அவரை உயிர்த்தெழச் செய்தார். பூத உடலிலிருந்து அவனுடைய உயிர் பிரிந்து செல்ல வேண்டிய சரியான நாளையும் சரியான நேரத்தையும் அவர் அறிந்திருந்தார். உயர்ந்த தரமான இசையைப் பரப்புவதற்காக தேவரிஷி நாரதர் அவருக்கு 'ஸ்வர்ணம்' என்ற நூலைக் கொடுத்தார்.

சமூகத்தில் செல்வ நிலையையோ, பதவியையோ அடைய வேண்டும் என்று அவர் ஒருபோதும் கவலைப்பட்டதில்லை. அவர் பணிவாக இருந்தார். அவர் வறுமையை விரும்பினார். ஒருமுறை தஞ்சை அரசர் சரபோஜி, அவருக்கு ஒரு செய்தியை அனுப்பினார். தூதுவன், ''அரசரைப் புகழ்ந்து ஒன்றிரண்டு பாடல்களை, அருள் கூர்ந்து இயற்றுங்கள்; அரசர் உங்களுக்குப் பத்து ஏக்கர் நிலத்தையும் ஒரு பெரிய தங்கப் பாளத்தையும் வழங்குவார்.'' என்று தெரிவித்தான். தியாகராஜர், ''குற்றங்கள் நிரம்பிய வாழ்க்கையை நடத்தும் அரசர்களைப் புகழ்வதற்காக நான் ஏன் என்னுடைய இசையைப் பயன்படுத்த வேண்டும்? மக்களைக் குற்றங்கள் செய்யவும், புலனின்பங்களை நுகர அவற்றின் பின்னால் ஓடவும் தூண்டுகின்ற, தீங்கையே தருகின்ற தங்கத்தைச் 'சீ' என்று வெறுக்கின்றேன்'' என்று விடை கூறினார். அவர் கல்யாணி இராகத்தில் 'நிதி சால சுகமா?' என்ற பாடலைப் பாடினார். அப்பாடலின் பொருள்:—

''எது மிகுந்த மகிழ்ச்சியைத் தருகின்றது — தங்கமா அல்லது இராமபிரானின் வழிபாடா? மனமே! உண்மையைக் கூறுவாயாக. எது மிக்க இனிமையும், சுவையும் உள்ளது — பால், வெண்ணெய், தயிரா? அல்லது ராம பஜனை, தியானம் ஆகிய அமிர்தத்தின் சாரமா? எது உடல் நலத்துக்கு மிகவும் உகந்தது — மன அமைதி என்னும் கங்கையில் ஒருமுறை மூழ்கி எழுவதா? அல்லது ஊழல் என்னும் சேறு படிந்த கிணற்றில் மூழ்குவதா? இரண்டில் எது சிறந்தது — தற்பெருமையால் பூரித்துப் போயுள்ள ஒரு செல்வந்தனைப் புகழ்வதா? அல்லது பெருங்கருணையும், பேராற்றலும் வாய்ந்த இறைவனைப் புகழ்ந்து பாடுவதா?

தூதுவன் ஒரு வார்த்தையும் பேசவில்லை. அவன் பேசாமல் அந்த இடத்தைவிட்டு அகன்முன்.

அக்காலத்தில் வாழ்ந்த திருவாங்கூர் மகாராஜா, எப்படியாவது தியாகராஜ சுவாமிகளை அழைத்து வருமாறு செய்தி அனுப்பினர். மகாராஜா அவருக்கு மிகுந்த செல்வத்தையும், உயர்ந்த பதவியையும் தருவார் என்று தூதுவன் அவருக்கு ஆசை காட்டினன். தியாகராஜர், ''மனிதனுடைய முன்னேற்றத்துக்குச் செல்வம் ஒரு தடை என்று நான் கருதுகிறேன். அது மனிதனுக்கு எந்த வகையான மகிழ்ச்சியையும் தருவதில்லை. மாமுக, அது எல்லா வகையான துன்பங்களையும் கொண்டு வந்து சேர்க்கிறது. அறிவில்லாத மூடர்கள்தான் செல்வத்தைக் தேடி அதன் பின்னல் ஓடுகின்முர்கள்.'' என்று விடை தந்தார். பின்னர் அவர் அத்தூதுவனுக்குச் ''சலாக பைரவி'' இராகத்தில் அவர் பாடிய 'படவி–நி–சப்தாக்தி' என்ற பாடலின் பொருளை விளக்கினர். இராமபிரானிடத்தில் தடையில்லாத நம்பிக்கை கொள்ளும் மன நிலையே, உண்மையில், வாழ்வில் மிக உயர்ந்த பதவியாகும். வேதங்கள், சாஸ்திரங்கள், உபநிஷதங்கள் ஆகியவற்றைக் கிளிப்பிள்ளைப் போல ஒப்புவிக்கக்கூடிய பலர் இருக்கின்றனர்; ஆனல் அவர்கள் அவற்றின் போதனைகளை உணர்ந்து வாழ்க்கையை நடத்துவதில்லை. இத்தகைய மனிதர்கள் உண்மையான பதவியை அடைந்தாகக் கருத முடியுமா? மலைபோல் செல்வத்தைக் குவித்து, எண்ணற்ற மனைவியரையும், மக்களையும் உடையவர்களாய், மகாராஜாக்களின் நட்பைப் பெற்றவர்களாக எவ்வளவோ பேர் இருக்கின்றனர். அவர்கள் உண்மையான பதவியை அடைந்ததாகக் கருத முடியுமா? சமூகத்தில் உயர்ந்த பதவி என்று சொல்லப்படும் நிலையை ஒருவன் பெற்றுள்ளான்; ஆனல் அவன் கொடிய ஆசைகளும் பயங்கரமான அறியாமையும் நிறைந்த வாழ்வை நடத்துகின்முன்; அவன் உண்மையான பதவியை அடைந்திருப்பதாகக் கருத முடியா! இல்லை. இல்லை. இராமனிடம் தடையில்லாத நம்பிக்கை வைத்து, அவனையே

தியானம் செய்து, அவனது திருவருளை பெற்றவனே உண்மையான பதவியை அடைகின்றான்..

இவ்விளக்கத்தைக் கேட்ட தூதுவன் பேசாமல் சென்று விட்டான்.

தியாகராஜர் எத்தகைய மகாத்மாவாக இருந்தார்! அவர் பதவியையும், செல்வங்களையும் வெறுத்தார். இறையுணர்வாகிய செல்வத்தையும், இன்பத்தையும் நுகர்பவனுக்கு மூவுலகச் செல்வங்களும் புல்லுக்குச் சமம். இத்தகைய உயர்ந்த மகாத்மாக்களின் மனநிலை சொற்களின் வருணனைக்கு அப்பாற்பட்டது.

தஞ்சையிலிருந்து ஏழு மைல் தொலைவில் உள்ள திருவையாற்றில் காவிரி நதியின் கரையில் அவருடைய சமாதி உள்ளது. ஆண்டு தோறும் ஜனவரி மாதத்தில், தென்னிந்தியாவில் உள்ள இசைவாணர்கள் அனைவரும் அங்கே திரண்டு வந்து அவருடைய ஆண்டு நிறைவு விழாவை மிகுந்த ஆரவாரத்துடன் கொண்டாடுகின்றனர். 1942 ஜனவரியில் அவருடைய 95-வது ஆண்டு நிறைவு விழா கொண்டாடப்பட்டது.

கேட்பவருடைய உள்ளங்களில் பக்தியுணர்வை விதைத்து இன்பத்தையும், மகிழ்ச்சியையும் விளைவிக்கின்ற பாடல்களைப் பாடிய தியாகராஜ சுவாமிகளின் பெருமை ஓங்குக!

## 25. திருவள்ளுவர்

வள்ளுவர், 2000 ஆண்டுகட்கு முன்பு சென்னை மயிலாப்பூரில் வாழ்ந்த பிறவிச் சித்தரும், பிறவிப்புலவரும் ஆவர். அவரைப் பொதுவாகத் 'திருவள்ளுவர்' என்று குறிப்பிடுவர். அச் சொல்லின் பொருள், 'வள்ளுவ இனத்தைச் சேர்ந்த பக்தர்'' என்பதாம். வள்ளுவர்கள் பறையர்கள் ஆவர். இக்காலத்தில் 'ஹரிஜனங்கள்' என்று சொல்லப்படுகின்றனர். அவர்களுடைய தொழில்,

அரசனுடைய ஆணைகளைப் பறையறைந்து அறிவிப்பதாகும். 'பகவன்' என்ற அந்தணனுக்கும், அவர் மணந்துகொண்ட 'ஆதி' என்ற புலைச்சிக்கும் திருவள்ளுவர் மகனாகப் பிறந்தார் என்று கூறும் ஒரு மரபு வரலாறு உண்டு. பாண்டியர் தலைநகரமாகிய மதுரையில் திருவள்ளுவர் பிறந்தார். பிரம்ம தேவனின் அவதாரமாக அவர் கருதப்படுகின்றார். அவருடைய மனைவி வாசுகியம்மையார் கற்பும் பக்தியும் வாய்ந்த பெண்மணி; அவருடைய கட்டளைகளை ஒரு பொழுதும் மீறாமல், எப்போதும் தடை சொல்லாமல் நிறை வேற்றிய ஒரு இலட்சிய மனைவியாவர். கிரகஸ்தம் அல்லது குடும்ப வாழ்க்கையை ஒருவர் நடத்தும் அதே சமயம் தூய்மையும் பக்தியும் மிகுந்த தெய்வீக வாழ்க்கையையும் அவர் வாழமுடியும் என்பதைத் திருவள்ளுவர் மக்களுக்கு எடுத்துக்காட்டியுள்ளார். ஒருவர் தூய்மையும் பக்தியும் மிகுந்த தெய்வீக வாழ்க்கையை வாழ்வதற்காகத் தம் குடும்ப வாழ்க்கையை விட்டுவிட்டுத் துறவு மேற்கொண்டு துறவி யாக வேண்டிய தேவை இல்லை என்று அவர் மக்களுக்கு விளக்கியுள்ளார். அவருடைய ஞான மொழிகள், போதனை கள் யாவும் 'திருக்குறள்' என்ற பெயருள்ள நூல் வடிவில் இப்போது அமைந்துள்ளன. அவையாவும் இருவரிகளைக் கொண்ட குறட்பாக்களாக உள்ளன. அவற்றுள் சில :

"அகர முதல எழுத்தெல்லாம்; ஆதி
பகவன் முதற்றே யுலகு."
"கற்க கசடறக் கற்பவை கற்றபின்
நிற்க அதற்குத் தக."
"மோப்பக் குழையும் அனிச்சம்; முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து."
"உறங்குவது போலுஞ் சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு."

இக் குறட்பாக்களின் மொத்த எண்ணிக்கை 1330 ஆகும். வேதங்கள், உபநிஷதங்கள், ஆறுதர்சனங்கள் ஆகியவற்றின் சாரமாக அவை அமைந்துள்ளன. திருக் குறள் உலகப் பொதுமறையாகக் கருதப்படுகிறது. அது

மற்ெறாரு விவிலியம், கீதை, குரான் அல்லது ஜெண்டு அவஸ்தை.

சாதகர் சிலர் அவரை அணுகி, ''ஞானச் செல்வரே! கிரகஸ்தமா அல்லது சந்நியாசமா — எந்த ஆசிரமம் சிறந்தது?'' என்று வினவினர். திருவள்ளுவர் விடை எதுவும் சொல்லவில்லை. அவர் பேசாமல் இருந்தார். தாம் எடுத்துக் காட்டாக விளங்குவதன் வாயிலாகக் கிரகஸ்த ஆசிரமத்தின் பெருமையை அவர்களுக்கு விளக்க விரும்பினார்.

திருவள்ளுவர் காலை நேரத்தில் பழைய சாதத்தை உண்டு கொண்டிருந்தார். அவர் தம் மனைவியிடம், ''சாதம் சுடு கிறது. ஆறச் செய்வதற்கு ஒரு விசிறியைக் கொண்டு வா'' என்று கூறினார். அவர் அழைத்த போது அம்மையார் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தார். கயிற்றை அப்படியே விட்டுவிட்டுச் சோற்றை ஆற்றுவதற் காக விசிறியுடன் அம்மையார் ஓடி வந்தார். கணவரிடம், ''பழைய சோறு எப்படிச் சுடும்? இப்போது உங்களுக்கு விசிறி எதற்கு'' என்று அவர் கேட்கவில்லை. கணவரின் கட்டளைகட்கு அவர் மறுப்பின்றிக் கீழ்ப்படிந்தார். அவருடைய பதிவிரத தர்ம சக்தியினால் கிணற்றில் பாதியில் தண்ணீர் நிரம்பிய வாளி, தாங்குவார் இல்லாமலே அந்தரத்தில் நின்றது. சாதகர்கள் இக் காட்சியையும் வாசுகி அம்மையாரின் உயர்ந்த ஒழுக்கத்தையும் கண்டு ஆச்சரியத் தால் தாக்குண்டு செயலற்று நின்றனர்.

மற்றொரு சமயம் நண்பகல் வேளையில், வள்ளுவர் தம் மனைவியிடம், ''வாசுகி! விளக்கை உடனே கொண்டு வா, நான் துணியைத் தைத்துக் கொண்டிருக்கின்றேன். ஊசியின் காது என் கண்ணுக்குத் தெரியவில்லை. அதில் சரியாக நூலைக் கோர்க்க முடியவில்லை,'' என்று தெரிவித்தார். அவள் கணவரிடம், ''இப்போது பட்டப்பகலாக இருக் கின்றது. விளக்கு எதற்கு? நீங்கள் ஊசியின் காதைத் தெளிவாகப் பார்க்கலாம்'' என்று கூறவில்லை. ஆனால்

அம்மையார் தடை ஏதும் சொல்லாமல் உடனே அவர் சொல்லை நிறைவேற்றினர். ஞானி திருவள்ளுவரும் உயர்ந்த ஒழுக்கத்தையுடைய வாசுகி அம்மையாரும் நடத்திய இலட்சிய வாழ்க்கையைப் பார்த்த சாதகர்கள் மிகுந்த ஊக்கம் பெற்றனர். அவர்கள் அவரிடம் எதுவும் பேசவில்லை. அவர்கள் அவரிடம் விடைபெற்றுக் கொண்டு நிறைந்த மனத்திருப்தியுடன் அமைதியாகப் புறப்பட்டுச் சென்றனர். திருவள்ளுவரும் வாசுகி அம்மையாரும், மற்றவர்களெல்லாம் பார்த்துப் பயிலக்கூடியவாறு வாழ்ந்த வாழ்க்கை அவர்களின் உள்ளங்களில் ஆழப் பதிந்தது. இமாலயக் குகைகளில் தங்கி வைராக்கியத்துடன் கூடிய நிவ்ருத்தி மார்க்கத்தில் சொல்லும் இலட்சியத் துறவி ஒருவரின் வாழ்க்கைக்கு, இலட்சிய இல்லறத்தார் ஒருவரின் வாழ்க்கை சற்றும் குறைந்ததன்று என்றும், ஒவ்வொருவரும் தத்தமக்குரிய இடம், காலம், சூழ்நிலைகளில் பெருமை வாய்ந்தவரே என்றும் அவர்கள் ஒரு நல்ல பாடத்தைக் கற்றுக் கொண்டனர்.

அன்பார்ந்த வாசகர்களே! இத்தகைய பெண்மணிகள் தங்கள் தங்கள் கணவன்மார்களின் உள்ளங்களில் உயர்ந்த இடத்தில் வீற்றிருக்கின்றனர். அவர்கள் தங்களைப் பற்றி விளம்பரம் செய்வதில்லை; ஆகையால் அத்தகையவர்களைக் காண்பது அரிது என்பதில் ஐயமில்லை; ஆனால் ரிஷிகளும் ஞானிகளும் வாழ்ந்த நம் புண்ணிய பூமியில் அவர்கள் மிகப்பலராக இருக்கவேண்டும்; இத்தகைய கற்புத் தூய்மையின் உயர்நிலையை நாம் பாதுகாக்கவில்லை என்றால், புதிய நாகரிகமும் விஞ்ஞான முன்னேற்றமும் பரவிவரும் இக்காலத்தில் நாம் மிகவும் தாழ்ந்த நிலையை அடைந்து விடுவோம், இக்காலத்துக் கணவன்மார்கள் திருவள்ளுவரைப்போல் நடந்து கொண்டால் மனைவிமார்கள், ''என் கணவருக்கு அறிவு மழுங்கி விட்டது. பழைய சோற்றை விசிறி ஆறவைக்க விரும்புகிறார். பட்டப் பகலில் விளக்கேற்ற வேண்டும் என்கிறார்'' என்று கூறுவார்கள். மனைவிமார்கள் தங்கள் தங்கள் கணவன்மார்களைக் கண்டித்துச் சச்சரவு இடுவார்கள்.

தன் கணவருக்கு நேர்மையான பக்தியுடன் பணிவிடை செய்து பதிவிரதா தருமத்தைப் பின்பற்றும் மனைவி இருக்கின்ற வீடு, மண்ணுலகத்தில் உள்ள தேவலோகம் ஆகும். தன் கணவருடன் சச்சரவிட்டு அவருடைய ஆணைகளுக்குக் கீழ்ப்படியாத மனைவி இருக்கின்ற வீடு மண்ணுலகில் உள்ள உண்மையான நரகம் ஆகும். பதிவிரத தருமத்தை நிறைவேற்றிவரும் தாய்மார்கள் கோயில் களுக்குச் செல்லவேண்டிய தேவையே இல்லை. அவர்கள் வேறு விரதமோ தவமோ செய்யவேண்டியதில்லை. கணவருக்குப் பணிவிடை செய்வதே வழிபாடாகும். கணவருக்குச் செய்யும் பணிவிடையின் வாயிலாக இறை வனைத் தரிசிக்க முடியும். கணவரும் உயர்ந்த தகுதிகளும் இலட்சியமும் வாய்ந்தவராக இருக்க வேண்டும். கணவரே மனைவியின் குரு. எந்த ஆச்சாரியாரிடத்திலும் மனைவி உபதேசம் பெறவேண்டியதில்லை. பதிவிரத தருமத்தை நிறைவேற்றும் தாய்மார்களின் பெருமை ஓங்குக!

## 26. பரமஹம்ச தைலங்க சுவாமிகள்

(அந்நாள் சென்னை மாநிலம்) விசாகபட்டணம் மாவட்டத்தில் ஹோலியா என்ற ஊரில் ஓர் அந்தணர் குடும்பத்தில் பரமஹம்ச தைலங்க சுவாமிகள் தோன்றினார். அவருடைய தந்தை நரசிங்கதரர் தாம் கற்ற கல்வியால் பெரும் புகழ் பெற்றிருந்தார்; அறப்பண்புகளில் சிறந்தவர். அவர் தம் மனைவியுடன் சமய உணர்வுடன் வாழ்ந்து வந்தார்; நீண்டகாலமாக அவருக்குக் குழந்தைப்பேறு வாய்க்கவில்லை. எனவே அவர் இரண்டாம் திருமணம் செய்து கொண்டார். ஆனால், இதனால் மனம் உடைந்த மென்மை உள்ளம் வாய்ந்த அவருடைய முதல் மனைவி, மகப்பேறு வேண்டி சிவபெருமானைக் குறித்து அனுஷ்டான விரதம் இருந்தாள். நாளடைவில் அவள் மனம் மகிழுமாறு ஒரு புதல்வன், இறைவன் திருவருளால் பிறந்தான்; அவனுக்குச் 'சிவராமன்' என்று பெயரிட்டனர். சிவராமனுக்கு ஐந்து வயது நிறைவதற்குள் அவனுடைய தந்தை மறைந்தார்.

வேதங்களையும் சாஸ்திரங்களையும் பயில்வதன் பொருட்டு அவன், கற்றறிந்த ஒருவரிடம் அனுப்பப்பட்டான். தன் தாயார் மறையவே, சிவராமன் வாழ்வில் மாற்றம் உற்று, உலகைத் துறந்து துறவியானான். இந்தியாவின் பல்வேறு புண்ணிய தலங்கட்குச் செல்ல அவன் நீண்ட யாத்திரை மேற்கொண்டான். ஆன்மீகக் கல்விக்கும் பண்பாட்டுக்கும் மையமாக அமைந்த இத்திட்டம் அனைவரும் நன்கறிந்த ஒரு பகுதியாகும். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குச் செல்லும் யாத்திரை வழியில் அவன் ஒரு ஞானியைச் சந்தித்தான்; அவருடைய தோற்றத்தாலும் நற்பண்பினாலும் கவரப்பட்ட சிவராமன் உடனே அவருடைய சீடனாகி இந்தியா முழுவதும் அவருடன் யாத்திரை செய்தான். யோகங்களின் அடிப்படை உண்மைகளையும், இரகசியங் களையும், தியானப் பயிற்சிகளையும் அவன் அவர்பால் கற்றுக் கொண்டான். இதன் பின்னர் சிவராமனுக்குக் கணபதி சுவாமிகள் அல்லது தைலங்க சுவாமிகள் என்ற பெயர் ஏற்பட்டது.

தம் குருவின் மறைவுக்குப் பிறகு தைலங்க சுவாமிகள் இராமேஸ்வரத்திற்குச் சென்றார். அங்கு எல்லா இனங்களை யும் சேர்ந்தவர்களை ஒன்று சேரச் செய்து பயிற்சி தரவே அவருக்கு எண்ணற்ற சீடர்கள் ஏற்பட்டனர். ஒரு குறிப் பிட்ட சமயத்தில் அவர் இறந்துபோன ஒரு மனிதனை உயிர்ப்பித்தார்; சோதிடம் குறித்த அற்புதங்கள் பல வற்றை அவர் மக்கள் கண்டு மகிழச் செய்தார். நகர் முழுவதும் அவருடைய புகழ் பரவியதில் மக்கள் பெருந் திரளாக வந்து அவரை மொய்த்துக் கொண்டு தேவை யற்ற வினாக்களையெல்லாம் வினவி அவருக்கு மிகுந்த தொந்தரவு தந்தனர். இத்தகைய தொல்லைகளால் அவர் தம் யோகப் பயிற்சிகளை நிறுத்தி வைத்து, இராமேஸ் வரத்தை விட்டு நேபாளத்திற்குப் புறப்பட்டார். அங்கும் மக்கள் அவரை தனியே இருக்க விடவில்லை. ஆதலால் அவர் அங்கிருந்து நேராகத் திபேத்துக்குச் சென்று, மான சரோவரில் தாம் விரும்பியவாறு தம் யோகப் பயிற்சிகளை செய்து முடித்தார்.

யோகங்களில் நிறைவான தேர்ச்சி பெற்ற பிறகு அவர் காசிக்கு இறங்கி வந்தார்; தம் வாழ்நாள் இறுதிவரையும் அவர் அங்கேயே வாழ்ந்தார். காசிக்கு வந்த பிறகு அவர் தம் சீடர்களிடம் தவிர வேறு யாரிடம் பேச்சு வைத்துக் கொள்ளவில்லை, உண்பதற்குச் சீடர்கள் எதைத் தந்தாலும் உண்டார்; பருகுவதற்கு அவர்கள் எதைத் தந்தாலும் பருகினுர். அவர் தாமாக எதையும் விரும்பிக் கேட்டதில்லை: அவர்கள் தந்த எதையும் ஏற்றுக் கொள்ள மறுத்ததில்லை. சுருங்கக் கூறினுல், அவர் 'பரமஹம்சர்' என்ற சொல்லுக்கு மிகவும் பொருத்தம் உள்ளவராஞர்,

ஒரு முறை அவர் கவர்னரின் வாளைப்பற்றி அதைக் கங்கையில் வீசி எறிந்து விட்டார். கவர்னர் அதைச் கேட்டபோது அவர் நீரில் பாய்ந்து மூழ்கி இரண்டு வாள் களைக் கொண்டு வந்தார்; தம்முடைய வாள் எது என்பதைக் கண்டுபிடிக்கக் கவர்னரால் முடியவில்லை. குறும்பு செய்யும் சிலர் சுண்ணம்புத் தண்ணீரை அவருடைய வாயில் ஊற்றி விட்டனர்; அவர் சங்க பச்சரக் கிரியையினுல் உடனே அதை மலமாக வெளியேற்றினுர்.

பரமஹம்ச தைலங்க சுவாமிகள் இருநூற்றென்பது ஆண்டுகள் வாழ்ந்தார் என்று கூறப்படுகிறது. அவர் தாராள சிந்தையுள்ள ஞானி. எளிமையும் கட்டுப்பாடும் மிகுந்த, யாவும் துறந்த துறவியாக அவர் இருந்தாலும், புதிய சகாப்தத்தின் உணர்ச்சி நிறைந்த ஆன்மீகமும், நிரம்பித் ததும்பும் அன்பும் உள்ளவராக அவர் விளங்கினுர். ஞானி என்ற நிலையில் அவர் பேரன்பு நிறைந்த மனமும், அறமும், தாராள மனப்பான்மையும் என்ற பண்புகளால் புகழ் சிறந்து விளங்கினுர். அவருடைய நிழலில் எல்லாச் சாதிகளையும் சமயங்களையும் சார்ந்தவர்களும், தாழ்த்தப்பட்டவர்களும், எளிய ஏழைகளும், அறிவில்லாதவர்களும் கூட அவருடைய சீடர்களாகத் தங்கியிருந்தனர்; குருமார்களுக்கெல்லாம் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கும் குருவாக இருந்த அவர் தம் பேரறிவாலும் பேரன்பாலும் தம் சீடர்கள் அனைவருக்கும்

இறைவனிடம் அன்பு செலுத்தவும், சகமக்களுக்குப் பணி விடை செய்யவும் கற்றுக் கொடுத்தார். ''மகாவாக்கிய ரத்னுவளி'' என்ற பெயருள்ள சமய தத்துவப் பெருநூல் வெளியீடு, சுவாமிகள் வழங்கியுள்ள, பெருமை மிக்க சிறந்த கொடையாகும்.

---

## 3-வது அத்தியாயம்

# வட இந்திய ஞானியர்

## 27. புத்தர்

கிறிஸ்து சகாப்தத்திற்கு முன்னர், ஆரும் நூற்ருண்டில் இந்தியாவில் மக்கள் சமயத்தை மறந்துவிட்டனர். வேதங்களின் உயர்ந்த போதனைகள் பின்னுக்குத் தள்ளப் பட்டன. எங்கு பார்த்தாலும் புரோகிதர்கள் முளைத்து விட்டார்கள். நேர்மையற்ற புரோகிதர்கள் சமய வியாபாரம் செய்தார்கள். அவர்கள் பல்வேறு வழிகளிலும் மக்களை ஏமாற்றித் தங்களுக்கென்று செல்வத்தைத் திரட்டி னர். அவர்கள் முற்றிலும் சமய விரோதிகள், சமயத்தின் பெயரால் மக்கள், இரக்கமற்ற புரோகிதர்களின் அடிச் சுவடுகளைப் பின்பற்றி நடந்து பொருளற்ற பல சடங்குகளைச் செய்தார்கள். அவர்கள் சூதுவாதறியாத வாயில்லாத விலங்குகளைக் கொன்று பல்வேறு வேள்விகளைச் செய்தார்கள். புத்தரைப்போன்ற ஒரு சீர்திருத்தவாதி நாட்டுக்கு இன்றி யமையாத ஒரு தேவையாக இருந்தார். எங்கு பார்த் தாலும் கொடுமையும், சீரழிவும், அதருமமும் நிலவிய நெருக்கடி மிகுந்த இக்காலத்தில் புரோகிதத் தொழிலையும் உயிர்ப்பலியையும் அறவே நீக்கவும், மக்களைக் காப் பாற்றவும், சமத்துவம், ஒற்றுமை, உலகு தழுவிய அன்பு ஆகிய கருத்துக்களை எல்லா இடங்களிலும் பரப்புவதற்கும், சீர்திருத்தவாதியாகிய புத்தர் தோன்றினர்.

# பிறப்பு

சாக்கிய மன்னர் சுத்தோதனர், புத்தரின் தந்தை. புத்தருடைய அன்னையின் பெயர் மாயா. அவர் கி.மு. 563-ல் பிறந்தார்; கி.மு. 483-ல் தம் 80-ஆம் வயதில் மறைந்தார். நேபாளத்தில் இமாலய மலைத் தொடர்களில் பல்பா மலையடிவாரத்தில் உள்ள கபிலவஸ்து நகரின் அருகில் உள்ள லும்பினி என்ற பெயருள்ள தோப்பு, அவர் பிறந்த இடமாகும். காசிக்கு வட கிழக்கில் 100 மைல் அளவு தொலைவில் உள்ள ரோகிணி என்ற சிற்றாற்றின் கரையில் கபிலவஸ்து என்ற அச்சிறிய நகரம் உள்ளது. உலகில் அவர் தோன்றும் நேரம் நெருங்கிய பொழுது தெய்வங்கள் தாங்களாகவே முன் வந்து தெய்வீகச் சகுனங்களாலும், அடையாளங்களாலும் அவருக்கு முன் செல்லும் வழியை அமைத்துத் தந்தன. பருவமல்லாத காலமாக இருந்தும் பூக்கள் பூத்துக்குலுங்கின; இனிமையாக மழைத்தூறல் பெய்தது; விண்ணுலக இசை இங்கு கேட்டது; இனிய மென்மையான நறு மணங்கள் காற்றில் பரவி வந்தன. பிறந்த குழந்தையின் உடம்பில் முப்பத்திரண்டு மங்களகரமான முதன்மையான குறிகள் (மகா வியஞ்சனங்கள்) காணப்பட்டன; அவை எதிர்காலத்தில் அவர் அடையப் போகும் பெருமையைத் தெரிவித்தன; அவற்றுடன் இரண்டாம் நிலைபெறும் எண்ணற்ற குறிகள் (அனு வியஞ்சனங்கள்) காணப்பட்டன; மகனைப் பெற்ற ஏழு நாட்களின் பின்பு மாயா, மறைந்தார். மாயாவின் சகோதரி, மகா பிரஜாவதி, சித்தார்த்தரை வளர்த்த செவிலித்தாய் ஆவார்.

## சோதிடர்கள் கூறிய எதிர்கால நிகழ்ச்சிகள்

குழந்தை பிறந்த நேரத்தைக் கணித்துப் பார்த்த சோதிடர்கள் புத்தரின் தந்தையிடம், ''குழந்தை மனிதனாக வளர்ந்ததும் அகிலத்துக்கே அரசனாக (சக்கரவர்த்தியாக)க் கூடும் அல்லது வீட்டையும், குடும்பத்தையும் துறந்து காவி

யாடை அணிந்து துறவியாகிப் பேரறிவுமிக்கவராக — புத்தராகக்கூடும்; இதனுல் மனித சமுதாயமே முத்திப் பேறடையும்'' என்று கூறினுர். அரசர், ''அப்படியானுல், உலக வாழ்வைத் துறப்பதற்குக் காரணமாக என் மகன் காணும் காட்சிகள் எவையாக இருக்கும்'' என்று வினவினுர். சோதிடர்கள்! நான்கு காட்சிகள்! என்றனர். 'அந்த நான்கும் யாவை?' என்று அரசர் வினவ, ''மூப்படைந்து, தள்ளாடி நடக்கும் கிழவன், நோயாளி, இறந்த மனிதனின் பிணம், துறவி ஆகிய நால்வரின் காட்சிகள் இளவரசர் உலக வாழ்வைத் துறக்கக் காரணங்களாக அமையும்'' என்று சோதிடர்கள் விடை கூறினர்.

## சுத்தோதனர் எடுத்துக்கொண்ட முன் எச்சரிக்கை

சுத்தோதனர் தம் அருமை மகனைத் தாம் இழக்கக்கூடும் என்று கருதி அவனுக்கு உலகியற் பொருள்களில் பற்றுதல் ஏற்படச் செய்யத் தம்மாலான பெரு முயற்சிகளை மேற் கொண்டார். புலனின்பங்களின் பற்றுதல் ஏற்பட்டு நிலையாகத் தங்கிவிடுவதன் பொருட்டும், தனிமை, வறுமை ஆகியவற்றை நாடி உறுதி எடுத்துக் கொள்வதைத் தடுக்கும் பொருட்டும் அவர், எல்லாவகையான போகப் பொருள்களையும், நுகர்ந்து கொண்டிருக்குமாறு அவற்றையெல்லாம் அவனைச் சுற்றி அருகிலேயே இருக்கச் செய்தார். அவர் அவனுக்குத் திருமணத்தை முடித்து அவனைப் பூந்தோட்டங்கள், நீர் ஊற்றுக்கள், அரண்மனைகள், இன்னிசை, நாட்டியம் முதலியன உள்ள இடத்தில் வாழச் செய்தார்; அந்த இடத்தின் எல்லைகள் எல்லாப் பக்கங்களிலும் சுற்று வெளிச்சுவர்கள் அடைத்திருந்தன. அவனுக்கு மகிழ்ச்சியும், இன்பமும் ஊட்டும்படியாக எண்ணற்ற அழகுக் கவர்ச்சியுள்ள இளம் பெண்கள் பணிவிடைகள் செய்தார்கள். குறிப்பாக, துறவு வாழ்வில் புகுவதற்குக் காரணமாக அமையக்கூடிய 'நான்கு காட்சி' களைப் பார்த்து விடாமல் அவை இளவரசரின் கண்களுக்கு எட்டாதவாறு அவற்றினின்று

சேய்மையில் இருக்குமாறு பார்த்துக் கொள்வதில் அரசர் கருத்தாக இருந்தார். அரசர், ''இனி இந்த நேரத்திலிருந்து அத்தகைய ஆட்கள் யாரும் என் மகனுடைய அருகில் வர யாரும் அனுமதிக்க வேண்டாம் என் மகன் ஒரு போதும் புத்தனுகிவிடக்கூடாது. நான் காண விரும்புவதெல்லாம் என் மகன் நான்கு பெரும் கண்டங்களின் மீதும், ஏவல் செய்யும் இரண்டாயிரம் தீவுகளின் மீதும் ஆட்சியும் அதிகாரமும் செலுத்தவேண்டும்; நூற்றெட்டு மைல் சுற்றளவு வரை பரவியுள்ள பரிவாரங்களுடன் அவன் விண்ணில் நடந்து செல்லவேண்டும்'' என்று கூறினுர். இவ்வாறு கூறிய அரசர், நால்வகை ஆட்களில் யாரும் இளவரசரின் கண்ணில் படாமல் தடுப்பதற்காக நான்கு திசைகளிலும் முக்கால் மைல் தூரத்துக்கு ஒரு காவல்காரர் இருக்குமாறு, எண்ணற்ற காவலரை நியமித்தார்.

## துறவு

புத்தரின் பெற்ருேர் இட்ட பெயர் 'சித்தார்த்தா'. (தம் குறிக்கோளை அடைந்தவர் என்று பொருள்). கௌதமர் என்பது அவருடைய குடும்பத்தின் பெயர். சித்தார்த்தரைப் புத்தர் — அறிவொளி பெற்றவர் என்று உலகெங்கும் உள்ள அனைவரும் அறிந்தனர். சாக்கியர் இனத்தில் தோன்றிய துறவி என்று பொருள்படும் சாக்கிய முனிவர் என்ற பெயரும் அவருக்கு வழங்கலாயிற்று. அவருடைய பதினுறும் வயதில் அவருக்குத் திருமணம் நடைபெற்றது. கபிலவஸ்து நகரிலும் அதன் சுற்றுப்புறத்திலும் அவருடைய பிள்ளைப்பருவம் கழிந்தது. அவருடைய மனைவியின் பெயர் யசோதரை. அவருக்கு இராகுலன் என்ற பெயருள்ள மகன் இருந்தான். சித்தார்த்த கௌதமர் தம் இருபத்தொன்றும் வயதில் தம் நேரம் முழுவதையும் ஆன்மீக நாட்டங்களிலும் யோகப் பயிற்சிகளிலும் தம்மை ஈடுபடுத்திக் கொள்வதற்காகத் திடீரென்று குடும்ப வாழ்வைத் துறந்தார். தற்செயலாக நடந்த வெறும் நிகழ்ச்சியொன்று அவரைத் துறவு மார்க்கத்தில்

திருப்பிவிட்டது. ஒரு நாள் அவர் எப்படியோ அரண் மனையை அடைத்திருந்த சுவர்களின் தடுப்பை விட்டு வெளியே வந்து நகரினுள் தம் பணியாள் சன்ன என்பவனுடன், மக்கள் எப்படி வாழ்கிறார்கள் என்பதைக் காண்கின்ற நோக்குடன் நகரெங்கும் சுற்றித் திரிந்தார். முதுமையால் தள்ளாடி நடக்கும் கிழவன், நோயாளி, இறந்தவன் பிணம், துறவி ஆகியோரை ஒவ்வொருவராகக் கண்ட காட்சி, சித்தார்த்தரை உலகவாழ்வைத் துறக்கும் முடிவை ஏற்றுக்கொள்ளுமாறு தூண்டியது. தாமும் ஒரு நாள் முதுமை, நோய், இறப்பு ஆகியவற்றுக்கு இரையாக நேரும் என்று அவர் உணர்ந்தார். துறவியின் அமைதியும் ஆற்றலும் வாய்ந்த தோற்றத்தையும் அவர் கவனித்தார். அவர் தமக்குள், ''நானும் துறவியாதல் நன்று. துன்பங் களும் துயரங்களும் நிறைந்த இவ்வுலக வாழ்வைத் துறந்து சம்சாரத் துன்பங்களை விட்டு விலகி நானும் அவற்றுக்கு அப்பால் செல்வேனாக. இன்ப போகங்களும், வசதிகளும் நிறைந்த இந்த நிலையில்லாத வாழ்க்கை, பொருட்படுத்த முற்றிலும் தகுதியற்றது. முதுமைப் பருவத்தின் வினை யிலிருந்து விடுபடமுடியாமல் நானும் உடல் வலிமை தேய்ந்து அழிவதற்கு ஆளாவேன். உலக மகிழ்ச்சி நிலை யற்றது'' என்று நினைக்கவும் செய்தார்.

கௌதமர் தம் குடும்பம், செல்வம், அந்தஸ்து, அதிகாரம், தந்தை, மனைவி, ஒரே குழந்தை ஆக எல்லா வற்றையும், எல்லாரையும் என்றென்றும் துறந்துவிட்டார். அவர் தம் தலையை மழித்துக்கொண்டு மஞ்சள் அங்கியை அணிந்தார். மகதநாட்டின் தலைநகரமாகிய ராஜகிருகத்தை நோக்கி அவர் நடந்தார். அருகே சுற்றுப் புறங்களில் உள்ள மலைகளில் பல குகைகள் இருந்தன. இந்தக் குகைகளில் முனிவர் பலர் வாழ்ந்தனர். அலமோ கலமோ என்ற முனிவரை அவர் தம் முதல் குருவாக ஏற்றுக்கொண்டார். அக்குருவின் போதனைகளால் அவர் திருப்தியடையவில்லை. எனவே அவர் அவரைவிட்டு விலகி உத்தகோ ராம்புத்தோ என்ற மற்றொரு துறவியை அணுகி அவருடைய ஆன்மீக

போதனைகளை நாடினார். இறுதியில், யோகப் பயிற்சிகளை மேற்கொள்ள அவர் முடிவு செய்தார். இக்கால, புத்தகயா வாகிய ஊர்விலா காட்டுக்குள் சென்று அவர் தங்கினார். ஆறு ஆண்டுகள் அவர் கடுமையான தவமும், பிராணா யாமமும் செய்தார். தன்னையே வருத்திக் கொள்ளும் பயிற்சியால் அவர் உயர்ந்த அமைதியைப் பெறலாம் என்று முடிவு செய்தார். உணவு உண்பதைப் பெரும்பாலும் அவர் முற்றிலும் தவிர்த்தார். இவ்வழியைப் பின்பற்றியதனால் அவர் பெரும் முன்னேற்றம் எதையும் காணவில்லை. எலும்பும் தோலுமாக அவர் மெலிந்தார். எல்லை கடந்த பலவீனத்தை அவர் அடைந்தார்.

அப்போது சில நாட்டியப் பெண்கள் தங்களின் சிதார் இசைக் கருவியை வாசித்துக்கொண்டு மகிழ்ச்சியுடன் பாடிக் கொண்டு அவ்வழியில் வந்தனர். அவர்களுடைய பாடலைக் கேட்ட புத்தர் அப்பாடலே தமக்கு உண்மையான உதவி என்று கண்டார். அவர்கள் தங்கள் பாடலில் உண்மை யான ஆழ்ந்த பொருள் எதையும் காணவில்லை; ஆனால் புத்தருக்கு ஆழம் உள்ள ஆன்மீகக் கருத்து நிரம்பியுள்ள செய்தியாக அது புலப்பட்டது. துக்கத்திலிருந்து அவரை மீட்டு, சக்தி, வலிமை, தைரியம் ஆகியவற்றைப் புகட்டி மேலே கைதூக்கிவிடும் ஆன்மீகச் சக்தியாக அது அவருக்கு அமைந்தது. பாடலின் கருத்து பின்வருமாறு:-

"சிதாரில் பண் இசைக்கும்போது நாட்டியம் அழகாக அமைகின்றது; சிதாரின் நரம்பை மிகவும் தளர்த்தவும் வேண்டாம்; மிகவும் முறுக்கவும் வேண்டாம்; மக்கள் உள்ளங்களை அல்லவா நாங்கள் கூத்தாடச் செய்கிறோம்; நரம்பை மிகவும் முறுக்கினால் முறிந்துபோய் இசை நின்று விடுகிறது; நரம்பை மிகவும் தளர்த்தினால் ஊமையாகி அப்போதும் இசை நின்றுவிடுகிறது; ஆகவே, சிதாரின் நரம்பை மிகவும் தளர்த்தவும் வேண்டாம், மிகவும் முறுக் கவும் வேண்டாம்!"

பட்டினிகிடந்து தம் உடம்பைத் துன்புறுத்தும் எல்லைக்குச் செல்லக்கூடாது என்பதையும், பொன்போல் சிறந்த வழி அல்லது மகிழ்ச்சிக்குரிய வழி அல்லது எல்லைகளைத் தவிர்க்கும் நடுநிலைப் பாதையையே தாம் பின்பற்ற வேண்டும் என்பதையும் புத்தர் இப்போது தெளிவாக உணர்ந்து கொண்டார். அப்போதிருந்து அவர் மிதமாக உணவை உண்ணத் தொடங்கினார். அவர் இத்தகைய பயிற்சிகள் எல்லாவற்றையும் தவிர்த்து நடுநிலைப் பாதையைப் பின்பற்றினார்.

தம் யோகப் பயிற்சிகளில் வெற்றி பெருமையால் தளர்ந்த மனோபாவத்தை அடைந்தார். எங்கு செல்வது, என்ன செய்வது என்று அறியாமல் தவித்தார். ஒரு நாட்டுப்புறப் பெண் அவருடைய துக்கம் நிரம்பிய முகத்தைக் கவனித்தாள். அவள் அவரை அணுகி அவரிடம் மிகவும் மென்மையான முறையில், ''வணக்கத்திற்கு உரிய ஐயாவே! தங்களுக்காக நான் சிறிதளவு உணவைக் கொண்டு வரட்டுமா ? தாங்கள் மிகவும் பசியுடன் காணப்படுகிறீர்கள்'' என்று கூறினாள், கௌதமர் அவளைப் பார்த்து, ''அன்புச் சகோதரியே! உன் பெயர் என்ன ?'' என்று கேட்டார். அக்கன்னி, ''மரியாதைக்குரிய ஐயாவே ! என் பெயர் சுஜாதா'' என்று கூறினாள். கௌதமர், ''சுஜாதா ! எனக்கு மிகவும் பசியாக இருக்கிறது, நீ என் பசியை உண்மையில் போக்குவாயா ?'' என்று வேண்டினார்.

கள்ளங்கபடமற்ற சுஜாதா, கௌதமரைப்புரிந்து கொள்ளவில்லை. கௌதமருக்கு ஆன்மீகப்பசி இருந்தது. உயர்ந்த அமைதியையும் மெய்யுணர்வையும் பெற வேண்டும் என்ற தாகம் அவருக்கு இருந்தது. அவர் ஆன்மீக உணவை விரும்பினார். சுஜாதா சிறிதளவு உணவை அவர் முன்னே கொண்டுவந்து வைத்து அதை உண்ணுமாறு அவரை அவள் வேண்டினாள். கௌதமர் புன்னகை பூத்து, ''அன்புள்ள சுஜாதா ! உன்னுடைய அன்பும் கருணையுமிக்க குணத்தைக் கண்டு நான் பெரு மகிழ்ச்சியடைகின்றேன். இந்த உணவு என் பசியைப் போக்குமா?'' என்று வினவினார்.

சுஜாதா, ''ஆம், ஐயா! அது தங்கள் பசியைத் தணிக்கும். அன்புகூர்ந்து அதை உண்ணுங்கள்'' என்று விடைதந்தாள். கௌதமர் ஒரு பெரிய மரத்தின் நிழலில் அமர்ந்து அந்த உணவை உண்ணத் தொடங்கினர்; அப்போதிருந்து அம் மரம் 'போ-மரம்' அல்லது 'ஞான மரம்' என்று அழைக்கப் படலாயிற்று. கௌதமர் பொழுது விடிவதற்குமுன் பொழுதாகிய வைகறை நேரத்திலிருந்து கதிரவன் மறைந்து பொழுது முடியும் மாலை நேரம்வரை அம்மரத்தின்கீழ் தியானம் செய்தார்; பற்றி எரியும் நெருப்பைப்போல் வளர்வதும், இரும்புபோல் வலிமை வாய்ந்ததும் ஆகிய முடிந்த தீர்மானத்துடன், ''நான் இறந்தாலும் சரி; என் உடம்பு அழிக, என் சதைகள் வற்றுக. அறிவாகிய ஒளியை நான் பெறும் வரையில் இவ்விடத்தை விட்டு நகர மாட்டேன்'' என்று விரதம் பூண்டு உறுதியாக இருந்தார். ஆழ்ந்த தியானத்தில் அவர் மூழ்கினர். இரவில் அப்புனித 'போமரத்தின்' (அரச மரம்) கீழ் ஆழ்ந்த சமாதியை அடைந்தார். மாயை பல்வேறு வழிகளிலும் அவரை மயக்கிற்று; ஆனல் அவர் மயங்காமல் பிடிவாதமாக இருந்தார். மாயையின் மோகங்களுக்கும், ஆசைகளுக்கும் அவர் இணங்கவில்லை. அவர் யாவற்றிலும் வெற்றி பெற்று அறிவொளியுடன் திகழ்ந்தார். அவர் நிர்வாணம் என்னும் பேரின்பத்தை அடைந்தார். தெய்வீக ஒளியும், பொலிவும் அவருடைய முகத்தில் சுடரொளி வீசின. அவர் தம் இருக்கையை விட்டெழுந்து புனித போ—மரத்தைச் சுற்றிச் சுற்றி ஏழு நாட்கள் இரவும், பகலும் தெய்வீகப் பரவசமடைந்து ஆனந்தக் கூத்தாடினர். பின்னர் அவர் வழக்கம் போல் இருக்கும் மன உணர்வைப் பெற்றார். அவருடைய உள்ளத்தில் ஆழ்ந்த கருணையும் இரக்கமும் நிறைந்து ததும்பின, தாம் அடைந்த அனுபவத்தை மனித சமுதாயத்துடன் பகிர்ந்து கொள்ள விரும்பினர். இந்தியா முழுமையும் அவர் பயணம் செய்து தம் நற்செய்திகளையும், கொள்கைகளையும் பரப்பினர். அவர் மனித சமுதாயத்தின் பாதுகாவலராகவும், விடுதலை வழங்குபவராகவும், மீட்பவராகவும் ஆனர்.

அவர் தாம் அடைந்த சமாதி அனுபவங்களைப்பற்றிக் கூறியவை:— ''என் மனம், உலகியல் வாழ்விஞல் களங்கப் படுவதிலிருந்தும், புலனின்பங்களால் களங்கப்படுவதி லிருந்தும், சான்ருேர் கொள்கைகளுக்கு மாறுபடுவதால் களங்கப்படுவதிலிருந்தும், அறியாமையால் களங்கப்படுவ திலிருந்தும், விடுவிக்கப்படுவதை நான் கண்ணுரக் காண் கின்றேன்,'' விடுதலையடைந்த நிலையில் ஞானம் உதித்தது: ''நான் முத்திப்பேறடைந்தேன்; மறுபிறவி நாசமாயிற்று. எது செய்யப்பட வேண்டுமோ அது செய்யப்பட்டுவிட்டது. உலக வாழ்வு இனி நீடிக்கத் தேவையில்லை.''

''பகைவர் அனைவரையும் வென்றுவிட்டேன். நான் அனைத்து ஞானங்களின் வடிவாகி விட்டேன். ஒவ்வொரு வழியிலும் களங்கங்களிலிருந்து விடுதலை பெற்றுள்ளேன்; நான் ஒவ்வொரு பொருளையும் துறந்து, ஆசையை அழித்து விடுதலை பெற்றுவிட்டேன்; நாஞகவே ஞானத்தை எய்திய பின், யாரை நான் என்னுடைய குரு என்பேன்? யாரும் எனக்குக் குரு அல்ல; யாரும் எனக்குச் சமம் அல்ல. உலகிலேயே நான் புனிதமடைந்தவன்; நானே பரம குரு. நானே முற்றிலும் பேரறிவு (சம்புத்தோ) வாய்ந்தவன்; ஆசைகள் எல்லாவற்றையும் சுட்டுச் சாம்பலாக்கிய பிறகு நான் குளிர்ச்சியை அடைந்துள்ளேன்; நிர்வாணம் என்னும் பேரின்பத்தை நான் அடைந்து விட்டேன். தருமத்தின் அரசாட்சியை நிறுவ நான் காசிக்குச் செல்லுகின்றேன்; இவ் வுலகின் இருளில் நான் அமரத்துவம் என்னும் முரசை முழக்குவேன்.''

புத்த பகவான் பின்னர், காசியை நோக்கி நடந்தார். ஒருநாள் மாலை நேரத்தில் அவர் ''மான்கள் பூங்காவில் நுழைந்தார். அங்கு தம் சொற்பொழிவுகளை ஆற்றித் தம் கொள்கைகளைப் பரப்பிஞர். அவர் வேறுபாடு பாராட்டாமல் அனைவருக்கும் ஆடவர், பெண்டிர், உயர்ந்தவர், தாழ்ந்த வர்; கற்றவர், கல்லாதவர் — அனைவரையும் சமமாகக் கருதி அனைவருக்கும் உபதேசித்தார். அவருடைய முதற்

சீடர்கள் அனைவரும் பாமரமக்களே; அதிலும் முதல் இருவர் பெண்கள். முதலில் மனமாற்றம் பெற்ற ஆண், யாசன் என்ற பெயருள்ள செல்வந்த இளைஞன். அவனுக்கு அடுத்த படியாக வந்தவர்கள் யாசனுடைய தந்தை, தாய், மனைவி ஆவர். இவர்கள் அவருடைய பாமரச் சீடர்கள். அவர் உருவிலா என்னும் காட்டில் இருந்த போது அவரைவிட்டுப் பிரிந்த பழைய சீடர்களுடன் அவர் இப்போது தருக்கமும் வாதமும் செய்தார். (அக்காட்டில் புத்தர் ஆறு ஆண்டு களாகக் கடுமையாகப் போராடினார்; எல்லை கடந்த தன்னடக்கத்தை மேற்கொண்டார்; இறுதியில், உண்மை யைத் துறவினால் வெற்றிகொள்ள இயலாது என்று தெளிந்தார்; எனவே பழைய எளிய வாழ்வுக்குத் திரும்பிப் பிச்சைக்காரர்போல் யாசித்து வாழத் தொடங்கினார். இத்தகைய நேரத்தில் அவருடைய சீடர்களாக இருந்த ஐந்து துறவிகள், அவருடைய இச்செயல் அவர் போதித்த கொள்கைகளின் மீது அவருக்கே நம்பிக்கை இல்லை என்பதை நிரூபித்து விட்டதென்று கருதி, அவரை விட்டுப்பிரிந்து காசியில் உள்ள மான்கள் பூங்காவை அடைந்தனர். அங்கு வந்த புத்தர் அவர்களை மீண்டும் சந்தித்தார்.) அவர் தமது சக்திமிக்க தருக்கத்தாலும் வலியுறுத்தும் ஆற்றலாலும் அவர்களைத் தமது வழிக்குக் கொண்டுவந்தார். கொண்டண்ணோ, என்ற வயது மூத்த துறவி முதலில் மாற்றம் பெற்றார். மற்றவர்களும் விரைந்து புத்தரின் கொள்கைகளை ஏற்றுக் கொண்டனர். அறுபது சீடர்கள் சேர்ந்த பின் அவர் தம் கொள்கைகளைப் பரப்புவதற்காக அவர்களைப் பல்வேறு திசைகளிலும் அனுப்பினார்.

உலகின் மூலத்தைப் பற்றியும், கடவுளின் இருப்பு, இயல்பு ஆகியவற்றைப் பற்றியும் விசாரணை செய்ய வேண்டாம் என்று அவர் தம் சீடர்களிடம் தெரிவித்தார். இத்தகைய ஆய்வுகள்யாவும் நடைமுறையில் சிறிதும் பயன் தராதவை என்றும், மாறாக மனத்தை வேறு வழிகளில் திசை திருப்பிவிடும் என்றும் அவர், அவர்களிடம் தெரிவித்தார்.

புத்தரைப் பின்பற்றுவோரின் எண்ணிக்கை மெதுவாக வளர்ந்தது. பிரபுக்களும் பிராமணர்களும் செல்வந்தர்கள் பலரும் அவருடைய சீடர்கள் ஆயினர். சாதியைப் பற்றி அவர் கவனம் செலுத்தவில்லை. ஏழைகளும், சாதியிலிருந்து தள்ளி வைக்கப்பட்டவர்களும் அவருடைய இயக்கத்தில் அனுமதிக்கப்பட்டார்கள். அவருடைய இயக்கத்தில் முழு உறுப்பினர்களாகச் சேர விரும்பியவர்கள் துறவிகளாக மாறி ஒழுக்கத்தின் கண்டிப்பான விதி முறைகளைக் கடைப்பிடிக்கு மாறு கேட்டுக்கொள்ளப்பட்டனர். பாமர மக்களும் பலர் அவருடைய சீடர்களாக இருந்தனர்.

உருவிலா என்னும் காட்டில் மூன்று சகோதரர்கள் இருந்தார்கள்; மூவரும் புகழ் பெற்ற துறவிகளாகவும் தத்துவ ஞானிகளாகவும் இருந்தனர். அரசர்களும் அதிகாரி களும் அவர்களைக் கௌரவித்தனர். புத்த பகவான் அங்கு சென்று அவர்களுடன் வாழ்ந்தார். அவர் புகழ்பெற்ற இம் மூவரும் மனம் மாறச் செய்தார்; இந்நிகழ்ச்சி நாடெங்கும் மிகப்பெரும் உணர்வைத் தோற்றுவித்தது.

புத்தர்பிரானும் அவருடைய சீடர்களும் மகத நாட்டின் தலைநகரமாகிய இராஜகிருகத்தை நோக்கி நடந்தார்கள். 1,20,000 பிராமணர்களாலும், இல்லறத்தார்களாலும் புடைசூழப்பட்டு விளங்கிய பிம்பிசார மன்னன், புத்தரை யும் அவருடைய தொண்டர்களையும் மிகுந்த பக்தியுணர் வுடன் வரவேற்றான். புத்தருடைய உபதேசத்தைக் கேட்டு உடனே அவன் சீடனானான். 1,10,000 பேர் அவருடைய இயக்கத்தின் முழு உறுப்பினர்கள் ஆனார்கள், எஞ்சியிருந்த 10,000 பேர் கொள்கைகளில் பற்றுள்ளவர்கள் ஆயினர். புத்தருடைய தொண்டர்கள் அன்றாட உணவை யாசிக்கச் சென்றபோது அவர்கள் வெறுப்புடன் நடத்தப்பட்டார்கள். பிம்பிசாரன் தன் தலைநகருக்கு அருகில் உள்ள, ராஜ குடும்பத்தார் மகிழ்ச்சியுடன் பொழுது போக்கும் பூந் தோட்டங்கள் அடங்கிய வேலுவனம் என்ற மூங்கில் தோப்பை நன்கொடையாக வழங்கினான். புத்தர்

பெருமான் தம் தொண்டர்களுடன் இங்கு மழைக் காலங்கள் பலவற்றைக் கழித்தார். ஒவ்வொரு பௌத்த துறவியும் மஞ்சள் அங்கியை அணியும்போது, உயிரினம் எதையும் கொல்லுவதில்லை என்று விரதம் எடுத்துக்கொள்ளுகின்றார். ஆதலால் மழைக்காலத்தில் ஒரே இடத்தில் தங்குவது இன்றியமையாததாகின்றது. இன்றுங்கூடச் சங்கரரின் இயக்கத்தைச் சேர்ந்த பரமஹம்ச சந்நியாசிகள் மழைக் காலத்திற்குரிய நான்கு மாதங்களும் (சாதுர்மாஸ்) ஒரே இடத்தில் தங்குகின்றனர். இப்பருவத்தில் ஈரத்தாலும் சூரிய வெப்பத்தாலும் உருவாகி உயிர்வாழத் தொடங்கும் எண்ணற்ற சிறுசிறு புழுபூச்சிகளைக் கொல்லாமல் மழைக் காலத்தில் இயங்குவது இயலாது.

புத்தர்பிரான் தம் தந்தையிடமிருந்து ஒரு செய்தியைப் பெற்றார். அவரைத் தம் சொந்த ஊருக்கு வருமாறும் அப்படி அவர் வந்தால் தாம் இறப்பதற்கு முன்பு ஒருமுறை அவரைக் காண முடியும் என்றும் தந்தை தகவல் அனுப்பி யிருந்தார். புத்தர் அந்த அழைப்பை மகிழ்வுடன் ஏற்றுக் கொண்டு கபிலவஸ்துவுக்குப் புறப்பட்டார். ஊருக்கு வெளியில் உள்ள ஒரு காட்டில் அவர் தங்கினார். அவருடைய தந்தையும் உறவினர்களும் அவரைக்காண வந்தனர்; ஆனால் புத்தரின் துறவுக்கோலம் அவர்களுக்கு மகிழ்ச்சியைத் தரவில்லை. சிறிது நேரம் இருந்து விட்டு அவர்கள் புறப்பட்டு விட்டார்கள். புத்தருக்கும் அவருடைய தொண்டர்களுக்கும் வேண்டிய அன்றாட உணவுக்கு அவர்கள் எந்த ஒரு ஏற்பாட்டையும் செய்யவில்லை. அவர்கள் உலகியல் மக்கள் தானே! புத்தர் ஊருக்குள் சென்று வீடு வீடாகப் பிச்சை எடுத்தார். இத்தகவல் அவருடைய தந்தையின் செவிகளை எட்டிற்று. அவர், கௌதமர் பிச்சை எடுப்பதைத் தடுக்க முயன்றார். கௌதமர், ''அரசே! நான் பிச்சை எடுப்பவன். நான் ஒரு துறவி. வீடு வீடாகச் சென்று பிச்சை பெறுவது எனது கடமை. இது எங்கள் இயக்கத்தின் கடமை. ஏன் நீங்கள் இதைத் தடுக்கிறீர்கள்? பிச்சையினால் வரும் உணவு மிகவும்

தூய்மையானது'' என்று கூறினர். அவருடைய தந்தை கௌதமரின் சொற்களுக்குச் சிறிதும் செவிசாய்க்கவில்லை. அவருடைய கையிலிருந்த் பிச்சைப் பாத்திரத்தைப் பறித்துக்கொண்டு அவரை, அவர் தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்றார். அனைவரும் தங்கள் வணக்கங்களைத் தெரிவிப்பதற்கு வந்தனர்; ஆனல் அவருடைய மனைவி யசோதரை வரவில்லை. அவள், ''நான் அவருடைய கண்களுக்கு ஏதேனும் தகுதியுள்ளவள் என்றுபட்டால், அவரே என்னிடம் வருவார்'' என்று கூறினள். விவேகம், வைராக்கியம் முதலான இன்னும் பல நற்குணங்களுடன் கூடிய அவள் மிகவும் கற்புள்ள பெண்மணி. தன் கணவரைப் பிரிந்த நாளிலிருந்து அவள் ஆடம்பரங்கள் எல்லாவற்றையும் தவிர்த்தாள். அவள் நாள்தோறும் ஒரு வேளை மட்டும் எளிய உணவை உண்டு பாயின்மீது படுத்து உறங்கினள். கடுமையான விரதங்கள் நிறைந்த வாழ்வை அவள் நடத்தினள். கௌதமர் இவை எல்லாவற்றையும் கேட்டார். அவருடைய மனம் மிகவும் நெகிழ்ந்தது. அவளைக் காண்பதற்காக உடனே அவர் சென்றார். அவள் அவருடைய காலடிகளில் பணிந்து வணங்கினள். அவள் அவருடைய திருவடிகளைக் கைகளால் இறுகப் பற்றிக்கொண்டு கண்ணீர் விட்டு விம்மி அழுதாள். பெண் துறவிகளுக்கான ஓர் இயக்கத்தைப் புத்தர் நிறுவினர். பௌத்த பெண் பிட்சுக்களில் யசோதரை முதல் பெண் பிட்சுவானர்.

நடந்து செல்லும் புத்தரை, அவருடைய மனைவி தன் புதல்வனுக்கு ஜன்னல் வழியாகக் காண்பித்து, ''இராகுலனே! அத்துறவிதான் உன் தந்தை. அவரிடம் போய் உன் பிறப்புரிமையைக் கேள். நான் தங்களின் புதல்வன். எனக்கு வாரிசு உரிமை தாருங்கள்! என்று தைரியமாகக் கேள்'' என்று அவனிடம் கூறினள். இராகுலன் உடனே புத்தரிடம் சென்று, ''அன்புத் தந்தையே! எனக்கு வாரிசு உரிமை தாருங்கள்'' என்று கேட்டான். அப்போது புத்தர் உணவு உண்டு கொண்டிருந்தார். அவர் பதில் எதுவும் பேசவில்லை. சிறுவன் தன் வாரிசு உரிமையை மீண்டும் மீண்டும் கேட்டான்.

புத்தர் காட்டுக்குச் சென்ருர். சிறுவனும் சத்தமில்லாமல் அவரைப் பின் தொடர்ந்து காட்டை அடைந்தான். புத்தர் தம் சீடர்களுள் ஒருவரிடம் ''நான் போதி மரத்தினடியில் பெற்ற விலைமதிக்க முடியாத ஆன்மீகச் செல்வத்தை இச் சிறுவனுக்கு வழங்குகின்றேன் அச் செல்வத்தின் வாரிசாக இவனை நியமிக்கின்றேன்'' என்று கூறினுர். துறவிகளின் இயக்கத்துக்கான தீட்சை இராகுலனுக்கு வழங்கப்பட்டது. இச்செய்தி புத்தரின் தந்தை அறிந்தபோது அவர் அளவற்ற துக்கத்தை அடைந்தார். ஏனெனில் அவர் தம் மகனை இழந்ததன்றிப் பேரனையும் இழந்துவிட்டார்.

புத்தர் சில அற்புதங்களைச் செய்தார். பெரும் மந்திர சக்தி வாய்ந்த ஒரு மலைப்பாம்பு அவர் மீது நெருப்பை உமிழ்ந்தது. புத்தர் தம் உடம்பையே நெருப்பாக மாற்றிக் கொண்டு அந்த நெருப்பின் சுடர்களைப் பாம்பின் மீதே பாயச் செய்தார். நீர் நிரம்பிய ஒரு குளத்திலிருந்து வெளியே வர விரும்பிய புத்தருக்கு உதவி செய்ய அருகே இருந்த ஒரு மரம் தன் கிளைகளில் ஒன்றை வளைத்துக் கீழே எட்டுமாறு செய்தது, ஒரு நாள் புத்தரின் கட்டளைக் கிணங்க 500 விறகுகள் தாமாகவே கட்டைகளாகப் பிளந்தன. குளிர் மிகுந்த இரவில் ஜடிலர்கள் குளிர் காய்வ தற்காக உள்ளே நெருப்பெரியும் 500 மட்கலங்களை அவர் படைத்தார். வெள்ளம் பெருகிய ஒரு சமயம் நீர்ப் பெருக்கைத் தணியச் செய்து தண்ணீரின் மீது அவர் நடந்து சென்ருர்.

புத்தரின் ஒன்றுவிட்ட சகோதரர்களில் ஒருவராகிய ஆனந்தர், புத்தருடைய முக்கியமான, தொடக்க காலச் சீடர்களில் ஒருவர். அவர் தம் இறுதிவரையிலும் புத்தரின் நம்பிக்கைக்கு உகந்த உயிர்த்தோழராகவும் சீடராகவும் இருந்தார். அவர் புத்தரிடம் குழந்தை மனப்பான்மையுடன் தனியன்பு பாராட்டித் தம் இறுதிவரையிலும் அவருடைய நேர் பணியாளாகவும் பணிவிடை செய்து வந்தார். அவர் அனைவராலும்

புகழப்பட்டார். அவர் அனைவரையும் மகிழ்விக்கும் பாங்கில் பழகும் இனிய பண்புள்ளவர். அவர் ஞான மார்க்கத்தில் பெரும் சாதனைகளை அடையவில்லை; ஆனால் பேரன்பு பாராட்டுபவராகவும், பெரும் அளவுக்கு நேர்மை உள்ளவராகவும் இருந்தார். ஆனந்தருடைய சகோதரர்களில் ஒருவராகிய தேவதத்தரும் இந்த இயக்கத்தில் சேர்ந்திருந்தார். தேவதத்தர் புத்தரின் மிகப் பெரும் போட்டியாளராக மாறிப் புத்தரை வெளியேற்றி விட்டு அந்த இடத்தைத் தாம் பற்றிக் கொள்ளக் கடுமையாக முயற்சி செய்தார். உபாலி என்ற நாவிதரும், அநிருத்தர் என்ற நாட்டுப் புறத்தவரும் இந்த இயக்கத்தில் சேர்க்கப்பட்டார்கள். உபாலி இந்த இயக்கத்தின் தலைசிறந்த தலைவரானார். அநிருத்தர் பரந்த கல்வியறிவு வாய்ந்த பௌத்த தத்துவ ஞானியானார்.

புத்தர், கோசல நாட்டின் தலைநகரமாகிய சிராவஸ்திக்குச் சென்றார். இங்கே செல்வச் செழிப்பு வாய்ந்த ஒரு வணிகர். அவர் தங்கி வாழ்வதற்காகப் பரப்பு மிகுந்த அழகிய ஒரு காட்டை வழங்கினார். புத்தர் மழைக் காலங்கள் பலவற்றை இங்கே கழித்து, பெருமை மிகுந்த சொற்பொழிவுகள் பல ஆற்றினார். இடத்திற்கு இடம் மாறிச் சென்று தங்கியவாறு நாற்பத்தைந்து ஆண்டுகளாகப் புத்தர்பெருமான் தம்முடைய கொள்கைகளைப் பரப்பினார்.

உணவில் நேர்ந்த சில குறைகளால் நோயுற்றுப் புத்தர் மறைந்தார். அவருடைய கொள்கைகளில் பற்றுதல் கொண்ட 'கண்டோ' என்ற பெண்மணியால் சமைக்கப்பட்ட 'சுக்கர—மத்தவம்' என்ற உணவை உண்டமையால் அவர் நோயுற்றார். உரை விளக்கம் செய்பவர் இச் சொல்லுக்குக் 'கரடியின் மாமிசம்' என்று பொருள் கூறுகின்றார். சுபத்தர பிட்சு, காட்டில் வாழும் கரடிகளுக்கு இது மிகவும் விருப்பமான உணவு என்றும், இது நிலத்துக்கு அடியில் விளையும் ஒருவகைக் காளான் என்றும் கருதுகின்றார். டாக்டர் ஹோா என்பவர், இது கரடியின் மாமிசம் அன்று;

ஆனால் 'சுக்கரகண்டம்' அதாவது காட்டில் பெரும் அளவில் கிடைக்கும் ஒருவகைக் கிழங்கு என்றும், இந்துக்கள் இக் கிழங்கை மிகவும் மகிழ்வுடன் உண்பர் என்றும் கூறுகின்றார். விரதங்கள் இருக்கும் நாட்களில் உண்ணப்படும் ஒரு வகைப் பலகாரம் இதுவாகும்.

புத்தர், ஆனந்தரிடம், ''ஆனந்தா! சென்று இரண்டு இரட்டை 'சல்' மரங்களுக்கிடையே எனக்கு ஒரு தொட்டிலை, தலைப்பக்கம் வடக்கே இருக்குமாறு கட்டு, நான் மிகவும் களைத்துப்போய் விட்டேன், நான் படுத்துக்கொள்ள விரும்பு கின்றேன்'' என்று கூறினார். உடனே ஓர் அற்புதம் நிகழ்ந்தது. மலர்கள் பூக்கும் பருவம் அல்ல என்றாலும் அப் போது இரட்டையாக இருந்த சல் மரங்கள் முழுவதும் பூத்துக் குலுங்கின. புத்தருக்கு அஞ்சலி செலுத்தும் வகையில் இம் மலர்கள் அவருடைய உடம்பின் மீது உதிர்ந்து படிந்தன. தெய்வீகப் பவழ மரங்களின் மலர்களும், தெய் வீகச் சந்தன மரங்களின் பொடிகளும் அஞ்சலி செலுத்தும் வகையில் மேலே இருந்து அவருடைய உடம்பின் மீது படிந்து பரவின.

புத்தபகவான், ''அன்புத் துறவியரே! இப்போது வாருங்கள். நான் உங்களிடமிருந்து விடை பெறுகின்றேன். கூட்டுப் பொருள்கள்யாவும் கலைந்து கரைந்து விடுவதற்கு உரியன. ஞானச் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளுங்கள்; உங்கள் முத்திப் பேற்றுக்காக உழையுங்கள்'' என்று கூறினார்.

## சில நிகழ்ச்சிகள்

கௌதமரிடம் குழந்தைப் பருவத்திலிருந்தே அகிம்சைக் குணம் எப்போதும் குடி கொண்டிருந்தது. ஒரு நாள், அவருடைய ஒன்றுவிட்ட சகோதரன் தேவதத்தன், தன் அம்பினால் ஒரு பறவையை வீழ்த்தினான். பரிதாபத்துக்குரிய பறவை அடிபட்டுத் தரையில் விழுந்தது. கௌதமர், முன்னே ஓடிச் சென்று அப் பறவையை வாரி எடுத்து அணைத்துக்கொண்டார்; தேவதத்தனிடம் அதை ஒப்படைக்க

மறுத்து விட்டார். இராஜ குருவின் முன்னிலைக்கு வழக்கு வந்தது; அவர் கௌதமருக்குச் சாதகமாகத் தீர்ப்பளித்தார்; தேவதத்தன் பெரும் அவமானமடைந்தான்.

பல்வேறிடங்களுக்கும் சென்று கொண்டிருந்த கௌதமர், ஒரு நாள் ஒரு குறுகிய பள்ளத்தாக்கின் வழியாக ஓர் ஆட்டு மந்தை சென்று கொண்டிருப்பதைப் பார்த்தார். கூட்டத்திலிருந்து ஆடுகள் தனியே பிரிந்து சென்றுவிடாதவாறு மந்தையை ஓட்டிச் சென்றவன் முன்னும் பின்னுமாகக் கூக்குரலிட்டவாறு ஓடிக் கொண்டிருந்தான். அகன்ற மந்தைக் கூட்டத்தில் கௌதமர் ஒரு சிறிய ஆட்டுக்குட்டியைப் பார்த்தார்; அது நடக்க முடியாமல் பின்தங்கியது அதன் உடம்பில் காயம் பட்டிருந்தது; மந்தைக்காரன் கழி கொண்டு அடித்தமையால் அதன் ஒரு கால் நொண்டியாயிற்று. கௌதமரின் உள்ளம் நெகிழ்ந்தது; அவர் அதைத் தம் இரு கரங்களாலும் வாரி எடுத்து அணைத்துக் கொண்டு அதை கீழே விடாமல் தாமே சுமந்தவாறு நடந்தார். அவர், "இம்யமலைப் பாறைகளின் மீது அல்லது தனித்துள்ள குகைகளில் அமர்ந்து கொண்டு மனித சமுதாயத்தின் துயரங்களையும், துக்கங்களையும் கவலைப்படாமல் பார்த்துக் கொண்டிருப்பதைக் காட்டிலும் கள்ளங்கபடமற்ற ஓர் உயிரின் துயரத்தைப் போக்குவது நல்லது" என்று கூறினார். மந்தையை ஓட்டிச் செல்லும் ஆயனைப் பார்த்து அவர்,"
"நண்பா! இவ்வளவு பெரிய மந்தையுடன் மிகவும் அவசர அவசரமாக நீ எங்கே போய்க்கொண்டிருக்கின்றாய்?" என்று கேட்டார், ஆயன், "அரசருடைய அரண்மனைக்கு. எங்கள் எசமானராகிய அரசர் பலியிடுவதற்காக இந்த ஆட்டு மந்தைகளை நாங்கள் கொண்டு போகின்றோம்; தெய்வங்களை மகிழ்விப்பதற்காக அவர் இன்றிரவு முதல் பலியிடத் தொடங்குவார்," என்று கூறினான். இதைக் கேட்ட கௌதமர் ஆட்டுக் குட்டியைச் சுமந்தவாறே ஆயனைப் பின் தொடர்ந்தார். அவர்கள் நகருக்குள் நுழைந்தபோது, அரசர் ஆணையிட்டவாறு பலி ஆடுகளை எல்லாம் புனிதம் மிகுந்த ஒரு முனிவர் கொண்டு வந்து சேர்த்துள்ளார் என்று

செய்தி பரவியது. கௌதமர் தெருக்களின் வழியாக நடந்து சென்றபோது, மக்கள் வெளியில் வந்து நின்று, மஞ்சள் அங்கி அணிந்த சாது இளைஞரின் கருணையும், சாந்தமும் தவழும் தோற்றத்தைப் பார்த்தார்கள்; அவருடைய கண்ணியமான தோற்றத்தாலும் இனிமையான முகப் பொலிவினாலும் அவர்கள் அச்சமும், ஆச்சரியமும் அடைந்தனர். பலி இடும் களம் நோக்கிப் புனிதமிகு முனிவர் வரும் செய்தி அரசனுக்கும் தெரிவிக்கப்பட்டது. அரசனுடைய முன்னிலையில் சடங்குகள் தொடங்கியபோது, கொல்லப் படவும் தெய்வங்களுக்குப் பலி இடப்படவும் தயாராக ஓர் ஆடு கொண்டு வந்து நிறுத்தப்பட்டது. அங்கு அது கால்கள் கட்டப்பட்டு நிற்கவும், வாயில்லாத அந்த உயிரின் கழுத்தை வெட்டுவதற்காகக் கையில் ஒரு பெரிய, இரத்த தாகம் மிகுந்த பட்டாக் கத்தியை ஏந்தியவாறு பெரிய பூசாரி தயாராக அங்கு நின்றான், கொடுமையும் சோகமும் நிரம்பிய அந்த நேரத்தில், பரிதாபம் மிகுந்த அந்த உயிரின் வாழ்க்கை நூலிழையில் ஊசலாடிக் கொண்டிருந்தபோது, கௌதமர் முன் வந்து, ''அரசே! இந்தக் கொடிய செயலை நிறுத்துக!'' என்று கூக்குரலிட்டார். இவ்வாறு சொல்லிக் கொண்டே அவர், முன்னால் குனிந்து அந்த ஆட்டின் கயிறுகளை அவிழ்த்து விட்டார். அவர், ''ஒவ்வொரு மனிதனும் தன் வாழ்வைப் பத்திரமாகப் பாதுகாக்க விரும்புவதுபோல, ஒவ்வொரு உயிரும் வாழவே விரும்புகின்றது,'' என்று கூறினார். பிறகு, பூசாரி, மனம் திருந்திய பாவியைப்போல் கத்தியைத் தூரத்தில் வீசி எறிந்துவிட்டான். அரசனும், இனிமேல் உயிர்ப்பலி நடைபெறக்கூடாது என்றும், மக்கள் அனைவரும் பறவைகளிடத்திலும், விலங்குகளிடத்திலும் இரக்கம் பாராட்ட வேண்டும் என்றும், அடுத்த நாளே நாடெங்கும் அரச கட்டளையைப் பிறப்பித்தான்.

கிசா கோதமி என்ற இளம் பெண், செல்வந்தர் ஒருவருடைய புதல்வனை மணந்தாள்; அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்தது. குழந்தைக்கு இரண்டு வயது நிறைந்த போது, இறந்துவிட்டது. அவள் குழந்தையினிடம் ஆழ்ந்த

பாசம் வைத்திருந்தான். அவள் இறந்த குழந்தையைத் தன் மார்புடன் இறுக அணைத்துக் கொண்டாள்; அதைப் பிரிய மறுத்துவிட்டாள்; அவள் வீடு வீடாகச் சென்று தெரிந்தவர் களையும், உறவினர்களையும் பார்த்துத் தன் குழந்தை மீண்டும் உயிர் பெறக்கூடிய ஏதேனும் மருந்தைத் தருமாறு வேண்டினாள். பௌத்த துறவி ஒருவர் அவளிடம், ''நல்ல பண்புள்ள பெண்மணியே! என்னிடம் மருந்து இல்லை. ஆனால் புத்த பகவானிடம் செல், அவர் நிச்சயம் உனக்கு மிகவும் நல்ல மருந்தைத் தருவார். அவர் கருணைக் கடலாகவும், அன்புக் கடலாகவும் உள்ளார். குழந்தை நிச்சயம் உயிர் பெறும். வருத்தப்பட வேண்டாம்,'' என்று கூறினார். அவள் உடனே புத்தரிடம் ஓடிச் சென்று, ''வணக்கத்திற்குரிய ஐயா! இந்தக் குழந்தைக்கு ஏதேனும் மருந்தைத் தருவீர்களா!'' என்று கேட்டாள். புத்தர், ''ஆம்! நான் மிக நல்ல மருந்தைத் தருவேன். யாருடைய வீட்டிலிருந்தாவது சிறிது கடுகு கொண்டு வா. அந்த வீட்டில் இதுகாறும் குழந்தையோ, கணவரோ, மனைவியோ, தந்தையோ, தாயோ அல்லது பணியாளோ இறந்திருக்கக் கூடாது,'' என்று கூறினார். அவள், ''நல்லது, ஐயா! நான் அதை விரைவில் கொண்டு வருகின்றேன்'' என்று கூறினாள்.

குழந்தையைத் தன் மார்புடன் அணைத்துக் கொண்டு அவள் ஒரு வீட்டுக்குச் சென்று சிறிது கடுகு தருமாறு வேண்டினாள். அவ்வீட்டில் இருந்தவர்கள், ''அம்மா! இதோ கடுகு உள்ளது. எடுத்துக் கொள்'' என்று கூறினர். ''அவள்,'' உங்கள் வீட்டில் குழந்தையோ, கணவரோ, மனைவியோ, தந்தையோ அல்லது தாயோ இறந்ததுண்டா?'' என்று கேட்டாள். அவர்கள், ''அம்மா! நீ விநோதமான கேள்வியைக் கேட்கிறாய். எங்கள் வீட்டில் பலர் இறந் துள்ளனர்'' என்று விடை தந்தனர். அவள் மற்றொரு வீட்டுக்குச் சென்று இவ்வாறே கேட்டாள். அந்த வீட்டின் சொந்தக்காரர், ''என் மூத்த மகனையும்

மனைவியையும் இழந்து விட்டேன்'' என்று கூறினார். அவள் மூன்றாவதாக ஒரு வீட்டுக்குச் சென்றாள். அங்கிருந்தவர்கள் ''நாங்கள் எங்கள் பெற்றோரை இழந்து விட்டோம்'' என்று கூறினர். அவள் இன்னொரு வீட்டுக்குச் சென்றாள். அங்கிருந்த பெண், ''நான் சென்ற ஆண்டு என் கணவரை இழந்து விட்டேன்'', என்று கூறினாள். முடிவில், யாரும் இறவாமல் இருக்கின்ற ஒரு வீட்டைக்கூட அவளால் கண்டு பிடிக்க முடியவில்லை. அவள் மனத்தில் விவேகமும் வைராக்கியமும் உதித்தன. அவள் தன் குழந்தையின் இறந்த உடலை அடக்கம் செய்தாள். இவ்வுலகில் உள்ள பிறப்பு, இறப்பு ஆகியவைபற்றிய சிக்கல்களை ஆழ்ந்து சிந்திக்கத் தொடங்கினாள்.

அவள் புத்த பகவானிடம் சென்று அவருடைய கமல பாதங்களில் பணிந்தாள்? அவர், '' நல்ல பண்புள்ள நங்கையே! கடுகைக் கொண்டு வந்தாயா?'' என்று வினவினார். அவள், ''யாரும் இறவாத ஒரு வீட்டைக்கூட என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை'' என்று விடைதந்தாள். பின்னர் புத்தர், ''இவ்வுலகில் உள்ள எல்லாப் பொருள்களும் அழியக்கூடியவை; நிலைத்து நில்லாதவை. இவ்வுலகில் துன்பங்கள், துயரங்கள், இடையூறுகள் நிரம்பி உள்ளன. ஆணும் பெண்ணும் பிறப்பு, இறப்பு, நோய், மூப்பு, வலி இவற்றால் துன்புறுகின்றனர். அனுபவத்தால் நாம் ஞானம் பெற வேண்டும். நிகழாதவை, நிகழ முடியாதவை பற்றி நாம் எதிர்பார்க்கக் கூடாது! இவ்வாறு எதிர்பார்ப்பதனால் நாம் வேண்டாத துன்பத்தையும் துக்கத்தையும் அடைகின்றோம். நிர்வாணம் என்னும் பேரின்பத்தை ஒருவர் அடைய வேண்டும். அப்போது தான் துயரங்களுக்கெல்லாம் ஒரு முடிவு ஏற்படும். அமரத்துவத்தையும் நிலையான அமைதியையும் ஒருவர் அடைவார்'' என்று தெரிவித்தார். கிசகோதமி, பிறகு புத்தரின் பெண் சீடராகிப் பௌத்த பெண் பிட்சுக்களின் இயக்கத்தில் சேர்ந்தாள்.

ஒருமுறை புத்தர் பிச்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்திக்கொண்டு ஒரு பணக்காரப் பிராமணரின் வீட்டுக்குச் சென்முர். பிராமணர் மிகவும் சினங் கொண்டார். ''பிட்சுவே ! அலைந்து திரிந்து பிச்சை ஏற்கும் சோம்பேறி வாழ்வை ஏன் நடத்துகிறீர்? இது அவமானமாக இல்லையா ? உமக்கு நல்ல கட்டான உடல் உள்ளது. நீர் உழைக்கலாம். நான் உழுது விதைக்கின்றேன். நான் வயலில் வேலை செய்கிறேன். எனது நெற்றி வியர்வையைச் சிந்தி அன்றுட உணவைச் சம்பாதிக்கின்றேன். நான் உழைப்பு மிகுந்த வாழ்வை நடத்துகின்றேன். நீரும் உழுது விதைத்தால் உமக்கு நல்லது. அப்போது நீரும் பெரும் அளவு உணவு பெறுவீர் !'' என்று கூறினுர். புத்தர், '' பிராமணரே ! நான்கூட உழுது விதைக்கின்றேன்; உழுது விதைத்தபின் நான் உண்கின்றேன்!'' என்று கூறினுர். பிராமணர் ''உம்மை ஓர் உழவர் என்று கூறுகின்றீர். ஆனுல் அதற்கான அடையாளம் எதுவும் உம்மிடம் காணப்படவில்லை. உம்முடைய கலப்பை, எருதுகள், விதைகள் எங்கே?'' என்று கேட்டார். பிறகு புத்தர், ''பிராமணரே ! நான் சொல்வதைக் கூர்ந்து கேளுங்கள். நான் நம்பிக்கை என்னும் விதையை விதைக்கின்றேன். நான் செய்யும் நற்செயல்களே விதைகட்குப் பாயும் மழைநீர். விவேகமும் வைராக்கியமும் என் கலப்பையின் உறுப்புகள். என் மனமே வழிநடத்தும் கடிவாளம். தருமமே கைப்பிடி, தியானமே முள், சமமும் தமமும் — அதாவது, மன அமைதியும், இந்திரியக் கட்டுப்பாடும், எருதுகள், இவ்வாறு நான் மனம் என்னும் வயலை உழுது, சந்தேகம், மயக்கம், அச்சம், பிறப்பு, இறப்பு ஆகிய களைகளைக் களைந்தெறிகின்றேன். அறுவடை செய்து கிடைக்கும் விளைச்சல், நிர்வாணம் என்னும் அமரத்துவக் கனியாகும். இவ்வாறு உழுது அறுவடை செய்வதனுல் எல்லாத் துயரங்களும் முடிவு பெறுகின்றன'' என்று விடை தந்தார். அகந்தை மிகுந்த பணக்காரப் பிராமணன் அறிவு பெற்றுர். அவருடைய கண்கள் திறந்தன. அவர் புத்தருடைய காலடியில் வீழ்ந்து பணிந்தார். அவருடைய பாமரச் சீடர்களில் ஒருவரானுர்.

# புத்தருடைய போதனைகள்

புத்த பகவான் வழங்கிய போதனைகளில் சில பின் வருமாறு ;-

நாம், துக்கத்தின் காரணத்தையும், துக்கத்திலிருந்து விடுபடுவதற்கான வழியையும், கண்டுபிடிக்க வேண்டும். புலனின்பங்களை நுகர வேண்டும் என்ற ஆசையும், உலகியல் வாழ்வுடன் நம்மைப்பிணைத்துக் கொள்வதுமே துக்கத்திற்கு காரணமாகும். நாம் ஆசையை நீக்கிவிட முடிந்தால், துன்பங்கள், துயரங்கள் யாவும் ஒரு முடிவை அடைந்துவிடும். நாம் நிர்வாணம் அல்லது நிலையான அமைதியை அனுபவிப் போம். புனிதமான எண்மடிப் பாதையைக் கண்டிப்பாகப் பின்பற்றுவோர் துன்பத்திலிருந்தும் துயரத்திலிருந்தும் விடுதலை பெறுவார்கள். எண்மடியாவன:- சரியான கருத்து, சரியான தீர்மானம், சரியான் பேச்சு, சரியான ஒழுக்கம், சரியான வேலை, சரியான முயற்சி, சரியான சிந்தனை, சரியான மனஒருமை என்பனவாகும். துறவியர்களே ! நிச்சயம் இதுதான் ''ததா கதர்'' (புத்தருக்கு வழங்கப்பட்ட விருது; இதன் பொருள் — நிறைநிலை பெற்ற ஒருவர்) ஆழ்ந்து ஆய்ந்து கண்ட நடுநிலைப் பாதை; இது அகமுகக் காட்சியைத் தோற்றுவிக்கிறது; இது ஞானத்தை உண்டாக்குகின்றது; இது நிலையான அமைதிக்கு, தெய்வீக ஞானத்திற்கு, நிறைவாகிய புத்த நிலைக்கு, நிர்வாணத்திற்கு அழைத்துச் செல்கிறது''.

''துறவியர்களே ! மீண்டும், நிச்சயமாக இது துன்பங் களின் புனிதமான உண்மையாகும். பிறப்பு துன்பம், மூப்பு துன்பம், நோய் துன்பம், இறப்பு துன்பம், விருப்பமில்லாத பொருள்களின் தொடர்பு துன்பம்; விருப்பமுள்ள பொருள் களைப் பிரிதல் துன்பம்; நிறைவேறாத ஆசை — இதுவுங்கூடத் துன்பம்; சுருங்கக் கூறின், உலக வாழ்க்கைக்குரிய பாசத்தின் ஐந்து பகுதிகளும் துன்பமே; அவையாவன! வடிவம், பொறி உணர்வு, காட்சி, பகுதிகள், மன உணர்வு என்பன''.

''துறவியர்களே! மீண்டும், இது நிச்சயமாகத் துன்பத்தின் காரணம் பற்றிய உண்மையாகும். இன்பமும் வேட்கையும் இணைந்து இங்குமங்கும் இன்பத்தைத் தேடுகின்ற — உண்மையில் புலனின்பங்கள் பற்றிய தாகமும், இன்னும் வாழவேண்டும் என்ற உள் உணர்வுத் தாகமும் அமைந்து சலிப்பில்லாமல் புதுப்பிக்கப்படும் வாழ்வுக்கு அழைத்துச் செல்லும் அத்தகைய தாகம் ஆகும் இது. துறவியர்களே! மீண்டும் இது நிச்சயமாகத் துன்பத்தை ஒரு முடிவுக்குக் கொண்டுவரும் புனித உண்மையாகும். முடிவடைவதுடன், ஆசை முழுமையும் அற்றுப்போகும் நிலையை வேண்டும் தாகம்; அதன் நீக்கம், சரணாகதி, அதிலிருந்து விடுதலை, அதனிடம் பாசம் இன்மை — இவை யாவும் ஆகும். துறவியர்களே! மீண்டும் இது நிச்சயமாக இது, துன்பத்தின் முடிவுக்கு இட்டுச் செல்லும் புனிதமான உண்மையின் நெறியாகும். இதுவே உண்மையில், சரியான கருத்து முதலிய புனிதமான எண்மடிப்பாதையாகும்.''

# 28. கபீர் தாசர்

## பிறப்பு

கபீர்தாசர் கி. பி. 1440-ல் பிறந்தார். 'கபீரின் சாந்தி' என்ற நூலில் குறிப்பிட்டுள்ளவாறு, கி. பி. 1519ல் அவருடைய மறைவு நிகழ்ந்திருக்கக் கூடும். கோரக் பூருக்கு அருகில் உள்ள 'மகர்' என்ற ஊரில் அவர் மடிந்தார். காசிக்கு அருகில் 'லஹார் தலாவ்' என்ற ஏரியில் தாமரை இலையில், குழந்தையாக அவர் காணப்பட்டார். மகப்பேறு இல்லாத முகம்மதிய நெசவாளராகிய நிரு என்பவரால், அவர் கண்டுகொள்ளப்பட்டார்; அப்போது அவர் தம் மனைவி நிமாவுடன் பக்கத்தில் உள்ள ஒரு கிராமத்து விழாவில் கலந்து கொள்வதற்காகச் சென்றுகொண்டிருந்தார். பெற்றோரால் புறக்கணிக்கப்பட்ட அக் குழந்தையின் மீது அவர்கள் கருணை கொண்டார்கள். அவர்கள் தங்கள் வீட்டுக்கு எடுத்துச் சென்று தங்கள் சொந்தக் குழந்தை

யாகப் பாவித்து வளர்த்து வந்தார்கள். குழந்தைக்குப் பெயர் சூட்டுமாறு காஜி அழைக்கப்பட்டார். குழந்தைக்கு ஒரு பெயரைக் கண்டு பிடிப்பதற்காகக் காஜி, குரான் நூலைத் திறந்து பார்த்து 'கபீர்' என்ற பெயரைத் தேர்ந்தெடுத்தார். அரபு மொழியில் 'கபீர்' என்ற சொல் 'பெருமை வாய்ந்தவர்' என்று பொருள்படும். குழந்தை ஒரு பேய் என்றும் உடனே கொன்றுவிட வேண்டும் என்றும் காஜி கூறினார். ஓர் அற்புதம் நிகழ்ந்தது, குழந்தையின் இதயத்தில் கத்தி செலுத்தப்பட்டது. ஒரு துளி இரத்தம் கூட வெளியே வரவில்லை. கபீர் ஒரு பாடலைக் கூறினார். அப்பாடலைக் கேட்ட அவர்கள், அவர் சாதாரணமான சதையும் இரத்தமும் அமைந்த குழந்தை அல்ல என்று புரிந்து கொண்டார்கள். பின்னர், 'கபீர்' என்ற பெயர் குழந்தைக்குச் சூட்டப்பட்டது.

தத்துப் பிள்ளையாக, முகம்மதியராக வளர்க்கப் பட்டாலும் கபீரின் பெற்றோர் இந்துக்கள் என்று தெரிகின்றது. அவர் ஒரு இளம் பிராமண விதவைக்குப் பிறந்தவர் என்றும், அவமானத்தை மறைப்பதற்காக ஏரியில் விடப்பட்டார் என்றும் சொல்லப்படுகின்றது. ஆனால் கபீர் ஒரு பாடலில், தாம் கருப்பையில் கருவாகத் தோன்றவில்லை என்று கூறுகின்றார். தாம் பிறக்கவும் இல்லை. கருப்பையில் வளரவும் இல்லை என்று கூறுகின்றார். (மக்காலிப் என்பார் எழுதிய 'சீக்கிய மதம்' என்ற நூலின் தொகுதி 6-ல் பக்கம் 122ல் பார்க்கவும்.) கபீர் உணவின்றியே வளர்ந்தார். அவருடைய வளர்ப்புப் பெற்றோர் அவரைப் பற்றி மிகவும் கவலை கொண்டனர். அற்புதம் நிகழும் முறையில் நாள்தோறும் ஒரு கன்று சுரந்த பாலை அவர் பருகத் தொடங்கினார்,

கபீரின் வாழ்க்கை மர்மங்களால் சூழப்பட்டுள்ளது. அவருடைய தொடக்க கால வாழ்க்கை பற்றியும் அவர் பெற்ற பயிற்சி பற்றியும் நாம் எதுவும் அறிய முடியவில்லை. அவருடைய வாழ்க்கை விவரங்களாகக் கண்டு பிடிக்கப்

பட்டுள்ளவை சிறிய அளவாக உள்ளன. அவர் ஒரு நெசவாளர்; வறுமையால் வாடிய பெற்றோருக்குப் பிறந்தவர்; சிக்கந்தர்லோடி ஆண்ட காலத்தில் காசியில் வாழ்ந்தவர்; பெரும் மத, சீர்திருத்தவாதியாகிய இராமானந்தரின் சீடர், தலை சிறந்த சீடர்கள் பலருக்கு குரு ஆனவர், என்ற உண்மைகளைத் தவிர அவரைப் பற்றி வேறு உண்மை எதையும் நம்மால் அறிய முடியவில்லை.

பிள்ளைப்பருவத்திலிருந்தே அவருக்குச் சமய உணர்வும் ஈடுபாடும் மிகுதியாக இருந்தன. அவர் எப்போதும் சிந்தனையில் லயித்திருந்தார். ஆன்மீக முறையில் கடவுளை அறிய முற்படும் மனோபாவங்கள் அவருக்கு மிகுதியாக இருந்தன. குழந்தைப் பருவத்திலிருந்தே அவர் ஞானியர்களுடன் கடவுளைப்பற்றி விவாதங்களில் இறங்கிவிடுவார். அவர் ஞானிகளையும், துறவிகளையும் வரவேற்று ஆழ்ந்த சிரத்தையோடும், பக்தியுணர்வோடும் பணிவிடைகள் செய்வார். அவருடைய வளர்ப்புத் தந்தை அவருக்குத் திருமணம் செய்து வைத்திருந்தபோதும், அவருக்கு வீடு, குடும்பம் என்ற பாசங்கள் இருக்கவில்லை. புண்ணிய நகரமாகிய காசியில் அவர் பல இடங்களிலும் சுற்றிக் கொண்டிருப்பது வழக்கம். நெசவுத் தொழில் செய்து அவர் தமது வாழ்க்கைக்குரிய பொருளைச் சம்பாதித்து வந்தார்.

## கபீர் பெற்ற உபதேசம்

கபீருக்கு நீண்ட காலமாகக் குரு வாய்க்கவில்லை. அவர் இராமானந்தரின் சீடராக வேண்டும் என்று விரும்பினார். தாம் முகம்மதியராக இருந்தமையால் இராமானந்தர் தம்மைச் சீடராக ஏற்றுக்கொள்வாரா என்று ஐயம் கொண்டார். இராமானந்தர் நாள்தோறும் கங்கையில் நீராட, வழக்கமாக வரும் துறையின் படிக்கட்டில் தம்மை மறைத்துக் கொண்டு படுத்திருந்தார். பெரும் உபதேச குருவாகிய இராமானந்தர் நீராட வழக்கம்போல் வந்தார். பொழுது விடியாமல் இன்னும் இருட்டாகவே இருந்தது. படுத்திருக்கும்

கபீரை அப்பரமகுரு பார்க்கவில்லை. அவர் தம் காலைக் கபீரின் நெஞ்சில் வைத்தார். மனித உடம்பின்மீது காலை வைத்துவிட்டோம் என்றறிந்தவுடனே 'இராம, இராம' என்று அவர் அலறினார். ''கடைசியில் நான் அவரைக் கண்டு கொண்டேன்'' என்று, கபீர் எழுந்திருந்து கூறினார். இராமானந்தரின் திருவடிகளில் பணிந்து, ''தாங்கள் எனக்கு உபதேச மந்திரம் வழங்கியிருக்கிறீர்கள்; இப்போது நான் 'தங்களின் சீடனாகி விட்டேன்'' என்று கூறினார். கபீரின் நேர்மையும், பக்தியுணர்வும் இராமானந்தரின் உள்ளத்தில் ஆழப் பதிந்தன; கபீரைத் தம் சீடராக ஏற்றுக் கொண்டார். பரமகுரு கபீருக்கு முறையாகத் தீட்சை தந்தார்.

கபீர் அந்நாளில் இருந்த பெருமைமிகு முல்லாக்கள்' பிராமணர்கள் ஆகியோருடன் தம் குரு செய்த வேதங்கள், தத்துவங்கள் பற்றிய வாக்குவாதங்களில் கலந்து கொண்டார். தர்க்க வாதத்தில் தேர்ச்சி பெற்ற சர்வஜித் என்ற புகழ்மிக்க அந்தணர் காசிக்கு வந்தார். காசியில் இருந்த பண்டிதர்கள், கற்றறிந்த அவ் அந்தணரின் வருகையை இராமானந்தருக்கு அறிவித்தார்கள்; ஆழ்ந்த தேர்ச்சி பெற்ற அத் தருக்கவாதியை யாரும் வெல்ல முடியாது என்றும் அவரிடம் அவர்கள் கூறினர். இராமானந்தர் அவருடன் வாதாடக் கபீரை அனுப்பினார். அவ் வைதிகப் பண்டிதர், ''கபீர்! நீர் என்ன சாதி?'' என்று கேட்டார், கபீர், ''நான் ஒரு நெசவாளி'' என்று விடை கூறினார். அகந்தைமிக்க பண்டிதர் வெறுப்பைக் காட்டும் முறையில் இகழ்ச்சியாகப் பார்த்து நெசவாளர் செய்யும் தொழில் யாது என்று கேட்டார். கபீர் அதற்கு விடையாகத் தெரிவித்த பாடலின் கருத்து, பின்வருமாறு:—

''நெசவாளரின் இரகசியத்தை யாரும் அறியார்;
உலகம் முழுவதற்கும் உரிய பாவு நூலை இறைவன் நெய்துள்ளான்;
வேதங்களும், புராணங்களும் கூறுவதை நீ கேட்பாயாக;
'பாவு நூலை நான் மிகவும் நீளமாக நீட்டியிருக்கின்றேன்;

நிலத்தையும் வானத்தையும் நான் என் தொழிற்சாலையாக
ஆக்கியுள்ளேன்;

சூரியனையும் சந்திரனையும் நான் குறுக்கே மாறி மாறி
வர இயக்குகின்றேன்!

என் கால்களை நான் மாறி மாறி மிதித்து இவ்வொரு
பணியைச் செய்கின்றேன்';

இத்தகைய நெசவாளரால் என் உள்ளம் மிகவும்
மகிழ்கின்றது. (மக்காலிப்)*

கபீர் குருநானக்கைப் போல் இருந்தார். இந்துக்கள், முகம்மதியர் இருதரப்பினராலும் அவர் நேசிக்கப்பட்டார். அவர் ஒரு குறிப்பிட்ட ஒரு மதத்தையோ அல்லது ஒரு இனத்தையோ சேர்ந்தவரல்ல. அகில உலகச் சகோதரத்து வத்தை உபதேசிக்க வந்த தீர்க்கதரிசி அவர். சாதிப் பாகு பாட்டு விதிகளைப் பற்றி அவர் பொருட்படுத்தவில்லை. இந்து மதமும், இஸ்லாம் மதமும் கூறும் உயர்ந்த, ஒற்றுமை யாக, இணக்கமுள்ள கருத்துக்களை அவர் ஏற்றுக்கொண் டார். மதம், ஆன்மீகம், அன்பு, பக்தி, நம்பிக்கை, தெய்வீக வாழ்க்கை ஆகியவை குறிப்பிட்ட ஒரு மதத்திற்கு மட்டும் தனியுரிமை அல்ல; அவை அனைவருக்கும் பொது என்ற உண்மையை அவர் உணர்ந்தார். அவருடைய மதம், எளிமையின் மதம். அவருடைய குறிக்கோள், அன்பு. முத்திப் பேறடைய அவர் கண்ட வழி, இறைவனிடம், இறைவனிடம் மட்டுமே செலுத்தும் பக்தி, உலகமே, கபீரின் வீடு; மனித சமுதாயமே, அவருடைய சகோதரர்கள்; அவருடைய பெருமைமிகு தந்தை, விண்ணுலகில் உள்ள தந்தையே. கடுமையான விரதங்களையும், தியானத்தையும் பயிற்சி செய்வதில் தம்மை ஈடுபடுத்திக்கொள்ள வேண்டும் என்பதற்காக அவர் உலக வாழ்வைத் துறக்கவில்லை. அவர் ஆற்றல் மிக்க யோகி. அவர் தறியில் நெசவு நெய்து கொண்டிருந்தார்; ஆனால் அதே சமயம் அவருடைய மனம் இறைவனிடம் பதிந்திருந்தது. கபீர், பெரும் திரளாக மக்கட் கூட்டத்தைக் கவரத் தொடங் கினார். பலர் அவருடைய சீடர்கள் ஆயினர். அவர் தறியில்

நெய்து கொண்டிருக்கும்போது சுற்றியும் திரண்டு நின்றூர் கள்; அல்லது, கடைத்தெருவில் திரளாகக்கூடி அவருடைய இனிய, உள்ளத்தை மேல்நிலைக்கு உயர்த்தக்கூடிய உயர்ந்த பாடல்களையும், சொற்பொழிவுகளையும் கேட்டு மகிழ்ந்தனர். ஞானிகள், தீர்க்கதரிசிகள் ஆகியோருடைய வழிகள் மர்ம மானவை. அவர்கள் பேசாமலும் உபதேசம் செய்கிறூர்கள். விவேகமுள்ளவர்கள் மட்டுமே அவர்களுடைய போதனை களினூல் பயன் அடைகின்றூர்கள். அவர்கள் மட்டுமே உண்மையாகப் புரிந்து கொள்ள முடியும். மக்களின் ஒற்று மையையும், சமயக் கொள்கைகளின் ஒற்றுமையும் கபீர் உபதேசம் செய்தார். காசியில் இருந்த வைதிக அந்தணர் கள் அவர் வீழ்ச்சியடைவதற்காகத் தங்களால் இயன்ற எல்லா முயற்சிகளையும் செய்தார்கள். கபீரை மயக்குவதற் காக அவர்கள் அழகிய இளம் வேசி ஒருத்தியை அனுப்பினூர் கள். ஆனூல் விவிலிய நூற் கதையில்வரும் மக்தலேனைப் போல, அவருடைய ஆன்மீகச் சக்தியால் அவள் மனம் மாறித் திருந்திவிட்டாள்.

கபீர், நிர்க்குண பக்தியை விளக்கினூர். அவர் அனை வரிடமும் மேலான அன்பைப் பாராட்டினூர். அவர் எல்லை யில்லாத அன்பும், கருணையும் உள்ளவர். அவர் சிறிதும் அஞ்சவில்லை. தம்மைப் பின்பற்றுமாறு அவர் யாரையும் கேட்டுக் கொள்ளவில்லை. தம்முடைய பாடல்களைப் பாடிக் கொண்டு அவர் நாடெங்கும் திரிந்தார். அவர் சடங்கு கள், சம்பிரதாயங்கள், எல்லாவற்றையும் கண்டனம் செய் தார். பழங்காலப் பழக்க வழக்கங்களை அவர் கடுமையாகக் குறை கூறினூர். அவர் சமுதாயச் சீர்திருத்தவாதி, மக்களின் சமூக, ஒழுக்க, ஆன்மீக உயர்வுக்காகவும் அவர் அயராது பாடுபட்டார். மக்கள் இதயங்களில் அவர் இன்றும் வாழ்வதற்கு அதுவே காரணம்.

தமக்கே உரிய வழியில் அவர் தம் கொள்கைகளையும் பெரும் அளவில் பரப்பி வந்தார். தம்மைச் சுற்றியும் காணப்பட்ட வேற்றுமைகளினிடையே ஒற்றுமையையும்

இணக்கத்தையும் உருவாக்க அவர் தம்மால் இயன்ற அளவில் முயன்ருர். முல்லாக்களேயும், அர்ச்சகர்களேயும் பற்றிக் குறை கூறல் அவருடைய பாடல்களில் நிரம்பியிருந்தது. மக்களின் ஒற்றுமையையும், சமயக் கொள்கைகளின் ஒற்றுமை யையும் அவர் பரப்பியதோடன்றித் தாமே அவ்வாறு வாழ்ந்தும் காட்டிஞர். முல்லாக்களுக்கும், அர்ச்சகர்களுக் கும் எதிரானபடைக் கலங்களாக அவர் தம் பாடல்களேப் பயன்படுத்திஞர். அச்சமோ கட்டுப்பாடோ இன்றிப் பேருண் மையை உபதேசிக்கும் உரிமையைத் தம் மெய்யுணர்விஞல் பெற்ற சக்தி மிகுந்த ஞானியாக அவர் விளங்கிஞர்.

அவர் ''நான் அல்லாவுக்கும் குழந்தை; இராமபிரா ஞுக்கும் குழந்தை'' என்று கூறுகின்ருர். அவரை அந்தணர் என்ருே அல்லது முகம்மதியர் என்ருே சூபி என்ருே அல்லது வேதாந்தி என்ருே; வைணவர் என்ருே அல்லது இராமனந் திதர் என்ருே கூறுவது கடினம். அவரைப் பிராமண ஞானி என்று இந்துக்கள் கருதுகின்ருர்கள்; சூபி என்று முகம்மதியர் கருதுகின்ருர்கள். அவருடைய தொண்டர்களால் நிறுவப் பட்ட 'கபீர்—பந்த்' என்ற இனத்தில், வட இந்தியாவில் சில இலட்சக்கணகான இந்துக்கள் இன்றும் உள்ளனர். ஆஞல் கபீர் தாமே, இனங்கள், கொள்கைகள், சமயங்கள் எல்லா வற்றையும் கடந்தவராக இருந்தார். அவர் இறந்தபோது இந்துக்களும் முகம்மதியர்களும் அவர் தத்தம் சமயத்தையே சார்ந்தவர் என்று சொல்லி அவருடைய இறந்த உடலுக் காகச் சச்சரவிட்டார்கள் என்ற கதை, இக்கருத்துக்கு அரண் செய்கிறது. கபீருடன் சமகாலத்தில் வாழ்ந்த புகழ் பெற்ற ஞானியருள் சிலர் நரசீமேத்தா, வித்யாபதி, உமாபதி, மீராபாய், ராம்தாஸ் ஆகியோர் ஆவர்.

காசியின் கவிஞரும், ஞானியுமாகிய கபீர், இந்தியாவின் ஆன்மீக வரலாற்றில் நம் கவனத்தை மிகவும் கவரும் மகான் களில் ஒருவர். தத்துவஞானிகளாக இருக்கும் கவிஞர் கட்குக் கபீர், தலேசிறந்த எடுத்துக்காட்டு ஆவார். அவர்

கவிஞராக இருந்ததைப்போலவே தேர்ச்சி மிகுந்தஇசைவாண ராகவும் இருந்தார். அவர் ஒரு தத்துவஞானி. அவருடைய பாடல்கள் அதியற்புதமானவை, அவையாவும் அவருடைய அன்பின், ஆன்மீக அனுபவங்களின், தாமாகச் சுரந்து வெளிப்பட்ட வெளியீடுகள். அவர் தம் பாடல்களில் எளிய உருவகங்களைப் பயன்படுத்தியுள்ளார். பாமர மக்களுக்கும் புரியக்கூடிய பாடல்களில் அவர் தம் சமயக் கொள்கைகளைப் பாடியுள்ளார். மத்திய மாகாணத்திலும் பஞ்சாப் மாநிலத் திலும் அநேகமாக ஒவ்வொரு வீட்டிலும், இன்றும்கூட, அவருடைய பாடல்கள் அடிக்கடி பாடப்படுகின்றன. அவரு டைய கொள்கைகள் பரந்த மனப்பான்மையுள்ளனவாகவும், உள்ளத்தை மேல் நிலைக்கு உயர்த்த வல்லனவாகவும் உள்ளன. அவர் பாடிய சில பாடல்கள் புதிர்கள் நிரம்பியன வாக உள்ளன.

அவர் அற்புதமான ஆன்மீக சக்தி படைத்திருந்தார். அவர் பல்வேறு அற்புதங்களைச் செய்தார். கிருஷ்ண பகவானே அவருக்காக ஓர் ஆடையை நெய்தார் என்று குறிக்கப்பட்டுள்ளது. காசியிலிருப்போர் அதுவரை கண்ட றியாத மிகச் சிறந்த வண்ணத் துணியாக அது இருந்தது. அது நூலால் நெய்யப்படவில்லை; கதிரவனுடைய பொற் கதிர்களே நூல்கள்; குறுக்கே ஓடிய ஒளிகள், மிகவும் மென் மையான வானவில்லின் வண்ண ஒளிகள், ஆகியவற்றால் அவ் ஆடை நெய்யப்பட்டது.

கபீர் ஒரு பசுவைக் கொன்றார். பசுவைக்கொன்ற பாவத் தைப் போக்குவதற்காக அவர் இறந்த பசுவை மீண்டும் உயிர்பெற்றெழச் செய்தார்.

கபீர், தவறான கொள்கைகளைப் போதித்து மக்களை நெறி வழுவச் செய்கின்றார் என்று அரசர் சிக்கந்தர் லோடி யிடம் சிலர் புகார் செய்தனர். கபீர் அரசர் முன்னால் அழைத்து வரப்பட்டார். அரசருக்கு வணக்கம் செலுத்து மாறு அவையில் இருந்தோர் கபீரைக் கேட்டுக்கொண்டனர்: கபீர், ''எனக்கு அரசரிடம் எந்தப் பணியும் இல்லை.

இவ்வுலகைப் பாதுகாப்பவரும், இவ்வுலகில் உண்மையான அரசரும் ஆகிய கடவுளிடம் மட்டுமே எனக்குப் பணி உண்டு. நான் இறைவனுடைய பெயரை அறிவேன். நான் அவருடைய புகழை மட்டும் பாடுவேன். நான் அவரைக் குறித்துத் தியானம் செய்வேன். உலக அரசர் ஒருவருக்கு அடிபணிய நான் அறியேன், இதுகாறும் எந்த ஒரு அரசருடைய சபைக்கோ, தர்பாருக்கோ நான் சென்றதில்லை'' என்று விடை கூறினர். கபீரின் சொற்களை கேட்ட சிக்கந்தர்லோடி பெரும் சினமடைந்தாலும், அவர் பண்புள்ள மனிதராதலால், கபீர் அமைதியாகத் திரும்பிச்செல்ல அனுமதித்தார். கபீரின் உயிர் தப்பியது என்றாலும் அவர் காசியிலிருந்து வெளியேற்றப்பட்டார். இந்த நிகழ்ச்சி அவருடைய அறுபதாம் வயதில் கி. பி. 1495ல் நடைபெற்றது.

கபீரின் மனைவியின் பெயர் லோயி. கமால் அவருடைய புதல்வர். தரம்தாசர் அவருடைய முதன்மையான சீடர். சித்தூரின் அரசி ஜாலி, அவருடைய அரச சீடர். கபீர், ஊருக்கு வெளியே உள்ள தனியிடத்தில் ஒரு குடிசையில் தம் மனைவியுடன் வசித்து வந்தார்; தம் இடத்திற்கு வரும் சாதுக்கள் அல்லது துறவிகட்கு அவர் விருந்து படைத்தார். ஒருநாள் அவரிடம் பொருள் எதுவும் இருக்கவில்லை. பசி மிகுந்த துறவியர் பலர் அவருடைய குடிசைக்கு வந்தனர். அவர் மனம் மிகவும் குழப்பம் அடைந்தது, அவருடைய மனைவி, ''நாதா! தாங்கள் அனுமதி தந்தால் நான் வணிகருடைய புதல்வரிடமிருந்து சிறிது தொகை பெற்று வருகின்றேன்'' என்று கூறினர். கபீர், 'அவன் பெரிய கஞ்சனாயிற்றே! அவனிடமிருந்து நீ எப்படிப் பணம் பெறுவாய்?' என்று கேட்டார். அவருடைய மனைவி, ''அவன் என்னிடம் மிகவும் மோகம் கொண்டிருக்கின்றான். எனக்குப் பணம் தருவதாக அன்றொரு நாள் அவன் என்னிடம் கூறினன். அவனிடம் பணத்தைப் பெற்றுக் கொண்டு அவனுக்கு ஒரு நல்ல பாடத்தைக் கற்பிப்போம்'' என்று தெரிவித்தாள். கபீர், ''அது நல்லது. உடனே

சென்று அவனிடம் பணத்தைப் பெற்றுக்கொண்டு வா, துறவிகள் மிகவும் பசித்துள்ளனர், மூன்று நாட்களாக அவர்கள் எந்த உணவும் உண்ணவில்லை'' என்று கூறினார்.

லோயி வணிகருடைய வீட்டுக்குச் சென்று அவருடைய இளம் புதல்வரைப் பார்த்தார். இரவில் வந்து சந்திப்ப தாக உறுதிமொழி தந்தார். அம்மையார் கேட்ட தொகையை அவன் உடனே கொடுத்தான். அம்மையார் உடனே குடிசைக்குத் திரும்பி வந்து கணவரிடம் தொகையைத் தந்தார். சாதுக்கள் அனைவரும் வயிறார உண்டு மகிழ்ந்தனர்.

அன்றிரவு பெரு மழை பெய்தது. பெரும் புயற்காற்றும் உடன் வீசியது. கபீர் ஒரு போர்வையினால் தம் மனைவியைப் போர்த்தித் தம் தோள்களில் சுமந்து கொண்டு புயலிலும் மழையிலும் நடந்து வணிகரின் வீட்டை அடைந்தார். லோயி, வணிகரின் புதல்வர் உள்ள அறைக்குள் நுழைந்தார். அவரை மீண்டும் அழைத்துச் செல்வதற்காகக் கபீர் வெளியே காத்துக் கொண்டிருந்தார். அம்மையாரைக் கண்டவுடனே இளைஞன் பெரு மகிழ்ச்சியடைந்தான். புயலும் மழையுமாக உள்ள அந்த இரவில் தன் அறைக்கு அவர் வந்தது பற்றிப் பெரும் ஆச்சரியமடைந்தான். அவன், ''அன்பே என் வீட்டுக்கு வர உன்னால் எப்படி முடிந்தது? நீ சிறிதும் நனையவில்லை, உன் கால்கள் சுத்தமாக உள்ளன. உன் கால்களில் சேறு சிறிதும் படியவில்லை. இது மிகப்பெரிய அற்புதம்'' என்று கூறினான். அம்மையார், ''என் கணவர் தம் தோள்களில் என்னைச் சுமந்துகொண்டு வந்தார்'' என்று கூறினார். இளைஞன் அச்சமும் வியப்பும் அடைந்தான். உடனே அவனது மனம் திருந்திவிட்டது. அவன் விம்மி அழுது, ''லோயி அம்மையே! தங்கள் கணவரா தங்களை இங்கே அழைத்து வந்தார்?'' என்று வினவினான். அம்மை யாரைத் தன் தாயாக மதித்து அவருடைய காலடிகளில் வீழ்ந்து பணிந்தான். அவன், ''தாங்கள் என் அன்னை, நான் தீய எண்ணங்கொண்டதற்காக என்னை மன்னியுங்கள்'' என்று வேண்டினான். வெளியில் கபீர் நின்று கொண்டிருந்த

இடத்தை நோக்கி அவன் ஓடிச் சென்றான். அவருடைய காலடிகளில் விழுந்து, ''வணங்கத்தக்க குருவே! நான் மிகப் பெரிய பாவி. என்னைத் தூய்மைப்படுத்துங்கள். உயர் நிலைக்கு என்னைக் கைதூக்கி விடுங்கள். தங்கள் கமல பாதங்களில் சரண் அடைகின்றேன். நான் தங்களை மன்றாடி வேண்டுகின்றேன். நான் தங்களுடைய தாழ்மையான பக்தன்'' என்று சொல்லி அழுதான். அந்த நாள் முதலாகக் கபீரின் நம்பிக்கைக்குரிய சீடர்களில் ஒருவனாக அவன் ஆனான்.

ஞானிகள், தீர்க்கதரிசிகள் ஆகியோரின் வழிகள் புரிந்து கொள்ள முடியாதவையாக உள்ளன. அவர்கள் எளிதில் தொடுவதனாலும், தங்கள் தரிசனத்தாலும் மிகவும் இழிவான பாவிகளும் கொடியவர்களும், பெரும் ஞானிகளாக மாறி விடுகின்றார்கள். அதீத ரஜோ குணம் சாத்துவீக பாவனையாக மாறிவிடுகிறது. வணிகரின் மகன் காமம் மிகுந்த இளைஞன்; அவன் மனத்தில் ரஜோ குணம் நிரம்பியிருந்தது: அவன் பக்தியும் சாத்துவீக குணமும் உள்ள மனிதனாக மாறிவிட்டான்.

கபீரின் பெரும் புகழைப்பற்றிக் கேள்வியுற்ற ஜஹாங்கஸ்தர் என்ற முகம்மதியப் பக்கிரி, ஒரு நாள் அவரைக்காணச் சென்றார். அவருக்குக் கபீரைப் பற்றிப் பொறாமையாக இருந்தது. கபீர் உடனே ஒரு கொழுத்த பன்றியைத் தம் வீட்டுக் கதவுடன் கட்டிவைத்தார். பக்கிரி அந்தப் பன்றியைப் பார்த்துவிட்டு கபீரின் குடிசைக்குரிய முற்றத்தில் கூட நுழையவில்லை. கபீர் அவரைத் திரும்ப அழைத்து, ''பெருமை மிகு பக்கிரியே! ஏன் திரும்பி ஓடுகின்றீர்? நான் அழுக்குள்ள பன்றியை வீட்டுக் கதவில்தான் கட்டிவைத்துள்ளேன். ஆனால் நீங்கள் எவ்வளவு அழுக்குகளை — அதாவது — சினம், கர்வம், பேராசை, பொறாமை ஆகியவற்றை உங்கள் இதயத்தில் அல்லவா கட்டிவைத்திருக்கிறீர்கள்!'' என்று கூறினார். பக்கிரி அவமானத்தால் தலை குனிந்தார். அவர் கபீரிடம் மன்னிப்பை வேண்டினார்; உடனே அவருடைய சீடரானார்.

## கபீரின் நூல்கள்

அவையெல்லாம் பெரும்பாலும் தொகுக்கப்பட்ட பாடல்களாக உள்ளன; பழைய இந்தி மொழியில் பல்வேறு பா வகைகளில் அவை இயற்றப்பட்டுள்ளன. மொத்தம் எழுபத்திரண்டு நூல்கள் உள்ளன. புகழ்பெற்ற மிகவும் முக்கியமானவை:— கபீர் பிஜகம்; சுக நிதயை; சப்தங்கள்; சகிகள்; ரேக்தசுகள்; மங்களம்; வசந்தம்; ஹோலி அகங்கள்; முதலியனவாகும். கபீர் பிஜகம் கபீர் பந்த்களின் கொள்கைகள், சமயச் செய்திகள் ஆகிய எல்லாவற்றுக்கும் பிரமாணமாக உள்ள நூலாகும்.

அவருடைய மொழி மிகவும் எளிமை உள்ளது. நடை அழகாக உள்ளது. தம் கருத்துக்களை மிகவும் துணிச்சலுடன் தெரிவித்துள்ளார். அவருடைய பாடல் புனைவு மிகவும் இயற்கையாக அமைந்துள்ளது. ஒவ்வொரு ஈரடிப் பாடலும் ஆழ்ந்த குறிப்பு நிரம்பியுள்ளது. உவமைகளும் உருவகங்களும் மிகவும் பொருத்தமாக உள்ளன. ஆழ்ந்த உணர்வும், சுற்றிவளைக்காமல் நேரடியாகப் பேசுவதும் பாடல்களில் அமைந்துள்ள பிற குணநலங்கள் ஆகும். கருத்து வெளியீடுகள்யாவும் அவருடைய உள்ளத்திலிருந்து நேராக உதித்துள்ளன. எளிய ஈரடிப்பாடலில் உணர்வு உலகத்தை அடக்கியிருக்கும் அவருடைய திறமை அதிசயமும், நிகரில்லாததும் ஆகும். அவருடைய பொன் மொழிகள் ஈடிணையற்றவை. அவருடைய பாடல்கள் ஊக்கந்தருவனவாகவும் உள்ளத்தை உயர்த்துவனவாகவும் உள்ளன. ஆழ்ந்த சிந்தனையும், படிப்பவர் உள் உணர்வை ஊடுருவிச் செல்லும் தன்மையும் அவற்றில் அமைந்துள்ளன.

## கபீரின் மறைவு

அவர் மறைந்தபோது அவருடைய உடம்புக்கு இந்துக்களும் முகம்மதியரும் உரிமை பாராட்டினர். காசி அரசர் ஆயிரக்கணக்கான இந்துக்களுடன், உடம்பை எரிக்க விரும்பினார். கபீர் ஓர் இந்து என்றும், ஆதலால் உடம்பை எரிக்க

வேண்டும் என்றும் இந்துக்கள் உரிமை கொண்டாடினர். பிஜிலிகான், ஆயிரக்கணக்கான முகம்மதியருடன், உடம்பைப் புதைக்க விரும்பினர். கபீர் ஒரு முகம்மதியர் என்றும், ஆதலால் அவருடைய உடம்பு முகம்மதியரின் மதச் சடங்குகளின்படி, புதைக்கப்பட வேண்டும் என்றும் முகம்மதியர் வாதாடினர்.

இவ்வாறு அவர்கள் சச்சரவிட்டுக் கொண்டிருந்தபோது, கபீரின் உருவெளித் தோற்றம் தோன்றி, ''நான் இந்துவோ, முகம்மதியனோ அல்ல. இரு மதங்களையும் நான் சேர்ந்தவன். நான் எதுவும் அல்ல. நான் எல்லாமாக இருக்கின்றேன். இரு மதங்களிலும் நான் தெய்வத்தைக் காணுகின்றேன். இந்துவோ, முகம்மதியனோ இங்கு இல்லை. மயக்கத்திலிருந்து விடுபட்டவனுக்கு இந்துவும், முகம்மதியனும் ஒன்றே. போர்வையை நீக்குங்கள், அற்புதத்தைப் பாருங்கள்'' என்று கூறியது.

போர்வை நீக்கப்பட்டது. அதன் கீழ் எண்ணற்ற மலர்களின் குவியல் காணப்பட்டது. மலர்களின் பாதி அளவைக் காசி அரசர் எடுத்துச் சென்று புனித கங்கையின் கரையில் எரித்துவிட்டார். சாம்பல் அங்கு புதைக்கப்பட்டு அந்த இடத்தில் ஒரு கோயில் கட்டப்பட்டது; 'கபீர் சேவுரா' என்ற பெயர் அக்கோயிலுக்கு வழங்குகின்றது; கபீரின் தொண்டர்களுக்குப் பெரும் யாத்திரைத் தலமாக உள்ளது. மலர்களின் மற்றொரு பாதி அளவை முகம்மதியர் எடுத்துச் சென்று அவர் இறந்த 'மகர்' என்ற இடத்தில் புதைத்தார்கள். கல்லறையின்மீது ஒரு மசூதி கட்டப்பட்டது. முகம்மதியர்களுக்கு இது ஒரு யாத்திரை இடமாக உள்ளது.

## கபீரின் பொன் மொழிகள்

1. ஜெப மாலையின் மணிகளை உருட்டுவதில் வாழ்க்கை கழிந்து கொண்டிருக்கின்றது; ஆனால் உள்ளத்தில் இருள் நீங்கவில்லை. ஜெப மாலையின் மணிகளை உருட்டுவதை நிறுத்திவிடு; ஆனால் உன் மனத்தின் மணிகளை உருட்டு.

2. கடவுளிடம் பக்தி இல்லை என்றால், தல யாத்திரை செய்வதனால் உனக்கு நன்மை எதுவும் ஏற்படாது. நாடு முழுவதும் நீ சுற்றி வரலாம்; ஆனால் உன் உள்ளம் அழுக்காகவே இருக்கும். காசிக்குச் சென்று விஸ்வநாதப் பெருமானைத் தரிசித்த மனிதன், பக்தியுணர்வைப் பெறவில்லை என்றால், உள்ளத்தில் உள்ள வஞ்சகம், காமம், பேராசை ஆகியவற்றை அழிக்கவில்லை என்றால், அவன் ஒருவித நன்மையும் பெறமாட்டான்.

3. என் உள்ளத்துக்கினிய தெய்வத்தின் சொற்களில் தான் எனக்கு மிகுந்த விருப்பம் உள்ளது; வேறு வழிகளில் யாரும் எனக்கு ஆறுதல்தர முயன்றால். நான் எந்த ஆறுதலும் பெற முடிவதில்லை. நீங்கள் ஒரு மீனைப் பிடித்துத் தங்கத் தொட்டியில் இட்டு அமிர்தத்தையே பருகத் தந்தாலும் அது மிக விரைவில் இறந்துவிடும்.

4. வைரத்தை மதிப்பிடத் தெரிந்தவருக்குத்தான் வைரத்தின் அருமை தெரியும். கபீர் கூறுகின்றான் — பக்தியுணர்வை வளர்த்துக் கொண்டவனே இறைவனை அடைய முடியும்.

5. உனக்கு எதிராக முள்ளை நீட்டுபவனுக்கு நீ ஒரு ரோஜாவை நீட்டு. உன்னிடம் எப்போதும் ரோஜா உள்ளது; அவனிடமோ எப்போதும் முள்தான் உள்ளது.

6. அழியக்கூடிய உடலின்மீது நம்பிக்கை வைக்காதே. நீ விடும் ஒவ்வொரு மூச்சிலும் இறைவனை நினை; வீடுபேறு அடைய அது ஒன்றே வழி.

7. ''என்மீது ஏன் மிதிக்கிறாய்'' என்று குயவனிடம் மண் அலறி அழுகிறது; அதன் பொருள், ''நான் உன்மீது மிதிக்கின்ற ஒரு நாள் வரும்'' என்பதாம்.

8. உடம்பு ஒரு சத்திரம்; மனம் அதில் விருப்பத்துடன் தங்கியுள்ள ஒரு பறவை. யாரும் யாருக்கும் உறவல்ல என்பது உலகம் அறிந்த உண்மை.

9. கருணை உள்ள இடத்தில் நற்குணம் தொடர்ந்து தங்குகின்றது; பேராசை உள்ள இடத்தில் தீய குணம் தொடர்கின்றது; சினம் உள்ள இடத்தில் மரணம் தொடர்கின்றது; மன்னிக்கும் குணம் உள்ள இடத்தில் இறைவனே தொடர்ந்து தங்குகின்றான்.

10. ஒவ்வொரு காட்டிலும் ஒரு சந்தன மரம் இருக்காது; ஒவ்வொரு படையிலும் உண்மையான வீரன் ஒருவன் இருக்கமாட்டான்; ஒவ்வொரு கடலிலும் முத்துக்கள் கிடைப்பதில்லை; அதைப்போலவே உலகில் ஒவ்வோரிடத்திலும் ஒரு சாதுவோ, ஒரு ஞானியோ அல்லது ஒரு மகாத்மாவோ காணப்படுவதில்லை.

11. பொறுமையாக இரு; உரிய காலத்தில் ஒவ்வொன்றும் நிகழும். தோட்டக்காரன் செடிக்கு நாள் தோறும் தண்ணீரை ஊற்றுகின்றான்; ஆனால் உரிய பருவத்தில்தான் அது பழத்தைத் தருகிறது.

12. நான் சினம் முழுவதையும் காகிதமாகவும், மரங்களை எல்லாம் பேனாக்களாகவும், ஏழு கடல்களையும் மையாகவும் மாற்றினால்கூட இறைவனுடைய பெருமையை முழுமையாக விளக்க முடியாது.

13. வன்சொல்லைக் காட்டிலும் பெரிய தீமை எதுவும் இல்லை; அது ஒவ்வொன்றையும் சுட்டுச் சாம்பல் ஆக்கிவிடுகிறது. இன்சொல் அதற்கு மாறாக அமிர்தப் பேராற்றில் பெய்யும் மழைபோல் தழைக்கச் செய்கிறது.

14. சொல்லை, எப்படிப் பயன்படுத்துவது என்று தெரிந்தவர்களுக்கு அச்சொல் விலைமதிக்க முடியாத பொருளாகும். ஒவ்வொரு சொல்லையும், பேசுவதற்கு முன்பு, மனம் என்னும் தராசில் அதை நிறுத்திப்பார்க்க வேண்டும்.

15. இன்று உன்னால் செய்யக் கூடியதை நாளைக்கு என்று தள்ளி வைக்காதே; காலையில் செய்யக் கூடியதை மாலை நேரத்திற்குத் தள்ளி வைக்காதே; ஏனெனில் உன் திட்டங்கள் யாவும் நிலை குலையுமாறு மரணம் எப்போது உன்னை மீறி வரும் என்று நீ அறியாய்.

16. தன்னுடைய ஐம்பொறிகளையும் கட்டுப்பாட்டில் வைத்திருப்பவனே வீரன். இத்தகைய கட்டுப்பாடு இல்லாதவன் இறைவனை ஒருபோதும் அடைய முடியாது.

17. சர்க்கரையைச் சுவைத்துப் பார்த்த ஓர் ஊமை மனிதன் அதன் சுவையைத் தெரிவிக்க முடியாது. அதைப் போலவே, ஒருவர் மெய்யுணர்வு பெற்ற அனுபவத்தை வெளியிட்டுச் சொல்ல முடியாது.

18. சர்க்கரையால் ஆன பொம்மைகளில் முழுவதும் சர்க்கரையே வியாபித்திருப்பது போல, அகில உலகம் முழுவதும் பிரம்மத்தில் வியாபித்துள்ளது: பிரம்மம் அதற்குள் வியாபித்துள்ளது.

19. சர்க்கரையும், சர்க்கரைப் பொம்மைகளும் இரு வேறு பொருள்கள் அல்ல; அவை இரண்டும் ஒன்றே. அதுபோலவே, மெய்ஞ்ஞானம் உதித்தால், பலவாகக் காணப்படும் உலகம் ஒன்றாகக் காணப்படும்.

20. மரம் வித்துக்குள்ளும், வித்து மரத்திற்குள்ளும் இருப்பது போல, உலகம் பிரம்மத்துக்குள் இருக்கின்றது.

# 29. குரு நானக்

## பிறப்பு

நாட்டில் பெரும் ஆபத்து விளையும்போதெல்லாம், தருமம் வீழ்ச்சியடையும் போதெல்லாம், கொடுமையும் குழப்பமும் நிலவும் போதெல்லாம், மக்களிடையே

கடவுள் நம்பிக்கை குறையும் போதெல்லாம், அருள் ஞான இலக்கியங்களை வளப்படுத்தவும், தருமத்தைப் பாதுகாக்கவும், அதருமத்தை அழித்து மக்கள் மனத்தில் தெய்வபக்தி மறுமலர்ச்சி பெறச் செய்யவும், காலந்தோறும் மகான்கள் அல்லது ஞானிகள் தோன்றுகின்றார்கள். இந்தியாவில் தீய சூழ்நிலை நிலவியது. பாபர் இந்தியாவின் மீது படை எடுத்தார். அவருடைய படைகள் பல நகரங்களைத் தாக்கி அழித்தன. கைதான துறவிகள் கடுமையாக உழைக்குமாறு பலவந்தம் செய்யப்பட்டார்கள். எங்கு பார்த்தாலும் ஒட்டுமொத்தமாகக் கொலைகள் நிகழ்ந்தன. அரசர்கள் அசுரத் தன்மையும், கொடுமையும், இரத்தப்பசியும் உள்ளவர்களாக இருந்தனர். உண்மையான மதம் எங்கும் இருக்கவில்லை. மதத்தின் பெயரால் சித்திரவதை நடந்தது. சடங்குகள் மேலோங்கி உண்மையான சமய உணர்வு நசுக்கப்பட்டது. மக்கள் உள்ளங்களில் பொய்ம்மை, கபடம், தன்னலம், பேராசை ஆகியவை நிரம்பி இருந்தன. இத்தகைய சமயத்தில் தெய்வபக்தி, அன்பு, ஒற்றுமை, அமைதி என்னும் செய்திகளைப் பரப்ப உலகில் குரு நானக் தோன்றினார். இந்துக்களும் முகமதியர்களும் தங்களுக்குள் சண்டை இட்டுக் கொண்டிருந்த நேரத்தில் அவர் தோன்றினார்; அப்போது உண்மையான மதம் இருக்கவேண்டிய இடத்தில் வெறும் சடங்குகளும் உருவங்களும் மட்டும் இருந்தன. தியாகம், அன்பு மனித சமுதாய ஒற்றுமை அல்லது சகோதரத்துவம், அமைதி ஆகிய நற்செய்திகளைப் பரப்ப அவர் தோன்றினார்.

சீக்கிய மதத்தை நிறுவியவரும், ஆன்மீகச் செல்வரும், கவிஞரும் ஆகிய நானக், க்ஷத்திரிய குலத்தில் கி. பி. 1469ல் ராவி நதிக்கரையில், தால்வண்டி என்ற சிற்றூரில் (பஞ்சாப் மாநிலத்தில் அப்போதிருந்த லாகூர் மாவட்டத்தில்) பிறந்தார். குருநானக் பிறந்த வீட்டுக்கு அருகில், இப்போது 'நான்கானா சாஹிப்' என்ற பெயருள்ள புகழ் மிக்க ஆலயம் உள்ளது. பஞ்சாப், இந்து மாநிலங்களின் தீர்க்கதரிசி என்ற அவர் அழைக்கப்படுகின்றார். அவருடைய

தந்தை மேத்தா காலு சந்த் 'காலு' என்று மக்களால் வழங்கப்பட்டார். அவர் ஊரில் கணக்குப் பிள்ளையாக இருந்தார். அவர் உழவராக இருந்தார். அவருடைய தாயின் பெயர் திரிபதா. குழந்தைப் பருவத்திலேயே நானக் ஆன்மீக மனச்சார்பு உள்ளவராக இருந்தார்; சாதுக்களிடம் கடவுளைப்பற்றி உரையாடுவது அவரது வழக்கம். சமய உணர்வில் ஈடுபடும் இயல்பும், தியானம் செய்யும் மனமும் அவர்பால் அமைந்திருந்தன. ஆன்மீகப் பயிற்சிகளிலும், தியானம் செய்வதிலும் அவர் தம் நேரத்தைக் கழிக்கத் தொடங்கினார். தனித்திருக்கும் பழக்கம் அவருக்கு இருந்தது. அவர் சிறிதளவே உண்பார்.

## நானக்கின் கல்வி

அவர் தம் ஏழாம் வயதில் கோபால் பந்தா என்ற ஆசிரியரிடம் இந்தி பயிலச் சென்றார். ஆசிரியர் ஒரு புத்தகத்தைப் படிக்குமாறு நானக்கிடம் கூறினார். நானக், "இறைவனைப்பற்றி அறிந்து கொள்ளாமல், மற்ற யாவற்றையும் அறிந்து கொள்வதனால் பயன் என்ன?" என்று கேட்டார். பின்னர் ஆசிரியர் இந்திமொழி அகரவரிசை எழுத்துக்களை அவருக்காக ஒரு மரப்பலகையில் எழுதினார். நானக் அவரிடம், "ஐயா, அருள்கூர்ந்து சொல்லுங்கள், தாங்கள் எந்த நூல்களைப் பயின்றீர்கள்? தங்கள் அறிவின் எல்லை யாது?" என்று வினவினார். கோபால் பந்தா, "நான் கணிதம், கடைக்கு வேண்டிய கணக்குகள் எழுதுதல் ஆகியவற்றை அறிவேன்" என்று கூறினார். நானக், "இவ்வறிவு எவ்வகையிலும், தாங்கள் விடுதலைபெற உதவாது" என்று கூறினார். சிறுவனுடைய சொற்களைக் கேட்டு ஆசிரியர் பெரும் வியப்படைந்தார். அவர், "நானக்! நான் விடுதலை பெறுவதற்கு உதவக்கூடியதைப் பற்றித் தெரிவியுங்கள்" என்று கேட்டார். நானக், "ஆசிரியரே! உலக ஆசையை எரித்துவிடுங்கள்; அந்தச் சாம்பலைக் கொண்டு, எழுதும் மையை உண்டாக்குங்கள்; அறிவை அழகான காகிதம் ஆக்குங்கள். தெய்வ பக்தியைப் பேனா

வாகவும், உங்கள் இதயத்தை எழுதுபவராகவும் கொண்டு உங்கள் குருவின் போதனைகளின்படி எழுதுங்கள்; தியானம் செய்யுங்கள். இறைவனுடைய நாமத்தையும் புகழ்களையும் எழுதுங்கள்; 'இப்பக்கமோ அல்லது மறுபக்கமோ, இறைவனுக்கு எல்லையே இல்லை' என்று எழுதுங்கள். ஆசிரியரே! இந்தக் கணக்கை எழுதக் கற்றுக்கொள்ளுங்கள்'' என்று கூறினார். ஆசிரியர் மிகுந்த ஆச்சரியத்தை அடைந்தார்.

பின்னர் காலு தம் மகனை வடமொழியைக் கற்றுக் கொள்வதற்காக பண்டிதர் பிரிஜ்நாதரிடம் அனுப்பினார். பண்டிதர் அவருக்கு, 'ஓம்' என்று எழுதிக் காட்டினார். 'ஓம்' என்பதன் பொருள் யாதென்று நானக் ஆசிரியரிடம் கேட்டார். ஆசிரியர், '''ஓம்' என்பதன் பொருளை இப்போது நீ தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் இல்லை. அதன் பொருளை விளக்கிச்சொல்ல என்னால் முடியாது'' என்று கூறினார். நானக், ''ஆசிரியரே! பொருள் தெரியாமல் வாசிப்பதனால் பயன் என்ன? 'ஓம்' என்பதன் பொருளைத் தங்களுக்கு நான் விளக்குகின்றேன்'' என்று கூறினார். பின்னர் நானக், 'ஓம்' என்பதன் உள்ளுறைப் பொருளை மிகவும் விரிவாக விளக்கினார். வடமொழிப் பண்டிதர் பெரும் ஆச்சரியமடைந்தார்.

## நானக்கின் தொழில்

பின்னர் காலு, நானக்கின் மனத்தை உலகியல்பற்றிய செய்திகளில் திருப்பத் தம்மாலியன்ற அளவு முயன்றார். உழவுத் தொழிலைக் கவனித்துக்கொள்ளுமாறு அவர் நானக்கை நியமித்தார். நானக் தம் பணியில் சிறிதும் கவனம் செலுத்தவில்லை. வயல்களிலும் கூட அவர் தியானம் செய்து கொண்டிருந்தார். நானக் மாடுகளை மேய்த்தார்; ஆனால் அவருடைய மனம் தெய்வ வழிபாட்டிலேயே பதிந்திருந்தது. மாடுகள் பக்கத்தவர் வயலில் அத்து மீறிச் சென்றன. நானக் சோம்பேறியாக இருப்பதைக் காலு கண்டித்தார். நானக், ''நான் சோம்பேறியல்ல; என்

சொந்த வயல்களைப் பாதுகாப்பதில் நான் மிகவும் வேலையாக இருக்கின்றேன்'' என்று கூறினார். காலு, ''உன் வயல்கள் எங்கே இருக்கின்றன?'' என்று கேட்டார். நானக், ''என் உடம்பு ஒரு வயல், மனம், உழுபவன்; தருமம், விளையும் பயிர்; கண்ணியம், நீர்ப்பாசனம்; இறைவனுடைய புனித நாமத்தை விதையாக விதைத்துள்ளேன். திருப்தியே பரம்படித்தல்; பணிவே, வேலி; அன்பாலும் பக்தியாலும் விதை முளைத்து நல்ல பயிராக வளரும்; இத்தகைய பயிரை வளர்க்கும் குடும்பம் அதிர்ஷ்டம் உள்ளது: ஐயா, செல்வம் நம்மைத் தொடர்ந்து அடுத்த உலகத்திற்கு வராது, உலகம் முழுவதும் அதன் மோகத்தில் சிக்குண்டு கிடக்கிறது; எனினும், அதன் மயக்கும் இயல்பை அறிந்து கொண்டவர்கள் சிலர் உள்ளனர்'.' என்று விடை தந்தார்.

பின்னர் காலு, அவருக்கு ஒரு சிறிய கடை வைத்துக் கொடுத்தார். நானக், பொருள்களை எல்லாம் சாதுக்களுக்கும், ஏழை மக்களுக்கும் வழங்கி விட்டார். வீட்டிலும் கடையிலும் தம் கைக்கு அகப்படும் பொருள்களை எல்லாம் தருமம் செய்து விடுவார். நானக், ''என் கடை காலத்தாலும் இடத்தாலும் ஆனது. உண்மை, தன்னடக்கம் என்ற பொருள்கள் அங்கு நிரம்பியுள்ளன, சாதுக்களும் மகாத்மாக்களும் ஆகிய உன் வாடிக்கையாளர்களுடன் நான் வாணிகம் செய்கிறேன்; அவர்களுடைய தொடர்பினால் நான் உண்மையில் மிகுந்த இலாபம் பெற்று வருகின்றேன்'' என்று கூறினார்.

நானக் பதினைந்து வயது அடைந்தபோது, தந்தை அவரிடம் இருபது ரூபாயைத் தந்து, ''நானக்! கடைத் தெருவுக்குச் சென்று இலாபம் தரக்கூடிய பொருளை வாங்கிக்கொண்டு வா'' என்று சொல்லி அனுப்பினார். பாலன் என்ற பணியாளையும் உடன் செல்லுமாறு அனுப்பினார். நானக்கும் பாலனும் தால்வண்டியிலிருந்து இருபதுமைல் தொலைவில் உள்ள சுஹர்கானா என்ற ஊரை

அடைந்தனர். நானக் பக்கிரிகளின் கூட்டத்தைச் சந்தித்தார். அவர் தமக்குள், ''இந்தப் பக்கிரிகளுக்கு இப்போது விருந்து படைப்பேன். இதுவே மிகுந்த இலாபத்தைத் தரக்கூடிய வியாபாரம்'' என்று கருதினார். உடனே உணவுக்கு வேண்டிய பலசரக்குப் பொருள்களை எல்லாம் வாங்கிச் சமைத்து அவர்கள் வயிறுர உண்ணுமாறு விருந்து படைத்தார். பிறகு அவர் வீட்டுக்குத் திரும்பி வந்தார். புதல்வர் செய்த வியாபாரத்தைப் பற்றி எஜமானரிடம் பணியாள் தெரிவித்தான். காலு மிகவும் கோபம் அடைந்தார். நானக்கின் கன்னத்தில் அவர் ஓர் அறை விட்டார்.

நானக், உடல் உழைப்பில்லாத வேலையை விரும்பவில்லை என்று தந்தை நினைத்தார்.. ஆதலால் அவர் நானக்கிடம், ''அன்புள்ள மகனே! குதிரையின் மீது சவாரி செய்து பயணத் தொழிலைச் செய். அது உனக்கு இனிமையாகவும் பொருத்தமாகவும் இருக்கும்'' என்று கூறினார். நானக், ''வணக்கத்திற்குரிய தந்தையே! தெய்வீக அறிவே எனது வாணிகம் என் பணப்பையில் நிறையும் இலாபங்கள், நற்செயல்களே! அவற்றால் நான் நிச்சயம் இறைவனுடைய உலகத்தை அடைவேன்'' என்று விடை தந்தார்.

பின்னர் காலு சந்த், நானக்கிடம், ''சொந்த உத்தியோகமோ அல்லது வாணிகமோ செய்ய நீ விரும்பவில்லை என்றால், ஏதேனும் ஓர் அலுவலகத்தில் பணிசெய்'' என்று கூறினார். நானக், ''நான் ஏற்கனவே இறைவனுக்குப் பணியாளாக இருக்கின்றேன். இறைவனுக்குரிய பணிவிடையில் நான் எனது கடமையை நேர்மையாகவும் இதய பூர்வமாகவும் செய்து வருகின்றேன். தடையில்லாமல் அவருடைய கட்டளைகளை நான் நிறைவேற்றி வருகின்றேன். அயராமல், இடைவிடாமல் இறைவனுக்குப் பணி செய்வதனால் அவனது கருணையைப் பரிசாகப் பெற நான் மிகுந்த ஆசையுடன் விரும்புகின்றேன்'' என்று கூறினார். இதைக் கேட்ட தந்தை செயலற்றுப்போய் எதுவும் மேற்கொண்டு பேசவில்லை.

# நானக்கின் திருமணம்

குருநானக்கின் ஒரே தங்கையின் பெயர் நானகி. நவாப் தௌலத்கான் லோடி என்பவரிடம் திவானக இருந்த ஜெய்ராம் என்பவருக்கு அவளை மணம் முடித்துத் தந்தனர். அப்போது டெல்லி அரசராக இருந்த சுல்தான் பஹ்லோல் என்பவருக்கு லோடி உறவினர். கபூர்த்தலாவுக்கு அருகில் சுல்தான்பூர் என்ற ஊரில் நவாப்புக்கு இடப்பரப்பு மிகுந்த ஒரு ஜாகீர் இருந்தது. தங்கையின் மணம் முடிந்தவுடனே நானக்கின் திருமணமும் நடைபெற்றது. அவருடைய மனைவி சுலகானி, குர்தாஸ்பூர் மாவட்டத்தில் பாடாலா என்ற ஊரில் வாழ்ந்த மூவரின் மகள். திருமணமும், இரு குழந்தை களின் பிறப்பும், எந்த வழியிலும் அவருடைய ஆன்மீகப் பயணங்களை நிறுத்தவில்லை. அதன் பின்னரும் கூட அவர் தியானம் செய்வதற்காகக் காடுகளுக்கும் தனிமையான இடங்களுக்கும் சென்றார்.

நானகியும் ஜெய்ராமும் நானக்கினிடத்தில் அன்பும், மரியாதையும் செலுத்தினர். தால்வண்டியின் ஜமீந்தாராகிய ராய் பூலரும் நானக்கினிடம் பெரும் நன்மதிப்பு வைத்திருந் தார். ராய் பூலரும், ஜெய்ராமும் நானக்கைச் சுல்தான் பூரில் ஏதேனும் பணியில் அமர்த்தவேண்டும் என்று நினைத் தார்கள். ஜெய்ராம் நானக்கை நவாப்பினிடம் அழைத்துச் சென்றார். நவாப், நானக்கைத் தம் சரக்கு அறையின் பொறுப்பாளராக நியமித்தார். மிகவும் திருப்திகரமாக நானக் தம் கடமைகளைச் செய்து வந்தார். ஒவ்வொருவரும் அவருடைய பணியால் மகிழ்வுற்றனர். அக்காலத்தில் ஊதியம் பண்டங்களாகத் தரப்பட்டது; ஆதலால் நானக் பலசரக்குகள் பெற்றார். அவர் ஒரு சிறிய அளவைத் தம் வாழ்க்கைக்காகப் பயன்படுத்திக் கொண்டு எஞ்சிய பெரும் அளவில் இருந்த பொருள்களை எல்லாம் ஏழை மக்களுக்கு வழங்கினர்.

நானக் இருபுதல்வர்களைப் பெற்றார்; ஸ்ரீ சந்த் கி. பி. 1494ல் பிறந்தான்; லக்ஷ்மி சந்த் கி. பி. 1497ல் பிறந்தான்.

ஸ்ரீ சந்த் வளர்ந்தபின் உலக வாழ்வைத் துறந்து உதாசிகள் என்று அழைக்கப்படும் துறவியர் வகுப்பை நிறுவினார். உதாசிகள் நீண்ட தாடியும் நீண்ட தலைமுடியும் வளர்க்கிறார்கள். உடம்பின் எந்தப் பகுதியிலும் சவரக்கத்தி படக்கூடாதென்று கடுமையாகத் தடைசெய்யப்பட்டுள்ளது. லக்ஷ்மி சந்த் வளர்ந்த பின் உலகியல் வாழ்வை மேற்கொண்டார். அவர் திருமணம் செய்து கொண்டு இரு புதல்வர்களைப் பெற்றார்.

நானக், தாம் பணிசெய்வதைத் தவிர்த்துச் சரக்குகளை எல்லாம் ஏழை மக்கட்கு வழங்கி விட்டார். அவர் காட்டில் வாழ்ந்தார்; பக்கிரிக்கு உரிய ஆடையை உடுத்தினார். கடுமையான விரதங்களையும் ஆழ்ந்த தியானத்தையும் பயின்றார். மனத்தில் பக்தியுணர்வைத் தூண்டும் பாடல்களைப் பாடினார். சீக்கியரின் மதநூலாகிய ''ஆதி கிரந்த்'' என்ற நூலில் இப்பாடல்கள் தொகுக்கப்பட்டுப் பாதுகாத்து வைக்கப்பட்டுள்ளன.

மர்த்தனா என்ற பாடகர் தால்வண்டியிலிருந்து வந்து நானக்கின் பணியாளனாகவும், நம்பிக்கைக்குரிய சீடராகவும் ஆனார். நானக் பாடல்களைப் பாடும்போது மர்த்தனா நானக்குடன் சேர்ந்து கொண்டு தம்பூராவை மீட்டுவார். மர்த்தனா தேர்ச்சி பெற்ற பாடகர். அவர் நானக்கின் பாடல்களை எப்போதும் தம்பூராவை இசைத்துக் கொண்டு பாடுவார். நானக் தம் முப்பத்து நான்காம் வயதில் பொது மக்களுக்கு உபதேசம் செய்பவரானார். தம்முடைய இயக்கத்தை அவர் பரப்பத் தொடங்கினார். பொது மக்களின் மனங்களில் அவருடைய உபதேசம் ஆழப் பதிந்தது. அவர் சுல்தான்பூரைவிட்டுப் புறப்பட்டு வட இந்தியாவில் பயணம் செய்தார்.

தால்வண்டியின் ஜமீந்தார்ஆகிய ராய்பூலர் மிகவும் முதுமை அடைந்தார். அவர் நானக்கைப் பார்க்க விரும்பி அவரிடம் ஒரு தூதுவனை அனுப்பினார். நானக் உடனே தால்வண்டிக்கு, வந்து ராய்பூலரையும் தம் பெற்றோர்களையும்,

உறவினர்களையும் சந்தித்தார். அவருடைய உறவினர்கள் அனைவரும் அவருக்குத் தங்கள் உறவுத் தொடர்பினை எடுத்துச் சொல்லித் தம் இயக்கத்தைக் கைவிட்டுவிட்டு வீட்டுக்கு வந்து வசதியாகத் தங்கியிருக்குமாறு அவரை வற்புறுத்தினார்கள். நானக், ''மன்னிக்கும் குணமே, என் தாய்; மன நிறைவே, என் தந்தை; உண்மையே, என் சிற்றப்பா; அன்பே, என் தம்பி; பரிவே, என் ஒன்றுவிட்ட சகோதரன்; பொறுமையே, என் மகன்; அமைதியே, நிலையாக என்னுடன் இருக்கும் வேலைக்காரி; விவேகமே, என் ஏவற் பெண். இவ்வாறு என்னோடு நிலையாக இருக்கும் என் துணைவர்களாகிய இவர்களால்தான் என் முழுக் குடும்பமும் அமைந்துள்ளது. அகில உலகையும் படைத்த ஒரே கடவுள்தான் உண்டு; அவரே என் எஜமானர். அவரைப் புறக்கணிப்பவன் பிறப்பு, இறப்பு என்னும் சக்கரத்தில் அகப்பட்டுக் கொண்டு பல்வேறு வழிகளிலும் துன்புறுவான்'' என்று கூறினார்.

குருநானக், பாபரிடம் மிகுந்த செல்வாக்குள்ளவர். பாபர், குருநானக்கிடம் மிகுந்த நன்மதிப்பை வைத்திருந்தார். பாபர், நானக் மகிழ்வாரென்று கருதி விலையுயர்ந்த பரிசுகளை வழங்கினார். நானக் அவற்றை மறுத்துவிட்டதுடன் எமினாபாத் என்ற இடத்தில் அடைத்து வைக்கப் பட்டிருந்த சிறைக் கைதிகளை விடுவித்து அவர்களுக்குரிய சொத்துக்களையும் அவர்களுக்கு திருப்பித் தருமாறு கேட்டுக் கொண்டார். பாபர் உடனே நானக்கின் விருப்பங்களை நிறைவேற்றிவிட்டுத் தமக்குச் சில சமய போதனைகளை உபதேசிக்குமாறு வேண்டினார். குருநானக், ''கடவுளை வணங்கு. அவருடைய நாமத்தை உச்சரி. சூதாட்டம் ஆடுவதையும், மதுவைப் பருகுவதையும் விட்டுவிடு. நேர்மையாக இரு. ஞானிகட்கும், பக்திமான்கட்கும் மரியாதை செலுத்து. அனைவரிடமும் அன்பாக இரு. போரில் தோற்றவர்களிடம் இரக்கம் பாராட்டு'' என்று அறிவுரை கூறினார்.

## குருநானக்கின் தவமும், தியானமும்

இறைவனை விரைவில் உணர்ந்து கொள்ள விரும்பி நானக் தீவிரமாகத் தியானம் செய்தார். அவர் எப்போதும் தியானத்தில் ஆழ்ந்த பாவத்துடன் இருந்தார். தம் உடலைப் பற்றி அவர் கவலைப்படவில்லை. அவர் கடுமையான நோயால் வருந்துவதாகக் கருதிய பெற்றோர் ஒரு வைத்தியரை வரவழைத்தார்கள். நானக், வைத்தியரிடம், ''என்னுடைய நோயை ஆராய்ந்து தகுந்த மருந்தைத் தருவதற்காக நீங்கள் வந்திருக்கிறீர்கள். என்னுடைய கையைப் பிடித்து நாடியைப் பரிசோதியுங்கள். பரிதாபத்துக்குரிய அறிவில்லாத வைத்தியரே! நோய், என் மனத்தில் உள்ளது என்பதை நீங்கள் அறியமாட்டீர்கள். வைத்தியரே! நீங்கள் உங்கள் வீட்டுக்குத் திரும்பிச் செல்லுங்கள். நான் கடவுள் போதை மிகுந்திருக்கின்றேன். உங்கள் மருந்து எனக்குச் சிறிதும் பயன்படாது. சிலர் என் நோயை அறிவர். நோய் தந்த இறைவனே இதைக் குணப்படுத்துவான். இறைவனைப் பிரிந்திருப்பதுதான் எனக்கு நோயாக இருக்கின்றது. மரணத்தால் ஏற்படக்கூடிய வருத்தத்தை நான் உணருகின்றேன். அறிவில்லாத வைத்தியரே! எனக்கு மருந்து எதுவும் தர வேண்டாம். இந்த நோயால் என் உடம்பு அழியும் என்று உணருகின்றேன். இறைவனை மறந்து புலனின்பங்களில் நான் ஈடுபட்டேன். அதன் பிறகே இந்த நோய் எனக்கு வந்தது. மூட நெஞ்சு தண்டிக்கப்படுகிறது. இறைவனுடைய திருப்பெயரைச் சிறிதேனும் உச்சரிக்கும் மனிதனுடைய உடல் தங்கம்போல் ஒளி வீசும்; அவனுடைய மனம் தூய்மை பெறுகின்றது. அவனுடைய நோய், துன்பம் ஆகிய யாவும் உடனே நீங்குகின்றன. இறைவனுடைய உண்மைத் திருநாமம் நானக்கைக் காப்பாற்றும். வைத்தியரே! உங்கள் வீட்டுக்குத் திரும்பிச் செல்லுங்கள். என்னுடைய சாபம் உங்களுக்கு வேண்டாம். என்னை இப்போது தனியே இருக்கவிடுங்கள்'' என்று கூறினார்.

நானக் சில நாட்கள் உணவையும், தண்ணீரையும் தவிர்த்தார். தெய்வீக நினைவில் அவர் முழுவதும் லயித்திருந்தார். அவர் நிறைவான மௌனத்தைக் கடைப்பிடித்தார். சேர்ந்தாற்போல் பல நாட்கள் வரையில் அவர் காட்டுக்குள் தம்மை மறைத்துக் கொள்வார்.

## குருநானக் சென்ற இடங்கள்

நானக் இவ்வுலகில் எழுபதாண்டுகள் வாழ்ந்தார். அவர் இடம் விட்டு இடம் சென்றார். குஜ்ரன்வாலா மாவட்டத்தில் உள்ள சயித்பூர் என்ற ஊருக்குச் சென்றார். பின்னர் குருக்ஷேத்திரம், ஹரித்வாரம், பிருந்தாவனம், காசி, ஆக்ரா, கான்பூர், அயோத்தியா, பிரயாகை, பாட்னா, ராஜகிருகம், கயை, பூரி ஆகிய இடங்களுக்குச் சென்றார். இந்தியா முழுவதும் அவர் பயணம் செய்தார், அவர் நான்கு நீண்ட பயணங்கள் செய்தார். அவர் இலங்கை, பர்மா, மெக்கா, மதீனா ஆகிய இடங்களுக்கும் சென்றார். அவர் வங்கம், தக்காணம், இலங்கை, பர்மா, துருக்கி, அரேபியா, பாக்தாத், காபூல், காந்தாரம், சையாம் ஆகிய இடங்களுக்கும் பயணம் செய்தார். அவர் பண்டிதர்களுடனும் முகம்மதியப் பக்கிரிகளுடனும் வாக்கு வாதங்கள் செய்தார். அவர் கயை, ஹரித்வார் மற்றும் உள்ள யாத்திரைத் தலங்கள் ஆகிய இடங்களில் இருந்த பண்டாக்களுடனும் தர்க்கம் செய்தார். அவர் மக்கள் பலருடைய ஐயங்களையும், அறியாமை ஆகிய மேகங்களையும் விலக்கினார். பரோபகார உணர்வுடன், சகோதர அன்பு பாராட்டி அறநெறியில் வாழுமாறு அவர் மக்கள் அனைவருக்கும் கட்டளை இட்டார். அவர், ''இறைவனுடைய நாமத்தை நினையுங்கள். இறைவனிடம் பக்தி செலுத்துங்கள். ஒரே தெய்வத்தினிடம் பக்தியாக இருங்கள். உடன் வாழும் மக்களுக்கும் பணிவிடை செய்யுங்கள். இறைவனே யாவும் என்று வழிபடுங்கள். இறைவனை எப்போதும் புகழுங்கள்,

இறைவனோடு ஐக்கியமாகின்ற பேரின்பத்தை அடையுங்கள்'' என்று உபதேசம் செய்தார். அவர் மக்களின் மனங்களை மாற்றுவதிலும், அவர்களுடைய அன்பையும் நம்பிக்கையையும் பெறுவதிலும், அறநெறி, பக்தி ஆகிய மார்க்கத்தில் அவர்களைச் செலுத்துவதிலும் குறிப்பிடத்தக்க சிறந்த வெற்றியைப் பெற்றார். இந்துக்கள், முகம்மதியர் ஆகியோரிடையே ஒற்றுமையை ஏற்படுத்த அவர் தம்மால் இயன்ற அளவு முயன்றார்.

குருநானக் முல்தானுக்குப் புறப்பட்டார். ஓர் ஆற்றங்கரையில் தங்கினார். முல்தானில் எப்போதும் பக்கிரிகள் நிறைந்திருப்பார்கள். பிரகலாதன் முல்தானில் பிறந்தான். ஷம்ஸ்டெப்ரீஸ், மன்சூர் ஆகியோரும் அங்கு வாழ்ந்தனர். குருநானக் முல்தானுக்கு வந்துள்ளார் என்று பீர்கள் அறிந்தனர். அவர்கள் அவருக்கு ஒரு கிண்ணத்தில் நிரம்பித் ததும்புமாறு பால் அனுப்பினார்கள். நானக் கிண்ணத்தினுள் சிறிய சர்க்கரைக் கட்டிகளை இட்டு, அதன் மேற்பரப்பில் ஒரு பூவை வைத்து அக்கிண்ணத்தைத் திருப்பி அனுப்பினார். பால் போன்ற பொருளைத் திருப்பி அனுப்பக்கூடாதென்றும் அதைப் பருக வேண்டும் என்றும் மர்த்தனா தம் எஜமானரிடம் தெரிவித்தார். குருநானக், ''மர்த்தனா, இதோ பார் நீ அறிவில்லாதவன். பீர்கள் ஒரு தந்திரம் செய்துள்ளார்கள். அவர்கள் இந்தப் பாலை நான் பயன்படுத்த வேண்டும் என்று அனுப்பவில்லை. இதன் பின்னால் ஓர் ஆழ்ந்த தத்துவம் இருக்கின்றது. அதில் ஆழ்ந்த உட்கருத்து இருக்கின்றது. கருத்து என்னவென்றால், முல்தான் ஏற்கனவே 'பீர்களாலும், பக்கிரிகளாலும், 'கிண்ணத்தின் விளிம்பு வரை பால் நிரப்பியிருப்பதுபோல நிறைந்திருக்கின்றது; எனவே இன்னொரு மத குருவுக்கு இங்கே இடம் இல்லை என்பதாகும். நான் அதையே விடையாகத் திருப்பி அனுப்பினேன். எனது விடை என்னவெனில், பாலில் சர்க்கரை கலந்திருப்பது போல நானும் அவர்களுடன் கலந்திருப்பேன்; பாலின் மீது மிதக்கும் பூவைப்போல நான் அவர்களிடையே மேலோங்கி

விளங்குவேன் என்பதாகும்'' என்று விளக்கினர். பிறகு பீர்களும், பக்கிரிகளும் குருநானக்கைச் சந்திக்க வந்தார்கள். நானக் ஒரு பாடலைப் பாடினர். அகந்தையும் தற்பெருமையும் உள்ள பீர்கள் இப்போது நல்லறிவு பெற்றனர்கள். அவர்கள் மிகவும் பணிவுடன் காணப்பட்டனர். அவர்கள் குருநானக்கினிடம், ''வணங்கத்தக்க குருவே! எங்களை மன்னியுங்கள். நாங்கள் உண்மையில் தற்பெருமை கொண்டிருந்தோம். அருள்கூர்ந்து எங்களுக்கு ஆன்மீக உபதேசங்களை வழங்கி எங்களை ஆசீர்வதியுங்கள்'' என்று வேண்டினர்கள். குரு நானக் அவர்களுக்கு உபதேசங்களையும் நல்லாசிகளையும் வழங்கினர்.

## இரண்டு அற்புதங்கள்

நானக் மெக்காவைத் தரிசித்ததன் தொடர்பாகக் குறிப்பிடத்தக்க ஒரு நிகழ்ச்சி உள்ளது. மெக்காவில் நானக் கபாவின் எதிரே தம் கால்களை நீட்டியவாறு உறங்கிக் கொண்டிருந்தார். முகம்மதியர்கள் தொழுகை செய்யும் போது கபாவின் எதிரே நிலத்தில் வீழ்ந்து வணங்குவார்கள். காஜி ருக்கானுதீன் நானக்கைப் பார்த்துச் சினத்துடன், ''மத விரோதியே! இறைவன் எதிரே கால்களைத் திருப்பிக் கொண்டு மசூதியில் அவமரியாதை செய்ய உனக்கு இவ்வளவு துணிச்சல் இருக்கிறதா?'' என்று மிரட்டியவாறு நானக்கை உதைத்தார். நானக் அமைதியாக, ''எனக்கு மிகவும் களைப்பாக இருக்கிறது; இறைவன் இல்லாத ஏதாவது ஒரு திசையில் நீங்களே என் கால்களைத் திருப்பி விடுங்கள்'' என்று கூறினர். காஜி ருக்கானுதீன் சினத்துடன் அவருடைய கால்களைப் பிடித்து நேர் எதிர்த்திசையில் திருப்பித் தள்ளினர். மசூதியும் கூடவே திரும்பலாயிற்று. காஜி மிகவும் ஆச்சரியம் அடைந்தார். பிறகு அவர் குருநானக்கின் பெருமையை உணர்ந்து ஏற்றுக்கொண்டார்.

குருநானக் கி. பி. 1520ல் வடமேற்கு மாகாணத்தில் உள்ள கட்டாக் மாவட்டத்தைச் சேர்ந்த ஹாசன் அம்தால் என்ற இடத்தைச் தரிசித்தார். அவர் மலையடிவாரத்தில் ஓர் அரச மரத்தின் அடியில் அமர்ந்தார். மலையின் உச்சியில் வாலிகுவான்தாரி என்ற முகம்மதிய ஞானி வாழ்ந்து வந்தார். அப்போது மலை உச்சியில் ஒரு நீர் ஊற்று இருந்தது. மர்த்தானு ஊற்றிலிருந்து தண்ணீர் பெறுவது வழக்கம். குருநானக் குறுகிய காலத்தில் மிகவும் புகழ் பெற்று விட்டார். முகம்மதிய ஞானிக்கு இதனால் பொறாமை உண்டாயிற்று. ஊற்றிலிருந்து தண்ணீர் பெறக் கூடாது என்று அவர் மர்த்தானுவுக்குத் தடை விதித்தார். முகம்மதிய ஞானியின் செயலை மர்த்தானு குருநானக்கினிடம் தெரிவித்தார். குருநானக், ''மர்த்தானு! அஞ்சாதே! இறைவன் விரைவில் நமக்குத் தண்ணீர் கீழே அனுப்புவார்'' என்று கூறினார். மலை உச்சியில் இருந்த ஊற்று விரைவில் வறண்டு போயிற்று. மலையடிவாரத்தில் குருநானக் தங்கியிருந்த இடத்தில் நீர் ஊற்று தோன்றிற்று. ஞானி மிகவும் சினம் அடைந்தார். நானக் அமர்ந்திருந்த இடத்தில் விழுமாறு அவர் ஒரு பெரிய பாறையை உருட்டி விட்டார். குருநானக் அதைத் திறந்த தம் உள்ளங்கையால் தடுத்துவிட்டார். பாறையில் அவர் வைத்த கையின் பதிவு இன்னும் உள்ளது. பிறகு ஞானி குருவினிடம் வந்து காலடிகளில் பணிந்து மன்னிக்குமாறு வேண்டினார். குருநானக் புன்முறுவல் பூத்து அகம் பாவம் பிடித்த ஞானியை மன்னித்தார். ஊற்றின் அருகில் இப்போது அழகான கோயில் ஒன்று உள்ளது. அது, ''புஞ்ஜா சாஹிப்'' என்று அழைக்கப்படுகிறது.

## குருநானக்கின் போதனைகள்

குருநானக், இறைவனுடைய திருநாமத்தை ஸ்மரித்தல் அல்லது நினைத்தலை மூச்சுவிடும் ஒரே ஒரு நிமிட நேரத்திற்குத் தள்ளிப் போடுவதுகூட ஒழுங்கன்று என்று உணர்ந்தார்; ஏனெனில் வெளியே விட்ட மூச்சு

மீண்டும் திரும்புமா அல்லது திரும்பாதா என்று யாரும் சொல்ல முடியாது, என்று கூறுகின்ருர். மேலும் அவர், ''நாம் ஒரு மூச்சு நேரம் மட்டுமே உள்ள மனிதர்கள். அதைக் காட்டிலும் நீண்ட கால வரையறையை நான் அறியேன்'' என்றும் கூறுகின்ருர். உள்ளிழுக்கும் மூச்சின் போதும், வெளிவிடும் மூச்சின் போதும் இறைவனுடைய திருநாமத்தை நினைக்கின்ற உண்மையான ஞானி தாம் மட்டுமே என்று அவர் தம்மைப்பற்றிக் கூறுகின்ருர். இந்த இலட்சியம் நடைமுறைக்கு உகந்தது. ஒவ்வொரு வரும் செய்யக் கூடியது. இனியும் காலம் தாழ்த்தாமல் உடனே இப்பயிற்சியைத் தொடங்குமாறு அவர் மக்களுக்கு அறிவிக்கின்ருர். இக்குறிக்கோளை அடையச் செல்பவரின் முன்னேற்றத்தைத் தடுக்கக்கூடிய, இனம், வகுப்பு, சாதி, சமயம் அல்லது நிறம் முதலிய தடைகள் எவையும் இல்லை என்றும் அவர் கூறுகின்ருர். சமயங்களின் சகோதரத்துவம் என்றும் மிகப் பெரும் உண்மையை அவர் உணர்ந்தார். அகில உலக மனித சகோதரத்துவத்தையும், தெய்வத்தின் தந்தையாம் தன்மையையும் அவர் மக்கள் அனைவருக்கும் உபதேசித்தார்.

குருநானக் ஒரு சீர்திருத்தவாதி. சமூகத்தில் நிலவிய ஊழல்களை அவர் கண்டித்தார். வைதிக நடைமுறைகளையும் சடங்குகளையும் அவர் வன்மையாக எதிர்த்தார். ஒவ்வொரு வரிடமும் பாராட்டும் அன்பையும் அமைதியையும் தம் முடைய செய்திகளாக அவர் பரப்பினுர். தம் கொள்கை களில் அவர் பரந்த மனப்பான்மையுடன் காணப்பட்டார். சாதி பற்றிய விதிகளை அவர் பின்பற்றவில்லை. மக்களின் மூட நம்பிக்கைகளை நீக்க அவர் முடிந்த வரையில் முயன்ருர். தூய்மை, நீதி, நன்மை, இறைவனிடம் பக்தி ஆகியவற்றை அவர் உபதேசித்தார். மக்களிடையே நிலவிய ஒழுக்கக் கேட்டினை நீக்கவும், உண்மையான சமய நம்பிக்கை, தெய்வ நம்பிக்கை, இறை வழிபாட்டில் உண்மையான ஆர்வம் ஆகியவற்றை ஊட்டவும் அவர் அரும்பாடுபட்டார். மனித உள்ளத்தை இறைவனேடு பிணைக்கும் ஒரு கருவியாக

அவர், இசையுடன், இறைவனுடைய புகழைப் பாடும் நெறியைப் புகுத்தினர். தாம் பாடும்போது தம்பூராவை உடன் மீட்டுவதற்காக அவர் மர்த்தனைவைத் தாம் செல்லும் இடங்களுக்கெல்லாம் அழைத்துச் சென்ருர். அவர், ''இறைவனுக்குப் பணிவிடை செய். மனித சமுதாயத்துக்குச் சேவை செய். மனித சமுதாயச் சேவையால் தான் நாம் தேவலோகத்தில் நமக்காக ஓர் இடத்தைப் பெற முடியும்'' என்று கூறினர். குருநானக் தாய்க்குலத்தின்பால் பெரும் மரியாதை பாராட்டி வந்தார். பெண்கள் சமயக் குழுக்களிலும், சமயப் பெருங்கூட்டங்களில் சேரவும், இறைவனுடைய புகழ்களைப் பாடவும், அவர் அனுமதி தந்தார். சமய விழாக்களில் பெண்களுக்குரிய முழுப் பங்கையும் அவர் வழங்கினர்.

குருநானக், ''இறைவனுடைய பேரின்ப வீட்டுக்குச் செல்லும் பாதை மிகவும் நீண்டது; கடினமானது. செல்வந்தர்கள் செல்வதற்காகக் குறுக்கு வழி எதுவும் இல்லை. ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுங்கு முறை ஒன்றே. சமூக சேவை செய்வதாலும், இறைவனுடைய திருப்பெயரை நினைப்பதாலும் ஒவ்வொரும் தத்தம் மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். மனக் கசப்படையாமல், முணுமுணுக்காமல் ஒவ்வொருவரும் இறைவனுடைய விருப்பத்திற்கேற்றவாறு வாழ வேண்டும். இறைவனைக் காணும் வழி யாது? அதற்கு ஒரே வழிதான் உள்ளது. இறைவனுடைய விருப்பத்தை உன் விருப்பமாக ஆக்கிக்கொள். அந்தம் இல்லா இறைவனுடன் ஒத்துச் செல். இதைத் தவிர வேறு வழியே இல்லை'' என்று தெளிவாகக் கூறுகின்ருர். இறைவனுடைய விருப்பத்தைத் தம் விருப்பமாக ஆக்கிக்கொள்வதற்கான முதல் படி நிலையை, இறைவனுடைய கருணை அல்லது பரிவை வேண்டித் தொழுவதனல் அடையலாம். குரு பிரசாதத்தை வழிபடுவதனல் பெறலாம். குரு நானக், வழிபாட்டுக்கு மிகப் பெரும் முக்கியத்துவம் தருகின்ருர். இறைவனுடய கருணை இல்லையேல் மனிதன் எதையும்

அடைய முடியாது என்று அவர் கூறுகின்றார். அவர், ''மிகுந்த பணிவுடன் இறைவனை அணுகு. இறைவனுடைய கருணையை முற்றிலும் சார்ந்திரு. தற்பெருமை, ஆடம்பரம் அகந்தை ஆகியவற்றை விட்டுவிடு. இறைவனுடைய அன்பையும் பரிவையும் யாசிப்பாயாக. உன்னுடைய சொந்த தகுதிகளையும், வல்லமைகளையும், அறிவுகளையும், ஆற்றல் களையும் பற்றி நினைக்காதே. இறைவனுடைய அன்பைப் பெறவும், அவனுடன் இரண்டறக் கலக்கவும் நீ மேற் கொள்ளும் பயணத்தில் இறக்க நேர்ந்தாலும் அதற்குத் தயாராக இரு. மனைவி தன் கணவனை நேசிப்பதைப்போலக் கடவுளை நேசிப்பாயாக. நிபந்தனையின்றி முற்றிலும் சரணு கதி அடைவாயாக. தெய்வீகப் பரிவையும் அன்பையும் நீ பெறுவாய்'' என்று கூறுகின்றார்.

நானக், அழகாகப் புனைந்து பாடிய ஆன்மீகப் பாடல் கள் 'ஜப்ஜீ' என்ற நூலில் அடங்கியுள்ளன. பொழுது புலர்ந்ததும் ஒவ்வொரு சீக்கியரும் அதைப் பாடுகின்றனர். 'சோஹிதர்' என்ற நூலில் மாலை நேர வழிபாடுகள் அடங்கி யுள்ளன. 'ஜப்ஜீ' யில் குருநானக், நிலையான பேரின்பவீடு அல்லது முடிவாகத் தங்கி இருக்கும் இடத்தை அடையும் பயணத்தில் மனிதன் கடந்துசெல்ல வேண்டிய படிநிலை களைப்பற்றித் தெளிவாகவும் சுருக்கமாகவும் விளக்கம் தந்துள்ளார். அவ்வழியில் ஐந்து காண்டங்கள் அல்லது படிநிலைகள் உள்ளன. முதல் நிலை தர்ம காண்டம் அல்லது கடமை மண்டலம் ஆகும். ஒவ்வொருவரும் இக்கடமையை ஒழுங்காகச் செய்யவேண்டும். ஒவ்வொருவரும் அறநெறி யில் நடக்கவேண்டும். ஒவ்வொருவரும் அவரவர் செயல் களுக்கு ஏற்ப நீதி வழங்கப்படுவார்.

அடுத்த நிலை, ஞான காண்டம்; அங்கு தெய்வீக அறிவின் உயிர்நாடி ஆட்சி செலுத்துகின்றது. சாதகர் தம் கடமையை ஆழ்ந்த நம்பிக்கையோடும் நேர்மையோடும் செய் கின்றார். தம் கடமையைச் சரியான முறையில் செய்வதனால் தான் பேரின்ப வீட்டை அல்லது வாழ்க்கையின் குறிக்

கோளை அடைய முடியும் என்ற அறிவு இப்போது அவருக்கு ஏற்படுகின்றது.

மூன்றாவது நிலை சரம காண்டம். இது பரவச மண்டலம். இங்கு ஆன்மீகப் பெருமகிழ்ச்சி நிலவுகின்றது. இது அழகாக இருக்கின்றது. தருமம் மனிதனுடைய இயற்கையின் ஒரு பகுதியாக ஆகிவிட்டது. அது உயிருடன் ஊறிப்போன ஒரு பழக்கமாகி விட்டது. இனிமேல் அது கடமை என்ற வெறும் பொருளோ அல்லது அறிவோ அல்ல.

நான்காம் நிலை 'கரம காண்டம்' அல்லது சக்தி மண்டலம். சக்தியின் தெய்வம் இம் மண்டலத்தில் ஆட்சி செய்கின்றது. சாதகர் சக்தி பெறுகின்றார். அவர் வலிமை மிகுந்த வீரர் ஆகின்றார். அவர் யாராலும் வெல்லப்பட முடியாதவர். மரண பயம் மறைந்து விடுகின்றது.

ஐந்தாவது அல்லது இறுதிநிலை 'சச் காண்டம்' அல்லது உண்மை மண்டலம். அருவமான நிலையில் இறைவன் இங்கு இருக்கின்றான். இங்கு சாதகர் இறைவனுடன் ஐக்கியமாகி விடுகின்றார். அவர் தெய்வத் தன்மை அடைந்துவிட்டார். அவர் தெய்வீக மாற்றம் பெற்றுவிட்டார். வாழ்வின் குறிக்கோளை அவர் அடைந்துவிட்டார். நிலையான வீட்டை அவர் கண்டுகொண்டார். ஆன்மாவின் கடினமான பயணம் இங்கு முடிவடைகின்றது.

குருநானக், ''அனைவருடனும் ஒன்றுபட்டுள்ள உன் ஒற்றுமையை உணர். இறைவனை நேசி, மனிதனுக்குள் இருக்கும் இறைவனை நேசி. இறைவனுடைய அன்பை பாடு. இறைவனுடைய திருப்பெயரை உச்சரி, இறைவனுடைய புகழைப்பாடு, தாமரைக்கொடி தண்ணீரையும்; சாதகப் பறவை மழை நீரையும்; மனைவி தன் கணவனையும் நேசிப்பது போல இறைவனை நேசி. இறையன்பைப் பேனாவாகவும் உன் இதயத்தை எழுதுபவனாகவும் கொள். இறைவனுடைய திருப்பெயரை உச்சரித்தால் நீ வாழ்வாய்; மறந்தால் நீ

சாவாய். இறைவனுக்காக உன் இதயத்தைத் திறந்துவை, இறைவனுடன் உரையாடு, இறைவனுடைய திருக்கைகளில் மூழ்கி அவனுடைய தழுவலே உணர்,'' என்று மீண்டும் மீண்டும் வற்புறுத்தியுள்ளார்.

அவர் தம்முடைய போதனைகளில் அழகிய சாரத்தைத் தம் பாடல் ஒன்றில் பின்வருமாறு தந்துள்ளார் :—

ஒவ்வொரு சமயத்தையும் சார்ந்த ஞானியரை நேசி,
உன் அகந்தையை அகற்று.
சமயத்தின் சாரம், பணிவும் இரக்கமும் என்று
நினைவில்கொள்.

அழகிய ஆடைகள் அல்ல.
யோகியின் மேலாடையும் சாம்பலும் அல்ல,
ஊது கொம்புகளின் முழக்கம் அல்ல,
மழித்த தலே அல்ல,
நீண்ட நேர வழிபாடல்ல
உச்சரித்தலும், உடம்பை ஒறுத்தலும் அல்ல,
துறவு மார்க்கம் அல்ல.
ஆனுல், உலகியல் மயக்கங்களினிடையே.
நன்மையும், தூய்மையும் உள்ள வாழ்க்கை வேண்டும்.

குருநானக்கைப் பின்பற்றுவோர்க்குக் குரு மந்திரம், ''வாஹே குரு'' என்பதாம். உச்சரிக்க வேண்டிய முக்கிய மான மற்ற மந்திரங்கள்! ''ஏக் ஓங்கார் சத்காம் கர்த்தா புர்க் நிர்பவ் நிர்வாயர், அகல்முரத் அஜூனி சவாய், பங், குர்பிரசாத் — இறைவன் ஒருவனே; அவன் பெயர், உண்மை. அவனே படைப்போன், அவன் அகில உலகம் முழுவதும் வியாபித்திருக்கின்முன். அவன் அச்சமற்றவன். அவனுக்குப் பகை இல்லே. அவன் அழிவற்றவன். அவனுக்குப் பிறப்பு இல்லே. அவன் தான் தோன்றி; தானுக என்றும் இருப்பவன். அவன் (அறியாமை) இருளேப் போக்கு கின்றவன்: அவன் கருணை நிரம்பியவன் இறைவன் நிலையானவன். அவன் ஆதியும், அந்தமும் இல்லாதவன்''.

## கிரந்த சாஹிப்

குருநானக், சமஸ்கிருத எழுத்துக்களை எளிமையாக்கிக் குருமுகி எழுத்துக்களைப் புதிதாகக் கண்டுபிடித்தார். சீக்கியரின் புனித 'கிரந்த்' குருமுகி எழுத்துக்களில் அமைந்துள்ளது. சீக்கியரும், சிந்தியரும் அதனைத் தொழுகின்றனர். ஒவ்வொரு 'குருத்வாரா'விலும் ஒரு 'கிரந்த் சாஹிப்' இருக்கின்றது. 'ஆதி கிரந்த்' என்று மக்கள் வழங்கும் புனித 'கிரந்த்,' முதல் ஐந்து குருமார்களின் பக்திப் பாடல்களைக் கொண்டுள்ளது. அப்பாடல்கள் யாவும் தொகுக்கப்பட்டு, வரிசைப்படுத்தப்பட்டு ஒரே தொகுதியாக உள்ள பெரும் நூலாக உருவாக்கப்பட்டது; இதன் பெயர் ''குரு கிரந்த் சாஹிப்'' இவ்வாறு செய்தவர் ஐந்தாம் குரு. சம காலத்தில் வாழ்ந்த பல்வேறு ஞானியரின் பக்திப் பாடல்களில் சிலவும் தேர்ந்தெடுக்கப்பட்டன. (கபீரும், மற்ற வைணவ ஞானியரும் பாடியவை). பிற்காலத்தில் பத்தாம் குருவினல், ஒன்பதாம் குருவின் பக்திப் பாடல்களும் சேகரிக்கப்பட்டன. குருநானக் பாடிய பாடல்கள் பெரும் அளவில் இடம் பெற்றுள்ளன.

'கிரந்த் சாஹிப்' பின்வருமாறு தொடர்கின்றது:— ''ஒரே இறைவன் உண்டு; அவன் பெயர் உண்மை—அவனே படைப்புக் கடவுள்''. அதில் உயர்ந்த நல்லொழுக்கங்களைப் பற்றிய விதிமுறை உள்ளது. மிகவும் வலியுறுத்தப்பட்டுள்ள நற்குணங்களில் சில:— வாழ்வில் தூய்மை, குருவுக்குக் கீழ்ப்படிதல், கருணை, அறம், பொறுமை, நீதி, ஒளிவு மறைவின்மை, வாய்மை, தியாகம், சேவை, அன்பு, புலால் உண்ணாமை முதலியன. கடுமையாகக் கண்டனம் செய்யப்பட்டுள்ள துர்க்குணங்கள்:— காமம், சினம், தற்பெருமை, பகைமை, அகம்பாவம், பேராசை, தன்னலம், கொடூரம், புறங்கூறல், பொய்மை என்பன.

## குரு நானக்கின் இறுதி நாட்கள்

நானக் தம் வாழ்வின் இறுதிக் காலத்தில் கர்த்தர்புரம் என்ற இடத்தில் குடியமர்ந்தார். அவருடைய குடும்பம்

முழுமையும் முதல் தடவையாக அங்கே வாழ்ந்தது. நானக்கின் குடும்பத்தார் வாழ்வதற்கான வீடுகளும், ஓர் அறச்சாலையும் கூடக் கட்டப்பட்டன. மர்த்தனுவும் அவருடன் வாழ்ந்தார். நாள்தோறும், குருநானக் இயற்றிய 'ஜப்ஜீ' என்ற காலை நேரப் பாடல்களும், 'சோஹிரா' என்ற மாலை நேரப் பாடல்களும் அவருடைய முன்னிலையில் பாடப் பட்டன. அவர் தம் அறுபத்தொன்பதாம் வயதில் கி. பி. 1538-ல் மறைந்தார். குருநானக்கை அடுத்து வந்தவர் குரு அங்கதர், ஏனைய குருமார்கள்:— குரு அமரதாசர், குரு இராமதாசர், குரு அர்ஜுன் தேவர், குரு ஹரிகோவிந்தர், குரு ஹரிராய், குரு ஹரிகிருஷ்ணர், குரு தேஜ்பகதூர், குரு கோவிந்த சிங் ஆகியோர்.

குருநானக்கின் நல்லாசிகள் நம் அனைவர் மேலும் பொழிவனவாக.

## 30. கோஸ்வாமி துளசிதாசர்

துளசிதாசர் ஐக்கிய மாநிலத்தில் பண்டா மாவட்டத் தில் உள்ள ராஜபுரம் என்ற ஊரில் கி. பி. 1532ல் பிறந்தார். அவர் பிறப்பில் சரயுபரிண அந்தணர்; வட மொழியில் இராமாயண காவியத்தை எழுதிய வால்மீகியின் அவதாரமாக அவர் மதிக்கப்படுகின்றார். அவருடைய தந்தையின் பெயர் ஆத்மாராம் சுக்ல துபே; தாயாரின் பெயர் அல்சி. தாம் பிறந்த நேரத்தில் அவர் அழவில்லை. முப்பத்திரண்டு பற்களும் நிறைவாக முளைத்த நிலையில் அவர் பிறந்தார். குழந்தைப் பருவத்தில் அவருக்கு வழங்கிய பெயர் துளசிராம் அல்லது ராம்போலர்.

அவருடைய மனைவியின் பெயர் புத்திமதி (இரத்தின வளி), அவருடைய மகனது பெயர் தாரகன். துளசிதாசர் தம் மனைவியினிடத்தில் மிகுந்த மோகங் கொண்டிருந்தார். மனைவியைப் பிரிந்து அவரால் ஒரு நாள் கூட இருக்க முடியாது. ஒரு நாள் அந்த அம்மையார் தம் கணவருக்குத் தெரிவிக்காமலே தம் பிறந்தகம் சென்றார். துளசிதாசர்

தம் மாமனுருடைய வீட்டுக்குத் தம் மனைவியைக் காண்ப தற்காக இரவில் திருட்டுத்தனமாகச் சென்றுர். இதனுல் புத்திமதிக்கு அவமான உணர்வு உண்டாயிற்று. அம்மையார் துளசிதாசரிடம் ''என் உடம்பு தசையாலும் எலும்பு களாலும் பின்னப்பட்டுள்ள ஒரு வலை. மலம் நிறைந்த என் உடம்பின் மீது நீங்கள் கொண்டுள்ள அன்பில் பாதி அளவா வது இராமபிரானிடத்தில் வளர்த்துக் கொண்டால், சம்சார சாகரத்தை நீங்கள் நிச்சயம் கடந்து அமரத்துவத்தையும் பேரின்பத்தையும் அடைவீர்கள்'' என்று கூறினுர். இச் சொற்கள் துளசிதாசருடைய இதயத்தை அம்புபோல் துளைத்துச் சென்றன. ஒரு கணம் கூட அவர் அங்கு தங்க வில்லை. அவர் வீட்டைத் துறந்து, துறவியாகிவிட்டார். யாத்திரைக்குரிய பல்வேறு புண்ணிய தலங்களுக்குப் பயணம் செய்வதில் அவர் பதினுன்கு ஆண்டுகளைக் கழித்தார்.

துளசிதாசர் காலைக் கடன்களை முடித்துக்கொண்டு திரும்பி வரும்போது பானையில் எஞ்சியிருக்கும் தண்ணீரை ஒரு மரத்தின் வேர்களில் வீசி ஊற்றுவது வழக்கம்; அந்த மரத்தில் ஓர் ஆவி குடியிருந்தது. அந்த ஆவிக்குத் துளசிதாசரிடத்தில் மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆவி அவரிடம் ''மனிதா! என்னிடம் ஒரு வரம் பெற்றுக்கொள்'' என்று கூறியது. துளசிதாசர், ''நான் இராமபிரானுடைய தரிசனத்தைப் பெற வேண்டும்'' என்று கூறினுர். ஆவி, ''அனுமன் கோயிலுக்குப் போ. அங்கு அனுமார், இராமாயணத்தைக் கேட்டு மகிழ்வதற்காக ஒரு தொழு நோயாளியின் வடிவில் அங்கு முதல் மனிதராக வந்து சேர்ந்து, முடிந்த பின் செல்லும் கடைசி மனிதராக இருப்பார், அவரைப் பிடித்துக்கொள். அவர் உனக்கு உதவிசெய்வார்'' என்று கூறியது. அவ்வாறே, துளசிதாசர் அனுமாரைச் சந்தித்து, அவருடைய கருணையால் இராம பிரானுடைய தரிசனம் அல்லது காட்சியைப் பெற்றுர்.

துளசிதாசர் பன்னிரண்டு நூல்களை எழுதினுர். மிகவும் புகழ்பெற்ற அவருடைய நூல் இந்தியில் எழுதப்பட்ட 'இராம சரித-மானஸ்' என்ற இராமாயணமாகும்.

அனுமாருடைய கட்டளைகளின் படி அவர் இந்த நூலை எழுதினார். வட இந்தியாவில் ஒவ்வோர் இந்துவினுடைய வீட்டிலும் இந்த இராமாயணம் மிகுந்த வணக்கத்துடன் ஓதப்பட்டு, வழிபாடு செய்யப்படுகிறது. அழகான எதுகையுடன் இனிய ஈரடிப் பாடல்களை அந் நூல் கொண்டுள்ளது. அவரால் எழுதப்பட்ட இன்னொரு முக்கியமான நூல் 'வினய பத்திரிகை' என்பதாகும்.

துளசிதாசருடைய பொருள்களைக் களவாடிச் செல்வதற்காக அவருடைய ஆசிரமத்திற்குச் சில திருடர்கள் வந்தனர். நீலநிறமுள்ள காவலர் ஒருவர் கைகளில் வில்லும் அம்பும் ஏந்தி வாசலில் காவல் செய்து கொண்டிருப்பதை அவர்கள் கண்டனர். அவர்கள் சென்ற இடங்களுக்கெல்லாம் அக் காவலர் பின் தொடர்ந்து வந்தார். அவர்கள் அச்சமடைந்தனர். காலையில் அவர்கள் துளசிதாசரிடம், ''வணங்கத்தக்க ஞானியே! தங்கள் குடிலின் வாசலில் இளங்காவலர் ஒருவர் கைகளில் வில்லும், அம்பும் ஏந்திக் காவல் செய்வதைக் கண்டோம். இவர் யார்?'' என்று வினவினர். துளசிதாசர் மௌனம் சாதித்துப் பிறகு அழுதார். தம் பொருள்களைக் காப்பதற்காக இராமபிரானே இவ்வாறு தொல்லையை மேற்கொண்டார் என்று அவர் அறியலானார். உடனே அவர் தம் செல்வங்கள் எல்லாவற்றையும் ஏழை மக்களுக்குப் பகிர்ந்து அளித்துவிட்டார்.

துளசிதாசர் சில காலம் அயோத்தியில் வாழ்ந்தார். பிறகு அவர் காசிக்குச் குடி பெயர்ந்தார், ஒரு நாள் ஒரு கொலைகாரன் வந்து, ''இராமனுடைய அன்புக்காக எனக்குப் பிச்சைபோடு. நான் ஒரு கொலைகாரன்'' என்று கூக்குரலிட்டான். துளசிதாசர் அவனை தம் வீட்டுக்கு அழைத்துச் சென்று இறைவனுக்கு நைவேத்தியம் செய்த புனிதமான உணவை வழங்கி, அவன் தூய்மைபெற்று விட்டான் என்று உறுதியாகத் தெரிவித்தார். காசியில் வாழ்ந்த அந்தணர்கள் துளசிதாசரைக் கண்டித்து. கொலைகாரனுடைய பாவம் எப்படித் தீரும்? நீங்கள் எப்படி

அவனுடன் உண்ணலாம்? சிவபெருமானுடைய புனித எருதாகிய நந்தி கொலைகாரனுடைய கைகளிலிருந்து உணவை உண்டால், அப்போது தான், அவன் தூய்மை பெற்றுவிட்டதாக நாங்கள் ஒப்புக்கொள்ளுவோம்'' என்று தெரிவித்தனர், பின்பு கொலைகாரனைக் கோயிலுக்கு அழைத்துச் சென்றனர்; அங்கு எருது அவனுடைய கைகளில் இருந்த உணவை உண்டது. அந்தணர்கள் வெட்கித் தலை குனிந்தனர்.

துளசி தாசர் ஒருமுறை பிருந்தாவனத்துக்குச் சென்றார். அவர் ஒரு கோயிலுக்குச் சென்றார். அவர் கிருஷ்ணபகவானுடைய சிலையைக் கண்டார். அவர் ''இறைவா! உன் அழகை நான் எவ்வாறு வர்ணிப்பேன்? ஆனால் உன் கைகளில் 'வில்லையும் அம்பையும் நீ ஏந்தினால் தான் துளசி உனக்குத் தலை வணங்குவான்'' என்று கூறினார். இறைவன் துளசி தாசரின் முன்னே, கைகளில் வில்லையும் அம்பையும் ஏந்திய இராமபிரானாகக் காட்சி தந்தார்.

ஓர் ஏழைப் பெண்ணின் இறந்த கணவனைத் துளசி தாசரின் நல்லாசிகள் மீண்டும் உயிர் பெற்றெழச் செய்தன.

துளசி தாசர் செய்த மிகப் பெரும் அற்புதத்தை டில்லியில் இருந்த முகம்மதியப் பேரரசர் அறிந்தார். அவர் துளசிதாசரை அழைத்துவர ஆள் அனுப்பினார். துளசி தாசர், மன்னரின் அரசவைக்கு வந்தார். ஏதேனும் அற்புதத்தைச் செய்து காட்டுமாறு ஞானியை அரசர் வேண்டினார். துளசிதாசர், ''மனித சக்திக்கு மீறிய சக்தி எதுவும் என்னிடம் இல்லை. இராமனுடைய பெயரை மாத்திரம் நான் அறிவேன்'' என்று விடை தந்தார். மன்னர் துளசிதாசரைச் சிறையிலிட்டு'', ஏதேனும் அற்புதம் செய்து காட்டினால் தான் விடுதலை செய்வேன்'' என்று கூறினார்; துளசி தாசர் அனுமாரைக் குறித்துத் தொழுதார். எண்ணற்ற, வலிமைமிக்க குரங்குகளின் கூட்டங்கள் அரண்மனை அவைக்குள் நுழைந்தன. மன்னர்

அச்சமுற்று, ''ஞானியே! என்னை மன்னியுங்கள் நான் இப்போது தங்கள் பெருமையை அறிகின்றேன்'' என்று கூறினர். அவர் உடனே துளசி தாசரைச் சிறையிலிருந்து விடுவித்தார்.

துளசி தாசர் கி.பி. 1623ல் தம்முடைய தொண்ணூற்று ஒன்றும் வயதில் காசியில் அசிகட் என்ற இடத்தில் தம் பூத உடலை நீத்து அமரத்துவப் பேரின்ப வீட்டை அடைந்தார்.

## 31. நரசீ மேத்தா

நரசீ மேத்தா குஜராத்தில், கத்தியவாரில், ஜூனகரில் உள்ள வடநகர் நாகர் அந்தணர் குடும்பத்தைச் சேர்ந்தவர். அவர் மிகவும் ஏழைக் குடும்பத்தில் பிறந்தார். தம் பிள்ளைப் பருவத்திலிருந்தே அவருக்குக் கிருஷ்ண பகவான் இடத்தில் மிகுந்த பக்தியிருந்தது. அவர் தம் அண்ணனுடன் வசித்து வந்தார். அவர் எப்போதும் கோபி லீலை பற்றியும் கிருஷ்ண பகவானைப் பற்றியும் பாடிக் கொண்டும், பரவசமடைந்து ஆடிக் கொண்டும் இருந்தார். குடும்ப காரியங்களைப்பற்றி அவர் ஒரு சிறிதும் கவலைப் படாமலும், பொருள் எதுவும் சம்பாதிக்காமலும் அவர் இருந்தமையால் அவருடைய அண்ணியார் அவரை இகழ்ந்து பேசுவதும் இழிவாக நடத்துவதும் வழக்கம். தம்முடைய சம்பாத்தியத்தைப்பற்றி அவர் எப்போதும் எந்த எண்ணமும் கருதியதில்லை. கிருஷ்ண பகவான், தம்முடைய தேவைகளை எல்லாம் நிறைவேற்றுவார் என்ற உறுதியான நம்பிக்கை அவருக்கு இருந்தது. இதற்குக் காரணம் அவருடைய முந்திய சம்ஸ்காரங்கள். உணவு கிடைத்தாலும், கிடைக்கவில்லை என்றாலும் மகிழ்ச்சியாக இருப்பது அவருடைய இயற்கை. கடற்கரையில் உள்ள கோபிநாதம் என்ற தலத்தில் அவர் தவம் செய்தார். சிவ பெருமானுடைய கருணையின் வாயிலாக அவருக்குக் கிருஷ்ண பகவானுடைய தரிசனம் வாய்த்தது. அவர் வீட்டுக்குத் திரும்பி வந்து திருமணம் செய்து கொண்டார். அவருக்குச் சியாமள தாசன் என்ற மகனும், கணிவர்பாய் என்ற மகளும் தோன்றினர்.

அவர் மீராபாயின் காலத்தில் வாழ்ந்தார். அவர் சக்கியபாவத்துடன் இருந்தார். அவர் கிருஷ்ண பகவான்னுடன், சமமாகக் கருதும் பாவனையில் பேசுவார். அவர் திறந்த மனத்துடன் வெளிப்படையாகப் பேசும் பக்தர். அவர் பரபக்தியும் அகில உலக உணர்வும் உள்ளவர். அவர் ''ஹரி மாலை'' என்னும் ஒரு பாடலை இயற்றினார். அவருடைய பெண்ணின் திருமணத்தைச் கிருஷ்ணபகவானே வந்து மிகுந்த ஆடம்பரத்துடனும் பெருமையுடனும் நடத்தினார் என்று சொல்லப்படுகின்றது. அவர் மிகவும் ஏழையாக இருந்தாலும் கண்வர் பாயின் மாமியாருக்கு விலையுயர்ந்த திருமணப் பரிசுகள் வந்து குவிந்தன; இது அனைவருக்கும் பெரும் ஆச்சரியத்தை விளைவித்தது.

அவருடைய வாழ்வில் அற்புதங்கள் பல நிகழ்ந்தன. அவர் பல தடவைகள் கிருஷ்ண பகவானின் தரிசனத்தை நேராகப் பெற்றார். ஒரு முறை அவர் தம் அண்ணனுடன் சாலையில் சென்று கொண்டிருந்தார் அவருக்கு மிகவும் பசியாக இருந்தது. வழியில் அவருக்கு எந்த உணவும் கிடைக்கவில்லை. அங்கே கிருஷ்ணபகவான் ஓர் இடைச் சிறுவன் வடிவில் தோன்றி அவருக்கு ஒரு சிறிய குடிசையில் நல்ல உணவை வழங்கினார். தம்முடன் உணவைப் பகிர்ந்து கொள்ளுமாறு அவர் தம் வைதிக அண்ணனை வேண்டினார்; கிருஷ்ண பகவானே உணவைப் பரிமாறுகின்றார் என்றும் அவரிடம் தெரிவித்தார். அவருடைய அண்ணனுக்கு நம்பிக்கையில்லை. இருவரும் தம்முடைய பயணத்தை மேலும் தொடர்ந்தனர். குடிசையிலிருந்து தம்முடைய பாத்திரத்தை எடுத்துக்கொள்ள அண்ணன் மறந்துவிட்டார். அவர் அந்த இடத்திற்கு ஓடிச்சென்று தம் பாத்திரத்தை எடுத்துக்கொண்டார்; ஆனால் குடிசையோ, சிறுவனோ அங்கு காணப்படவில்லை. யாவும் கிருஷ்ணபகவானுடைய கருணையே! கீதையில் தாம் கூறியுள்ள சொல்லைக் காப்பாற்றுவதற்காக அவர் தம் பக்தனுக்குப் பரிமாறிச் சேவை செய்தார்.

''அனன்யஸ் சிந்தயந்தோ மாம் யே ஜனாஹ
பர்யுபாசதே
தேஷாம் நித்யபியுக்தானாம் யோகக்ஷேமம்
வஹாம்யஹம்''
(அத்தியாயம் IX-22).

தம்பியுடன் உணவு உண்ணாமைக்காக அண்ணன் பெரிதும் மனம் வருந்தினார்.

மற்றொரு சமயம் நரசீ தம் தகப்பனாரின் சிரார்த்தச் சடங்கை (பிரிந்து சென்ற முன்னோரின் ஆவிகளுக்கு ஆண்டு தோறும் பிண்டம் படைத்தல்) நடத்திக்கொண்டிருந்தார். அப்போது நெய் குறைவாக இருந்தது. நெய்யை வாங்கிக் கொண்டு வருவதற்காக நரசீ கடைத் தெருவுக்கு சென்றார். வழியில் அவர் ஒரு சங்கீர்த்தனக்குழுவைச் சந்தித்து அவர்களுடன் சேர்ந்து கொண்டார். அவருடைய ஏழை மனைவி அவரை எதிர்பார்த்து மிகுந்த ஆவலுடன் நீண்ட நேரம் காத்துக்கொண்டே இருந்தாள். அப்போது இரண்டு அற்புதங்கள் நிகழ்ந்தன. யாவும் கிருஷ்ணபகவான் தம் பக்தருக்கு உதவுகின்ற கருணையே. 1. விண்ணில் கதிரவன் சிறிதும் நகரவில்லை, அப்படியே நிலையாக நின்று விட்டது. உண்மையில் எவ்வளவு நேரம் கழிந்ததென்று யாருக்கும் தெரியாது. 2. கிருஷ்ணபகவானே நரசீயின் வடிவில் நெய்யைக் கொண்டு வந்து அவருடைய மனைவியின் கையில் கொடுத்தார். நரசீயின் பாகத்தை நடித்துக் கொண்டிருந்த கிருஷ்ணருக்கு அம்மையார் செல்லமான திட்டுகளையும் வழங்கினார். அந்தணர் அனைவரும் வயிறார உண்டு மகிழ்ந்தனர். அவர்கள் பெருமகிழ்வுடன் விடைபெற்றுச் சென்றார்கள். சடங்கு முடிந்தது. நரசீயின் மனைவியார் இப்போது பொருள்களை எல்லாம் ஒழுங்கு செய்து கொண்டும், அறையையும் முற்றத்தையும் பெருக்கிக் கொண்டும் இருந்தார். பிறகு நரசீ கையில் நெய்யுடன் வந்து தம் மனைவியாரிடம் காலம் தாழ்ந்து வந்தமைக்காக மன்னிப்பை வேண்டினார்.

அவருடைய மனைவியும் மகனும் மறைந்த பிறகு அவருக்கு மிகுந்த விடுதலை கிடைத்தது. அவர் தமது எல்லா

நேரத்தையும் வழிபாடு செய்வதிலும், பஜனைகள் பாடு வதிலும் செலுத்தினார். அவர் அதிவர்ணாஸ்ரமி ஆனார். சாதிக் கட்டுப்பாட்டு விதிகளையும் அவற்றைப் பின்பற்று வதையும் அவர் உடைத்தெறிந்தார். அவர் எல்லா இடங் களிலும், தாழ்த்தப்பட்டவர், தெருக்கூட்டுவோர் இல்லங் களிலும் கூட அவர் கீர்த்தனைகளை நடத்தினார். ஏனைய நகர அந்தணர்கள் நரசீயை வெறுத்ததுடன் அவரைச் சாதியிலிருந்து தள்ளியும் வைத்தனர். ஒரு விருந்து நிகழ்ச் சியின்போது அவரை அனுமதிக்க அவர்கள் மறுத்து விட்டனர், அப்போது மற்றொரு அற்புதம் நடைபெற்றது. அந்தணர்கள் இருந்த ஒவ்வொரு பந்தியிலும் (வரிசைக்குழு), ஒவ்வொரு அந்தணருக்கும் பக்கத்தில் ஒவ்வொரு தாமன் (தாழ்த்தப்பட்ட குலத்தவன்) காணப்பட்டான். மமதை பிடித்த நகர அந்தணர் வெட்கித் தலைகுனிந்தனர். அவர் கள் நரசீக்கு மரியாதை காட்டத் தொடங்கினர். நரசீ மேத்தாவைப் பெரும் பக்தர் என்று அவர்கள் வெளிப்படை யாக ஏற்றுக்கொண்டு அறிவித்தனர். இந்த யுகத்தில் நரசீயைக் காட்டிலும் பெரிய பக்தரை உலகம் தோற்றுவிக்க வில்லை. நரசீயின் பக்தி தனிச் சிறப்புடையது. பக்தியின் உண்மையான மார்க்கத்தை அவர் உலகத்திற்குச் சுட்டிக் காட்டியுள்ளார். அவர் நம் உள்ளங்களில் இன்றும் வாழ்ந்து கொண்டிருப்பதற்கு அதுவே காரணம். அவ ருடைய உணர்ச்சி மிகுந்த, ''வைஷ்ணவ ஜனதோ தேனே கஹியே'' என்ற பாடல் உண்மையான வைணவனைப்பற்றி அழகாக விளக்குகின்றது. பக்தர்கள் அனைவரும் இன்றும் அப்பாடலைப் பாடுகின்றனர். இன்றை உலகத்தின் மிகப் பெரும் உத்தமராகிய மகாத்மா காந்தி அடிகள் நாள் தோறும் பாடும் துதிப்பாடல்களில், இப்பாடல் இடம் பெற்றுள்ளது.

நரசீயின் பெருமை ஓங்குக!

ஹரியின் பெருமை ஓங்குக!

அவருடைய பெயரின் பெருமை ஓங்குக!

# 32. யோகி முகுந்தராய்

யோகி முகுந்த ராய், தென்னிந்தியாவில் விஜய நகரத்தில் ஏறத்தாழ எழுநூறு ஆண்டுகட்கு முன்பு வாழ்ந்த அசாதாரண மனிதர். விஜயநகர அரண்மனையின் பழைய ஆவணங்களில் இச்செய்தி காணப்படுகின்றது. அப்போது விஜயநகர அரசராக இருந்த ஜெயபாலர், தம் அரசவைக்கு வரும் ஒவ்வொரு மகாத்மா அல்லது துறவியைப் பார்த்து ''எனக்கும் பிரம்மத்தைக் காட்டுங்கள்'' என்று கேட்பது வழக்கம். அரசரைத் திருப்தி செய்யத் தவறுபவர், ஒரு குளத்தைத் தோண்டுமாறு உடலுழைப்புக்கு ஆளாக்கப் படுவார். அரசருக்குப் பிரம்மத்தைக் காட்ட முடியாத காரணத்தால், நூற்றுக்கணக்கான சாதுக்கள் இவ்வாறு தோண்டும் பணியில் ஈடுபட்டனர்.

யோகி முகுந்த ராயும், ''நாராயண, ஜெய நாராயண, ஜெய ஜெய நாராயண'' என்று இறைவனுடைய திருப்பெயர் களைப் பாடியவாறு அரசவைக்கு வந்தார். வாயிலைக் காவல் செய்த சிப்பாய், அரசவையில் நுழைய வேண்டாம் என்றும், நுழைந்தால் அவரும் தோண்டும் பணியைச் செய்ய வேண்டி வரும் என்றும் அவரிடம் கூறினான். ஆனால் யோகி முகுந்த ராய், தாம் அரசரை மட்டும் காண முடிந்தால்; தோண்டும் பணியைப் பற்றிக் கவலை இல்லை என்று தெரிவித்தார். அரசர் தம் வழக்கமான கேள்வியை அவரிடம் கேட்டார். முகுந்தராய், ''ஆம். நான் நிச்சயம் பிரம்மத்தைக் காட்ட முடியும். ஒரு குதிரையைக் கொண்டு வாருங்கள்'' என்று கூறினார். பிறகு அவர் அரசரைக் குதிரையின்மீது ஏறச் சொன்னார். அரசர் தம் இடது காலைக் குதிரைச் சேணத்தின் காலுக்குரிய பிடிப்பில் ஊன்றித் தாவித் தம் வலது காலைக் குதிரையின் அடுத்த பக்கத்தில் கொண்டு போக நின்றவாறு இருந்தபோதே, வலது காலுக்குரிய பிடிப்பு இல்லாத நிலையில், யோகி குதிரைக்குக் கடுமையாகச் சவுக்கடி கொடுத் தார். அப்போதே, அங்கேயே அரசர் சமாதியடைந்து ஏழு நாட்கள் இரவும், பகலும் தொடர்ந்து இருந்தார்;

குதிரையும் எல்லா நேரமும் அமைதியாக இருந்தது. எட்டாம் நாள் அரசர் சமாதியிலிருந்து இறங்கி உலக நினைவு பெற்றார்; அவர் யோகியின் காலடிகளில் பணிந்து, ''வணங்கத்தக்க பெரியோய்! என் குருவே! நான் தங்கள் சீடனும், அடிமையுமாக இருக்கின்றேன்; எல்லாவகையான பணிவிடைகளையும் செய்யத் தயாராக இருக்கின்றேன்: என்று கூறினார். யோகி, ''நான் எதையும் விரும்பவில்லை. தோண்டும் பணியிலிருந்து சாதுக்கள் அனைவரையும் விடுதலை செய்யுங்கள். இனிமேல் சாதுக்களை இவ்வாறு வருத்த வேண்டாம்'' என்று கூறினார்.

யோகி முகுந்தராய், அரசருக்காகப் 'பிரேம அம்ருதம்', 'விசாரசிந்து' என்ற இரு வேதாந்த நூல்களை எழுதினார். இரு நூல்களும் தற்போதும் நடை முறையில் உள்ளன; கிடைக்கவும் செய்கின்றன. இந்நூல்கள் பயில்வதற்கும் ஆழ்ந்து தியானம் செய்வதற்கும் உரியன.

## 33. அக்ஹா

அக்ஹா, குஜராத்தில் அனைவராலும் கொண்டாடப் படும் ஒரு ஞானி. தொழிலால் அவர் ஒரு பொற்கொல்லர். அவர் காசிக்குச் சென்றார். அங்கு பிரம்மானந்த சுவாமிகள் இரவு நேரங்களில் வேதாந்த வகுப்புக்களை நடத்தி வந்தார். அக்ஹா அங்கு அனுமதி பெறமுடியவில்லை. அவர், பிரம் மானந்த சுவாமிகளின் இல்லத்திற்குப் பின்புறம் இருந்த ஒரு குப்பைத் தொட்டியில் இரவில் ஒளிந்து கொண்டு பாடங் களைக் கூர்ந்து கேட்பது வழக்கம். ஒரு நாள், சுவாமிகள் கேட்ட ஒரு வினாவுக்குச் சீடர்களில் ஒருவர் விடை சொல்ல முடியாதபோது, அவருக்குப் பின்னால் இருந்து சரியான விடையை உரத்த குரலில் அக்ஹா கூறினார். பிரம்மானந்த சுவாமிகள் திகைப்படைந்தார்; இத்தகைய அழகான விடையைத் தந்தவர் யார் என்று கேட்டார். 'குஜராத்தி லிருந்து வந்துள்ள நான், 'அக்ஹா' என்று விடை சொல்லப் பட்டது. சுவாமிகள், 'அக்ஹா உள்ளே வா' என்று கூறினார். அக்ஹா உள்ளே சென்று அவர் முன்னே காலடி

களில் வீழ்ந்து பணிந்தார். சுவாமிகள், 'அக்ஹா! நீ யார்? இந்த நேரத்தில் இங்கு வர எப்படி உன்னால் முடிந்தது?' என்று கேட்டார். அக்ஹா, ''சுவாமிகளே! நான் ஒரு பொற்கொல்லன். நான் உறுதியான முமுட்சு. கடந்த பன்னிரண்டு மாதங்களாக நான் இந்தக் குப்பைத் தொட்டியில் ஒளிந்து கொண்டு தங்கள் போதனைகளைக் கூர்ந்து கேட்டு வந்தேன். அருள் கூர்ந்து எனக்கு உபதேசம் தாருங்கள்'' என்று கூறினார். பிரம்மானந்த சுவாமிகள் பெரு மகிழ்ச்சியடைந்தார்; அவரைத் தகுந்த அதிகாரி என்று கண்டு கொண்டு, கைவல்ய இரகசியங்களை அவருக்கு உபதேசம் செய்தார். அவர் முழு நிறைவு பெற்ற ஞானியானார். அவருடைய ஞானப் பாடல்கள் தொகுக்கப்பட்டு ஒரு நூல் வடிவில் வெளியிடப்பட்டுள்ளன. பம்பாய் பல்கலைக் கழகத்தில் எம். ஏ. தேர்வுக்கு ஒரு பாட நூலாக அதை ஏற்றுள்ளனர்.

## 34 கோரக்நாதர்

கோரக் நாதர், ஆலந்தியில் வாழ்ந்த ஞானதேவரைப் போலப் பெருமை மிகுந்த ஒரு யோகி. கோதாவரி நதிக் கரையில், சந்திரகிரி என்ற கிராமத்தில் சுராஜ் என்ற பெயருள்ள அந்தணர் ஒருவர் இருந்தார். அவருடைய மனைவி சரஸ்வதி, மிகுந்த சமய உணர்வும், நற்குணங்களும் உள்ள பெண்மணி. ஆனால் அவர்களுக்கு மகப்பேறு வாய்க்கவில்லை என்ற ஒரு பெரிய வருத்தம் இருந்தது. ஒரு முறை மத்ஸ்யேந்திரநாத யோகி, பிக்ஷைக்காக அவர்களுடைய வீட்டுக்குச் செல்ல நேர்ந்தது. சமய உணர்வு மிக்க அம்மையார் அளவற்ற மகிழ்ச்சியடைந்து மிகுந்த பணிவோடும் பக்தியோடும் விருந்து படைத்தார். தங்களுக்குக் குழந்தை இல்லாத குறையையும் அம்மையார் அவரிடம் தெரிவித்தார். யோகி ஒரு சிட்டிகை திருநீற்றைத் தந்து ஆசி கூறினார். சிறிது காலம் கழித்து அம்மையாருக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. சிறுவனுக்குப் பன்னிரண்டு வயது ஆனபோது, மத்ஸ்யேந்திரநாத யோகி அவர்

களுடைய் வீட்டுக்கு வந்து சிறுவனைத் தம்முடன் அழைத்துச் சென்று, கல்வி புகட்டி உபதேசம் செய்து தம்முடைய சீடனாக ஏற்றுக்கொண்டார். தவம் செய்யுமாறு அவர் சிறுவனைப் பத்ரிநாராயணத் தலத்திற்கு அனுப்பினார். அப்சர கன்னியரும் தேவர்களும் வந்து அவருக்கு இடையூறு விளைவித்தனர். அவர் உறுதியாக நின்று மயக்கங்கள் எல்லாவற்றையும் வெற்றி கொண்டார். அவர் அளவற்ற சித்திகள் பெற்றார். மத்ஸ்யேந்திரநாதரும் தம்முடைய எல்லாச் சக்திகளையும், வித்தைகளையும் அவருக்கு வழங்கினார்; அவருடைய சீடராகிய இச்சிறுவர் கோரக்நாதர் என்று அழைக்கப்பட்டார்.

கோரக்நாதர் பன்னிரண்டு ஆண்டுகளாகிய நீண்ட காலம் காற்றை மட்டுமே உணவாகக் கொண்டு, தவம் செய்தார். அவர் அளவற்ற யோக சக்திகளை அடைந்தார். குறிப்பிட்ட ஒரு ராணிக்கு மகப்பேறு உண்டாக வேண்டும் என்று அனுமார் இட்ட கட்டளைக்கு இணங்க அவருடைய குரு மத்ஸ்யேந்திரநாதர், இறந்த அரசனுடைய உடம்பில் புகுந்தபோது (பரகாயப் பிரவேசம்) கோரக்நாதர் தம்முடைய யோக சக்தியால் (காமரூப சித்தி) ஒரு பெண்ணின் வடிவம் அடைந்தார். வேறொரு சமயம் அவர் களிமண்ணால் ஒரு பொம்மையைச் செய்து அதற்கு உயிரூட்டிக் கிராமத்துக் குழந்தைகளுக்கு ஒரு விளையாட்டுத் தோழனாக அதைக் கொடுத்தார். அவர் மலையின் ஒரு பகுதியைத் தங்கமாக மாற்றி மீண்டும் அதைப் பழைய நிலையை அடையுமாறு செய்தார். அவர் ஒரு பாறையின் மீது மூத்திரம் பெய்தார். அது தங்கமாக மாறியது. கோதாவரி நதிக் கரையில் நடைபெற்ற ஒரு கும்பமேளாவில், தம்முடைய யோக சக்தியால் ஒவ்வொருவரும் விரும்பிய வாறு வளமான விருந்து வழங்கினார். அதே மேளாவில் அவர் தமது பருவுடலைச் சுருக்கி ஒரு கொசுவின் வடிவத்தை அடைந்தார் (அணிமா சித்தி). தம் சொந்த யோக சக்தியால், தம்மையே சுட்டுச் சாம்பலாக்கிக் கொண்டபின், மீண்டும் பழைய வடிவத்தை அடைந்தார். அவர்

ஆகாசகமனம் (ஆகாயத்தில் நடத்தல்) செய்தார். இவ்வாறு அவர் பல சித்திகள் செய்து காட்டினர். பர்த்ருஹரி அரசர் அவருடைய சீடர்.

## 35. ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் இந்தியா ஒரு பெரும் நெருக்கடியைச் சந்தித்தது. ஆங்கிலேயரின் இந்திய வெற்றியைத் தொடர்ந்து மேற்கத்திய நாகரிகம் நாட்டின் மீது படை எடுத்தது. வெற்றிகொண்ட நாட்டின் பொருட் சக்தியைக்கண்டு அஞ்சிய இந்தியர், எந்த ஒரு பொருளா யினும் அது மேனுட்டுப் பொருளாயின் அதனை வரவேற்ற னர். இடையில், உலகிலேயே மிகப் பெரிய, மதமாற்றம் செய்யும் மதமாகிய கிறித்தவம், நம் நாட்டை முழு அளவில் பண்பாட்டு நெறியில் வெற்றி கொள்ள அமைதி யாகப் பணி செய்யத் தொடங்கியது.

இத்தகைய மன நிலை நிலவிய காலத்தில் இந்தியப் பண்பாடு, சமயம் ஆகியவற்றின் ஆர்வமுள்ள வடிவமாக ஸ்ரீ இராமகிருஷ்ணர் தோன்றினர். இந்து மதத்தின்பால் உள்ள நம்பிக்கை இந்தியர்களுக்கு மிகப் பெரும் அளவில் தளர்ந்து விட்ட நேரத்தில் அவர்கள் இந்து மதத்தின் பெருமை, அழகு, வலிமை ஆகியவற்றைக் காணுமாறு அவர்களுடைய கண்களை அவர் திறந்து விட்டார்.

இராமகிருஷ்ணர், சமய ஈடுபாடு மிக்க அந்தணர் குடும்பத்தில், வங்காளத்தில், ஹூக்ளி மாவட்டத்தில், கமார் புகூர் என்ற கிராமத்தில் 1836ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 18ஆம் தேதியில் பிறந்தார். அவருடைய பெற்றோர், அவருக்குக் கதாதரன் என்று பெயர் சூட்டினர். கதாதரன் தாம் பிறந்த நாள் முதலாகவே தம் பெற்றோர், உறவினரை மட்டுமின்றி அக்கம் பக்கத்தவரையும் தம் மிடம் அன்பு பாராட்டுமாறு அனைவருடைய கவனத்தையும் கவர்ந்தார். அவருக்கு ஐந்து வயது நிறைந்த போது அந்த

இளம் பிராயத்திலேயே அவர் அற்புதமான அறிவாற்றலை யும் நினைவாற்றலையும் காட்டத் தொடங்கினர். பிஞ்சில் முதிர்ந்த அச்சிறுவர் தம் முன்னேருடைய பெயர்களையும், பல்வேறு தெய்வங்கள், தேவதைகட்குரிய பக்திப் பாடல் களையும், பெரும் இதிகாசக் கதைகளையும் மனப்பாடம் செய்து விட்டார். அவருடைய தந்தையார் அவரைக் கிராமத்துப் பள்ளிக்கு அனுப்பினர்; அங்கு அவர் மெச்சத் தக்க முன்னேற்றத்தை அடைந்தார்; ஆன்மீக வீரர்களின் வரலாறுகளையும் குண நலன்களையும் பயில்வதில் தம் முழுக் கவனத்தையும் செலுத்தினர். இத்தகைய பாடல்களையே அவர் தொடர்ந்து நிலையாகப் படித்ததனுல் அடிக்கடி அவர் உலகை மறந்து ஆழ்ந்த தியானத்தில் மூழ்கிவிடுவார். அவர் வளர்ந்த பிறகு, சமய உணர்வுகள் கிளர்ந்தெழுந்த போதெல்லாம் அவர் பரவசமடையத் தொடங்கினர். குடும்பச் சூழ்நிலைகளின் காரணமாகக் கதாதரர் கல்கத்தா வுக்கு வந்து ஓர் அர்ச்சகராகப் பணியேற்ருர். அப்போது கல்கத்தாவில் ராணி ராசமணி என்ற, சமய உணர்வும், செல்வமும் மிகுந்த ஒரு விதவை இருந்தார். அந்த அம்மை யார் தக்ஷிணேசுவரத்தில் ஒரு காளி கோயிலைக் கட்டினர்; அங்கு கதாதரருக்கு நல்ல வரவேற்பு இருந்தது; தம் ஆன்மீகப் பயிற்சிகளைத் தொடர்வதற்குப் பெரும் வாய்ப்புக் கள் இருப்பதை அவர் கண்டார். கதாதரர் இளம் வயதிலேயே சாரதாதேவி என்ற சிறுமியை மணந்தார்; பிற்காலத்தில், ஸ்ரீ இராமகிருஷ்ணருடைய சீடர்கள் அம்மையாரைப் "புனித அன்னையார்" என்று அழைத் தார்கள்.

இராமகிருஷ்ணர், தொடக்க காலத்திலிருந்தே மிகவும் பரந்த மனப்பான்மையுள்ளவராக விளங்கினர். ஒரு தெய்வத்திற்கும் மற்றொரு தெய்வத்திற்கும் இடையே அவர் வேறுபாடு பாராட்டவில்லை. பேருண்மையாகிய இறைவனின் ஒரு குணத்தை உணர்ந்து கொண்ட பின் அவ்வுணர்வு, அவரை மற்ருெரு குணத்தை அறிந்து கொள்ளவும் அப்பேருண்மை தமக்குத் தெளிவாகும்

வரையில் மனந்தளராத பக்தியுடன் அதைப் பின் தொடரவும் அவரைத் தூண்டியது. தம் வாழ்வில் அமைந்த இக்காலத்தைப்பற்றி அவர் பின்னாட்களில், ஒரு நிலையைக் கடந்தவுடனே அடுத்த நிலை அங்கு இடம் பெற்றது. அந்தச் சுழற்காற்றின் முன்னே என் பூணூல் பறந்து போயிற்று; நான் அணிந்திருந்த மேலாடை கூட நழுவிப் போயிற்று.... சாதி பற்றிய கருத்து எனக்குப் பொருளற்றதாகிவிட்டது'' என்று கூறினார்.

இராமகிருஷ்ணர் 1886ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 16-ஆம் தேதி மகா சமாதியை அடைந்து உலகை விட்டு மறைந்தார்.

## இராமகிருஷ்ண பரமஹம்சரின் அருள் மொழிகளில் சில:

1. இறைவனுக்கு உருவமில்லை; இறைவனுக்கு உருவமும் உண்டு; அவர் உருவத்தையும் உருவமில்லாத நிலையையும் கடந்தவர். தாம் யார் என்பதை அவர் மட்டுமே சொல்ல முடியும்.

2. இறைவனை ஒரு வட்டத்திற்குள் அடக்கப் பார்ப்பது அறியாமையும் முட்டாள்தனமுமாகும். அவர் ஒரே சமயத்தில் குணங்களுடன் கூடியவராகவும், குணங்கள் இல்லாதவராகவும் இருக்கின்றார். இவ்விரு நிலைகளையும் கடந்தவராகவும் அவர் இருக்கின்றார். பனிக்கட்டி, கட்டியாகவும், தண்ணீராகவும், ஆவியாகவும் இருப்பதை இதற்கு உதாரணமாகக் கூறலாம்.

3. ஒருவர் தம் நெருங்கிய நண்பரைக் காணவும், தொடவும் முடிவதுபோல, உருவமுள்ள கடவுளைக் கண்ணால் காண முடியும்; அது மட்டுமன்று, தொடவும் முடியும்.

4. மணியோசை செவிக்குப் புலனுகின்ற வரைக்கும், அது உருவ மண்டலத்தில் நிலவுகின்றது; புலனுகாத நிலையை அடைந்தபின் அதற்கு உருவமில்லை. அதுபோலவே இறைவனும் உருவத்துடனும், உருவமின்றியும் விளங்குகின்ருர்.

5. கதிரவன் உலகத்திற்கு ஒளி தருகின்றது; ஆனுல் ஒரு சிறிய மேகம் நம் கண்ணுக்குத் தென்படாமல் அதை மறைத்து விடுகிறது. அதைப்போலவே, எங்கும் நிறைந்த எல்லாவற்றையும் சாட்சியாகக் கண்டு கொண்டிருக்கின்ற சச்சிதானந்தமாகிய இறைவனை நாம் காண முடியாமல், அற்பமான மாயையின் திரை தடுத்துக் கொண்டிருக்கின்றது.

6. எப்போது நான் விடுதலை பெறுவேன்? அந்த 'நான்' என்பது மறைந்தபோது, 'நான்', 'எனது' என்பவை, அறியாமை; 'நீ', 'உனது' என்பவை ஞானம்.

7. எல்லாம் அவன் செயலே என்ற உறுதியைப் பெற்று விட்டால், ஒருவர், இறைவனுடைய கைகளில் ஒரு கருவி மாத்திரமே ஆகின்ருர். அப்போது அவர் இப்பிறப்பிலேயே விடுதலை அடைந்து விடுகின்ருர்.

8. நல்ல பண்பையும் தூய்மையையும் அடைய வேண்டும் என்று உனக்கு உண்மையான ஆர்வம் இருந்தால் இறைவன் உனக்கு ஒரு உண்மையான குருவை அனுப்புவார். ஆர்வமே, தேவைப்படுகின்ற ஒரு பெருங்குணம்.

9. ஒரு சிறுவன் கம்பத்தைக் கையால் இறுகப் பற்றிக் கொண்டு, கீழே விழுந்து விடுவோம் என்ற அச்சம் இல்லாமல், கண்மூடித்தனமாக வேகமாகச் சுற்றுவதுபோல, இறைவன் மீது மனத்தை இறுகப் பதித்துக் கொண்டு, உலகியல் கடமைகளைச் செய்து வா; உனக்குச் சிறிதும் ஆபத்து நேராது.

10. சமுதாயத்தில் வாழும் ஒருவர், சிறப்பாக இல்லறத்தவர், தற்காத்துக் கொள்வதற்காகத் தீமையை

எதிர்க்கும் உணர்வை வெளிப்படுத்த வேண்டும்; அதே சமயம் பழிக்குப்பழி வாங்கும் உணர்வைத் தவிர்க்க வேண்டும்.

11 மனிதனாகப் பிறக்கும் அரிய வாய்ப்பைப் பெற்ற ஒருவன் இப்பிறவியிலேயே இறைவனை உணர்ந்து கொள்ள முடியவில்லை என்றால் அவனுடைய பிறப்பு வீண்.

12, பாலில் வெண்ணெய் இருக்கிறதென்று உரக்கக் கத்துவதனால் நீ வெண்ணெயைப் பெற முடியாது. வெண்ணெய் பெறவேண்டும் என்று நீ விரும்பினால், நீ பாலைத் தயிராக்க வேண்டும்; பிறகு அதை நன்றாகக் கடைய வேண்டும். அதன் பிறகு நீ வெண்ணெய் பெற முடியும். ஆதலால் நீ கடவுளைக் காண விரும்பினால், ஆன்மீகப் பயிற்சிகளைப் பயில்வாயாக.

13. உலகப் பற்றுள்ள ஒருவனுக்கு உலகப் பொருள் களினிடத்தில் பாசம் இருப்பதுபோல, அவ்வளவு உறுதியாக உனக்குத் தெய்வ பக்தி இருந்தால், நீ தெய்வத்தைக் காண்பாய்.

14. பல நூற்றாண்டுகளாக அறைக்குள் சூழ்ந்திருக்கும் இருள் முழுவதும், ஒரேவொரு விளக்கை ஏற்றினால் விலகி விடுகிறது. எண்ணற்ற பிறவிகளில் சேர்ந்துவிட்ட அறியாமையும் பாவங்களும் இறைவனுடைய கருணை நிரம்பிய கண்களின் ஒரு பார்வையால் மறைந்து விடுகின்றன.

15. உனக்கு விருப்பமான வழியில் இறைவனை வழிபடு. அவர் உன் குறையை நிச்சயம் கேட்பார். ஏனெனில் ஒரு சிறிய எறும்பு கால் நழுவி விழும் சத்தத்தைக் கூட அவர் கேட்கின்றார்.

---

# 4-வது அத்தியாயம்

# பெண்பால் ஞானியர்

## 36. மீராபாய் (சித்தூர் அரசி)

### (1)

மீரா, ராதையின் அவதாரம் என்று மதிக்கப்படுகிறார். அவர் இராஜபுதனத்தில், மார்வாரில், மெர்த்தா என்ற நகருக்கு அருகில், கூர்க்கி என்ற ஊரில் கி. பி. 1499-ல் பிறந்தார். அவர் ரத்தன்சிங் ரண்தோர் என்பாரின் மகள்; இராஜபுதனத்தில் ஒரு சிறிய சுதேச அரசராகிய மெர்த்தாவின் தூதாஜி என்பவரின் பேத்தி. மெர்த்தாவின் ரண்தோர்கள் விஷ்ணுவின் பெரும் பக்தர்கள். வைணவச் செல்வாக்கினிடையே மீராபாய் வளர்க்கப்பட்டார்; இதனால் அவருடைய வாழ்க்கை, கிருஷ்ணபகவானிடத்தில் செலுத்தும் பக்தி மார்க்கத்தில் உருவாயிற்று, தம் குழந்தைப் பருவத்திலிருந்தே அவர் ஸ்ரீ கிருஷ்ணனை வழிபடக் கற்றுக் கொண்டார். தம் நான்காம் வயதிலிருந்து அவர் தமக்குள்ள சமய மனப்பான்மைகளை வெளிப்படுத்தினார். ஒரு முறை அவருடைய வீட்டுக்கு முன்னால் ஒரு திருமண ஊர்வலம் சென்றது. மாப்பிள்ளையின் உடையலங்காரம் மிகவும் அழகாக இருந்தது. குழந்தையாக மட்டுமே இருந்த மீரா, மாப்பிள்ளையைப் பார்த்துவிட்டுத் தம் தாயாரிடம், கள்ளமில்லாமல், ''என் அன்புத்தாயே! என் மாப்பிள்ளை யார்?'' என்று வினவினார். தாயார் புன்னகை பூத்துப் பாதி கேலியாகவும், பாதி ஆர்வத்தோடும், ஸ்ரீ கிருஷ்ணனின் சிலையின் பக்கம் சுட்டிக்காட்டி, 'என் அன்புள்ள மீரா! ஸ்ரீ கிருஷ்ண பகவான் — இந்த அழகிய சிலை — உன் மணவாளன்'' என்று தெரிவித்தார்.

குழந்தை மீரா கிருஷ்ண சிலையை மிகுந்த அளவில் நேசிக்கத் தொடங்கினாள். சிலையைக் குளிப்பாட்டுவதிலும்

உடை உடுத்துவதிலும் அவள் தன் நேரத்தின் பெரும் அளவைச் செலவிட்டாள். அவள் சிலையை வழிபட்டாள். அவள் சிலையுடன் உறங்கினாள். அவள் பரவசமடைந்து சிலை யுடன் நடனம் ஆடினாள். சிலையின் முன்னால் அவள் அழகான பாடல்களைப் பாடினாள். அவள் சிலையுடன் பேசுவது வழக்கம்.

மீராவின் தந்தை, மீராவை, மேவாரில் உள்ள சித்தூரின் அரசர் கும்பராணாவுக்குத் திருமணம் செய்விப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்தார். மீராவின் வாழ்க்கைப் பற்றிய இன்னொரு வரலாறு, மீரா, கும்பராணாவுக்கு ஒருபோதும் திருமணம் செய்விக்கப்படவில்லை என்று கூறுகிறது; சங்க ராணாவின் மூத்தமகன் போஜாராஜுக்கு அவள் திருமணம் செய்விக்கப்பட்டாள்; போஜாராஜ் திருமணத்தின் பின் பத்தாண்டுகள் கழித்து மறைந்தார்; சங்கராணாவின் நான் காம் புதல்வர் விக்ரம்ஜித் அரசபீடம் ஏறினார்; அவர் மீராவைத் துன்புறுத்திச் சித்தூரை விட்டு விரட்டினார் என்றும் கூறுகிறது. அவள் கடமையுணர்ந்த மனைவி. அவள் தடையின்றிக் கணவரின் கட்டளைகட்குக் கீழ்ப்படிந் தாள். வீட்டு வேலைகள் யாவும் முடிந்தபின் அவள் கிருஷ்ண பகவானுடைய ஆலயத்திற்குச் சென்று சிலையின் முன்னால் வழிபாடு செய்து ஆடிப்பாடுவாள். சிறிய சிலை எழுந்து நின்று மீராவை அணைத்துக் கொண்டு புல்லாங்குழல் இசைக்கும்; அவளுடன் பேசும். ராணாவின் தாயாரும், ஏனைய மகளிரும் உலகியல் மனப்பான்மையும் பொறாமையும் உள்ளவர்கள் ஆதலால் மீராவின் வழிகள் அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் அனைவரும் அவளிடம் எரிச்சல் கொண்டார்கள். மீராவின் மாமியார், துர்க்கையை வழி படுமாறு மீராவை வற்புறுத்தினாள்; அடிக்கடி மீராவைத் திட்டினாள். ஆனால், மீரா பிடிவாதமாக இருந்தாள். அவள், ''நான் ஏற்கனவே என் வாழ்வை—என் அன்புக்குரிய கிருஷ்ண பகவானுக்கு வழங்கிவிட்டேன்'' என்று கூறினாள். மீராவின் நாத்தனார் உதாபாய் ஒரு சூழ்ச்சி செய்து கள்ளம் இல்லாத மீராவுக்குக் களங்கம் கற்பிக்கத் தொடங்கினாள்.

அவள் கும்பராணாவிடம், மீரா இரகசியமாக மற்றவர்களைச் காதலிக்கிறாள் என்றும், கோயிலில் மீரா, மற்ற காதலர் களுடன் இருந்ததைத் தான் தன் கண்ணாரக் கண்டதாகவும், ஒரு நாள் இரவு அவர் தன்னுடன் வந்தால் அந்த ஆட்களைக் காட்டுவதாகவும் தெரிவித்தாள். சித்தூர் ராணா குடும் பத்தின் பெருமைக்கு மீராவின் இத்தகைய நடத்தை பெருங் களங்கத்தை உண்டாக்கிவிட்டதாகவும் அவள் கூறினாள். கும்பராணா பெரும் சினம் அடைந்தார். மீரா தங்கியிருக்கும் அந்தப்புரத்தின் அறைக்கு அவர் கையில் வாளேந்தியவராக நேராக ஓடினார். அதிர்ஷ்ட வசமாக, மீரா தன் அறையில் இருக்கவில்லை. ராணாவின் அன்பான உறவினர் ஒருவர் அவரைத் தடுத்து, ராணா! இதோ பாரும்! அவசரப் படாதீர்! பின்னால் நீர் மனம் வருந்துவீர். நன்றாகப் யோசித்துப் பாரும். இந்தச் செய்தியைக் கவனமாக விசா ரித்துப்பாரும். உண்மையைக் கண்டு பிடியும். மீரா மிகவும் பக்தியுள்ள பெண்மணி, நீர் கேட்டது வெறும் வதந்தியாக இருக்கக்கூடும். வெறும் பொறாமையால் சில பெண்கள் மீராவுக்கு எதிராக ஒரு கற்பனைக் கதையை உருவாக்கி அவளை அழிக்கப்பார்க்கலாம். அமைதியாக இருங்கள். சினம் தவிருங்கள்'' என்று அறிவுரை கூறினார். ராணா தம் உறவினரின் விவேகமான ஆலோசனைக்கு இணங்கினார். ராணாவின் தமக்கை நள்ளிரவில் அவரை ஆலயத்திற்கு அழைத்துச் சென்றாள். அவர் கதவைத் திறந்து உள்ளே விரைந்து சென்றார்; மீரா தனிமையில் பரவசமடைந்து சிலையுடன் உரையாடிக் கொண்டிருப்பதை அவர் கண்டார்.

ராணா மீராவினிடம், ''மீரா, இப்போது யாருடன் பேசிக்கொண்டிருக்கின்றாய்? உன் காதலனை எனக்குக் காட்டு'' என்று கேட்டார். மீரா, ''என் உள்ளங்கவர்ந்த கள்வன், நனிசோரன் என் பிரபு இதோ அமர்ந்திருக் கின்றார்'' என்று விடை தந்தாள். அவள் மூர்ச்சையிழந்து விட்டாள். மீரா, சாதுக்களுடன் மிகவும் தாராளமாகக் கலந்து பழகுகின்றாள் என்று ஒரு பலமான வதந்தி இருந்தது. அவள் சாதுக்களிடம் மிகுந்த நன்மதிப்பு வைத்திருந்தாள்;

எனவே அவர்களுடன் கலந்து பழகினுள் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பொருளற்ற பழிச் சொற்களைக் குறித்து அவள் சிறிதும் கவலைப்படவில்லை. அவள் கலங்காமல் இருந்தாள்.

ராணுவும் அவருடைய உறவினர்களும் மீராவைப் பல வழிகளிலும் துன்புறுத்தி வந்தனர். பிரகலாதனை அவன் தந்தை ஹிரண்ய கசிபு நடத்தியவாறே அவர்கள் மீராவை நடத்திஞர்கள். ஹரி பிரகலாதனைக் காத்தார். இங்கு, ஸ்ரீ கிருஷ்ணர், மீராவின் பக்கம் எப்போதும் இருந்தார். ஒரு முறை ராணு, பூக்கள் தொடுத்த மாலை உள்ளதென்று தெரிவித்து ஒரு கூடையில் நாகப்பாம்பை மீராவுக்கு அனுப்பிஞர். மீரா நீராடியபின் வழிபாடுசெய்ய அமர்ந்தாள். தியானம் செய்து முடித்த பிறகு அவள் கூடையைத் திறந்து பார்க்க, உள்ளே அழகான ஸ்ரீ கிருஷ்ணரின் சிலையும், பூமாலையும் இருக்கக் கண்டாள். பிறகு, அமிர்தம் என்று சொல்லி ஒரு கிண்ணத்தில் ராணு நஞ்சை அனுப்பிஞர். மீரா, கிருஷ்ண பகவானுக்கு நைவேத்தியமாகப் படைத்து விட்டு அவருடைய பிரசாதமாக அதைப் பருகினுள், பின்னர், ராணு ஆணிகள் நிரம்பிய படுக்கையை மீரா உறங்குவதற்காக அனுப்பிஞர். அவள் தன் வழிபாட்டை முடித்துவிட்டு ஆணிகள் நிரம்பிய படுக்கையில் படுத்து உறங்கினுள், ஆகா! ஆணிகள் நிரம்பிய படுக்கை, ரோஜாப் பூக்கள் நிரம்பிய படுக்கையாக மாறிவிட்டது.

தன் கணவரின் உறவினர்களால் இவ்வாறு மீரா சித்திரவதைக்கு ஆளாகியபோது, மீரா துளசிதாசரின் அறிவுரையைக் கேட்டு ஒரு கடிதம் அவருக்கு எழுதினுள். அவள் ''நான் சாதுக்களுடன் பழகுவதனுல் என் உறவினர்கள் அனைவரும் என்னைத் துன்புறுத்துகின்றனர். இல்லத்தில் இருந்துகொண்டு என் பக்திப் பயிற்சிகளைச் செய்து வர என்னுல் முடியவில்லை. என் குழந்தைப் பருவத்திலிருந்தே நான் கிரிதர கோபாலனை என் தோழனுக ஆக்கிக் கொண்டேன். அவன்பால் உள்ள என் பாசம் மிகவும் உறுதி

யானது. அதை இப்போது என்னால் முறித்துக்கொள்ள முடியாது'' என்று எழுதினாள்.

துளசிதாசர், ''இராமனையும், சீதையையும் பகைவர்கள் போல் அவர்களை வழிபடாதவர்கள், உனக்கு எவ்வளவு நெருங்கிய உறவினர்களாக இருந்தாலும் அவர்களை நீ புறக்கணித்துவிடு. பிரகலாதன் தன் தந்தையைப் புறக் கணித்தான்; விபீஷணன் தன் அண்ணன் இராவணனைவிட்டு விலகிச் சென்றான்; பரதன் தன் தாயாரைப் புறக்கணித் தான்; மாபலி தன் குருவையும் அலட்சியம் செய்தான்; விரஜா ஊரின் மகளிராகிய கோபியர், இறைவனை அடைவ தற்காகத் தம் கணவன்மாரையும் விட்டுப் பிரிந்து சென்றார் கள். அவர்கள் யாவரும் அவ்வாறு செய்தமையால் முன்னை வாழ்வைக்காட்டிலும் மகிழ்ச்சி மிக்க வாழ்வையே பெற்றனர். இறைவனுடைய உறவும் அன்பும் மட்டுமே உண்மையானவை; நிலைத்திருப்பவை என்பதே புனித ஞானி யரின் கருத்தாகும்; பிற உறவுகள்யாவும், பொய்யானவை; நிலைத்திராதவை. துளசிதாசன் கூறுகின்றான், 'இராமன் இடத்தில் பாசம் வைத்திருக்கும், மனைவி வணங்கத்தக்கவள் மகன் உயிரினும் இனியவன், அவனே உலகில் எனக்கு உண்மையான நண்பன்'' என்று விடை எழுதினார்.

(2)

ஒரு முறை அக்பரும், அவருடைய அரசவைப் பாடகர் தான்சேனும் மாறுவேடம் பூண்டு, மீராவின் பக்தியும் கிளர்ச்சியும் மிகுந்த பாடல்களைக் கேட்பதற்காகச் சித்தூருக்கு வந்தனர். இருவரும் ஆலயத்திற்குள் நுழைந்து, உள்ளத்தை உயர்த்தும் மீராவின் பாடல்களைக் கேட்டு நெஞ்சார மகிழ்ந்தனர். அக்பர் உண்மையிலேயே மனம் நெகிழ்ந்தார். அவர் புறப்படுவதற்கு முன், மீராவின் புனிதமான காலடிகளைத் தொட்டு வணங்கினார்; பவளங்கள் பதித்த ஒரு காசு மாலையைச் சிலைக்கு முன்னே பரிசாக வைத்தார், அக்பர் மாறுவேடத்தில் ஆலயத்திற்குள் வந்தார் என்றும், மீராவின் காலடிகளைத் தொட்டார்

என்றும் ஒரு காசு மாலையையும் பரிசாக வழங்கினுர் என்றும் எப்படியோ ஒரு செய்தி ராணுவுக்கு எட்டியது. ராணு மிகவும் சினந்தார். அவர் மீராவினிடம், ''ஆற்றில் மூழ்கிச் செத்துப்போ; உன் முகத்தை இனிமேல், உலகத்திற்குக் காட்டாதே. என் குடும்பத்திற்கே உன்னுல் பெருங்களங்கம் ஏற்பட்டு விட்டது'' என்று கூறினுர்.

மீரா தன் கணவரின் சொற்களுக்குக் கீழ்ப்படிந்தாள். மூழ்குவதற்காக அவள் ஆற்றை நோக்கிப் புறப்பட்டாள். இறைவனுடைய திருப்பெயர்கள், ''கோவிந்தா, கிரிதாரி, கோபாலா'' என்பவற்றை எப்போதும் அவளுடைய உதடுகள் உச்சரித்துக் கொண்டிருந்தன. ஆற்றுக்குச் செல்லும் வழியில் அவள் பரவசமடைந்து ஆடிப் பாடினுள். அவள் ஆற்றில் குதிப்பதற்காகத் தன் கால்களைத் தரையிலிருந்து எழுப்பியபோது பின்னுலிருந்து ஒரு கை அவளை இறுகப்பிடித்துக் கொண்டது. அவள் பின்னுல் திரும்பியபோது தன் அன்புக் குரிய கண்ணன் இருப்பதைக் கண்டாள். அவள் மூர்ச்சை யிழந்து விழுந்தாள். சில நிமிடங்களுக்குப்பின் அவள் கண்களைத் திறந்து பார்த்தாள். கண்ணன் புன்முறுவல் பூத்து, அவளிடம் ''மீரா, என் அன்பே! பூத உடம்புள்ள கணவனுடன் வாழும் உன் வாழ்க்கை இத்துடன் முடிந்து விட்டது. நீ முற்றிலும் விடுதலையடைந்து விட்டாய். மகிழ்ச்சியுடன் இரு. நீ எனக்கே சொந்தம். விரஜா ஊரில் உள்ள கொடிப்பந்தலுக்கும் பிருந்தாவனத் தோட்டத்துக் கும் உடனே செல். குழந்தாய், அங்கே என்னைத் தேடு. விரைந்து செல்'' என்று கூறி மறைந்து விட்டான்.

தெய்வ அழைப்புக்கு மீரா உடனே கீழ்ப்படிந்தாள். அவள் இராஜபுதனத்தின் சுடுமணற் பரப்பில் வெறுங் காலில் நடந்து சென்ருள். வழியில் அவளைப் பல பெண் களும், குழந்தைகளும், பக்தர்களும் பெரும் விருந்தோம்பும் பண்புடன் வரவேற்றனர். அவள் பிருந்தாவனத்தை அடைந்தாள். புல்லாங்குழல் வாசிக்கும் அவளுடைய

நேசனை அங்கே கண்டுகொண்டாள். அவள் பிருந்தா வனத்தில் தன் உணவை யாசித்துப் பெற்றாள். கோவிந்த மந்திர் என்ற ஆலயத்தில் வழிபாடு செய்தாள். அப்போதிலிருந்து அந்த ஆலயம் புகழ்பெற்று விளங்கு கின்றது; யாத்திரைக்குரிய புண்ணிய ஸ்தலமாகவும் இப்போது விளங்குகின்றது. சித்தூரில் இருந்த அவளுடைய பக்தர்கள் அவளைக் காண்பதற்காகப் பிருந்தாவனத்துக்கு வந்தார்கள். கும்பராணு ஓர் ஆண்டியைப் போல் மாறு வேடம் புனைந்து வந்து மீராவைச் சந்தித்துத் தம் உண்மை உருவை வெளிப்படுத்தி தாம் முன்பு அவளுக்குச் செய்த தவறுகளுக்காகவும் கொடுமைகளுக்காகவும் மனம் வருந்தி னுர். மீரா, உடனே தன் கணவரின் காலடிகளில் வீழ்ந்து பணிந்தாள்.

ஜீவகோ செய்னர், பிருந்தாவனத்தில் வைணவர்களின் தலைவராக இருந்தார். மீரா அவரைத் தரிசிக்க விரும்பி னுள். அவர் அவளைக் காண மறுத்தார். தம் முன்னிலையில் எந்த ஒரு பெண்ணும் வரத் தாம் அனுமதிப்பதில்லை என்று அவர் அவளுக்குச் சொல்லியனுப்பினுர். மீராபாய், ''பிருந்தாவனத்தில் உள்ள ஒவ்வொருவரும் பெண்தான். கிரிதர கோபாலன் ஒருவன் மட்டுமே புருஷன். பிருந்தா வனத்தில் கிருஷ்ணனுடன் கூட இன்னெரு புருஷனும் இருப்பதை இன்றுதான் நான் அறியலானேன்' என்று மறு மொழி அனுப்பினுள். ஜீவகோ செயினர் நாணமடைந்தார். மீரா மிகுந்த பக்தியுள்ள பெண்மணி என்று அவர் அறிந்தார். அவர் தாமே உடனே சென்று மீராவைச் சந்தித்துத் தம் பணிவான வணக்கங்களைத் தெரிவித்தார்.

(3)

மீராவின் புகழ் பாரெங்கும் பரவியது. எவ்வளவோ இளவரசிகளும் அரசிகளும் வரலாற்றில் வந்து போயுள்ள னர். அரசியர், அரசிளங்குமரிகள், பேரரசிகள் எவ்வளவோ பேர் உலக மேடையில் தோன்றி மறைந்து விட்டனர். சித்தூர் அரசி மட்டும் எப்படி மக்கள் நினைவில் இன்னும்

இருக்கின்ருள்? அதற்கு அவளுடைய அழகு காரணமா? அல்லது அவளுடைய கவிதைத்திறன் காரணமா? இல்லை. அதற்குரிய காரணம், அவளுடைய துறவு; கண்ண னிடத்தில் கொண்ட ஒருமுக பக்தி; மெய்யுணர்வு; கண்ணனை அவள் நேருக்கு நேர் சந்தித்தாள். அவனுடன் அவள் உரையாடிஞள். தன் நேசஞகிய அவனுடன் அவள் உடன் உண்டு மகிழ்ந்தாள். அவள் தன் இதய கீதங்களைத் தன் உள்ளத்தின் ஆழத்திலிருந்து பாடிஞள்; அக்கீதங்கள் அவளுடைய நேசனுக்கு உரியவை; தனிச்சிறப்பு வாய்ந்த அவளுடைய ஆன்மீக அனுபவங்களைப் பற்றியவை சரணு கதியும் பிரேமை அன்பும் பற்றியவை.

அவள் அழகிய அகண்ட காட்சி பெற்ருள். அவள் கண்ணனை மரத்திலும், கல்லிலும், கொடியிலும், பூவிலும், பறவையிலும், எல்லா உயிரினங்களிலும் — ஒவ்வொரு பொருளிலும் கண்டாள். கண்ணனுடைய பெயர் உள்ள அளவும், மீராவின் பெயரும் நிலவிக் கொண்டிருக்கும்.

சாதுவாகவும், தத்துவ ஞானியாகவும், கவிஞராகவும், ஞானியாகவும் விளங்கிய, அற்புதமான ஆளுமை வாய்ந்த மீராவுக்கு இணையாக ஒருவரைக் காண்பது மிகமிகக் கடினம். அவள் கற்றறிந்த மேதையாகவும், மிக உயர்ந்த ஆத்மாவாகவும் இருந்தாள். அவளுடைய வாழ்க்கை தனிச் சிறப்பு உள்ளதாகவும், அளவற்ற அழகும் அற்புத மும் வாய்ந்ததாகவும் இருக்கின்றது. இளவரசியாக இருந்தும் தன் உயர்ந்த அந்தஸ்துக்கேற்ப நுகர வேண்டிய போகங்களையும் ஆடம்பரங்களையும் புறக்கணித்ததோடன்றி அவற்றுக்குப் பதிலாக வறுமையும், கடுமையான விரதங்க ளும், தியாகமும், திதிக்ஷையும், வைராக்கியமும் மிகுந்த வாழ்வைத் தேர்ந்தெடுத்துக்கொண்டாள். மிகவும் மென்மை வாய்ந்த இயல்புள்ள இளம் பெண்ணுக இருந்தும் அவள் பல்வேறு துன்பங்களுக்கிடையே ஆபத்துக்கள் மிகுந்த ஆன்மீகப் பயணத்தை அவள் மேற்கொண்டாள். அவள் பல்வேறு சோதனைகளையும் அச்சமில்லாத துணிச்சலோடும்

மன உறுதியோடும் சகித்துக் கொண்டாள். தன் உறுதியில் அவள் பிடிவாதமாக இருந்தாள். அவள் அசுரத்தனமான மனோசக்தி படைத்திருந்தாள்.

மீராவின் பாடல்கள் படிப்பவர் உள்ளங்களில் நம்பிக்கை, துணிச்சல், பக்தி, இறைவனிடம் அன்பு ஆகியவற்றை ஊட்டு கின்றன. அவை சாதகர்களைப் பக்தி மார்க்கத்தில் செல்லச் செய்து மன உருக்கத்தையும் அற்புதமான மனக் கிளர்ச்சி யையும் உண்டாக்குகின்றன.

அவளுடைய உலகியல் வாழ்க்கையில் துன்பங்களும், துயரங்களும் நிரம்பியிருந்தன. அவள் சித்ரவதைக்கு உள்ளானாள். அவள் துன்புறுத்தப்பட்டபோதிலும் தன் பக்தி யின் வலிமையாலும், கண்ணனின் கருணையாலும், எல்லாச் சோதனைகளின்போதும் அஞ்சாத உணர்வையும், நடுநிலை மனப்பான்மையையும் காத்து வந்தாள். இளவரசியாக இருந்தபோதும் அவள் தன் உணவை யாசித்துப் பெற்றாள்; சில சமயங்களில் தண்ணீரை மட்டுமே பருகி உயிர் தாங்கி இருந்தாள். துறவும், சரணாகதியும் முழுமையாக அமைந்த வாழ்வை அவள் நடத்தினாள்.

அவள் ராகானுகம் அல்லது ராகமாலிகை பக்தி செய் தாள். சாஸ்திரங்களின் கட்டளைகளைப் பற்றியோ அல்லது பொது மக்கள் குறை கூறுவது பற்றியோ அவள் சிறிதும் கவலைப்படவில்லை. அவள் தெருக்களில் ஆடினாள். சடங்கு முறை வழிபாடு எதையும் அவள் செய்யவில்லை. கிருஷ்ண பகவானிடத்தில் அவளுக்கு அன்பு இயற்கையாகச் சுரந்தது. சாதன முறை பக்தியை அவள் பயிற்சி செய்யவில்லை. தன் குழந்தைப் பருவத்திலிருந்தே அவள் கிருஷ்ண பகவானிடத்தில் அன்பைப் பொழிந்தாள். கண்ணனே அவளுக்குக் கணவன், தந்தை, தாய், நண்பன், உறவினன், குரு. கண்ணன் அவளுக்குப் பிராணநாதன். தொடக்க முறை வழிபாடுகள் எல்லாவற்றையும் அவள் தன் முற் பிறவியிலேயே செய்து முடித்திருந்தாள்.

அவள் இயற்கையில் அச்சமில்லாதவள்; பழக்க வழக்கங் களில் எளிமையுள்ளவள்; மன இயல்பில் மகிழ்ச்சி யுள்ளவள்; பிறருடன் பழகும்போது அனுசரித்துப் போ கின்றவள்; பண்பில் கருணையுள்ளவள்; ஒழுக்கத்தில் பெரு மிதம் உள்ளவள். கிரிதர கோபாலனுடைய அன்பில் அவள் தானாக மூழ்கித் திளைத்தாள். கிரிதர கோபாலனுடைய திருநாமத்தை அவளுடைய உதடுகள் எப்போதும் உச்சரித் துக்கொண்டிருந்தன. கனவுகளில் கூட அவள் கண்ணனுடன் வாழ்ந்து அவனுக்குள் தன்னை ஐக்கியமாக்கிய வண்ணமே இருந்தாள்.

தெய்வீகப் பரவசமடைந்த நிலையில் அவள் பொது இடங்களில் ஆடினாள். தான் ஒரு பெண் என்ற எண்ணமே அவளுக்கு இருந்ததில்லை. அவளுடைய உயர்ந்த பக்தி நிலையைச் சொற்களால் விளக்கிச் சொல்ல முடியாது. பிரேமைக் கடலில் அவள் மூழ்கிவிட்டாள். சுற்றுப்புறங் களைப் பற்றியும் தன் உடல் பற்றியும் உணரும் உணர்வு அவளுக்கு இருக்கவில்லை. அவளுடைய பக்தியின் ஆழத்தை யாரே அளந்து காண முடியும்? அவளுடைய உள்முக மகா-பாவத்தின் பிரேமமய நிலையை யாரே புரிந்துகொள்ள முடியும்? அவளுடைய பரந்த மனத்தின் பரப்பளவை யாரே அளக்க முடியும்?

அவள் பக்தியின் நறு மணத்தைப் பாரெங்கும் பரவச் செய்தாள். அவளுடன் தொடர்பு கொள்ள வந்தவர்கள், அவளுடைய பிரேமை என்னும் வலிமை வாய்ந்த காந்தத் தால் கவரப்பட்டார்கள். அவள் கௌராங்க பிரபுவைப் போல் இருந்தாள். அவள் களங்கமற்ற இயல்பும், அன்பின் இயல்பும் ஒருங்கு சேர்ந்த வடிவாக இருந்தாள். அவளுடைய இதயம் பக்தியின் ஆலயமாக இருந்தது. அவளுடைய முகம் பிரேமை என்னும் தாமரை மலராக இருந்தது. அவளுடைய பார்வையில் அன்பு இருந்தது; பேச்சில் பிரேமை இருந்தது; சொற்பொழிவில் மகிழ்ச்சி இருந்தது; சொல்லில் சக்தி இருந்தது! பாடல்களில் ஆர்வம்

தொனித்தது. எத்தகைய அற்புதமான பெண்மணி! எத்தகைய அற்புதமான மேதை! எத்தகைய மகிழ்ச்சிகரமான உருவம்!

வாழ்வில் தாங்க முடியாத சுமைகளை இவ்வுலகில் சுமந்து அல்லல்படுவோரின், களைத்துப்போன நரம்புகளுக்கும், புண்பட்டுப்போன உள்ளங்களுக்கும் ஆறுதல் தந்து குளிரச் செய்யும் அரு மருந்தாக அவளுடைய ஆன்மீகப் பாடல்கள் அமைந்து குணப்படுத்துகின்றன. அவளுடைய பாடல்களின் இனிய இசை கேட்பவர்களை அன்பின் செல்வாக்குக்கு உட்படுத்துகிறது; அவர்களுடைய உள்ளத்தில் நிலவும் பேத உணர்வுகளையும் மாறுபட்ட எண்ணங்களையும் நீக்கி அயர்ந்த உறக்கத்தில் ஆழ்த்துகிறது. கல் நெஞ்சம் படைத்த நாத்திகரும் மன நெகிழ்ச்சியடையச் செய்யுமாறு அவளுடைய பக்திப் பாடல்களில் உள்ள அன்பின் மொழி சக்தி வாய்ந்ததாக உள்ளது.

உலக நாடக மேடையில் அவள் தன் பாத்திரத்தை நன்கு நடித்தாள். இறைவனிடம் அன்பு செலுத்தும் நெறியை அவள் உலகத்தாருக்குக் கற்பித்தாள். குடும்பத் தொல்லைகள், துன்பங்கள் என்னும் புயற்காற்று வீசும் கடலில் அவள் தன் படகை மிகவும் விவேகத்துடன் செலுத்திப் பேரின்ப அமைதி, முற்றிலும் அச்சமின்மை, பேரன்பு ஆட்சி செய்யும் அரசு என்னும் மறு கரையை அடைந்தாள். அவள் மென்மை மிகுந்த பெண் பாலாக இருப்பினும் அவளிடம் அஞ்சாமை உணர்வும் தைரியமும் எந்த அளவு இருந்தன ! இளம் பெண்ணாக இருந்தும் அவள் சித்திரவதைகளை மௌனமாகச் சகித்துக்கொண்டாள். உலகத்தார், மனத்தைத் துளைக்கும் பழிப்புரைகளையும் இகழ்ச்சியுடன் குறை கூறிய உரைகளையும் அவள் துணிவுடன் பொறுத்துக் கொண்டாள். உலகின் மீது அவள் அழியாத பதிவை விட்டுச் சென்றிருக்கின்றாள்; தலைமுறை, தலைமுறையாக அவளுடைய பெயர் நிலவிவரும்.

பிருந்தாவனத்திலிருந்து மீரா, துவாரகைக்குப் புறப்பட்டாள். அங்கு ரங்கோத் ஆலயத்தில் கிருஷ்ண பகவானுடைய உருவத்துடன் அவள் ஐக்கியமாகி விட்டாள்.

## 37. சக்குபாய்

கிரார் என்பது மராட்டிய மாநிலத்தில் கிருஷ்ணா நதிக் கரையில் உள்ள ஒரு கிராமம். அங்கு ஓர் அந்தணர் தம் மனைவி, மகன், மருமகள் ஆகியோருடன் வாழ்ந்தார். மருமகளின் பெயர் சக்குபாய்.

சக்குபாய், பண்டரிபுரத்தில் உள்ள கிருஷ்ண பகவானுடைய மிகப் பெரும் பக்தை. பகவானுடைய பெயர் அவளுடைய உதடுகளில் எப்போதும் இருக்கும். அவள் கீழ்படியும் குணமும், பணிவும், எளிமையும், நற்குணங் களும் உள்ளவள். அவளுடைய மாமியார் கொடூரமும், கர்வமும், கல் நெஞ்சமும் உள்ளவள். அந்தணரும் அவருடைய மகனும் அவளுக்கு முற்றிலும் கைப்பாவை களாக இருந்தனர். அவர்கள் சக்குபாயைக் கடுமையாக நடத்தினர்.

சக்குபாய் வீட்டு வேலைகளைச் செப்பமாகச் செய்து வந்தாள். அவள் கடுமையாக உழைத்த போதிலும் அவளுடைய மாமியார் அவளைத் திட்டுவதும், காலால் உதைப்பதுமாக இருந்தாள். சக்குபாய்க்கு அவள் ஒரு போதும் வயிறு நிறையும்படி உணவு வழங்கியதில்லை. சக்குபாய் பழையதாகிப்போன பண்டங்களையே உண்ண வேண்டியிருந்தது. அவள் ஒவ்வொன்றையும் பொறுமை யுடன் சகித்துக் கொண்டாள். அவள் எப்போதும் வாய் திறந்து பேசியதில்லை. அவள் தன் கணவனிடம் மனம் திறந்து பேச முடியவில்லை; ஏனெனில் அவன் தன் தாயாரின் கட்டுப் பாட்டில் இருந்தான். சக்குபாய் எப்போதும் மகிழ்ச்சியுடன் இருந்தாள். அவள் தனக்குள், ''செல்வச் செழிப்புள்ள

நிலையில் இறைவன் என்னை வைத்திருந்தால் நான் அவனை மறந்திருப்பேன்; ஆதலால் இந்த நிலையில் என்னை வைத்துள்ள இறைவனுக்கு நான் மிகுந்த நன்றி செலுத்துகின்றேன்,'' என்று கருதினாள்.

ஒரு நாள் பக்கத்து வீட்டிலிருந்த ஒரு பெண் சக்குபாயினிடம், ''என் அன்புத் தங்கையே! நான் உனக்காக மிகவும் பரிதாபப்படுகிறேன். உனக்குப் பெற்றோர்கள் இல்லையா? அவர்களில் ஒருவர் கூட வந்து உன்னைப் பார்க்காமல் எப்படி அவர்களால் இருக்க முடிகிறது?'' என்று கேட்டாள். சக்குபாய் புன்முறுவல் பூத்து, ''என் பெற்றோர் பண்டரிபுரத்தில் இருக்கிறார்கள். கிருஷ்ண பகவான் என் தந்தை. ருக்மணி என் தாயார். அவர்களுக்கு எண்ணற்ற குழந்தைகள் இருக்கின்றார்கள். ஆதலால் அவர்கள் என்னை மறந்துவிட்டார்கள். ஆனால் நிச்சயம் ஒரு நாள் அவர்கள் என்னைப் பார்க்க வருவார்கள்; என் துன்பங்களையும் நீக்குவார்கள்'' என்று கூறினாள்.

பண்டரிபுரம் யாத்திரைக்குரிய புண்ணிய தலம். ஆனித் திங்கள் ஏகாதசி அன்று அங்கு பெரும் விழா நடைபெறும். பல்வேறு இடங்களிலும் இருந்து மக்கள் அங்கு வந்து திரண்டு, விட்டல பகவானுடைய தரிசனம் பெறுவதற்காக வருவார்கள். பகவானுடைய பக்தர்கள் சிறிய கொடிகளைத் தங்கள் கைகளில் ஏந்தியவர்களாக கிராம் கிராமம் வழியாகப் பண்டரிபுரம் நோக்கிச் செல்வார்கள். அவர்கள் பகவானுடைய திருப்பெயரை உச்சரித்தவாறு கிதாரை இசைத்துக் கொண்டு, ஜாலராக்களில் தாளமிட்டு ஆடுவார்கள்.

சக்குபாய், பக்தர்களின் ஒரு குழுவைப் பார்த்தாள். இக் குழுவுடன் சேர்ந்துகொண்டு பண்டரிபுரத்தைப் பார்க்கச் செல்ல வேண்டுமென்று அவளுக்கு உறுதியான விருப்பம் ஏற்பட்டது. இதற்காக அவள் தன் குடும்பத்தாரின் அனுமதியைப் பெற முடியாது; எனினும் அவள் அந்தக் குழுவுடன் போய்ச் சேர்ந்துகொண்டாள்.

சக்குபாய் அக்குழுவுடன் சேர்ந்ததைப் பார்த்துவிட்ட பக்கத்து வீட்டுப் பெண் ஒருத்தி, உடனே அவளுடைய மாமியாரிடம் புகார் கூறினாள். சக்குபாயை வீட்டுக்கு அழைத்து வருமாறு அவள் தன் மகனிடம் தெரிவித்தாள். அவன் சென்று சக்குபாயின் கூந்தலைக் கையால் பிடித்துக் கொண்டு அவளை வீட்டுக்கு இழுத்துக்கொண்டு வந்தான். வழியில் அவன் பல முறை அவளைத் திட்டினான்; உதைத்தான்.

அந்தணர், அவருடைய மனைவி, மகன் ஆகியோர் சேர்ந்துகொண்டு அவளை வலிமைவாய்ந்த கயிற்றால் தூணில் கட்டிவிட்டார்கள். சக்குபாய் பகவானிடம், ''பண்டரிபுர விட்டலா! நான் என்னை உன்னுடைய கமல பாதங்களில் கட்டிவைக்க விரும்பியிருந்தேன்; ஆனால் நான் இங்கு கயிற்றால் கட்டப்பட்டிருக்கிறேன். என் உடம்பு இங்கு கட்டுண்டிருக்கிறது; ஆனால் என் மனம் எப்போதும் விடுதலையாக உள்ளது. என் மனம் எப்போதும் உன் கமல பாதங்களில் பதிந்துள்ளது. நான் இறப்பதைப் பற்றியோ, என் உடம்பு சித்திரவதை செய்யப்படுவது பற்றியோ சிறிதும் அஞ்சவில்லை. எப்படியாவது உன் தரிசனத்தைப் பெற வேண்டும் என்பதே என் ஆசை. நீயே என் தந்தை, தாய், குரு, ஆசான் எல்லாம். கருணை மிகுந்த தெய்வமே! என் தாழ்ந்த வேண்டுகோளை நிறை வேற்ற மாட்டாயா?'' என்று முறையிட்டாள்.

முறையீடு உள்ளத்தின் ஆழத்திலிருந்து வந்ததால் இறைவன் அதைக் கேட்கிறான். உடனே அவன் முறை யீட்டுக்குச் செவி சாய்க்கிறான்; உதவிக்கு வருகின்றான். சக்குபாயின் முறையீடு கிருஷ்ண பகவானின் உள்ளத்தை ஊடுருவியது. அவன் உடனே மனம் நெகிழ்ந்தான். அவன் உடனே, ஒரு பெண்ணின் வடிவில் சக்குபாயின் முன்னே தோன்றி, ''அன்புத் தங்காய்! நான் பண்டரிபுரம் செல்லுகின்றேன். நீயும் வருகின்றாய், இல்லையா?'' என்று கூறினான். சக்குபாய், 'நான் தூணில் கட்டப்பட்டிருக்கிற

போது, எப்படி அங்கு வர முடியும்? அங்கு வரவேண்டும் என்ற உறுதியான ஆவல் எனக்கு நிச்சயமாக இருக்கின்றது' என்று தெரிவித்தாள்.

அந்தப் பெண், ''தங்கையே! நான் உன் தோழி. உனக்குப் பதிலாக நான் இங்கு கட்டுண்டிருக்கின்றேன். நீ பண்டரிபுரத்திற்குப் போகலாம்'' என்று கூறினுள். அவள் கயிற்றை அவிழ்த்துச் சக்குபாயை விடுவித்தாள்; அவளுக்குப் பதிலாகத்தானே கயிற்றுல் தன்னேக் கட்டிக் கொண்டாள். பகவானுடைய கருணையால் சக்குபாய் ஒரே கணத்தில் பண்டரிபுரத்தில் இருந்தாள். அவள் அளவற்ற மகிழ்ச்சியை அடைந்தாள். அவள் தனக்குள், ''நான் உண்மையில் பகவானுடைய அருளுக்குப் பாத்திரமாக இருக்கின்றேன். நான் கயிற்றிலிருந்து மட்டும் விடுபட வில்லே, வாழ்க்கையின் பந்தங்களிலிருந்தும் விடுபட்டுள்ளேன். இப்போது எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக இருக்கின்றது'' என்று நினைத்தாள்.

பகவான் சக்குபாயின் வடிவத்தை அடைந்து தன் பக்தையின் அடிமை ஆனுன். மூவுலகங்களுக்கும் இறைவன், யாருடைய நாமத்தை உச்சரித்தால் மாயையின் பந்தங்கள் தளர்கின்றனவோ அந்த இறைவன் தானே இப்போது கட்டுண்டான்; எல்லாம் தன் பக்தையின் அன்பினுல்தான். என்னே அவனுடைய கருணே! அந்தணர், அவருடைய மனேவி, மகன் ஆகியோர் புதிய சக்குபாயைக் கடிந்து பேசினர்; ஆனுல் பகவான் மிகுந்த மகிழ்ச்சியை அடைந்தார்.

பதினேந்து நாட்கள் சென்றன. புதிய சக்குபாய்க்கு ஒரு கவளம் உணவுகூடக் கிடைக்கவில்லே. கணவன் சிறிது இரக்கம் காட்டத் தொடங்கினுன். அவன் தனக்குள் ''அவள் இறந்துவிட்டால் மக்கள் அனேவரும் என்னேத் திட்டுவார்கள். என் பெற்றோர் மிகவும் கொடுமை பாராட்டுபவர்கள் என்பது எல்லோருக்கும் தெரியும், ஆதலால் எனக்கு இன்னொரு மனேவி கிடைக்கமாட்டாள்'' என்று

நினைத்தான். அவன் அவள் மீது பரிதாபப்பட்டுத் தன் கொடிய செயல்களைக் குறித்து மனம் வருந்தினான். அவன் அவளுடைய கட்டை அவிழ்த்து' ''அன்புள்ள சக்கு! உன்னை மிகவும் கொடூரமாக நடத்திவிட்டேன். என் பெற்றோரும் உனக்குப் பல தொல்லைகளைத் தந்தனர். இனிமேல், தயவு செய்து எங்களை மன்னித்துவிடு. நீராடி உணவை உட்கொள்'' என்று வேண்டினான். புதிய சக்குபாய் (பகவான்) பதிபக்தியுள்ள மனைவியைப்போல் தலை குனிந்த வாறு யாவும் கேட்டுக்கொண்டாள். தான் முன்னதாகவே மறைந்துவிட்டால், இவர்கள் சக்குபாய் மீண்டும் திரும்பி வந்தபின் இன்னும் மிகுதியாகக் கொடுமைப்படுத்துவார்கள் என்று பகவான் கருதினான். எனவே அங்கேயே தங்கியிருந்து சக்குபாயைப்போலவே அக்குடும்பத்திற்குப் பணிவிடைகள் செய்ய முடிவு செய்தான்.

சக்குபாய் நீராடி முடித்துச் சுவையான உணவுகளைச் சமைத்தாள். மூவரும் உண்டனர். சக்கு கடைசியில் உண்டாள். அவர்களனைவரும் சக்குவின் சமையல் திறனைப் புகழ்ந்தனர். அவர்கள் உண்டதுபோன்ற அதே வகை உணவைச் சக்கு உண்டது இதுவே முதல் தடவை. சக்கு, மாமியாரின் காலடிகளை நீவினாள்; மற்ற பணிகளையும் அவர்கள் மிகவும் திருப்தியடையுமாறு செய்து முடித்தாள். இப்போது அந்தணர், அவர் மனைவி, மகன் ஆகியோர் சக்குவினிடம் மிகுந்த மகிழ்ச்சியாக இருந்தனர்.

உண்மையான சக்குபாய் பண்டரிபுரத்தை அடைந்தாள்; சந்திரபாகை நதியில் நீராடினாள்; கிருஷ்ணபகவான் அல்லது விட்டலரின் தரிசனம் பெற்றாள். பண்டரிபுரத்தைவிட்டுச் செல்வதில்லை என்று விரதம் எடுத்துக் கொண்டாள். அவள் தெய்வீகப் பேரின்பத்தில் மூழ்கினாள். அவள் எல்லா உணர்வுகளையும் இழந்து கீழே விழுந்து இறந்துவிட்டாள்.

கிரார் கிராமத்துக்கு பக்கத்தில் உள்ள கிவால் என்ற ஊரைச் சேர்ந்த ஓர் அந்தணன் அப்போது கோயிலில்

இருந்தான். அவன் சக்குபாயை அடையாளம் கண்டு கொண்டு, தனக்குத் தெரிந்த நண்பர்களின் உதவியினால் அவளுடைய இறந்த உடம்பைக் சுடுகாட்டுக்கு எடுத்துச் சென்று சிதையில் வைத்துத் தீ மூட்டி இறுதிக் கடன்களைச் செய்தான்.

கிருஷ்ண பகவானின் தேவியாகிய ருக்மணி மிகப் பெரும் குழப்பமடைந்தாள். பகவானோ கிரார் கிராமத்தில் இருக்கின்றான். இறந்துவிட்ட சக்குபாயின் பாத்திரத்தை அவன் அங்கு நடித்துக் கொண்டிருக்கின்றான். அவளுடைய உடம்பு ஏற்கனவே சிதை நெருப்புக்கு இரையாகிவிட்டது. அவள் தனக்குள், ''கிரார் கிராமத்திலிருந்து என் பகவானை எப்படி நான் திரும்பப் பெறுவேன்?'' என்று தனக்குள் நினைத்தாள். தன் யோக சக்தியால் அவள் ஒரு புதிய சக்குபாயைத் தோற்றுவித்தாள்.

சக்குபாய் ஒரு கனவு கண்டாள். ருக்மணி தேவி, சக்குபாயின் கனவில், 'அன்புள்ள சக்கு! பண்டரிபுரத்தை விட்டுச் செல்வதில்லை என்று நீ ஒரு விரதம் எடுத்துக் கொண்டாய். நல்லது நீ விரதம் எடுத்துக் கொண்ட போது இருந்த உன் உடம்பு ஏற்கனவே சாம்பலாகிவிட்டது நான் உனக்குப் புதிய உடம்பைத் தந்திருக்கின்றேன். உன் ஊருக்குத் திரும்பிப் போ. பகவான் உன்னை ஆசீர்வதித்துள்ளார்'' என்று கூறினாள்.

சக்குபாய் தன் ஊருக்குத் திரும்பி வந்தாள். அவள் தன் தமக்கையை ஆற்றில் சந்தித்து, ''அன்புத் தமக்கையே! உன் உதவியினால்தான் நான் பகவானைத் தரிசிக்க முடிந்தது. நான் உனக்கு நன்றி செலுத்துகின்றேன். நீ எனக்குச் செய்த உதவிகளுக்கெல்லாம் நான் என்ன கைம்மாறு செய்யப்போகின்றேன்!'' என்று கூறினாள்.

பகவான் தண்ணீர்க் குடத்தைச் சக்குவினிடம் ஒப்படைத்து அதை வீட்டுக்கு எடுத்துச் செல்லுமாறு கூறி விடை பெற்றான். சக்கு தண்ணீர்க் குடத்துடன் வீட்டுக்குத்

திரும்பிவந்து, வழக்கம்போல் பணிகளைச் செய்யத் தொடங்கினாள். தன் மாமியார், மாமனார், கணவன் ஆகியோர் தன்னிடம் பாராட்டிய மனப்பான்மையில் மிகப் பெரிய மாறுதல் ஏற்பட்டிருப்பதைப் பார்த்துப் பெரிதும் ஆச்சரியமடைந்தாள்.

அடுத்தநாள் கிவால் கிராமத்து அந்தணன், சக்குபாயின் மரணத்தை அறிவிப்பதற்காகக் கிரார் ஊருக்கு வந்தான். சக்குபாய் வீட்டு வேலைகளைச் செய்துகொண்டிருப்பதை அவன் கண்டான். அவன் மிகவும் வியப்படைந்தான். அவன் சக்குபாயின் மாமனாரிடம் உன் மருமகள் பண்டரிபுரத்தில் இறந்து விட்டாள். நானும் என்னுடைய நண்பர்களும் சேர்ந்து அவளுடைய உடம்பைச் சிதையில் வைத்து எரித்து விட்டோம். அவளுடைய பேய்தான் இப்போது உன் வீட்டில் நடமாடிக் கொண்டிருக்கின்றது என்று நினைக் கின்றேன்,'' என்று கூறினான்.

மாமனாரும் அவள் கணவனும், ''சக்கு எப்போதும் இங்குதான் இருந்து வருகின்றாள். அவள் பண்டரி புரத்துக்கு ஒரு நாளும் போகவில்லை. நீ வேறு யாராவது ஒரு பெண்ணின் உடம்பை எரித்திருப்பாய்,'' என்று கூறினார்.

கிவால் கிராமத்து அந்தணன், ''இப்போது உன் மருமகளை அழைத்து, அவள் பண்டரிபுரத்துக்குப் போனாளா இல்லையா என்று கேட்டுப் பார்'' என்று தெரிவித்தான்.

மாமனார், ''அன்புள்ள சக்கு! உண்மையைச் சொல். அஞ்சவேண்டாம். நீ பண்டரிபுரத்துக்குப் போனாயா? என்ன நடந்தது என்று சொல்'' என்று கேட்டார்.

சக்கு, பண்டரிபுரம் செல்லவேண்டும். என்று எனக்கு மிகுந்த ஆசை இருந்தது. நான் தூணில் கட்டப்பட்டிருந்த போது, என்னைப்போலவே இருந்த ஒரு பெண், என்னிடம்

வந்து கயிற்றை அவிழ்த்து எனக்குப் பதில் அவள் கட்டுண்டு, பண்டரிபுரத்துக்கு என்னைப் போகுமாறு கேட்டுக் கொண்டாள். நான் பண்டரிபுரம் சென்றேன். விட்டல பகவானுடைய சிலைக்கு முன்னே நான் உணர்விழந்து விழுந்துவிட்டேன். ருக்மணி தேவி என் கனவில், 'உன் உடல் எரிக்கப்பட்டு விட்டது. நான் உனக்குப் புது உடம்பும் புது வாழ்வும் தந்துள்ளேன். உன் ஊருக்குப்போ'' என்று கூறினாள். நான் திரும்பி வந்து ஆற்றில் அப்பெண்ணைச் சந்தித்தேன். அவள் தண்ணீர் குடத்தை வீட்டுக்கு எடுத்துக்கொண்டு போ, என்று என்னிடம் கூறிச்சென்று விட்டாள். அந்தப் பெண் பாண்டுரங்க பகவான், கிருஷ்ண பகவான் தான் என்று நான் நிச்சயமாகக் கூறுகின்றேன். பகவானுடைய தரிசனத்தைப் பெற்ற நீங்கள் அனைவரும் பாக்கிய சாலிகள்'' என்று கூறினாள்.

அந்தணர், அவர் மனைவி, மகன் ஆகியோர், அந்தப் பெண் பண்டரிபுரப்பகவான் தான் என்பது நிச்சயம் என்று அறிந்தனர். பகவானுக்குத் தாங்கள் செய்த தவறுகளை நினைத்து வருந்தினர். பகவானுடைய தொடர்பினால் அம் மூவரும் தூய்மை பெற்றனர். அவர்களுடைய உள்ளங்கள் மாறுதல் பெற்றன. மிகுந்த பக்தியுடன் அவர்கள் பகவானை வணங்கத் தொடங்கினர். அவர்கள், ''பகவானே! எங்களை மன்னியுங்கள், உன் பக்தை சக்குபாயை மிருகத்தனமாக நடத்தினோம். உன்னையும் நாங்கள் இழிவாக நடத்தினோம். கருணைக் கடலே! எங்களை மன்னியும். உன் கமலபாதங்களில் நாங்கள் அடிபணிகின்றோம். எங்களை உயர்வடையச் செய். எங்களைக் காப்பாற்று,'' என்று வேண்டினர்.

அவர்கள் சக்குபாயையும் வணங்கத் தொடங்கினர்.

## 38. மதாலசா

மதாலசா ஒரு ஞானி. தன் புதல்வர்கள் அனைவரையும் அவள் ஞானிகளாக மாற்றினாள். தன் குழந்தைகளைத்

தொட்டிலில் இட்டுத் தாலாட்டும்போது அவள், ''சுத்தோஸி; புத்தோஸி; நிரஞ்சனோஸி; சம்சாரமாயா பரிவ்வரிஜித்தோஸி — குழந்தாய் நீ தூய்மை வடிவினன்; சர்வக்ஞன்; களங்கமற்றவன்; பிறப்பு, இறப்பு என்னும் தடைகள் நீங்கியவன்; என்று பாடுவது வழக்கம். அவர்கள் தாய்ப்பாலுடன் வேதாந்த போதனைகளையும் உடன் பருகியமையால், நாளடைவில் ஞானிகள் ஆயினர்.

மதாலசாவின் அடிச்சுவடுகளைத் தாய்மார்கள் அனைவரும் பின்பற்றி நடந்து தங்கள் குழந்தைகள் தர்மமும் வாய்மையும் ஆகிய மார்க்கத்தில் செல்லத் தகுந்த பயிற்சிகளைத் தரவேண்டும்.

---

# 5-வது அத்தியாயம்

# சூஃபி ஞானியர்

## 39. மன்சூர்

மன்சூர், பாக்தாத்தில் வாழ்ந்த ஞானி என்று அனைவரும் அறிவர். நானூறு ஆண்டுகளுக்கு முன்பு, பாக்தாத்தை காலிப் ஹரூன்-அல்-ரஷீத் ஆட்சி செய்தபோது, அவர் வாழ்ந்தார். அவர் ஏழை; எனினும் மத உணர்வும் அறப் பண்பும் வாய்ந்த முகம்மதியப் பக்கிரியாக அவர் இருந்தார். அவர் இடையுறுத தியானத்தைப் பயின்று, எல்லாப் பெயர்களிலும் உருவங்களிலும் இறைவனைக் கண்டார். அவர் பரமாத்மாவின் அகண்ட வடிவைத் தரிசித்தார். தெய்வீகப் பேரொளி அவர் மீது இறங்கியது. அவர் ஆத்மாவை உணர்ந்தார். தன் ஆத்மாவும் பரமாத்மாவும் ஒன்று என்று அவர் கண்டார். 'அனல் ஹக்' (நான் பிரம்மம்) என்ற கொள்கையை அவர் உலகத்திற்கு அறிவித்தார். தெய்வீக போதை ஏறிய மன்சூர், தாம் எங்கு சென்றாலும் 'அனல் ஹக்' என்று உச்சரித்தார். 'அனல் ஹக்' என்பது,

சோஹறப், கிவோஹம் அல்லது வேதாந்திகள் கூறும் ''அஹம் பிரம்மாஸ்மி'' என்பதோடு ஒத்திருக்கின்றது. முகம்மதியர், மன்சூரை மத விரோதி அல்லது காபிர் என்றும் வஞ்சகர் என்றும் கருதினர்.

மன்சூர் நற்பண்புள்ளவராதலால், மௌல்விகள் (முகம்மதியப் பாதிரிமார்) அவர்பால் இரக்கங்கொண்டு அவர் ''அனல் ஹக்'' என்று உச்சரிப்பது தவறானது என்று அவருக்கு உணர்த்தத் தங்களால் இயன்ற அளவு முயற்சி செய்தனர். ஆனால் மன்சூர் தம் நம்பிக்கைகளில் மிகவும் உறுதியாக இருந்தார். பிறகு, அவர்கள் மன்சூர் பொது மக்கள் முன்னிலையில் தூக்கில் இட்டுக் கொல்லப்பட வேண்டும் என்று ஆணையிட்டனர். கம்பத்தில் அவருடைய கைகளும் கால்களும் கட்டப்பட்டன. அவர் வெட்டப் படும் நிலையில் இருந்தார். தம்முடைய கொள்கையை மாற்றிக் கொள்ளுமாறும், 'அனல் ஹக்' என்று உச்சரிப்பதை விட்டு விடுமாறும் அவரைக் கேட்டுக் கொண்டனர். கொள்கையா அல்லது வாழ்வா என்பதை முடிவு செய்யுமாறு அவரிடம் கூறினர்; அப்போதும் மன்சூர் பிடிவாதமாக இருந்தார். அவர் இம்மியும் அசைந்து கொடுக்கவில்லை. இதைப் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் அனைவரும் ஆச்சரியமடைந்தனர்.

முதலில் மன்சூருடைய கால்கள் வெட்டப்பட்டன. ஆனால் மன்சூர் புன்னகையுடன், 'அனல் ஹக்' என்றார். பிறகு அவருடைய கண்கள் பறிக்கப்பட்டன. அப்போதும் மன்சூர் புன்னகையுடன் 'அனல் ஹக்' என்று உச்சரித்தார். அடுத்து அவருடைய கைகள் வெட்டப்பட இருந்தன. அங்கு கூடியிருந்த மக்கள் அனைவரும் அவர்பால் இரக்கங் கொண்டனர். அவரை விட்டு விடுமாறு அவர்கள் மௌல்விகளினிடம் வேண்டினர். கூடியிருந்த கோடிக்கணக் கான மக்கள் 'அனல் ஹக்' என்று உச்சரித்தனர். மன்சூர் இப்போது பெரும் மனநிறைவு பெற்றார். மக்களின் வேண்டு கோளைப் புறக்கணித்து மன்சூரின் தலையை வெட்டினர்.

உடம்பிலிருந்து வெளியே பாய்ந்த இரத்த வெள்ளம் 'அனல் ஹக்' என்று அலறியது. உடம்பு எரிக்கப்பட்டுச் சாம்பலாகியதும் அந்தச் சாம்பல் 'அனல் ஹக்' என்று அலறியது.

ஒரு ஞானியைக் கொலை செய்துவிட்டோம் என்று இப்போதுதான் மௌல்விகள் உணர்ந்து தம் செயலுக்காக மனம் வருந்தினர். அவருடைய உடம்பு எரிக்கப்பட்டுச் சாம்பலாகிய பின்னும் அவருடைய ஆவி வாழ்கின்றதென்று அவர்கள் தெளிந்தனர். இரத்தப் பெருக்கும், சாம்பலும் 'அனல் ஹக்' என்று அலறியதைக் கேட்டு அவர்கள் பெரும் வியப்படைந்தனர். 'அனல் ஹக்' என்ற தம் கொள்கையை நிலை நாட்டுவதற்காக மன்சூர் மிகப் பெரிய விலையைத் தந்தார். தம்முடைய உறுதியான நம்பிக்கைகளின் பொருட்டு அரிய விலையைத் தந்து 'அனல் ஹக்' என்ற கொள்கையையும் தம் பெயரையும் அவர் அழியா அமரத்துவம் அடையச் செய்துவிட்டார். நானூறு ஆண்டுகளுக்கு முன்பு மன்சூர் மறைந்தார்; ஆனால் அவருடைய 'அனல் ஹக்' உலகில் இன்றும் வாழ்கின்றது. தம்முடைய கைகள் வெட்டப்பட்டுக் கண்கள் பறிக்கப்பட்டபோதும் கூடத் தம் கொள்கைகளில் உறுதியாக நின்ற இந்தப் பெரும் ஞானியின் வரலாற்றை அறியாத முகம்மதியர் ஒருவர்கூட இல்லை.

பண்புள்ள மன்சூர் அனைவர் இதயங்களிலும் இன்னும் வாழ்கின்றார். தம் கொள்கைகளுக்காக மிகப் பெரும் விலையைத் தந்த மன்சூருக்கு இணையான ஒரு ஞானியை, ஞானிகளின் வரலாறுகளில் காண முடியவில்லை.

மன்சூரின் பெருமை ஓங்குக!

## 40. ஷம்சு டெப்ரீசு

ஷம்சு டெப்ரீசு, முல்தானில் வாழ்ந்த மற்றொரு பிரம்ம ஞானி. முல்தான், பிரகலாதனுடைய பிறந்த இடம், புகழ்

பெற்ற மன்சூர் அங்கு வாழ்ந்தார். முல்தான் நான்கு ''க''க் களுக்குப் பெயர்போன இடம்; கர்மி (வெப்பம்) கர்தர் (தூசி) கதா (பக்கிரிகள்) கொரஸ்தான் (கல்லறைகள்). ஏறத்தாழ நானூறு ஆண்டுகட்கு முன்பு ஷம்சு டெப்ரீசு வாழ்ந்தார். அவர் ஒரு இந்து மதத் துறவி. துறவு மேற் கொண்ட பின் அவருக்குப் பத்து துறவுப் பெயர்கள் ஏற்பட்டன; அவற்றுள் ஒன்று 'பூரி'. அவரைத் தம் பக்கம் சேர்த்துக் கொள்வதற்காக முகம்மதியர் 'ஷம்சு டெப்ரீசு' என்ற பெயரை வழங்கினர். டெப்ரீசு 'அனல் ஹக்' 'அனல் ஹக்' என்று உச்சரித்துக் கொண்டிருந்தமையால், அப்போதிருந்த பாஷா அவரை வெறுக்கவும் செய்தார்.

ஒரு நாள் ஷம்சு டெப்ரீசு மிகவும் பசியுடன் இருந்தார். யாரோ ஒருவன் அவருக்குப் பச்சை மாமிசம் தந்தான். அவர் அக்கம் பக்கத்தில் இருந்த சிலரிடம் அதை வாட்டு வதற்காகச் சிறிது நெருப்பை வேண்டினர். பாஷாவின் தண்டனை கிடைக்கும் என்பதால் அவர்கள் எல்லோரும் மறுத்துவிட்டனர். ஷம்சு டெப்ரீசு, மாமிசத்தைத் தன் கைகளில் ஏந்திச் சூரியனுக்குக் காட்டி, ''சூரியனே! உடனே இறங்கி வந்து இந்த மாமிசத்தை வாட்டி எனக்குத் தருக!, நான் மிகவும் பசித்திருக்கின்றேன்'' என்று ஆணையிட்டார். உடனே சூரியன் இறங்கி வந்து மாமிசத்தை வாட்டினன். ஷம்சு டெப்ரீசு மிகுந்த மகிழ்ச்சியுடன் அதை உண்டார். தகிக்கின்ற சூரியனின் கதிர்கள் முல்தானின் மக்களையும் பாஷாவையும் சுடத்தொடங்கின. அச்சம் மிகுந்த பாஷா, ஷம்சு டெப்ரீசின் முன்னே வீழ்ந்து அடிபணிந்து, ''என் பிரபுவே! என்னை மன்னியும். சூரியனை, அவன் முன்பு இருந்த இடத்திற்கே போகச் செய்யுங்கள்; இல்லையென்றால் நாங்கள் அனைவரும் இப்போது செத்துப் போய்விடுவோம்'' என்று வேண்டினன். பிறகு ஷம்சு டெப்ரீசு சூரியனிடம், ''சூரியனே! நீ முன்பு இருந்த இடத்துக்கே போய்ச் சேர்'' என்று ஆணை இட்டார். தடை ஏதும் இன்றிச் சூரியன் உடனே அவருடைய ஆணைக்குக் கீழ்ப்படிந்தான்.

ஒரு ஞானி தெய்வமே ஆவார். அவர் சத்—சங்கல் பத்தினுல் எதையும் செய்ய முடியும். அவரிடம் கஜானு இல்லை என்றுலும் அவர் அரசர்களுக்கெல்லாம் அரசர் ஆவார். சக்கரவர்த்திகளுக்கெல்லாம் சக்கரவர்த்தியாக வுள்ள ஒரு துறவியின் முன்னுல் ஒரு சின்னஞ்சிறு பாஷா எம்மாத்திரம்?

பாஷாவின் உத்திரவினுல் ஷம்சு டெப்ரீசு தோல் உரிக்கப்பட்டார்; ஆனுல் அந்த ஞானியோ இயல்பாகச் சிரித்துக் கொண்டிருந்தார்.

## 41. ஜலால்-உத்-தீன் ரூமி

ஜலால்-உத்-தீன் ரூமி மிகப் பெரும் புகழ்பெற்ற பாரசீக ஞானியும் முனிவரும் கவிஞரும் ஆவார். அவர் கி. பி. 1207 செப்டம்பர் 30ஆம் நாள் பால்க் என்ற ஊரில் பிறந்தார். அவருடைய தந்தை பஹாவுத்தீன் வாலத்; அவர் சமய ஈடுபாடும் பண்பாடும் மிகுந்தவர்; அவர் ஒரு கல்லூரியின் புகழ் மிக்க பேராசிரியராகவும் முதல்வராகவும் இருந்தார்.

அவருடைய குடும்பம் பால்க் நகரை விட்டு முடிவாகக் க்யூரியா என்ற ஊரில் குடியேறி நிலையாகத் தங்கியது.

ஜலால், அதிமனித சக்திகள் வாய்ந்த ஒரு குழந்தை மேதை. உலகில் குழந்தை மேதைகள் இருக்கும் இயல்பு, மறு பிறப்புப் பற்றிய உண்மையை மறைமுகமாகப் புலப் படுத்துகின்றது. ஒரு வாழ்க்கைக் காலத்தில் மனிதன் ஓரளவுதான் அறிவும் அனுபவமும் பெறுகின்றுன். ஒரு பேரறிஞுகவோ அல்லது ஒரு குழந்தை மேதையாகவோ ஆவதற்கு முன்பு அவன் பல பிறப்புக்களை எடுத்துப் பல்வேறு வாழ்வுகள் வாழ்ந்து பெறும் பரந்த அனுபவங்கள் யாவற்றையும் ஒன்றுகத் தொகுத்துக்கொள்ள வேண்டி யுள்ளது.

ஆறு வயதுச் சிறுவனாக இருந்தபோதுகூட அவர் அதிசயிக்கத்தக்க தெய்வீகக் காட்சிகளையும் ஆன்மீக அனுபவங்களையும் பெற்றிருந்தார்; அற்புதமான சித்திகளையும் அவர் செய்து காண்பித்தார். அவருடைய தந்தை மறைந்த பின்பு அவர் ஒரு பேராசிரியரானார். அவர் ஒரு அசாதாரண மேதையாக இருந்தபடியால், பல்வேறு இடங்களிலும் இருந்து மாணவர்கள் வந்து அவரிடம் பயின்றனர்.

பின்னர் ஜலால் திருமணம் செய்து கொண்டார். அவர் தம் குருவாகிய ஷம்சு டெப்ரீசை — அனைவராலும் கொண்டாடப்பட்ட சூபி ஞானியாகிய அவரைக் க்யூரியாவில் சந்தித்தார். ஷம்சு டெப்ரீசு, ஜலாலை மிகவும் நேசித்தார். அவர் ஜலாலுக்குச் சூபியிசம் பற்றிய ஆன்மீக போதனைகளை உபதேசித்தார்.

சூபியிசம் வேதாந்தக் கொள்கைகளுடன் ஒத்துள்ளது. சூபி ஞானி பரந்த உள்ளம் படைத்தவர். அவர் மனித சமுதாயம் முழுவதையும் தழுவிக் கொள்ளுகின்றார். எல்லாப் பெயர்களிலும் உருவங்களிலும் அவர் இறைவனைக் காண்கின்றார். அவர் அகண்ட பார்வையுள்ளவர். அவர் அனைவரோடும் ஐக்கியமாகின்றார். அவருடைய கருணைக்கு எல்லை இல்லை. அவருடைய அன்புக்கு அளவு இல்லை. அவர் அன்பின் உருவம். மதம் சம்மந்தமான காரியங்களில் ஜலால் அளவு கடந்த பொறுமை காட்டினார். அவர் அகில உலக அன்பும் சமநோக்கும் உள்ளவர். அவருக்குக் கிறித்தவச் சீடர்களும் இருந்தனர்.

ஜலாலின், புகழ் பெற்ற இருநூல்கள். ''திவானி ஷம்சு டெப்ரீசு; ''மாஸ் நாவி-இ-மா நவி'' என்பனவாகும். அவை கிளர்ச்சி தருவனவாகவும், உள்ளத்தை உருக்குவனவாகவும், ஆன்மாவை மேலே உயர்த்துவனவாகவும் உள்ளன. அவருடைய நூல்களில் ஒவ்வொரு வரியிலும் தெய்வீக அன்பே மூச்சு விடுகின்றது. தெய்வீக அன்பை எப்படி வளர்த்துக்கொள்வது என்பதைப் பற்றியும்,

இறைவனுடன் அடையும் ஐக்கியத்தை எப்படிப் பெறுவது என்பதைப் பற்றியும், தெளிவான போதனைகள் இந்து நூல்களில் உள்ளன.

ஜலால்-உத்-தீன் ரூபி, 'மௌலானா' என்ற பட்டத்தைப் பெற்றார். செல்வர்களும் ஏழைகளும், பிரபுக்களும் பாமர மக்களும் அவரைப் போற்றி மதித்தனர். எண்ணற்ற மக்கள் அவருடைய பாடல்களைப் பாடுகின்றனர். ஐரோப்பிய அறிஞர்கள் கூட ஜலாலை மிகவும் புகழ்கின்றனர். பாரசீகச் சூபிகளிலே மிகப் பெரும் ஞானி என்றும், ஆன்மீக இரகசியங்களைப் பாடியுள்ள மிகப்பெரும் கவிஞர் என்றும், மெய்யுணர்வின் உச்ச நிலையை அடைந்த கிளர்ச்சிமிக்க முனிவர் என்றும் அவர்கள் அவரை மதிக்கின்றனர்.

அவருடைய முக்கியமான போதனைகளுள் சில பின்வருமாறு:—

மத உணர்வுகொள். சிறிதளவே உண். சிறிது நேரமே உறங்கு. சிறிதளவே பேசு. நற்பண்புடன் விளங்கு. தீய குணங்களைக் கொன்று விடு. காமத்தை அழித்துவிடு. பிறர் செய்யும் தீங்குகளையும், கூறும் பழிப்புரைகளையும் பொறுமையுடன் தாங்கிக்கொள். தீயவர் சேர்க்கையை வெறுத்து ஒதுக்கு. ஞானம் மிகுந்த ஞானிகளின் கூட்டுறவை வைத்துக்கொள். மக்களுக்கு நன்மை செய். சித்திகளை வெறுத்துவிடு; ஏனெனில் ஆன்மீகப் பாதையில் செல்ல அவை தடைகளாக உள்ளன''.

ஜலால்-உத்-தீன் ரூபி கி. பி. 1273ல் க்யூரியாவில் மறைந்தார்.

---

# 6–வது அத்தியாயம்

## பொது

### 42. தத்தாத்ரேயர்

கற்புக்கு ஓர் எடுத்துக்காட்டாக அனுசூயை அம்மையாரைப் பெரும்பாலும் குறிப்பிடுவது வழக்கம்; அம்மையார் அத்திரி மகரிஷியின் மனைவி; மகரிஷி, சப்தரிஷிகளில் ஒருவரும் பெரும் முனிவரும் ஆவார். அம்மையார் பதிவிரத தருமத்தில் மிகவும் உறுதியாக நிலைபெற்றிருந்தார். அவர் தம் கணவருக்கு மிகவும் ஆழ்ந்த பக்தியுடன் பணிவிடைகள் செய்தார்; பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோருக்கு இணையான புதல்வர்களைப் பெற வேண்டும் என்று அம்மையார் நீண்டகாலமாகக் கடும் தவம் செய்தார்.

ஒருமுறை நாரதர் ஓர் ஒரு சிறிய இரும்புக்கடலை உருண்டையை எடுத்துக்கொண்டு சென்று சரஸ்வதி தேவியினிடம் தந்து, ''சரஸ்வதி தேவியே! தயவு செய்து இந்த இரும்பு உருண்டையை வறுத்துத் தாருங்கள். என் வழிச் செலவின் போது இதை நான் உண்பேன்'' என்று கூறினார். சரஸ்வதி சிரித்துக்கொண்டு, ''நாரத முனிவரே! இரும்பு உருண்டையை எப்படி வறுப்பது? எப்படி உண்பது?'' என்று கேட்டார். பின்னர் நாரதர் மகாலட்சுமி, பார்வதி ஆகியோரை அணுகி அவர்களிடமும் இரும்பு உருண்டையை வறுத்துத் தருமாறு வேண்டினார். அவர்களும் நாரத முனிவரைப் பார்த்து நகைத்தனர். பின்னர் நாரதர், ''தேவியரே! மண்ணுலகில் வாழ்கின்ற, அத்திரி மகரிஷியின் பத்தினியும், பெருமை மிகு பதிவிரதையும் ஆகிய அனுசூயை அம்மையாரிடம் தந்து வறுத்துக்கொள்ளுகின்றேன் பாருங்கள்'' என்று கூறினார்.

பிறகு நாரதர் அனுசூயை அம்மையாரிடம் வந்து இரும்பு உருண்டையை வறுத்துத் தருமாறு வேண்டினார்.

அம்மையார் இரும்பு உருண்டையை வாணலியில் இட்டார்; தம் கணவரின் உருவத்தைத் தியானித்தார்; தம் கணவரின் திருவடிகளை நீராட்டிய புனித நீரிலிருந்து சில துளிகளை இரும்பு உருண்டையின் மீது தெளித்தார். இரும்பு உருண்டை உடனே வறுக்கப்பட்டது. நாரதர், சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி ஆகியோரிடம் சென்று, வறுக்கப்பட்ட இரும்பு உருண்டையை அவர்களின் முன்னே உண்டார்; அவர்களுக்கும் சிறிதளவு உண்ணுமாறு தந்தார். அனுசூயை அம்மையாரின் பெருமையையும், கற்பையும் அவர் வெகுவாகப் புகழ்ந்தார். பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோருக்கு இணையான புதல்வர்களைப் பெற வேண்டும் என்று விரும்பிய அனுசூயை அம்மையாரின் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும் என்று நாரதர் முடிவு செய்தார்.

அவர், சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி ஆகியோரிடம், ''நீங்களும் உங்கள் கணவன்மாருக்கு நம்பிக்கை, நேர்மை, பக்தி ஆகிய பண்புகளுடன் பணிவிடைகள் செய்திருந்தால், உங்களாலும் இரும்பு உருண்டையை வறுத்திருக்க முடியும். அனுசூயை அம்மையாரின் பதிவிரத தருமத்தைச் சோதித்துப் பார்க்குமாறு நீங்கள் உங்கள் கணவன்மாரிடம் வேண்டிக்கொள்ளுங்கள்,'' என்று தெரிவித்தார்.

பிறகு சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி ஆகியோர் தங்கள் கணவன்மாரிடம், அத்திரி மகரிஷியின் மனைவியாகிய அனுசூயை அம்மையாரின் பதிவிரத தருமத்தைச் சோதித்துப் பார்க்குமாறு வேண்டிக்கொண்டு, அம்மையாரிடம் நிர்வாண பிக்ஷை (நிர்வாண நிலையில் இருந்தவாறு வழங்கும் பிக்ஷை) தருமாறு கேளுங்கள் என்றும் தெரிவித்தனர்.

மும் மூர்த்திகளும் தங்கள் ஞான திருஷ்டியினால் நாரதரின் செயலையும், அனுசூயை அம்மையாரின் தவத்தையும் விருப்பத்தையும் அறிந்தார்கள். அவர்கள் சரி என்று இணங்கினர். மும் மூர்த்திகளும் துறவிகள்போல்

கோலங் கொண்டு அனுசூயை அம்மையாரின் முன்னே தோன்றி நிர்வாண பிக்ஷை வேண்டினர். அம்மையார் பெருங்குழப்பமடைந்தார். துறவிகளுக்குப் பிக்ஷை இல்லை என்று சொல்ல முடியாது; பதிவிரதா தருமத்தையும் பாது காக்க வேண்டும். அம்மையார் தம் கணவரின் உருவத்தைத் தியானித்தார்; தம் கணவரின் திருவடிகளை நீராட்டிய புனித நீரிலிருந்து சில துளிகளைத் துறவிகளின் மீது தெளித்தார். சரணம்ருத நீரின் மகிமையால் மும்மூர்த்தி கள், மூன்று குழந்தைகளாக மாறினர். அதே நேரத்தில் அனுசூயை அம்மையாரின் மார்புகளில் பால் சுரந்து நிரம்பியது. அம்மையார் அக்குழந்தைகளைத் தாம் பெற்ற குழந்தைகளாகவே பாவித்து நிர்வாண நிலையில் அக்குழந்தைகளுக்குப் பால் புகட்டித் தொட்டிலில் இட்டார். நீராடச் சென்ற தம் கணவரின் வருகையை அவர் மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்.

அத்திரி முனிவர் வீட்டுக்குத் திரும்பி வந்தவுடனேயே அம்மையார், அவர் இல்லாதபோது நிகழ்ந்த எல்லாவற்றை யும் எடுத்துச் சொல்லி குழந்தைகளை அவருடைய காலடி களில் இட்டு அவரைத் தொழுதார். தம் தெய்வீகப் பார்வையால் முனிவர் எல்லாவற்றையும் ஏற்கனவே அறிந்திருந்தார். அவர் மூன்று குழந்தைகளையும் வாரி அணைத்தார். மூன்று குழந்தைகளும், இரண்டு கால்கள், ஓர் உடம்பு, மூன்று தலைகள், ஆறு கைகள் உள்ள ஒரே குழந்தையாக மாறின. அத்திரி முனிவர் தம் மனைவியை வாழ்த்தி அவருடைய விருப்பத்தை நிறைவேற்ற மும் மூர்த்திகளே குழந்தைகளாக வடிவெடுத்துள்ளனர் என்று அறிவித்தார்.

நாரதர், பிரம்மலோகம், வைகுண்டம், கைலாசம் ஆகிய இடங்களுக்குச் சென்று, சரஸ்வதி, இலட்சுமி, பார்வதி ஆகியோரிடம், அவர்களின் கணவன்மார்கள் அனுசூயை அம்மையாரிடம் நிர்வாண பிக்ஷை கேட்டபொழுது, அந்த அம்மையாரின் பதிவிரத தருமத்தின் சக்தியால் அவர்கள்

குழந்தைகளாக மாற்றப்பட்டனரென்றும் எனவே அம்மூன்று தேவிமார்களும் அத்திரி முனிவரிடம் பதிபிக்ஷை வேண்டிக் கொண்டாலன்றி, மும்மூர்த்திகளும் திரும்பி வரமுடியா தென்றும் தெரிவித்தார். சரஸ்வதியும், இலட்சுமியும், பார்வதியும் சாதாரணப் பெண்களைப்போல் வடிவங் கொண்டு அத்திரி முனிவரின் முன் சென்று, ''ரிஷியே! எங்கள் கணவன்மாரைத் திருப்பித் தாருங்கள்'' என்று பதிபிக்ஷை வேண்டினர். அத்திரி முனிவர் அவர்கள் மூவரையும் முறையாகப் பெருமைப்படுத்தித் தம் இரு கரங்களையும் கூப்பி அவர்களைத் தொழுது தம் விருப்பமும் அனுசூயையின் விருப்பமும் நிறைவேற்றப்பட வேண்டும் என்று இறைஞ்சினர். அப்போது மும்மூர்த்திகளும் தங்கள் உண்மை வடிவுடன் அத்திரி முனிவரின் முன் தோன்றி, நீங்கள் சொன்னவாறு இக் குழந்தை பெரிய ஞானியாக விளங்குவான். அனுசூயையின் விருப்பத்தின்படியே இவன் எங்களுக்கு இணையாகத் திகழ்வான். இக்குழந்தை 'தத்தாத்ரேயன்' என்ற பெயரைத் தாங்குவான்'' என்று கூறினர். பின்னர் அவர்கள் மறைந்தனர்.

தத்தாத்ரேயர் தக்கபருவத்தை அடைந்தார். அவர் மும் மூர்த்திகளின் ஒளி பெற்றவராகவும், பெரிய ஞானி யாகவும் இருந்தமையால் எல்லா முனிவர்களும் துறவிகளும் அவரைத் தொழுதனர். அவர் சாதுவாகவும், சாந்தமாகவும் இனிய இயல்புள்ளவராகவும் இருந்தார். எப்போதும் திரளான மக்களின் கூட்டம் அவரைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தது. தத்தாத்ரேயர் இதனைத் தவிர்க்க முயன்றார்; ஆனால் அவருடைய முயற்சிகள் பயனளிக்க வில்லை. பெருங்கூட்டம் அவரைச் சூழ்ந்து கொண்டிருந்த ஒரு சமயம், அவர் நதியில் நீராட இறங்கி மூழ்கி, மூன்று நாட்கள் வரை வெளிப்படவில்லை. அவர் ஜல சமாதி அடைந்திருந்தார். மூன்றாம் நாள் அவர் வெளியில் வந்து தாம் கரையேறுவதை எதிர்பார்த்து மக்கள், ஆற்றின் இருகரைகளிலும் இன்னும் அமர்ந்திருப்பதையே கண்டார்.

இத்தகைய வழியால் அவர் மக்களைத் தவிர்க்கும் முயற்சியில் வெற்றி பெறவில்லை. வேறொரு திட்டத்தை அவர் மேற்கொண்டார். தம் யோகத் திறமையால் அவர் ஒரு அழகான பெண்ணையும், ஒரு மதுப்புட்டியையும் தோற்றுவித்தார். ஒரு கையில் பெண்ணையும், மற்றொரு கையில் மதுப்புட்டியையும் ஏந்தியவராக அவர் நீரினின்றும் வெளிப்பட்டார். இதைப் பார்த்த மக்கள் தத்தாத்ரேயர் யோகத்திலிருந்து வழுவி விட்டார் என்று கருதி அவரைப் புறக்கணித்துவிட்டு, அப்பாற் சென்றுவிட்டனர்.

தத்தாத்ரேயர் தம் சொந்த உடைமைகள் அனைத்தையும், கந்தை ஆடையையும் தூர எறிந்து அவதூதராகிவிட்டார். வேதாந்த உண்மைகளைப் போதிக்கவும் பரப்பவும் அவர் புறப்பட்டார். சுப்பிரமணியக் கடவுளுக்கு (அல்லது கார்த்திகேயருக்கு) அவர் தம் கீதையாகிய அவதூத கீதையைக் கற்பித்தார். இது வேதாந்த உண்மைகளையும் இரகசியங்களையும் விளக்குவதாகவும், மெய்யுணர்வை நேரே அனுபவிக்கச் செய்வதாகவும் உள்ள உயர்ந்த நூலாகும்.

ஒருமுறை தத்தாத்ரேயர் காட்டில் மகிழ்ச்சியுடன் திரிந்துகொண்டிருந்த போது யது மன்னனைச் சந்தித்தார். பெருமகிழ்ச்சியுடன் இருந்த தத்தாத்ரேயரைப் பார்த்த அவ்வரசன் அவருடைய மகிழ்ச்சியின் இரகசியங்களையும், கூடவே அவருடைய குருவின் பெயரையும் வினவினான். ஆன்மாவே தம் குரு என்று அவர் தெரிவித்தார். இருப் பினும் அவர் இருபத்திநான்கு தனி நபர்களிடமிருந்து ஞானத்தைச் கற்றுக்கொண்டதனால் அந்த இருபத்திநான்கு பேரும் தம் குருமார்கள் என்றும் அறிவித்தார்.

பின்பு தத்தாத்ரேயர் தம்முடையை இருபத்திநான்கு குருமார்களின் பெயர்களையும் குறிப்பிட்டு, அவர்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் தாம் கற்றுக்கொண்ட ஞானத்தைப்பற்றி எடுத்துரைத்தார்.

''என்னுடைய இருபத்திநான்கு குருமார்களின் பெயர்களாவன :— 1) நிலம் 2) நீர் 3) காற்று 4) நெருப்பு 5) ஆகாயம் 6) சந்திரன் 7) சூரியன் 8) புறு 9) மலைப்பாம்பு 10) கடல் 11) விட்டிற் பூச்சி 12) தேனீ 13) தேன் எடுப்பவன் 14) யானை 15) மான் 16) மீன் 17) நாட்டியப்பெண் 18) அண்டங்காக்கை 19) குழந்தை 20) கன்னிப்பெண் 21) பாம்பு 22) கணையைக் கூர்ப் படுத்துவோன் 23) சிலந்திப்பூச்சி 24) குளவி

1. நிலம் தன் மேல் நின்றுகொண்டு மனிதன் தோண்டு தல் முதலிய துன்பங்களைத் தரும் போதும் பொறுமையுடன் தாங்கிக் கொள்வதோடன்றிப் பயிர்களை விளைவித்தல், மரங்களை வளரச் செய்தல் முதலிய பலவகை உதவிகளைச் செய்வதனால் நிலத்தைப் பார்த்து, மற்றவர்களுக்கு நன்மை செய்தலையும், பொறுமையைக் கடைப்பிடித்தலையும் கற்றுக் கொண்டேன்.

2. நீரைப் பார்த்துத் தூய்மைக் குணத்தைக் கற்றுக் கொண்டேன். தூய நீர் மற்றவர்களைத் தூய்மைப்படுத்து வது போலத் தன்னலம், காமம், அகம்பாவம், சினம், பேராசை முதலிய குற்றங்களிலிருந்து விடுபட்டுத் தூய்மை யோடிருக்கின்ற ஞானி, தம்மோடு தொடர்பு கொள்ளும் அனைவரையும் தூய்மைப்படுத்துகின்றார்.

3. காற்று எப்போதும் பல்வேறு பொருள்களினூடே வீசிக்கொண்டிருக்கின்றது. ஆனால் அவற்றுள் எதனாலும் அது பந்தப்படுவதில்லை; எனவே நானும் இவ்வுலகில் பல்வேறு மக்களோடு பழகினும் பந்தப்படாமல் இருக்கக் கற்றுக்கொண்டேன்.

4. நெருப்பு ஒளிமிகுந்து எரிவது போல, ஞானியும் தம் தவத்தினாலும் ஞானத்தாலும் ஒளி மிகுந்து பொலிவுடன் காணப்படவேண்டும்.

5. காற்று, நட்சத்திரங்கள், மேகங்கள் முதலியன யாவும் ஆகாயத்தில் பொதிந்துள்ளன; ஆனால் ஆகாயம்

அவற்றுள் எதனுலும் தொடப்படாமல் இருக்கின்றது. ஆன்மா எங்கும் வியாப்பித்துள்ளது. எனினும் அது எப்பொருளாலும் தொடப்படாமல் இருக்கின்றது என்பதைத் தெரிந்து கொண்டேன்.

6. சந்திரன் தன்னளவில் நிறைவு பெற்றதாக இருக்கின்றது. ஆனல் அதன் மீது விழும் நிலத்தின் நிழல் வேறுபடுவதற்கேற்ப அது தேய்வதாகவோ, வளர்வ தாகவோ காணப்படுகின்றது. ஆன்மா என்றும் நிறைவுள்ள தாகவும், மாறுபாடற்றதாகவும் இருக்கின்றது; உபாதிகள் அல்லது எல்லைக்குட்பட்ட, உடன் சேர்ந்த பகுதிகள் மட்டுமே அதன் மேல் நிழல்களை ஏற்படுத்து கின்றன என்பதை புரிந்து கொண்டேன்.

7. நீர் நிறைந்துள்ள பல்வேறு குடங்களில் ஒரே சூரியன் பல்வேறு பிரதி பிம்பங்களைத் தோற்றுவிப்பது போலப் பிரம்மமும் பல்வேறு உபாதிகள் (உடம்புகள்) காரணமாக மனத்தின் வாயிலாகப் பல்வேறு வகைப்பட்ட தாகத் தோற்றமளிக்கின்றது. சூரியனல் இதைத் தெரிந்து கொண்டேன்.

8. நான் ஒருமுறை, இளங்குஞ்சுகளுடன் ஜோடிப் புருக்களைப் பார்த்தேன். ஒரு வேடன் கண்ணிவைத்துக் குஞ்சுகளைப் பிடித்தான். தாய்ப் புருவுக்குக் குஞ்சுகளின் மீது மிகுந்த பாசம் இருந்தது. தான் உயிர் வாழ்வதைப் பற்றிப் பொருட்படுத்தவில்லையாதலால் அதுவும், கண்ணியில் வீழ்ந்து அகப்பட்டுக்கொண்டது. ஆண் புருவுக்கும் பெண் புருவினிடம் மிகுந்த பாசம் இருந்தது. எனவே அதுவும் கண்ணியில் வீழ்ந்து அகப்பட்டுக் கொண்டது. பாசமே பந்தத்துக்குக் காரணம் என்பதை இதனல் தெரிந்து கொண்டேன்.

9. மலைப்பாம்பு தன் உணவின் பொருட்டு இங்கும் அங்கும் அசைவதில்லை. எது கிடைத்தாலும் திருப்தி அடைந்து ஒரே இடத்தில் படுத்திருக்கின்றது. உணவைப்

பற்றிக் கவலைப்படாமல் இருக்கவும், உண்பதற்கு எது கிடைத்தாலும் திருப்தியடையவும் (அஜகர விருத்தி) இதனால் கற்றுக் கொண்டேன்.

10. நூற்றுக்கணக்கான ஆறுகள் வந்து கலந்தாலும் கடல், அசைவற்று இருப்பது போல, எல்லாவகையான மயக்கங்கள், இடையூறுகள், துன்பங்கள் ஆகியவற்றுக் கிடையே ஞானி, அசையாமல் இருக்க வேண்டும். இது, கடலைப்பார்த்து நான் கற்றுக்கொண்ட பாடம்.

11. நெருப்பின் சுடரொளியால் கவரப்படுகின்ற விட்டிற் பூச்சி அதில் வீழ்ந்து எரியுண்கின்றது; அது போலவே, மோகம் மிகுந்த மனிதன், அழகிய பெண் ணொருத்தியின் காதலில் வீழ்ந்து துன்பத்தைத் தேடிக் கொள்ளுகின்றான். காட்சிப் புலனைக்கட்டுப்படுத்தி, மனத்தைத் தன் ஆன்மாவில் நிலை நிறுத்த வேண்டும் என்பதை இதனால் தெரிந்துகொண்டேன்.

12. கருந்தேனீ, ஒரு மலரில் மட்டும் தேனை உறிஞ்சா மல், பல்வேறு மலர்களிலிருந்து தேனை உறிஞ்சுவது போலவே, நானும் ஒரு வீட்டில் சிறிதளவே உணவைப் பெற்று, மற்றொரு வீட்டில் சிறிதளவு பெற்று இவ்வாறே என் பசியைத் தணித்துக் கொள்ளுகின்றேன். (மதுகரி பிக்ஷை அல்லது மதுகரி விருத்தி). வீட்டாருக்கு நான் ஒரு சுமையல்ல.

13. தேனீக்கள் பெரும் சிரமத்துடன் தேனைச் சேகரிக் கின்றன. ஆனால் தேன் சேகரிப்போன் வந்து மிக எளிதில் தேனை எடுக்கின்றான். அதுபோலவே மக்கள் பெரும் அல்லற்பட்டுச் செல்வத்தையும், பிற பொருள்களையும் திரட்டுகின்றார்கள்; ஆனால் எமன் வந்து பற்றும்போது அவர்கள் உடனே அவை எல்லாவற்றையும் விட்டு விட்டுப் புறப்படவேண்டியுள்ளது. பொருள்களைத் திரட்டிச் சேர்ப்பது பயனற்றது என்பதை இதனால் தெரிந்து கொண்டேன்.

14. காமத்தால் குருடான ஆண் யானே, காகிதத்தால் செய்த பெண் யானையின் பொம்மையைக் கண்டால் கூடப், புற்களால் மூடப்பட்டுள்ள குழியில் விழுந்து விடுகின்றது, அது பிடிக்கப்பட்டுச் சங்கிலியால் பிணிக்கப் பட்டு அங்குசத்தால் சித்திரவதை செய்யப்படுகின்றது. அது போலவே, மோகம் மிகுந்த மனிதர், பெண்கள் விரித்த வலைகளில் விழுந்து துன்பத்துக்கு ஆளாகின்றனர். எனவே ஒருவன் காமத்தை அழிக்க வேண்டும். யானையால் நான் கற்றுக்கொண்ட பாடம் இது. (ஊற்றுணர்வு மயக்கத் தினுல் வரும் கேட்டை இதனுல் அறியலாம்.)

15. மான் இசையின் மீது கொண்டுள்ள பற்றுதல் காரணமாகக் கவரப்பட்டு; வேட்டையாடுவோன் விரித்த வலையில் அகப்பட்டுக் கொள்ளுகின்றது. அதுபோலவே, நடத்தை வழுவிய மகளிர் தம் இசையினுல் ஒருவன் கவரப் பட்டு அழிவைத் தேடிக் கொள்ளுகின்ருன். காமச் சுவை யுள்ள பாடல்களை ஒருவன் ஒருபொழுதும் செவியால் கேட்கக் கூடாது. மானைப் பார்த்து நான் கற்றுக்கொண்ட பாடம் இது. (ஓசையுணர்வு மயக்கத்தினுல் வரும் கேட்டை இதனுல் அறியலாம்).

16. உணவின் மீது மோகங் கொண்ட மீன், தூண்டிலுக்கு எளிதில் பலியாகின்றது. அதுபோலவே, உணவின் மீது பேராசையுள்ளவன் உணவுச் சுவைக்கு அடிமையாகத் தன்னை ஆளாக்கிக் கொண்டு தன் சுதந்திரத்தை இழந்து எளிதில் அழிவைத் தேடிக் கொள்ளுகின்ருன். எனவே உணவின் மீதுள்ள இச்சை அழிக்கப்பட வேண்டும். மீனைப் பார்த்து நான் தெரிந்து கொண்ட பாடம் இது. (சுவை யுணர்வு மயக்கத்தினுல் வரும் கேட்டை இதனுல் அறிய லாம்.)

17. விதேக நகரில் பிங்கலை என்ற நாட்டிய மகள் இருந்தாள். ஓர் இரவு வாடிக்கையாளருக்காகக் காத்துக் காத்து சலித்துப்போனுள். அவள் ஏமாற்றமடைந்தாள்.

பின்னர் அவள் தன்பால் உள்ளதைக் கொண்டு திருப்தி யுற்று அயர்ந்து உறங்கிவிட்டாள். எதிர்பார்த்ததைக் கை விட்டால் அது மன நிறைவுக்கு வழி கோலுகிறது என்ற உண்மையை நான் அவ்விலை மகளின் பண்பினால் தெரிந்து கொண்டேன்.

18. ஓர் அண்டங்காக்கை ஒரு மீன் துண்டைப் பற்றிக் கொண்டு மேலே பறந்தது. மற்ற காக்கைகள் அதைப் பின் தொடர்ந்து சென்று இம்சித்தன. அது அந்தக் இறைச்சித் துண்டைக் கீழே போட்டுவிட்டு அமைதியும் ஓய்வும் அடைந் தது. உலகில் புலனின்பங்களைப் பின் தொடர்ந்து செல்லும் மனிதன் எல்லா வகையான கஷ்ட நஷ்டங்களையும் அடை கின்றான் என்பதையும், அக்காக்கை போலவே, புலனின்பங் களைக் கைவிடும்போது அவன் மகிழ்ச்சியடைகின்றான் என் பதையும் இதனால் தெரிந்து கொண்டேன்.

19. தாய்ப்பால் பருகும் குழந்தை ஏக்கங்கள், துன்பங் கள், கவலைகள் என்பனவற்றிலிருந்து விடுபட்டுள்ளது; எப் போதும் களிப்புடன் இருக்கின்றது. களிப்புடன் இருக்கும் பண்பைக் குழந்தையினிடம் நான் கற்றுக் கொண்டேன்.

20. ஒரு கன்னிப் பெண்ணின் பெற்றோர் அவளுக்குத் தகுந்த மணமகனைத் தேடச் சென்றிருந்தனர். அவர்கள் இல்லாதபோது இன்னொரு சாரார் அவர்கள் வீட்டிற்கு இதே நோக்கத்துடன் பெண் பார்க்க வந்தார்கள். அவளே அவர்களை வரவேற்றாள். நெல் குத்தும் பணியின் பொருட்டு வீட்டின் உட்பக்கம் அவள் சென்றாள். நெல் குத்தும்போது அவளுடைய கை வளையல்கள் 'கலீர் கலீர்' என்று பெரியதாக ஓசையிட்டன. அறிவுள்ள அப்பெண், வளையல்களின் ஓசை யால் நானே நெல் குத்துகின்றேன் என்றும், பணியாட்களை அமர்த்திக்கொள்ள முடியாத அளவுக்கு என் குடும்பம் வறுமைப்பட்டுள்ளது என்றும் வந்துள்ளோர் கண்டு கொள் வார்கள் — கைக்கு இரண்டிரண்டு வளையல்களைத் தவிர எல்லாவற்றையும் உடைத்துவிடுகிறேன் என்று நினைத்தாள்.

அவ்வாறே கைக்கு இரண்டிரண்டு வளையல்களைத் தவிர எல்லாவற்றையும் உடைத்தெறிந்தாள். இந்த இரண்டு வளையல்கள் கூடப் பெருஞ் சத்தத்தை உண்டாக்கின. அவள் மேலும், ஒவ்வொரு வகையிலும் இருந்த ஒவ்வொரு வளையலை உடைத்தாள். இப்போது அவள் தொடர்ந்து நெல் குத்திய போதும் சத்தம் எதுவும் உண்டாகவில்லை. அவளுடைய அனுபவத்தை எண்ணிப் பார்த்து நான் பின்வரும் பாடத்தைக் கற்றுக்கொண்டேன். பலர் நடுவே வாழ்வது கருத்து மாறுபாடு, தொல்லை, பிணக்கு, பூசல் ஆகியவற்றை உண்டாக்கும். இருவர்க்கிடையே கூட அனுவசியமான பேச்சும், சச்சரவும் ஏற்படக்கூடும். துறவி அல்லது சந்நியாசி, ஏகாந்தமாகத் தனித்தே இருக்க வேண்டும்.

21. பாம்பு, தன் வளையைத் தானே தோண்டிக் கொள்வதில்லை. பிற உயிரினங்கள் தோண்டிய வளைகளில் அது வாழ்கிறது. அதுபோலவே, ஒரு துறவி அல்லது சந்நியாசி தனக்கென ஒரு வீடு கட்டிக்கொள்ளக் கூடாது, குகைகளில் அல்லது பிறர் கட்டிய கோயில்களில் அவர் வாழ வேண்டும். பாம்பினிடத்திலிருந்து நான் கற்றுக் கொண்ட பாடம் இது.

22. அம்பைக் கூராக்குபவன் ஒருவனுடைய மனம் முழுதும் ஒருசமயம், அம்பைக் கூராக்குவதிலும் நேராக்குவதிலும் ஈடுபட்டிருந்தது. அவன் அவ்வாறு வேலை செய்து கொண்டிருந்தபோது, ஓரரசன் தன் முழுப் பரிவாரங்களுடன் அவன் கடைக்கு முன்னால் கடந்து சென்றான். சிறிது நேரத்திற்குப்பின், ஒருவன் அக்கொல்லனை அணுகி, அரசன் அவனுடைய கடையைக் கடந்து சென்றானா என்று வினவினான். தான் எதையும் பார்க்கவில்லை என்று கொல்லன் விடை தந்தான். உண்மை என்னவெனில், கொல்லனுடைய மனம் அவனுடைய பணியில் தனியே லயித்திருந்ததால், தன் கடைக்கு முன்னால் என்ன நடந்தது என்பதை அவன் அறியவில்லை. மனத்தின் ஆழ்ந்த ஒருமுகத் தன்மையை அவன்பால் நன்கு அறிந்துகொண்டேன்.

23. சிலந்திப் பூச்சி தன் வாயிலிருந்து நீண்ட நூல்களை வெளிப்படுத்தி அவற்றைக்கொண்டு வலைகளைப் பின்னுகிறது. தான் உருவாக்கிய வலையில் தானே சிறைப்படுகிறது. அது போலவே, ஒருவன் தன் எண்ணங்களாகிய வலையைப் பின்னி அதில் தானே சிறைப்படுகின்ருன். எனவே அறிவுள்ளவன் உலகியல் எண்ணங்கள் எல்லாவற்றையும் தவிர்த்துப் பிரம் மத்தையே சிந்திக்கவேண்டும்.

24. பிருங்கி அல்லது குளவி, ஒரு புழுவைப்பிடித்துத் தன் கூட்டில் அதனை இட்டுக், கொட்டுகிறது. பரிதாபத்துக் குரிய அப்புழு, குளவியின் வருகையை நினைத்தும், அது தன்னைக் கொட்டுவதை நினைத்தும், எப்போதும் அஞ்சி எந்நேரமும் குளவியையே நினைந்து நினைந்து, தானும் குளவியாகவே உறுமாறுகின்றது. ஒருவன் இடையருது எவ் வடிவைச் சிந்திக்கின்ருனே, அவன் காலப்போக்கில் அவ்வடிவை அடைகின்ருன். நினைவின் வண்ணமாக மனிதன் ஆகின்ருன். நான் ஆத்மனையே எந்நேரமும் இடையருது சிந்திக்கவும், இவ்வாறு உடற்பற்றுக்கள் அனைத்தையும் நீக்கி மோக்ஷம் அல்லது வீடுபேற்றை அடையவும், குளவியாலும் புழுவாலும் கற்றுக்கொண்டேன்.

தத்தாத்ரேயரின் போதனைகள் அரசனுடைய உள்ளத் தில் ஆழப் பதிந்தன. அவன் உலகைத் துறந்து தன் ஆன்மாவை இடையருது தொடர்ந்து தியானம் செய்யத் தொடங்கினன்.

தத்தாத்ரேயர் சபிப்புத்தன்மையற்ற நிலையிலிருந்தும், விருப்பு வெறுப்பிலிருந்து முற்றிலும் விடுபட்டிருந்தார். ஞானத்தை எங்கிருந்து பெற முடிந்தாலும் அதைக் கற்றுக் கொண்டார். ஞானத்தைத் தேடுவோர் அனைவரும் தத்தாத்ரேயரை வழிகாட்டியாகக்கொண்டு அவரைப் பின் பற்றவேண்டும்.

## 43. யோகி பூசண்டர்

யோகியர் கூட்டத்திலுள்ள சிரஞ்சீவிகளில் ஒருவர் யோகி பூசண்டர். பிராணுயாமம் என்னும் கலேயில் அவர் வல்லவராக இருந்தார். மகாமேரு மலேயின் வடதிசை உச்சியில் உள்ள கல்ப விருட்சத்தின் தென்பாகக் கிளேயில் மலேபோன்ற ஒரு வலே அவரால் பின்னப்பட்டதென்று சொல்லப்படுகின்றது. பூசண்டர் இந்த வலேயில் வாழ்ந்தார். அவர் முக்காலங்களேயும் உணர்ந்த ஞானி. எவ்வளவு நீண்டநேரம் வேண்டுமென்ருலும் அவரால் சமாதியில் அமர்ந்திருக்க முடியும். அவர் ஆசையற்றவர். அவர் பரம சாந்தியும், பரஞானமும் அடைந்தவர். அவர் தன்னில் உள்ள பேரின்பத்தில் திளேத்திருந்தார்; இன்னும் அவர் அங்கேயே சிரஞ்சீவியாக இருக்கின்ருர். அவர் ஐந்து தர்சனங்களின் நிறைஞானம் பெற்றவர். அவர் ஐவகைத் தியானங்களேயும் பயின்று ஐவகைப் பூதங்களாலும் பாதிக்கப்படாத பெருநிலேயைப் பெற்ருர். ஆதித்தர் பன்னிருவரும் தங்கள் எரிக்கும் கதிர்களால் உலகத்தை வறுத்தபோது அவர் தம், தண்ணீரைத் தாங்கும் சக்தியால் ஆகாயத்தை எட்டுவார் என்று சொல்லப்படுகின்றது. பாறைகள் உருண்டு நில நடுக்கம் ஏற்பட்டுப் பூமி பிளந்து பாறைகள் உடைந்து சிதறித் தூளாகும்போது அவர்தம், அக்கினியைத் தாங்கும் சக்தியால் ஆகாயத்தில் இருப்பார். அகில உலகும் மகாமேருவுடன் நீரில் முழுகியிருக்கும்போது அவர்தம், வாயுவைத் தாங்கியிருக்கும் சக்தியால் நீரில் மிதந்துக்கொண்டிருப்பார்.

## 44. யோகி ஜெய்கிசவ்யர்

ஜெய்கிசவ்யர் என்ற பெயருள்ள, பெருமைமிக்க யோகி ஒருவர் இருந்தார். தொடர்ந்து நிகழ்ந்த பத்து மகா பிரளய காலங்களுக்கும் உரிய தம் முன்னேய பிறப்புக்களேப் பற்றிய முழு அறிவும் அவருக்கு இருந்தது. அவத்தியரிஷி அவரை அணுகி, ''விலங்குகளின் இடையிலும், கருப்பை

களிலும் வாழ்கின்ற நரக வேதனைகளைத் தாங்கள் அனுப வித்திருக்கிறீர்கள். மக்கட் பிறப்பையும் தேவர் பிறப்பையும் அடிக்கடி தாங்கள் அடைந்திருக்கிறீர்கள். நரக துன்பங் களைப்பற்றித் தங்கள் அனுபவங்கள் யாவை? விண்ணுலகில் அடைந்த இன்பங்கள் பற்றிய தங்கள் அனுபவங்கள் யாவை? மனிதப்பிறப்பில் இன்பங்கள் அதிகமா? துன்பங்கள் அதிகமா?'' என்று வினவினர்.

யோகி ஜெய்கிசவ்யர், ''நான் பத்து மகா கல்ப காலங் கள் வாழ்ந்துள்ளேன். விலங்குப் பிறப்பிலும், நரகத் திலும் உள்ள துன்பங்களை அனுபவித்துள்ளேன். மனிதனாக வும் தேவனாகவும் நான் மீண்டும் மீண்டும் பிறந்துள்ளேன். விண்ணிலோ இவ்வுலகத்திலோ எங்கும் எதிலும் இன்பம் என்பதே கிடையாது. நான் அனுபவித்ததெல்லாம் துன்பம் மட்டுமே என்று கருதுகின்றேன்'' என்று விடை கூறினர்.

அவத்தியர் மீண்டும், ''யோகியே! பிரகிருதி மெய் யாகும் நிலையில் அடைந்த மகிழ்ச்சியும் மனநிறைவும்கூடத் துன்பம் என்ற பகுதியில் அடங்குமா?'' என்று கேட்டார்.

யோகி ஜெய்கிசவ்யர், ''பிரகிருதி லயத்தினல் அடையும் மகிழ்ச்சி, பொருள்களால் கிடைக்கும் புலன் இன்பங்களைக் காட்டிலும் உயர்ந்ததே; ஆனாலும், முக்திப் பேற்றினல் (கைவல்யம்) வரும் தூய பேரின்பத்துடன் ஒப்பிடும்போது, அது துன்பம் மட்டுமே, பிரகிருதி லய மகிழ்ச்சி, குணங்களின் விளைவால் மட்டுமே ஏற்படுகின்றது. இங்கு இன்னும் ஆசையின் இழை (கிருஷ்ண தந்து) இருக்கின்றது. யோகி முற்றிலும் ஆசையற்ற நிலையை அடையும் போதுதான், தூய, கலப்பற்ற, முடிவற்ற, நிலையான பேரின்பம் உண்டாகின்றது.

## 45. மிலரேபா

மிலரேபா, திபேத்தில் வாழ்ந்த, புகழ்மிக்க யோகி. உலகில் உள்ள பொருள்கள் எல்லாவற்றிற்கும் ஏற்படும்

மாறுபாடுகளும், அழிவுகளும் பற்றிய இயல்புகளாலும், உயிரினங்கள் யாவும் துன்பங்களிலும், துயரங்களிலும் மூழ்கித் தவிக்கும் இயல்புகளாலும் இளமைக் காலத் திலிருந்தே அவருடைய உள்ளத்தில் ஆழ்ந்த பதிவுகள் பதிந்திருந்தன. அவரைப் பொறுத்த வரைக்கும், உலக வாழ்க்கை என்பது உயிர் வாழ்வன யாவும் வறுக்கப்படுகின்ற ஒரு பெரிய உலைக் களம் ஆகும். உள்ளத்தைத் துளைக்கும் இத்தகைய வருத்தம் அவருடைய உள்ளத்தில் நிறைந்தது. இந்திரனும், நான்முகனும் நுகரும் விண்ணுலக இன்பங்களைப் பற்றிக் கூடப் பொருமை சிறிதும் கொள்ளாத ஒரு மன நிலை அவருக்கு உண்டாகிவிட்டது; எனவே, உலகில் பெருமை வாய்ந்து விளங்குவோர் நுகரக்கூடிய இன்பங்களும், மகிழ்ச்சி களும் அவரைச் சிறிதும் பாதிக்கவில்லை என்று சொல்ல வேண்டியதில்லை.

இதற்கு மாருக, களங்கமற்ற தூய்மையைக் காணும் காட்சியிலும், நிர்வாணம் என்னும் பேரின்பப் பேற்றுடன் கூடிய முற்றும் உணர்தல், நிறைவான முத்திநிலை ஆகியவற்றை விளக்கும் புனிதமான அழகிலும் அவர் உள்ளம் கவரப்பட்டார்; உள்ளம் விரும்பிய அதனைத் தேடி அடைவதில் தம் உயிருக்கே இறுதி நேர்ந்தாலும் அவர் சந்திக்கத் துணிந்துவிட்டார்; இதற்கான முழு நம்பிக்கை யும், கூர்ந்த மதியும், அனைவர்பாலும் செல்லும் இரக்கமும், எங்கும் வியாபிக்கும் அன்பு பொங்கித் ததும்பும் உள்ளமும் உடையவராக அவர் விளங்கினர்.

மனத்தின் உலகியல் நிலையையும் ஆன்மீக இயல்பையும் கட்டுப்படுத்தும் அதீத ஞானத்தை அவர் பெற்றிருந்தமை யால், விண்ணில் பறக்கவும், காற்றில் நடக்கவும், இளைப் பாறவும், உறங்கவும் தம்மால் முடியும் என்பதை அனைவரும் கண்ணுரைக் காணுமாறு அவரால் செய்து காட்ட முடிந்தது. இதுபோலவே அவர் தம்முடைய உடம்பிலிருந்து நெருப்பின் சுடர்கள் தோன்றவும், நீர் ஊற்றுக்கள் வெளிப்படவும், தாம் விரும்பும் எந்த ஒரு பொருளாகவும் தம் உடம்பை

மாறும்படிச் செய்யவும், அவரால் செய்ய முடிந்தது. இதனுல், மத நம்பிக்கை அற்றவர்களையும் மத நோக்கம் கொள்ளுமாறு அவரால் மாற்ற முடிந்தது.

தியானத்தின் நான்கு நிலைகளையும் அவர் பயின்று நிறை நிலை பெற்முர்; இதனுல் அவர் இருபத்திநான்கு புனிதத் தலங்களில் வீற்றிருக்கும் தலைமை யோகியாகத் தம் நுண்ணுடம்பை எழுந்தருளி இருக்குமாறு செய்தார்; ஆன்மீகச் செய்திகளைப் பெறுவதற்காக அங்கே தெய்வங் களும், தேவதைகளும் நீர்முகக்க வரும் மேகங்களைப் போல், வந்து கூடியிருப்பார்கள்.

எல்லாப் பணிகளையும் நிறைவேற்றும்படியாகத் தம் கட்டளைகளை உடனடியாகக் கேட்டு நடக்குமாறு அவர் தெய்வங்களையும், ஐம்பூதங்களையும் ஏவல் கொண்டார். இயற்கை கடந்த சக்திகளில் அவர் நிறை வல்லமை பெற் றிருந்தார். புத்தர்களின் எண்ணற்ற விண்ணுலகங்களையும், புனிதமான பேரின்ப உலகங்களையும் கடந்து சென்று கண்டு வரப் பயணம் செய்யும் வல்லமையை அவர் பெற்றிருந்தார்; நிகரற்ற அவருடைய பக்திப் பண்பினுல், அங்கு ஆட்சி செலுத்திய புத்தர்களும், போதி சத்துவர்களும் வழங்கிய தர்மம் பற்றிய பேருரைகளைக் கேட்கும் பயன் பெற்முர்; கேட்டதன் பயனுக அவர் விண்ணுலகங்களைத் தம் வருகை யாலும், தங்குகையாலும் புனிதப்படுத்தினுர்.

## 46. ஏசுநாதர்

### (1)

ஏசு நாதர், பாலஸ்தீனத்தில் வாழ்ந்த யூதர். பெத்ல ஹேம் என்ற ஊரில் யோசேப்பு, மேரியன்னை ஆகியோருக்கு வயிறு வாய்க்காமல் (இறையருளால் நேர்ந்த, களங்கமற்ற கரு) பிறந்தார். அவர் பணிவும் தாழ்மையும் உள்ளவர். தம் வாழ்நாள் முழுவதும் அவர் கள்ளங்கபடமற்ற குழந்தை போலவே இருந்தார். அவர் பொறுமையும், அன்பும்,

கருணையும் உள்ளவர். பாலஸ்தீன மொழியில் அவர் தம் கொள்கைகளைப் பரப்பினாலும், அவர் கீழ்த்திசை நாடுகளைச் சேர்ந்த யோகியாக விளங்கினார்.

அவர் பாவிகளையும் ஒதுக்கப்பட்டவர்களையும், தாசிகளையும் அன்புடன் வரவேற்று ஆதரவு தந்து தூய்மைப் படுத்தினார். அவர் அவர்களுக்குத் தேறுதல் சொல்லி, ஆறுதலும் அமைதியும் தந்தார். வீழ்ந்தவர்கள் மீண்டும் உயர்ந்தெழச் செய்தார் அவர். மனம் உடைந்தவர்களுக்கு அவர் துன்பநீக்கமும் சாந்தியும் கொணர்ந்தார்.

அவர், ''சின்னக் குழந்தைகள் போல் நீங்கள் ஆனால் அன்றி, இறைவனுடைய பரலோக சாம்ராஜ்ஜியத்திற்குள் எந்த வகையிலும் நீங்கள் நுழைய முடியாது'', என்று கூறினார். அவருக்கு, இறைவன் அன்புள்ள பரமபிதா. இறைவனிடமும் நம்போன்ற மக்களிடமும் அன்பு செலுத்துவது, ஏசு நாதரின் கோட்பாடாகும்.

''இறைவனிடம் நம்பிக்கை கொள்வீர்! பரமபிதா, நம் கடவுள், இறைவனை முழு மனதோடும், முழு ஊக்கத்தோடும், முழு இதயத்தோடும், முழு வலிமையோடும் நேசிப்பீர்! அயலவரையும் நும்மைப்போலவே கருதி நேசிப்பீர்; மனிதனிடம் செலுத்தும் அன்பில், இறையன்பு வெளிப்படுகின்றது'' என்பது ஏசு நாதர் வழங்கிய போதனையின் மையக் கருத்தாகும்.

அவர் ஒரு ஜகத்குரு; அகில உலகத் தீர்க்கதரிசி; உலகிற்கு நற்செய்தி கொண்டுவந்த தூதுவர். அவருடைய 'மலைப் பொழிவு'; ராஜயோகத்தின் இயம, நியமப்பயிற்சிகளையும், ,புத்தரின் எண்வகை நன்மார்க்கங்களையும் ஒத்துள்ளது. அது மிகவும் அற்புதமாகவும், உணர்ச்சியூட்டுவதாகும், உள்ளத்தை உயர்த்துவதாகவும் உள்ளது.

கடைசி விருந்தின் போது அவர் தம் சீடர்களின் காலடிகளை நீராட்டினார். எவ்வளவு பணிவாக அவர் இருந்தார். அவர், பணிவுள்ளவர்கள் பாக்கியவான்கள்,

ஏனெனில் அவர்கள் நிலத்தை ஆளும் உரிமை பெறுவார்கள்'' என்று தெரிவித்தார். யுதிட்டிர மன்னர் ஆற்றிய இராஜ சூய யாகத்திற்கு வந்த விருந்தினர்களின் காலடிகளைக் கிருஷ்ண பகவான் நீராட்டினார். அவதாரங்கள் அல்லது வலிவுள்ள மகான்கள் இத்தகைய செயல்களைச் செய்கின்றார்கள். உயர்ந்த பெருமக்களிடமிருந்து நீவிர், பாடங்களைக் கற்றுக்கொள்ள வேண்டாமா? மூவுலகங் கட்கும் பேரிறைவனாகிய கிருஷ்ணபகவான், விருந்தினர் களின் காலடிகளை நீராட்டுவதில் மகிழ்ச்சியடைந்தார். நீவிரும் பணிவுடன் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டாமா? எவ்வளவு அகந்தையும் தற்பெருமையும் உள்ளவர்களாக நீவிர் இருக்கிறீர்கள்? உங்களிடம் சிறிது பணமும், ஒரு சிறிய காரும், ஒரு சிறிய பங்களாவும் சேர்ந்து விட்டால் நீங்கள் அகந்தை என்னும் போதை ஏறி, வீண் தற்பெருமையால் வீங்கிப்போய் விடுகிறீர்கள். நீங்கள் உங்களை ஓர் பேரரச ராகக் கருதிக்கொண்டு ஆணவத்துடன் கம்பீர நடை நடந்து மற்றவர்களிடம் வெறுப்பைப் பாராட்டுகின்றீர்கள். நீவிர் உடம்பைப் பற்றியும் வாழ்வில் நும் பதவியைப் பற்றியும் மிகையாகக் கருதிக் கொள்ளுகின்றீர்கள். உண்மையில் உம்முடைய அதிகாரப் பதவி நும்மில் ஓர் அடிமை மனப்பான்மையை உருவாக்கிப் பதவியை இழந்து விடுவோமோ என்ற அச்சத்தையும் உண்டாக்கியுள்ளது.

''அயலானையும் உன்னைப்போலவே நேசி'' என்பதே ஏசு நாதர் எப்போதும் தந்த செய்தியாகும். அவர், ''ஆண்டவன் சாம்ராஜ்ஜியம் உனக்குள் இருக்கின்றது. விண்ணுலகில் அவரின் விருப்பம் நிறைவேறுவது போலவே, மண்ணுலகிலும் அவருடைய விருப்பத்தின் படியே செயல் நிகழும். எதிர்பார்த்து ஏங்க வேண்டாம். அவருடைய சாம்ராஜ்ஜியத்தை முதலில் தேடிக்கொள். உனக்கு வேண்டிய ஒவ்வொன்றும் கூடவே நிகழும்'' என்று அவர் கூறினார். மக்கள் அனைவரும் பின்பற்றுவதற்கு உரிய வழி யாகவும், வாய்மையாகவும், ஒளியாகவும் அவர் இருந்தார்.

இறைவனிடமும், நம் போன்ற மக்களிடமும் கொள்ள வேண்டிய அன்பைப் பற்றியும், செய்த குற்றத்திற்காக மனம் வருந்தல் அல்லது மனமாற்றம் குறித்த இன்றியமை யாமைப்பற்றியும் அவர் அழுத்தம் திருத்தமாக வற்புறுத்தி னார்; அப்போதுதான் ஆண்டவன் சாம்ராஜ்ஜியத்தில் நுழைய முடியும். பசித்தவர்க்கு உணவும், ஆடையற்ற வர்க்கு ஆடையும் வழங்குமாறு அவர் மக்களுக்கு அறிவுரை கூறினார். இறைவனுடைய மன்னிப்பைப் பெற வேண்டுமானால், செய்த பாவத்தைக் குறித்து வருந்தும் மனம் இருக்கவேண்டும் என்று அவர் கூறினார்.

'ஆண்டவனுடைய சாம்ராஜ்ஜியம் உனக்குள் இருக் கின்றது. தேடிப்பார், உனக்குக் கிடைக்கும். தட்டிப்பார். கதவு உனக்காகத் திறக்கப்படும்!' ஏசுநாதரின் நீதி போதனை கள் என்னும் மாளிகைக்கு இதுவே அடித்தளம்.

இறைவனுடைய சாம்ராஜ்ஜியத்தைத் தேடுவதற்கான ஒரு சாதனமாக அவர், வழிபாட்டைப் பரிந்துரைக்கின்றார். அவர், "உங்கள் குழந்தைகள் தீயவராயினும் அவர்களுக்கு நல்ல பரிசுகளை வழங்க உங்களுக்குத் தெரிந்திருக்கின்றது; பரலோகத்தில் உள்ள உங்கள் பரமபிதா, தம்மிடம் கேட் பவர்களுக்கு எவ்வளவு நல்ல பரிசுகளை வழங்கத் தெரிந் திருப்பார்!" என்று கூறினார்.

அவர், "பழங்காலத்தில், யாரையும் கொலை செய்ய வேண்டாம், கொலை செய்வோர் நீதி விசாரணைக் காலத்தில் ஆபத்தை எதிர்கொள்ள வேண்டியிருக்கும்" என்று சொல்லப்பட்டிருந்ததை நீங்கள் அறிவீர்கள். ஆனால் நான் கூறுகின்றேன், யாரும் தம் உடன் பிறந்தவரிடத்தும் சினம் கொள்ளவேண்டாம், சினம் கொள்வோர் நீதி விசாரணைக் காலத்தில் ஆபத்தை எதிர்கொள்ள வேண்டிவரும்" என்று கூறினார். தம்முடைய 'மலைப் பொழிவில்' அவர், அறத்தின்பால் பசியும் தாகமும் கொண்டோர் பாக்கிய வான்கள், ஏனெனில் அவர்களின் பசியும் தாகமும் தீர்க்கப்

படும். தமக்குள்ளே ஆண்டவனுடைய சாம்ராஜ்ஜியத்தைத் தேடுவோர் இறைவனைக் காண்பர்; எனவே அவர்கள் விரும்புவனயாவும் வந்துசேரும்'' என்று கூறினர்.

''தீமையை நன்மையால் வெற்றிகொள்'' உலகத்தார்க்கும் தம் சீடர்களுக்கும் பெரும் அளவில் அவர் இந்தப் பெரிய விதியை வரையறை செய்து தந்தார். இது அகிம்சை அல்லது யாருக்கும் தீங்கு செய்யாமை என்ற பயிற்சிதான்; இது உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி மென்மைப்படுத்துகின்றது. அகிம்சை, வாய்மையின் மற்ெறுரு வடிவமே.

அமைதிக் கடலுக்கு அப்பால் உள்ள காட்டில் ஞான நீராட்டைப் பெற்ற பிறகு அவர் ஓய்வு கொண்டார். அவர் தம் பதின்மூன்றும் வயதில் மறைந்திருந்து, தம் முப்பத்தொன்றும் வயதில் அவர் மீண்டும் தோன்றினர், இக்காலத்தினிடையே — பதின் மூன்றும் வயதிலிருந்து தம் முப்பத்தொன்றும் வயதுவரை — அவர் இந்தியாவுக்கு வந்து யோகத்தைப் பயின்றார். அவர் இரண்டு அல்லது மூன்றுண்டுகள் வரை தம் கொள்கைகளைப் பரப்பிய பின்னர் பெருநிலை என்னும் அப்பாலுக்கு அப்பால் சென்றுவிட்டார்.

வணிகர் குழுக் கூட்டத்துடன் அவர் ஜெருசலேம் என்ற இடத்தை விட்டுப் புறப்பட்டு இந்திய நாட்டை அடைந்தார். அவர் காசி, ராஜ கிருகம் இந்தியாவில் இன்னும் உள்ள மற்ற இடங்கள் யாவற்றையும் தரிசித்தார். இந்தியாவில் அவர் பல ஆண்டுகள் கழித்தார். சுடர்விட்டெரியும் துறவும் வைராக்கியமும் பொருந்திய இந்து அல்லது புத்த துறவியின் வாழ்வை அவர் வாழ்ந்தார். இந்து மதக் கொள்கைகளையும், போதனைகளையும், இலட்சியங்களையும் அவர் தெளிவாக உணர்ந்தார். அவருடைய 'மலைப் பொழிவு' இயமம், நியமம், சதாச்சாரம் அல்லது சரியான நன்னடத்தை ஆகியவற்றின் பயிற்சி என்பது தவிர வேறல்ல. கிறித்தவ மதம் என்பது அவருடைய காலத்தில் வாழ்ந்த மக்களுக்கு ஏற்பத் திருத்தியமைக்கப்பட்ட இந்து மதமேயாகும். சொல்லப் போனல்

உண்மையில், ஏசுநாதர், இந்திய மண்ணைச் சேர்ந்த குழந்தையே ஆவார். அவருடைய போதனைகளுக்கும், இந்துமத, புத்த மதப் போதனைகளுக்கும் பெரும் அளவில் ஒற்றுமை இருப்பதற்கு இதுவே காரணம்.

தெய்வீக, நிறை அன்பை அவர் நிலவுலகில் பரப்பினார். ஈகை பற்றியும் கொடை வழங்குவது பற்றியும் அவர் மிக உயர்வாகப் புகழ்ந்துள்ளார். அவர், ''பிறரிடம் பெறுவதைக் காட்டிலும் பிறர்க்கு ஈவதே பாக்கியம். நீவிர் மனமார விரும்பும் உயர்ந்த செல்வங்களை ஈவீர்! அழகிய இயற்கையினிடம் இதைக் கற்றுக்கொள்ளுங்கள். அன்பைச் செலுத்துங்கள், திரும்ப அதைக் கேட்க வேண்டாம். கைம்மாறு எதிர்பார்க்க வேண்டாம், அதற்காகக் காத்திருக்க வேண்டாம். உம்முடைய சிறிய இருப்பிலிருந்து எவ்வளவு அதிகமாக ஈகைக்காகச் செலவு செய்கிறீர்களோ அதைப் போல் இரட்டிப்பு மடங்கு அதிகமாக இறைவன் உங்களுக்குத் தருவார்'' என்று கூறினார்.

புதையல் உள்ள வயல் என்று தெரிந்தால், ஒருவன் தன்னிடம் உள்ள செல்வங்கள் எல்லாவற்றையும் விற்று அந்த வயலை வாங்குகின்றான். அவ்வாறு வயலில் மறைத்து வைக்கப்பட்டுள்ள புதையல் போன்றது விண்ணுலகப் பேரரசு, என்று அவர் குறிப்பிட்டுள்ளார்.

அவர் சிலுவையில் அறையப்பட்டார்; எனினும் அவர் இன்றும் வாழ்ந்து கொண்டிருக்கின்றார். அவர் தம்முடைய பெயரை என்றென்றும் நிலைத்திருக்கச் செய்துவிட்டார். யாரும் அவருடைய குரலை மௌனமாக்கிவிட முடியாது. பல நூற்றாண்டுகளாக அவருடைய குரல் பேசிக்கொண்டிருக்கின்றது. அவர், ''உன்னிடம் உள்ள எல்லாவற்றையும் விற்றுவிட்டு, அவற்றை ஏழைகளுக்கும் பகிர்ந்தளித்துவிட்டு, இறைவனுடைய பேரரசை நாடி வா'' என்று கூறினார். மக்கள் அவருடைய செய்தியைக் கேட்டு அதைப் பின்பற்றி நடக்கவில்லை; ஆனால் அவருடைய குரலைக் கேட்காதபடி செய்ய யாராலும் முடியவில்லை.

அவர் நிறை நிலை பெற்ற ஒரு யோகி. அவர் பல அற்புதங்களைச் செய்தார். கடலின் அலைகளைச் செயலற்று நிற்குமாறு அவர் செய்தார். குருடர்களுக்கு அவர் பார்வை தந்தார். கையால் தொட்ட மாத்திரத்தில் தொழு நோயாளிகளை அவர் குணப்படுத்தினர். சிறிய ஒரு ரொட்டித் துண்டை வைத்துக் கொண்டு அவர் பெருந்திரளான மக்கட் கூட்டம் வயிறுர உண்ணச் செய்தார்.

ஏசுபிரான் சிலுவையில் அறையப்பட்டார். மற்றவர் வாழ்வதன் பொருட்டு அவர் பெரு மகிழ்ச்சியுடன் மரணத்தை ஏற்றுக் கொண்டார். எவ்வளவு தயாள குணமுள்ள ஆத்மா! மக்கட் கூட்டமாகிய இறைவனின் குழந்தைகளின் பொருட்டு, அவர் மகிழ்ச்சியுடன் இறக்கக் கற்றுக் கொண்டார். அவருடைய இறுதிச் சொற்கள் உலகத்துக்கு ஒரு வழிகாட்டியாகும். அவர், "ஆண்டவனே! என்னைச் சித்திரவதை செய்து கொலை செய்வோரை மன்னியும், ஏனெனில் தாங்கள் செய்வது இன்னதென்று அவர்கள் அறியார்" என்று கூறினர். எவ்வளவு நல்லவர்! அவருடைய கைகள் சிலுவையில் கட்டப்பட்டு அவருடைய உள்ளங்கைகளில் ஆணிகள் அறையப்பட்டன. இத்தகைய நிலையில் அவர் தம்மைச் சித்திரவதை செய்வோருக்காக இறைவனை வேண்டினர். எவ்வளவு பரந்த, மன்னிக்கும் உள்ளம் அவருக்கு இருந்தது. க்ஷமை அல்லது மன்னித்தலின் வடிவாக ஏசுநாதர் இருந்தார். அவர் நம் உள்ளங்களில் இன்னும் வாழ்வதற்கும், கோடிக்கணக்கான மக்கள் அவரை இன்று வணங்குவதற்கும் இதுவே காரணம்.

தீமையை நன்மையால் வெற்றி கொள்வதற்கு ஏசுநாதர் ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினர். "தீமைக்குப் பதில் நன்மையே செய்" என்ற கொள்கைக்கு மிக உயர்ந்த எடுத்துக்காட்டாக ஏசுநாதரின் சிலுவை எல்லாக் காலங்களிலும் நிலவிக்கொண்டிருக்கும். அவர் இறைவனிடம் முழு அளவில் சரணுகதியடைந்தார். நேர்மை உள்ளவர்கள்

அடையும் துன்பங்களினுல், நேர்மையற்றவர்களின் உள்ளங்களை இறைவன் மாற்றுகின்ருர் என்று அவர் அறிந்திருந்தார்.

சிலுவையில் அறையப்பட்ட பின்னர், ஏசுநாதர் மீண்டும் உயிர் பெற்ருர். உயிர்த்தெழுதல் அல்லது இறந்தபின் மீண்டும் உயிர்பெற்றெழுவது, ஏசுநாதரின் கொள்கை யின்படி, உடம்பு பற்றிய கட்டுப்பாடுகள் யாவற்றையும் கடந்து செல்லும், ஒரு நிலையாகும்; இதைச் சொற்களால் விளக்கிச்-சொல்ல முடியாது. அது, இறைவன் முன்னிலையில் நிலைபெற்றிருக்கும் ஒரு நிலைமையாகும். ஏசுநாதர் முழு வளர்ச்சி பெற்ற ஒரு யோகியும் முனிவரும் ஆவார். பூத உடம்புடன் அவர் தம்மை ஐக்கியப்படுத்திக் கொள்ளவில்லை. பரமாத்மாவுடன் அவர் தம்மை ஐக்கியப்படுத்திக் கொண்டார். அவர், ''நானும் பரமபிதாவும் ஒருவரே'' என்று கூறினுர்.

(2)

கிறிஸ்துமஸ் பண்டிகை, கிறிஸ்துவின் பெயரால் ஏற் பட்டது. இது ஏசுபிரானுடைய, அனைவரையும் காப் பாற்றும் கிறிஸ்துவினுடைய, கீழ்த்திசை நாட்டு யோகி யினுடைய பிறந்த நாள் ஆகும். யாருக்கும் தெரிந்திராத, சிற்றூரின் தச்சராகிய யோசேப்புக்கும், மேரி அன்னைக்கும் அவர் பெத்லஹேம் என்ற ஊரில் ஒரு மாட்டுத் தொழு வத்தில் பிறந்தார். யோசேப்பும் மேரி அன்னையும், மாட்டுத் தொழுவத்தை, அமைதியின் இளவரசரும், பேரரசரும் ஆகிய கிறிஸ்துவுக்கு வீடாக அமைத்தனர். அவருடைய பிறப்பு, புனித கிறிஸ்துமஸ் பண்டிகையாக உலகம் முழுவதும் கொண்டாடப்படுகின்றது.

கருணை, அன்பு, பணிவு ஆகியவற்றின் வடிவமாக ஏசு பிரான் இருந்தார். அகிம்சை, அமைதி ஆகியவற்றைப் பரப்பிய சமய தூதர் அவர். அவருடைய உடம்பு சிலுவையில் அறையப்பட்டாலும், அவருடைய குரல் பல நூற்றுண்டு களாகப் பேசிக்கொண்டிருக்கின்றது.

அகிலமெங்கும் அன்பைப் பரப்புவதே கிறிஸ்துமஸ் பண்டிகையின் செய்தியாகும். சொற்களால் விளக்கிச் சொல்ல முடியாத தெய்வீகத்தின் பெருமையும், மேன்மை யும் பற்றிய செய்தியாகும். அது நாடுகளிடையே அமைதி யும் நல்லெண்ணமும் நிலவவேண்டும் என்பதே கிறிஸ்துமஸ் பண்டிகைச் செய்தியாகும்.

கிறிஸ்துமஸ் பண்டிகை, மகிழ்ச்சியாகவும் கொண்டாட்ட மாகவும் இருக்கவேண்டிய ஒருநாள் மட்டும் அன்று; அதற்கும் மேம்பட்டது. கிறிஸ்துவ மனஉணர்வு அல்லது விராட் மனஉணர்வைப் பெறவேண்டிய நாளாகும் அது. ஏசு பிரான் செய்த புனிதமான செயல்களையும், முழுத் தூய்மை மிகுந்த அவருடைய புனிதமான வாழ்வையும் நினைவு கூர்ந்து பார்க்கவேண்டிய நாளாகும், அது. கிறிஸ்துமஸ் பண்டிகை வருகின்றது; போகின்றது; ஆனால் கிறிஸ்துமஸ் பற்றிய ஊக்கம் மிகுந்த உணர்வு உங்களுடன் என்றென்றும் நிலவட்டும்.

களியாடல்கள், கிறிஸ்துமஸ் பண்டிகையே அல்ல. கிறிஸ்துமஸ் பண்டிகை, மணிகளை ஒலிப்பதிலும், பாடல்கள் பாடுவதிலும், ஒவ்வொருவரும் பரிசுகளைப் பரிமாறிக்கொள்வ திலும், கிறிஸ்துமஸ் வாழ்த்துச் செய்திகளை அனுப்புவதிலும், விலையுயர்ந்த விருந்துகளையும், தின்பண்டங்களை உண்பதிலும் அடங்கியதன்று.

கிறிஸ்துமஸ் பண்டிகை என்பது, ஆன்மீக விழிப்பு உணர்வுக்குரிய நிலையாகும். உன்னுள் விண்ணுலகப் பேரரசை உணர்வது, உன் இதய அறைகளில் இறைவனோடு உரையாடல், இழந்த உன் தெய்வீகத்தைத் திரும்பப் பெறுதல், கிறிஸ்துவ மன உணர்வு அல்லது விராட் மன உணர்வைப் பெறுதல், அனைவரையும் நேசித்தல், அன்பின் இனிய அரவணைப்பில் அனைவரையும் சேர்த்துக் கொள்ளல் ஆகியனவே, உண்மையான கிறிஸ்துமஸ் பண்டிகையாகும்.

ஏசு நாதரின் ஊக்கத்தை உணர். அவருடைய அடிச் சுவடுகளைப் பின்பற்றி நட. ஏசு நாதரின் இதயத்தில் ஆழ மூழ்கு. உன்னுடைய அன்றாட வாழ்வில், அன்பு, மகிழ்ச்சி, அமைதி ஆகியவற்றை வெளிப்படுத்த என்றென்றும் வாய்ப்பைத் தேடு. அன்பு, தியாகம் என்னும் ஏசுநாதர் உன்னுள் இரண்டறக் கலந்துவிடட்டும். உன்னுள் மறைந்துள்ள ஏசுநாதரை வெளிப்படுத்து, அவருடைய மலைப் பொழிவைப் பின்பற்று. இறை உணர்வைப் பெறு. அவருடைய போதனைகளில் ஆர்வமுடன் வாழ்ந்திரு. தான் என்ற அகந்தைக்குரிய சிறிய நிலையை அழித்துவிட்டு, கிறிஸ்து அல்லது அகிலம் என்ற பேருணர்வில் கரைந்துவிடு. இதுவே உண்மையான கிறிஸ்துமஸ் பண்டிகை.

இறைவனுடைய பேரரசுக்குள் நுழைய அனைவரும் விரும்புகின்றனர். ஆனால், கிறிஸ்துவின் உண்மையான ஊக்க உணர்வு உங்களில் எத்தனை பேருக்கு உள்ளது? உங்களில் எத்தனைபேர் உண்மையான கிறிஸ்துவர்கள்? உங்களில் எத்தனை பேர் அவருடைய போதனைகள், கொள்கைகள், கோட்பாடுகள் ஆகியவற்றைப் பின்பற்று கிறீர்கள்? உங்களில் எத்தனைபேர் உங்களுடைய அயலாரை உங்களைப்போல் கருதி நேசிக்கின்றீர்கள்? மனத்தூய்மை, பணிவு, அகிலத்தையும் நேசிக்கும் அன்பு, தயாளம், நற்பண்பு ஆகியவற்றுடன் கூடியுள்ளவர்கள் மட்டுமே, இறைவனுடைய பேரரசு அல்லது பரம அமைதியும் அமரத்துவமும் பொருந்திய நிலையை அடையமுடியும்.

பெரும்பான்மை மக்களிடையே கிறிஸ்துவின் இதயம் அல்லது ஊக்க உணர்வு காணப்படவில்லை என்பது கவலைக் குரியதாகும். கிறிஸ்துவின் அன்பு, மிக மிகத் தேவையாக உள்ளது. அன்பும் கருணையும் தூய்மையும் இல்லாத கிறிஸ்துமஸ் பண்டிகை என்பது என்ன? அயலாரைச் சுரண்டவே ஒவ்வொருவரும் விரும்புகின்றனர். ஒரு நாடு மற்றொரு நாட்டை அழிக்க விரும்புகின்றது. இதுவா கிறிஸ்துமஸ் பண்டிகை? இதுவா கிறிஸ்துவின் போதனை?

உண்மையான கிறிஸ்துமஸ் பண்டிகை ஒருபோதும் வருவதுமில்லை, போவதுமில்லை. அது என்றென்றும் நிலையாக உள்ளது. ஒரு நாள் மட்டும் கிறிஸ்துமஸ் பண்டிகையின் ஆர்வ உணர்வு இருந்தால் போதாது; ஆண்டு முழுவதும் அது நிலைபெற்றிருக்க வேண்டும். கிறிஸ்துவின் உண்மையான தொண்டருக்கு, தாகமுள்ள சாதகருக்கு, ஒவ்வொரு நாளும் கிறிஸ்துமஸ் பண்டிகையாகும்.

கிறிஸ்துமஸ் பண்டிகை அகிலத்தையும் தழுவும் அன்பும், எல்லையற்ற அமைதியும், என்றென்றும் நிலைத்திருக்கும் மகிழ்ச்சியும் உள்ள கிறிஸ்துமஸ் பண்டிகையாக இருக்கட்டும். தியானத்தின்போது உன் உள்ளத்தில் நிலவும் அமைதியாக, உண்மையான கிறிஸ்துமஸ் பண்டிகையை நீ நுகர்வாயாக! கிறிஸ்துவின் மன உணர்வை அல்லது அகிலாண்டமாக விளங்கும் இறைவனுடைய திருக்காட்சியை நீங்கள் அனைவரும் அடைவீராக. மனித சமுதாயத்திற்குச் சேவை செய்வதற்காக உங்கள் வாழ்க்கை அமையுமாக!

ஏசுபிரான் உங்களின் வழிகாட்டியாகவும், உற்ற நண்பகராகவும், ஞான ஆசானுகவும், நன்மை வழங்குபவராகவும், பாதுகாவலராகவும் இருப்பாராக! ஏசுபிரான் சென்ற வழியில் நீங்கள் அனைவரும் வழிநடப்பீராக! வேதங்கள் தந்துள்ள போதனைகளின் வடிவமாக விளங்கும் 'மலைப் பொழிவை' நீங்கள் அனைவரும் பின்பற்றுவீராக! ஏசுபிரானின் நல்லாசிகள் உங்கள் அனைவர் மீது பொழிவனவாக! ஏசுபிரானுடைய பெருமை ஓங்குக! ஏசுபிரானின் போதனைகள் தரும் ஊக்க உணர்வில் வாழ்ந்திருப்போரின் பெருமை ஓங்குக! ஏசுநாதரின், பாதுகாவலரின் கருணை, அன்பு ஆகியவற்றுக்குரிய இறைவனின் பெருமை என்றென்றும் ஓங்குக!

---

## சுவாமி சிவானந்தர் தமிழ் நூல்கள்

| நூல் | விலை ரூ. |
|---|---|
| வாழ்விலும் ஆத்மானுபூதியிலும் வெற்றிக்கு நிச்சயமான வழிகள் .... | 12-00 |
| ஸமாதி யோகம் .... | 12-00 |
| இமயமலையின் வீரமுழக்கம் .... | 7-00 |
| அறுபத்து மூன்று நாயன்மார்கள் வரலாறு | 7-00 |
| ஞானயோகம் .... | 6-00 |
| யோகவாசிஷ்டக் கதைகள் .... | 5-00 |
| ஸ்ரீமத் ராமாயண சாரம் .... | 5-00 |
| கிருஷ்ணபரமாத்மா லீலைகள் .... | 5-00 |
| முருகன் திருவிளையாடல்கள் .... | 5-00 |
| மதங்களின் ஒற்றுமை .... | 5-00 |
| சிவானந்தரின் ரேடியோ உபன்யாசங்கள் | 4-00 |
| டாக்டர் தர்மபூஷணம் .... | 4-00 |
| கர்ம யோகம் .... | 4-00 |
| சாதன சதுஷ்டயம் .... | 4-00 |
| அன்பு, அஹிம்சை, தூய்மை .... | 4-00 |
| வாழ்க்கையின் லக்ஷியம் .... | 3-00 |
| சத்சங்கமும் ஸ்வாத்யாயமும் .... | 3-00 |
| சங்கீர்த்தன யோகம் .... | 3-00 |
| ஞான தீபம் .... | 3-00 |
| சிவானந்த வாணி .... | 2-00 |
| சிவானந்தர் மொழியமுதம் .... | 2-00 |
| சிவானந்தரின் கீர்த்தனைகளும் பஜனை நாமாவளிகளும் .... | 1-00 |
| கிருஷ்ணானந்தர் உபதேச மொழி .... | 1-00 |
| தெய்வீக வாழ்க்கை (சுவாமி சிதானந்தா) .... | 5-00 |
| இராஜயோகச் சொற்பொழிவுகள் ,, .... | 5-00 |
| ஞானஒளிபெற நல்வழிகாட்டி ,, .... | 4-00 |
| சிதானந்தரின் அருட் செய்தி ,, .... | 3-00 |
| சர்வரோக நிவாரணி (சுவாமி பூமானந்தா) | 3-00 |



